பேராசிரியர் முனைவர்
ந சுப்பு ரெட்டியார்

எளிமை, இனிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச்சிறப்புகளாகும்.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்திலார்
அன்பேசிவமாவ தாருமறிந் தபின்
அன்பேசிவமா யமர்ந்திருந் தாரே.

# சைவ சமய விளக்கு





1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

# சைவ சமய விளக்கு

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

சமயக்காழ்ப்பு ஒருகாலத்தில் அருகியிருந்து, பெருகிவரும்
தற்கால சூழ்நிலையில் சைவ சமயத்தில்
உள்ளடங்கியிருக்கும் தத்துவங்களையும்,
பேருண்மைகளையும் எளிய, தூய, இனிமையான
தமிழில் விளக்கும் ஓர் அரிய சமயக் கருவூலம்

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939270-2-1

eBOOK ~ மின் நூல்



# சைவ சமய விளக்கு

அருங்கலைக்கோன், சடகோபன் பொன்னடி, சேவா ரத்னா,
தமிழ்ப்பேரவைச் செம்மல், கலைமாமணி, ஆய்வுத்தமிழரசு,
பொதுமறைச் செம்மல், வைணவ இலக்கிய மாமணி

பேராசிரியர் முனைவர்

**ந சுப்பு ரெட்டியார்**

**முன்னாள் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர்**

தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்






1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

Dedicated to **Prof. K. Satchithananda Murthy** (Ex-Vice Chancellor Sri Venkateswara University, Tirupati) as a humble token of the Author's warmest regard and deepest respects and appreciation of his versatility and sincere admiration of true scholarship.

## அன்புப் படையல்

திங்களஞ் சடையார்க் குளத்தினை மன்றாய்ச்
செய்தவர்; தத்துவ மேதை;
பொங்கறு துயரம் அனைத்தையும் கணத்திற்
போக்கிடும் நகைச்சுவைச் செல்வர்;
பங்கமில் எளிமைப் பண்பினால் மேருப்
பருப்பதம் எனப்பொலி அறிஞர்
மங்கலச் சச்சி தானந்த மூர்த்தி
மாண்பினுக் குரியதிந் நூலே

# *FOREWORD*

(Professor V. A. DEVASENAPATHI)

It gives me great pleasure to write this **Foreword** *to Prof. N. Subbu Reddiyar's* **Saiva Samaya Vilakku.** Like a lamp spreading its light to remove darkness and reveal the presence of objects, this book *is intended* to remove ignorance regarding **Saiva Siddhanta** and explain the *basic principles* of this system. Prof. N. Subbu Reddiyar has employed *the technique* of expounding the system in the form of letters from an elderly person to one who is young in age and is eager to learn about this system. This epistolary form gives it a personal touch and makes us feel *that the matter* dealt with is of vital interest and is not a treatment of *abstract or abstruse* issues. Dr. N. Subbu Reddiyar's aim is to make this book a source ot perenninal interest to each succeeding generation of young persons.

'**Saiva Siddhanta** may be *traced back to the* **Vedas** and **Saiva Agamas** on one side and Tamil works ranging from the **Tolkappiyam** and **Sangam** classics, to ths *works of the* **Samayacaryas** and **Santanacaryas** and later-day saints and savants. Its authoritative

formulation is found in the **Sivajnana bodham** of Meykandar. It is usual to interpret the word **Siddhanta** as the accomplished end. This, however, does not rule out periodic review of the system so that the basic principles may be studied in the context of systems that are in vogue from time to time. Thus besides dealing with the **Carvaka** a contemporary exposition of **Saiva Siddhanta** may well review it in the light of **Marxism. Rationalism, Lingusstic Analysis** etc. Prof. N. Subbu Reddiyar prepares the ground for such a challenging work by giving a detailed and lucid exposition of **Saiva Siddhanta.** There is an introductory section which deals with Saiva Siddhanta literature. There are three succeeding sections dealing with the basic categories, **Pati, Pasu** and **Pasam** (God, souls and bonds). Arguments for the acceptance of these categories are taken up for exposition along with an account of their nature in these essential or primary and relative aspects. We have two sections on the means of attainment and the fruit of attachment. **Ssiva Siddhanta** is not only of academic interest but is also the basis of a living faith. Hence the author concludes his survey with an exposition of the practical aspects of worship.

Prof. Reddiyar is one of our seniormost Tamil scholars. Yet he has the ardent spirit of youth in keeping his knowledge upto date, not only in the field of literature but also in that of science. He has exacting standards

both for himself and for those who work under his guidance. While he draws fully on the authoritative Siddhanta works, he enriches his exposition by apt parallels from other classics.

**Saiva Siddhanta** is accorded increasing recognition in the Universities of **Tamilnadu.** Prof. N. Subbu Reddiyas's **Saiva Samaya Vilakku** is at once an invitation to study **Saivs Siddhanta** and a source of inspiration for further intensive study and research. I commend it heartily to institutions at home and and abroad, like SriL anka and Malaysia, interested in promoting study of **Saiva Siddhanta**.

May Lord Siva bless prof. N. Subbu Reddiyar to continue his valuable work through the years to come.

Madras-600007<br>August 15, 1984.

V. A. DEVASENAPATHI.

## நெஞ்சம் உருகுதல் வேண்டும்

வாயுண்டு வாழ்த்த; மௌனஞ்செய்
போது மௌனஅருள்
தாயுண்டு; சேய்என்ன என்னைப்
புரக்கச் சதாநந்தமாம்
நீயுண்டு; நின்னைச் சரண்புக
நான் உண்டு;என் நெஞ்சம்ஐயா!
தீயுண் டிருந்த மெழுகலவோ?
கதிசேர்வ தற்கே.[1]

—தாயுமான அடிகள்

1. தா.பா:பாயப் புலி-21

## முத்தியில் சீவன் நிலை

இந்தனத்தில் அங்கி எரிஉறுநீர் தேன்இரதம்
சுத்தமலர்ப் போதுவான் கூால்ஒளிகண்—சந்ததமும்
அத்துவித மாவதுபோல் ஆன்மாவும் ஈசனுமாய்
முத்தியிலே நிற்கும் முறை.[1]

—குருநமசிவாயர்

1. சிவபோக சாரம்-19

## எல்லாம் நின்செயல்

ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும்
ஏதேது சிந்தித் திருந்தாலும்—மாதேவா
நின்செயலே என்று நினதருளா லேஉணரின்
என்செயலே காண்கிலே னே.[1]

—குருஞான சம்பந்தர்

1. சிவபோக சாரம்-45

# நூல்முகம்

இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிரிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே.[1]

—மணிவாசகப் பெருமான்

மக்களுக்கு மன அமைதியை நல்கி வருவது இறையநுபவத்தோடு கூடிய சமய வாழ்க்கையாகும் என்பது அநுபவ உண்மை. எல்லாச் சமயங்கட்கும் இது பொருந்தும் பொதுவான உண்மையுமாகும். என் நல்வினைப் பயனால் 'பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டல்' குன்றின் மேலிட்ட விளக்காக எழுந்தருளியிருக்கும் திருப்பதியில் 17 யாண்டுகள் என் இறுதிக்காலக் கல்விப் பணியாற்றும் பேறு கிட்டியது. சூழ்நிலை 'சார்ந்ததன் வண்ணமாகச்' செய்தது. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றேன்.[2] இதன்

---

1. திருவா. கோயில் திருப்பதிகம்-7

2. பிஎச் டி. பட்டம் பெற்ற ஆங்கிலக் கட்டுரை: 'The Religion and Philosophy of Nalayira Divya Prapandham with Special Refrence to Nammalvar' என்ற தலைப்பில் பல்கலைக் கழகம் வெளியிட்டது.

விளைவாக 108 திருப்பதிகளைச் சேவிக்கும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொண்டேன். 'மலைநாட்டுத் திருப்பதிகள் (1971), தொண்டை நாட்டுத் திருப்பதிகள் (1973), பாண்டி நாட்டுத் திருப்பதிகள் (1977), வட நாட்டுத் திருப்பதிகள் (1980), சோழ நாட்டுத் திருப்பதிகளை (2 பகுதிகள்) (1981), என்ற ஆறு திருத்தலப் பயண நூல்களை எழுதி வெளியிட்டேன். 'முத்தி நெறி' (1982) என்ற தலைப்பில் வைணவ—விசிட்டாத்வைத தத்துவத்தை 'வேங்கடவாணனுக்கு வேலப்பன் கடிதங்களாக' வெளியிட்டேன். சில நோக்கில் நாலாயிரம் (1983) என்ற கட்டுரைத் தொகுப்பு நூலும் வெளிவந்தது. இவை யாவும் 'அநுபூதி நிலையில்' வெளிவந்தவை.

ஆய்வு மாணவர்களாக மூவரை ஏற்றேன்; அவர்களுள் ஒருவர் 'தாயுமானவர் பாடல்களை' ஆய்வுக்கு தேர்ந்தெடுத்துக் கொண்டார். ஆய்வு மாணவர்கள் தேர்ந்தெடுக்கும் தலைப்புகளை அவர்கட்குமுன் அத் தலைப்புகள்பற்றி நான் முதலில் ஆய்ந்து விடுவேன்; பின் அவர்களோடு கலந்து ஆய்வேன். இப் பழக்கத்தை யுடையவனாதலால் சைவம்பற்றிய பல நூல்களைப் படிக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. பதினான்கு சாத்திரங்களை மேலோட்டமாகப் பயின்றேன். தாயுமானவர் கூறும் 'சுத்தாத்துவிதத்தில்' (பாடல்—283) தெளிவு ஏற்பட வேண்டுமல்லவா? இதன் காரணமாகச் 'சைவ சித்தாந்த ஒளி' என் மனத்தில் வீசத் தொடங்கியது; ஓரளவு தெளிவும் பிறந்தது.

நான் ஏகலைவனின் 'மரபுவழி' வந்தவன். அறிவியல் பட்டதாரியாகிய என்னைத் தமிழன்னைஆட்கொண்டாள். உயர்நிலைப்பள்ளியிலும் கல்லூரியிலும் எனக்குத் தமிழ் கற்பித்த தமிழாசிரியர்கள் என்னிடம் தமிழ்பற்றிய அகத் தெழுச்சி (Inspiration) எழக் காரணமாக இருந்தவர்கள். தமிழைத் தனியாகக் கற்று வித்துவான், எம்.ஏ., பட்டங்கள் பெற்றேன். எம்பெருமானாரை மானசீகமாக ஆசானாகக் கொண்டு வைணவத்தையும், மெய்கண்டாரை

ஆசானாகக் கொண்டு சைவத்தையும் அணுகினேன். இரண்டிலும் ஓரளவு தெளிவு பிறந்தது. இத்தகைய தெளிவின் பயனாகவே 'சைவ சமய விளக்கு' என்ற இந் நூல் 'கண்ணுதலப்பனுக்குக் கார்த்திகேயன் எழுதும் கடிதங்களாக' வெளிவருகின்றது. கருத்துகளைத் தெளிவாக உணர்த்துவதற்கு கடித உத்தி கைகொடுத்து உதவுகின்றது என்பது என் கருத்து. பாணபத்திரனுக்கு உதவ வேண்டுமென்று சேரமான பெருமாள் நாயனாருக்கு ஆலவாய் சோமசுந்தரக் கடவுள் எழுதிய திருமுகப் பாசுரத்தை ஈண்டு நினைத்தல் தகும்.

இந்தப் பெரிய நூல் தமிழ் கூறு நல்லுலகத்தில் நடையாடும் பேறு கிட்டுமோ என்ற ஐயமும் அச்சமும் என்பால் எழுந்தன. இந்நிலையில் ஏழுமலையான் திருவருள் பாலித்தான். திருவேங்கடத் திருப்பதிக்கு முருகன் **க்ஷேத்திர பாலகனாயிருப்பதாலும்**[3] இந்நூல் கார்த்திகேயன் கடிதங்களாயிருப்பதாலும் எம் பெருமான் ஏழுமலையான் திருமலை-திருப்பதி தேவஸ்தானத்தின்மூலம், நிதி உதவினான். இதனால் இந்நூல் தமிழ்கூறு நல்லுலகில் உலா வரும் வாய்ப்பு கிட்டியது. இந்தப் பெருமான் திருவருளாலே என்னுடைய Collected Papers என்ற ஆங்கில நூலும் நிதி உதவி பெற்று வெளி வர இருக்கின்றது. இந்த அப்பன் கருணையினால் **'வைணவ உரைவளம்—ஐதிகங்களும் இதிகாசங்களும்'** என்ற பெரு நூலும் வெளி வரும் என்ற நம்பிக்கை என்றும் என்பால் உண்டு. நிதி உதவிய தேவஸ்தானத்தாருக்கு குறிப்பாக திரு. K. சுப்பராவ் அவர்கட்கு ('சப்தகிரி' ஆசிரியர்) என் அன்பு கலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இந்நூலைச் செவ்விய முறையில் அழகுற அச்சிட்டு உதவிய மூவேந்தர் அச்சக உரிமையாளர் திரு.

---

3. திருவரங்கம் பெரிய கோயிலின் க்ஷேத்திர பாலகருள் விநாயகரும் ஒருவராதல் போல.

கோ. தையமுத்து அவர்கட்கும், எழில்கொழிக்கும் முறையில் அட்டை ஓவியம் வரைதல், அச்சுக் கட்டை தயாரித்து மூவண்ணத்தில் அட்டையில் அச்சிட்டு லாமினேஷன் (Lamination) போடுதல்வரை பொறுப்பேற்று உதவிய ஓவிய மன்னர் திரு பி. என். ஆனந்தன் அவர்கட்கும், சீரிய முறையில் கட்டமைத்துத் தந்த கந்தன் அடிமை திரு எஸ். பி. சண்முகம்பிள்ளை (உரிமையாளர், Canesh Printing and Binding) அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இந்த நூலுக்கு ஆங்கிலத்தில் ஓர் அரிய முன்னுரை (Foreword) அருளிய பேராசிரியர் டாக்டர் வ. ஆ. தேவ சேனாபதி அவர்களை அறியாத தமிழர்கள்—சித்தாந்திகளே—இரார். கண்ணியம் மிக்க சைவக் குடும்பத்தைச் சார்ந்த இப் பெரும்பேராசிரியர் தம் பள்ளிப் படிப்பைப் புரசை நகரிலுள்ள ஒரு கிறித்தவப் பள்ளியில் முடித்துக் கொண்டு சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் பயின்று தத்துவத்துறையில் பி. ஏ. (ஆனர்ஸ்) பட்டம் (1935) பெற்றவர். (1935—38) இல் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆய்வு மாணாக்கராகவும், (1940—45) இல் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் துணைப் பேராசிரியராகவும் பணியாற்றியவர்; மீண்டும் சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஆய்வு மாணாக்கராகச் சேர்ந்து (1946—48) 'சிவஞான சித்தியார்—சுபக்கம்' என்ற நூலை ஆய்ந்து, டாக்டர் (Ph, D.) பட்டம் பெற்றவர் (1949). பிறகு பச்சையப்பன் கல்லூரியில் தத்துவத்துறையில் துணைப் பேராசிரியராகவும் (1949-55), பின்னர், சென்னைப் பல்கலைக்கழகத்தில் துணைப் பேராசிரியராகவும் (1955—64), அடுத்துப் பேராசிரியராகவும் (1964—76) பணியாற்றியவர். 1975 முதல் டாக்டர் எஸ். இராதா கிருஷ்ணன் மேல்நிலைத் தத்துவ ஆய்வு மையத்தில் இயக்குநராகப் பணியாற்றி 1978 இல்—ஓய்வு பெற்றவர். தமிழிலும் ஆங்கிலத்திலுமாகப் பல சித்தாந்த நூல்களின் ஆசிரியர். சித்தாந்தத்தைப் பழுதர

வோதிச் சிவபெருமானை இடையறாது சிந்தித்துத் தம் மனத்தில் அவரை நிலையாக நிறுத்திக் கொண்டவர். இத்தனைக்கும் மேலாக 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே'[4] என்ற தொல்காப்பிய இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்பவர். சுமார் பன்னிரண்டு ஆண்டுகளாக இவருடன் நெருங்கிப் பழக வாய்ப்பினைப் பெற்றவன். இப்பெருமகனாரின் முன்னுரை (Foreword) இந்நூலுக்கு அணிசெய்வது அடியேனின் பெரும் பேறு. இவர்தம் ஆசியால் அடியேனுக்கு மேலும் மேலும் சித்தாந்தத் தெளிவும் சிவன்பால் ஈடுபாடும் வளரும் என்பது என் திடமான நம்பிக்கை. முன்னுரை அருளிய முக் கண்ணன் அடியாருக்கு என் அன்பு கலந்த வணக்கத்தையும் நன்றியையும் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

ஜஸ்டிஸ் பி. வேணுகோபால் சென்னை உயர்நீதி மன்றத்தை அணி செய்யும் சிறந்த நீதிபதிகளுள் ஒருவர். வழிவழியாக வைணவ நெறியினைத் தழுவி வரும் மரபினில் வந்தவர். சென்னைச் சட்டக் கல்லூரியில் நல்லோஸ் உதவி ஊதியம் (Schoparshrp) பெற்றுச் சிறந்த மாணாக்கராகத் திகழ்ந்தவர். ஏழாண்டுகள் (1944—51) வழக்குரைஞர் பணியில் புகழுடன் இலங்கியவர்; ஏழாண்டுகள் (1959—66) நடுவண் அரசின் சட்டப் பரிந்துரையாளராகவும் (Legal adviser) இரண்டாண்டுகள் (1966-88) வருமானப் பொதுப்பணித் துறையின் சட்ட ஆலோசகராகவும், பத்தாண்டுகள் (1968—78) வருமான வரித்துறையின் முறை மன்ற உறுப்பினராக, (Judicial member) சென்னை, பாட்னா கல்கத்தா ஆகிய இடங்களில் பணியாற்றி நற்பெயரோடு திகழ்ந்தவர். இந்த நற்பெயர், புகழ் காரணமாக சென்னை உயர்நீதி மன்ற நீதிபதிப் பதவியை வழங்கியது நடுவண் அரசு. இங்கு இரண்டாண்டுகள் (1979—81) பெரும் புகழுடன்

4. தொல். சொல்—கிளவியாக்கம்—1

பணியாற்றி ஓய்வு பெற்றவர். பின்னர் ஓராண்டுக் காலம் (1983—84) தனிப்பட்ட நீதிபதியாகப் (ad hoc Judge) பணியாற்றிவர்.

இவருடைய சீரிய பணியையும் நற்புகழையும் கண்ட அரசு இவரைப் பல சமயம் பல ஆணையங்களில் பணியாற்றும் பொறுப்பை வழங்கியது; பல் கலைக் கழகத் துணை வேந்தர்களைத் தேர்ந்தெடுக்கும் குழுக்கள் போன்ற குழுக்களில் தலைவராகப் பணியாற்றும் வாய்ப்பினையும் வழங்கியது. இவற்றைத் தவிர பல இலக்கிய, கலை மன்றங்களிலும், கருத்தரங்குகளிலும் பங்கு பெற்று வருகின்றார். இப்பெரியார் சமயத்துறையில் ஈடுபாடு மிக்கவர். இத்தகைய உயர் பண்புகளையெல்லாம் ஒருங்கே பெற்றுச் சமரச மனப்பான்மையுடன் திகழும் வைணவர் ஒருவரின் அணிந்துரையைச் சைவ சமயம் பற்றிய இந்நூல் பெற்றது இதன் தனிச் சிறப்பாகவும் என்னுடைய பெரும் பேறாகவும் அமைகின்றது. அணிந்துரை அருளிய பெருமகனாருக்கு என் இதயம் கனிந்த நன்றி என்றும் உரியது.

பேராசிரியர் K. சச்சிதானந்த மூர்த்தியவர்கள் பழுதற ஓதிப் புலமை மிக்க பண்புடையாளர். சைவசித்தாந்தத்தில் ஆழங்கால் பட்டவர். அறுபது அகவையைத்தாண்டும் நிலையிலுள்ள (பிறப்பு : செப்டம்பர் 24, 1924) இப்பெருமகனார் தத்துவத் துறையில் எம் ஏ. பட்டம் பெற்றவர். இந்தியத் தத்துவத்தை ஆய்ந்து பிஎச். டி பட்டம் பெற்றவர். பல்வேறு குழுக்களில் பணியாற்றியவர். பல உள்நாட்டு வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களில் உரையாற்றிப் பெரும் புகழ் பெற்றவர். மூன்றாண்டுக் காலம் (1976—79) திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் துணை வேந்தராக இருந்தபொழுது ஒன்றரையாண்டுக் காலம் இவர் சீரிய தலைமையில் பணியாற்றும் வாய்ப்பு கிடைத்தது. அப்போது இவர்தம் அடக்கமான பண்பும், புரையறக் கலந்து பழகும் சீரிய குணமும், புலமையையும்

உழைப்பையும் மதித்துப் பாராட்டும் பெருந்தன்மையும் என்னைக் கவர்ந்தன. நெருங்கிப் பழகும் வாய்ப்பும் இருந்தது. இவற்றின் நினைவாக 'சத்சித் ஆனந்தத்தை' ஒளிவிட்டுக் காட்டும் 'சைவசமய விளக்கினை'ப் 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' [5] என்ற பொய்யாமொழிக்கு இலக்கியமாகத்திகழும் பேராசிரியர் சச்சிதானந்த மூர்த்திக்கு அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன். இவர் இதய கமலத்தில் கோயில் கொண்டிருக்கும் கண்ணுதலப்பனின் கருணையினால் என்னிடம் அவனைப்பற்றி அறியும் அவாவைத் தூண்டி அவனை அடையும் பேறும் பெறுவேன் என்பது என் திடமான நம்பிக்கை. அன்புப் படையலை ஏற்றருளிய பேராசிரியர் மூர்த்திக்கு என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலையான் எழுதி வெளியிட என்னுள்ளே தோன்றாத் துணையாக எழுந்தருளியிருக்கும் 'வேங்கடம் மேவிய விளக்கினை' மனம் மொழி மெய்களால் வணங்கி வாழ்த்தி இறைஞ்சுகின்றேன்.

> **உடம்பெனும் மனையகத்துள்**
> **உள்ளமே தகளியாக**
> **மடம்படு உணர்நெய்யட்டி**
> **உயிரெனும் திரிமயக்கி**
> **இடம்படு ஞானத்தீயால்**
> **எரிகொள இருந்துநோக்கில்**
> **கடம்பமர் காளைதாதை**
> **கழலடி காணலாமே.**[6]

—திருநாவுக்கரசர் பெருமான்

**"வேங்கடம்"**
**சென்னை-600 040**
**15-9-1984**

**ந. சுப்பு ரெட்டியார்**

---

5. குறள்—996 (பண்புடைமை)
6. **தேவாரம். 4.75; 4, அரியும் அரனும் என்னுள்ளத்தில் இரண்டு ஒளிவிளக்குகளாக வீற்றிருப்பவர்கள்.**

## அழுதால் பெறலாம்

**துன்பக் கடலில் துளைந்ததெலாந் தீர்ந்ததே!**
**இன்பக் கடலில் இருமென்ன—அன்பிற்**
**கரைந்து கரைந்துருகிக் கண்ணருவி காட்ட**
**விரைந்துவரும் ஆனந்த மே.**[1]

*—தாயுமான அடிகள்*

---

1. *தா.பா:உடல் பொய்யுறவு-38*

# உள்ளுறை

## பிரிவு—1 : பாயிர இயல் (1—29)


| | பக்கம் |
|---|---|
| கடிதம்—1 ; 'சித்தாந்தம்' — இதன் பொருள்; பதி, பசு, பாசம்: முடிந்த முடிபாகக் கொள்ளப்பெறும் பொருள்கள் — இவை சற்காரிய வாதம் முதலியவற்றால் விளக்கப் பெறுதல். | 3-5 |
| கடிதம்—2 : ஞான நூல்கள்—முதல், வழி,— சார்பு நூல்கள்—இறைவனாலும் பெரியார் வாயிலாகவும் அருளிச் செய்யப்பெறுதல்; சிவனேயாய் நின்றவர்கள் நால்வர்—உலகர், சத்தி நிபாதர்—இவர்பொருட்டுப் பொது, சிறப்பு நூல்கள். | 5-10 |
| கடிதம்—3 : 14 சாத்திரங்கள் — எண்களிட்டுக் காட்டல்—வேறுதமிழ், வடமொழி நூல்கள்— அகபுறச் சந்தானாசாரியர்கள். | 10-15 |
| கடிதம்—4 : பதினான்கு சாத்திரங்களைப்பற்றிய குறிப்புகள்—போதத்தின் சிற்றுரை, பேருரை பற்றிய குறிப்புகள்—சித்தியாரின் உரைகள். | 15-25 |
| கடிதம்—5 : பன்னிரண்டு திருமுறைகள்பற்றிய குறிப்புகள் — திருமுறை வழிபாடு — வழி பாட்டின் பயன். | 25-29 |

# பிரிவு—2 : பதி இயல் (31—130)

பக்கம்

*கடிதம்-6 :* சற்காரிய வாதம்—கடவுள் உண்டு—'கடவுள்' — சொற் பொருள்,—சித்தியாரின் சுபக்கம், பரபக்கம்—பிரமாணங்கள்—காட்சி, கருதல், ஆகமம்—பரு, நுண்ணிய நிலைகள்—விளக்கம்; இவை நிலைமாற்றங்களே. 33-42

*கடிதம் - 7 :* உலகத்திற்குக் கருத்தா உளனாதல்—உலகம் உள் பொருள்—மூன்று காரணங்கள்—காரியப் பொருளுக்குக் கருத்தா இன்றி யமையாமை — இறைவன் கருத்தா—உலகம் முத்தொழில்களை யுடையது — முதல்வன் ஒருவனே—சங்காரகாரணனே முதல்வன். 42-51

*கடிதம் - 8 :* பொருளின் இரண்டு இயல்புகள்—பொது, சிறப்பு விளக்கம்—பதியின் சொரூப தடத்த இலக்கணங்கள்—தடத்த நிலைகளில் சில—பாரதியின் சக்தி வழிபாடு — தடத்த நிலையில் இறைவனின் உருவங்கள். 52-58

*கடிதம் - 9 :* முத்தொழிலும் முதல்வனின் விளையாட்டு—விளக்கம்; மறைத்தலும் அருளலும்—பயன் — முத்தொழில்களின் பயன்—விளக்கம்; அத்துவதம் — விளக்கம்; மூன்று உவமைகள்—விளக்கம்; முன்னையோர் கொள்கையும் இதுவே. 59-72

*கடிதம் - 10 :* இறைவன் உலகைச் செயற்படுத்தும் முறை—படைப்பு நடைபெறுவது ஆருயிர்களின் கருத்துப்படியே—வினைதான் ஒழுங்கு முறை—ஆணவ மலத்தின் செயல்—விளக்கம். 72-78

கடிதம் - 11 : இறைவன் உருவமுடையவனா தலின் கருத்து—உருவத்தின் இன்றியமை யாமை—மூன்றுவித வடிவங்கள்—ஐந்தொழில் —இவற்றின் விளக்கம். 78-89

கடிதம் - 12 : போகவடிவம், யோகவடிவம், வேக வடிவம் — விளக்க; இறைவனது ஐந்தொழில் களை வைத்து ஐந்து நிலைகள், ஒன்பது நிலைகள்—விளக்கம்; மூன்றுவகைத் திருமேனி களின் விளக்கம்; வித்தியேசுவரனின் செயல்கள் —சம்புபட்ச அணுபட்சங்கட்கு எடுத்துக் காட்டுகள். 89-96

கடிதம் - 13 : அணுக்களாகிய உயிர்கட்கும் நவம் தரும் பேதம் உண்டு—விளக்கம்; மகேசுவர னுக்குமேல் அணுப்பட்சபேதங்தள் இல்லை; மகேசுவரனுக்குக்கீழ் சம்பு பட்சம் இல்லை— விளக்கம்; இறைவனின் 'செய்தல்' 'செய் வித்தல்' விளக்கம்; இறைவனின் வடிவ வேறு பாடுகள்; மாசுடை, மாசில்லா உலகங்கள்— சிவக்குமாரர்கள்—ஆலால சுந்தரர் உருத்திர சன்மர் திருஞான சம்பந்தர் — இவர்களைப் பற்றிய குறிப்பு—பதியை அறுதியிடும் முறை. 96-106

கடிதம் - 14 : முதல்வனும் அவன் சக்தியும் ஒன்றே — விளக்கம்; குணம் — குணிபற்றிய கருத்து—சித்தியாரின் விளக்கம்; தற்திழமை அல்லது தாதான்மியம்;—பல் பொருள்களின் சக்திகள்—சிற்றறிவு—தூல அறிவு; பேரறிவு— சூக்கும அறிவு—பரிபூரணன்பற்றிய விளக்கம். 106-112

கடிதம் - 15 : இறைவனின் சொரூப நிலை— பாசஞானம், பசுஞானம் இவற்றால் அறியப்

படாதவன்--விளக்கம்;பதிஞானம்—விளக்கம்; இதனால்தான் அறியப்படுபவன் — அநுபூதி மான்களின் அருள் உரைகள். 112-120

கடிதம் - 16 : இறைவனின் உண்மை நிலையை சத்து, சித்து, ஆனந்தம் என்று உபநிட தங்கள் கூறுதல்—இவை மூன்றுபற்றிய விளக் கங்கள்—மூன்று, ஆறு, எட்டு என்பவற்றின் விளக்கம். 120-125

கடிதம் - 17 : இறைவனின் எண்குணங்கள் பற்றிய விளக்கம். 125-130

## பிரிவு: 3. பசு இயல் (131-170)

கடிதம் - 18: உயிருண்மை — எவரும் மறுப்ப தில்லை—விளக்கம்; உயிர் அறிவுடைப் பொருள்—எல்லாச் சமயத்தினரும் ஒப்புக் கொள்ளல்—சைவசித்தாந்தக் கொள்கை. 133-134

கடிதம் - 19: ஆன்ம இலக்கணம்பற்றிய பிறர் கொள்கைகளை மறுத்தல் — உடம்பு உயி ராகாமை-ஐம்பொறிகள் உயிராகாமை-நுண் ணுடம்பு உயிராகாமை—அந்தக் கரணங்கள் உயிராகாமை — கருவிக் கூட்டம் உயிரா காமை—உயிர் சூனியம் ஆகாமை—உயிர் பரப்பிரம்மம் ஆகாமை—விளக்கங்கள். 134-144

கடிதம் - 20: உயிர்பற்றிய மெய்கண்டாரின் விளக்கம்—உயிர் 'சதசத்து' என்பதன் விளக் கம்—பசு, பதியாலும் பாசத்தாலும் பயன் பெறுதல்—எடுத்துக்காட்டுகள். 144-149

கடிதம் - 21 ; உயிரின் இயல்பு—விளக்கம்; பதி-பசு இவற்றின் அறிவில் வேற்றுமை-விளக்கம்; சார்ந்ததன் வண்ணமாதல் முதன்மையானது-விளக்கம்; எடுத்துக்காட்டுகள். 149-153

கடிதம் - 22: உயிரின் விரிவளவு—உயிர் உடம்பின் அளவு ஆகாமை-விளக்குபோல்வது; ஆகாமை-அணு அளவு ஆகாமை—உயிர்பற்றிய சித்தாந்தக் கருத்து—ஆணவத்தின் செயல்—ஆன்மா வியாபகப் பொருள்—இறைவன் திருவடிக்கீழ் நிற்றல்—ஆன்மாவின் மூவகை சக்திகள். 153-161

கடிதம் - 23: ஆன்மாவின் மூன்று நிலைகள்—கேவலாவத்தை-சகலாவத்தை-சுத்தாவத்தை-காரண காரிய அவத்தைகள்—மூவகை ஐந்தவத்தைகள் - மூவகை உயிர்கள் - விஞ்ஞானாகலர்—பிரளயா கலர்—சகலர். 101-170

## 4. பாச இயல் (171—275)

கடிதம் - 24: பாசங்கள் மூன்று—ஆணவம், கன்மம், மாயை; ஆணவத்தின் விளக்கம்; ஆணவ மலம் ஒன்றே: இது உயிரின் கேவலம், சகலம், சுத்த நிலைகளில் செயற்படும் விதம்; இம் மலத்தின் கொடுமை; அறியாமை செயற்கை; நீங்கும் கால எல்லை மாறுபடுதல்—விளக்கம். 173-184

கடிதம் - 25: கன்மம் — விளக்கம்; முயற்சியும் கன்மமும்—முதற் காரணம், துணைக் காரண அடிப்படையில் விளக்கம்; வள்ளுவர் வாக்கில் ஊழ்—நாலடியாரில் பழவினை - சோதிடம்—விதியின் வலி. 184-192

படாதவன்--விளக்கம்;பதிஞானம்—விளக்கம்; இதனால்தான் அறியப்படுபவன் — அநுபூதி மான்களின் அருள் உரைகள். 112-120

கடிதம் - 16 : இறைவனின் உண்மை நிலையை சத்து, சித்து, ஆனந்தம் என்று உபநிடதங்கள் கூறுதல்—இவை மூன்றுபற்றிய விளக்கங்கள்—மூன்று, ஆறு, எட்டு என்பவற்றின் விளக்கம். 120-125

கடிதம் - 17 : இறைவனின் எண்குணங்கள் பற்றிய விளக்கம். 125-130

## பிரிவு: 3. பசு இயல் (131-170)

கடிதம் - 18: உயிருண்மை — எவரும் மறுப்பதில்லை—விளக்கம்; உயிர் அறிவுடைப் பொருள்—எல்லாச் சமயத்தினரும் ஒப்புக் கொள்ளல்—சைவசித்தாந்தக் கொள்கை. 133-134

கடிதம் - 19: ஆன்ம இலக்கணம்பற்றிய பிறர் கொள்கைகளை மறுத்தல் — உடம்பு உயிராகாமை-ஐம்பொறிகள் உயிராகாமை-நுண்ணுடம்பு உயிராகாமை—அந்தக் கரணங்கள் உயிராகாமை — கருவிக் கூட்டம் உயிராகாமை—உயிர் சூனியம் ஆகாமை—உயிர் பரப்பிரம்மம் ஆகாமை—விளக்கங்கள். 134-144

கடிதம் - 20: உயிர்பற்றிய மெய்கண்டாரின் விளக்கம்—உயிர் 'சதசத்து' என்பதன் விளக்கம்—பசு, பதியாலும் பாசத்தாலும் பயன் பெறுதல்—எடுத்துக்காட்டுகள். 144-149

கடிதம் - 21; உயிரின் இயல்பு—விளக்கம்; பதி-பசு இவற்றின் அறிவில் வேற்றுமை-விளக்கம்; சார்ந்ததன் வண்ணமாதல் முதன்மையானது-விளக்கம்; எடுத்துக்காட்டுகள். 149-153

கடிதம் - 22: உயிரின் விரிவளவு—உயிர் உடம்பின் அளவு ஆகாமை-விளக்குபோல்வது; ஆகாமை-அணு அளவு ஆகாமை—உயிர்பற்றிய சித்தாந்தக் கருத்து—ஆணவத்தின் செயல்—ஆன்மா வியாபகப் பொருள்—இறைவன் திருவடிக்கீழ் நிற்றல்—ஆன்மாவின் மூவகை சக்திகள். 153-161

கடிதம் - 23: ஆன்மாவின் மூன்று நிலைகள்—கேவலாவத்தை-சகலாவத்தை-சுத்தாவத்தை-காரண காரிய அவத்தைகள்—மூவகை ஐந்தவத்தைகள் - மூவகை உயிர்கள் - விஞ்ஞானாகலர்—பிரளயாகலர்—சகலர். 101-170

## 4. பாச இயல் (171—275)

கடிதம் - 24: பாசங்கள் மூன்று—ஆணவம், கன்மம், மாயை; ஆணவத்தின் விளக்கம்; ஆணவ மலம் ஒன்றே: இது உயிரின் கேவலம், சகலம், சுத்த நிலைகளில் செயற்படும் விதம்; இம் மலத்தின் கொடுமை; அறியாமை செயற்கை; நீங்கும் கால எல்லை மாறுபடுதல்—விளக்கம். 173-184

கடிதம் - 25: கன்மம் — விளக்கம்; முயற்சியும் கன்மமும்—முதற் காரணம், துணைக் காரண அடிப்படையில் விளக்கம்; வள்ளுவர் வாக்கில் உளம்—நாலடியாரில் பழவினை - சோதிடம்—விதியின் வலி. 184-192

கடிதம் - 26: கன்ம மலம்—சித்தாந்தத்தின் அடிப்படையில் விளக்கம்; ஆகந்துகம், பிரதிபந்தம், அநுபந்தம், சம்பந்தம் பற்றிய குறிப்பு; மூல கன்மம்; மும்மல விளக்கம்; மாயை, வாசிக, காயிக கன்மங்கள்; இவற்றின் விளக்கம்; ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம்பற்றிய விளக்கங்கள். 193-199

கடிதம் - 27: மூல கன்மம்—சற்காரிய முறைப்படி விளக்கம்; அளவை முறைப்படியும் அநுபவ முறைப்படியும் விளக்கம்; வினைபற்றி தொல்காப்பியரின் கருத்து. எடுத்துக் காட்டால் தெளிவாக்கல்; காரிய கன்மத்தைப்பற்றி சேக்கிழார், மணிவாசகர் இவர்களின் குறிப்பு. 199-205

கடிதம் - 28: வினை பயன்தரும் முறை—ஆயு, சாதி, போகம்; இவற்றின் விளக்கம்; பிராரத்தம்—ஆதியான்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்ற வாயில்களில் செயற்படுதல்—மேலும் சில கருத்துகள்; இறைவனின் கருணை—'நாசோத் பத்தி' என்ற கருத்து—விளக்கம்; முதல் வினை. 205-215

கடிதம் - 29: மாயை—விளக்கம்; மாயையினின்றும் தோன்றுவன தத்துவங்களே—உலகத் தோற்றத்திற்கு முதற் காரணம்; மூவகைப் பிரபஞ்சங்கள்; மூவகை மாயைகள்; இவற்றின் பிணிப்பின் வேறுபாட்டால் உயிர்கள் வேறுபடுதல்—விளக்கம்; வியாபகம், வியாப்பியம்—இவற்றின் விளக்கம். 215-220

கடிதம் - 30: காரணங்களினின்று காரியங்கள் தோன்றும் முறை—விளக்கம்; சத்தப் பிரபஞ்சம், அர்த்தப் பிரபஞ்சம் — விளக்கம்; சொற்பிரபசம்-வாக்கு; சூக்குமை, பைசந்தி,

மத்திமை, வைகரி இவற்றின் விளக்கம்; பொருட் பிரபஞ்சம்—சிவ தத்துவங்கள்; சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்த வித்தை இவற்றின் விளக்கம்; சில முக்கிய செய்திகள். 220-231

கடிதம் - 31: அசுத்த மாயையில் தோன்றும் தத்துவங்கள்—அனந்த தேவர் வழியாகத் தொழிற்படுதல்; காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை—இவற்றின் விளக்கம்; இத் தத்துவத்தில் அடங்கிய புவனங்கள். 231-237

கடிதம் - 32: ஆன்ம தத்துவம்—விளக்கம்; சித்தம், புத்தி, அகங்காரம், மனம்; விளக்கம்; ஞானேந்திரியங்கள் ஐந்து—விளக்கம்; கன்மேந்திரியங்கள் ஐந்து; தன்மாத்திரைகள் ஐந்து; தன்மாத்திரை என்பதன் பொருள்; சில அடிப்படையான துண் கருத்துகள். 237-248

கடிதம் - 33: பூதங்கள் ஐந்து—விளக்கம்; தத்துவங்களின் தோற்றமும் ஒடுக்கமும்; மூவகை உயிர்களுக்குரிய தத்துவங்கள்; உருத்திரன் பக்குவம் எய்திய உயிர்; மாகேசுர மூர்த்தங்கள்; வேறு சில செய்திகள்; தாத்துவிகங்கள்—விளக்கம். 248-256

கடிதம் - 34: அண்டங்கள்—பூலோகம். கீழ் ஏழ் உலகங்கள்—மேல் ஏழ் உலகங்கள்—இவ்வுலகங்களில் வாழ்பவர்கள்—அத்துவாக்கள்—விளக்கம்; பஞ்ச கலைகள்—விளக்கம். 257-266

கடிதம் - 35: பிரணவ கலைகள் — விளக்கம்; பிறப்பிறப்புகள்—விளக்கம்; ஐந்து மலங்கள்—விளக்கம்; முளை, தவிடு, உமி—உவமானங்கள் விளக்கம்; முத்திக்கு ஐந்து மல நீக்கம் இன்றியமையாமை. 266-275

## பிரிவு - 5 : சாதன இயல் (276—323)


கடிதம் - 36 : மும்மலங்களினின்றும் விடுதலை பெற வேண்டும் என்ற அவா—சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நெறிகள்—ஞானத்தால் மட்டிலும் முத்தி அடைய இயலும் என்பதை வலியுறுத்தல் 279-284

கடிதம் - 37 : ஞானம் பெறுதலில் வேட்கை—மல பரிபாகம் — இருவினை யொப்பு — சத்தி நிபாதம்—மலபரிபாகத்தின் பல்வேறு நிலை கட்கேற்ப நடைபெறும் பரிணாமங்கள்—தவம்—பதி, பசு புண்ணியங்கள்—சைவசம யத்தின் விரிந்த போக்கு—எடுத்துக் காட்டுகள். 284-292

கடிதம் - 38 : சிவபுண்ணியத்தின் வகைகள்—சரியை, கிரியை, யோகம்—இவற்றின் விளக்கம்—அட்டாங்க யோகம் பற்றிய குறிப்பு. 292-301

கடிதம் - 39 : அபுத்தி—புத்திபூர்வ சிவபுண்ணி யங்கள் — எடுத்துக்காட்டுகள்; — சிறப்பு, பொது சிவ புண்ணியங்கள்—உபாய—உண்மைச் சிவபுண்ணியங்கள் 301-304

கடிதம் - 40 ; ஞானம் பற்றிய விளக்கம்—சிவ ஞானம்—ஞானம் குரு முகமாகவே ஏற்படும் விளக்கம்—கிரியாகுரு—ஞானகுரு—விளக்கம். 304-309

கடிதம் - 41 ; குருமூலம் அடையும் தீக்கை—தீக்கை வகைகள் ; சமய தீக்கை, விசேட தீக்கை, நிருவாண தீக்கை—விளக்கங்கள். 309-313

கடிதம் - 42 ; தீக்கை பெற்றவர்களின் சிவநெறி ஒழுக்கம்—நித்திய நைமித்திக் காமிய கருமங்கள்—நிரதிகார சாதிகார தீக்கைகள்—ஆசாரியர்கள். சாதகர்கள் — தீக்கையில் உபதேசிக்கப்படும், மந்திரங்கள் — அங்கி தீக்கை, அங்க தீக்கைகள் விவரம்—மூவகை உயிர்கள் ஞானம் பெறும் முறை. 314-323

## பிரிவு 6 : பயன் இயல் (325—376)

கடிதம் - 43 : சாதனங்களால் அடையும் பயன்கள்—பாச நீக்கம் சிவப்பேறு, வாழ்வுப் பயணம்—வாழ்வின் மேலான நோக்கம்; சித்தாந்த முத்தி—விளக்கம்; மேலும் தெளிவாக்கல்—தாள் + தலை = தாடலை விளக்கம், சித்தாந்த நூல்கள் தரும் விளக்கம்; பிறப்பில் சங்கரன்தாள் மறவாத நிலை கூடுவது இயலாது—அடிசேர் முத்தி—திருவடி நிழல். 327-339

கடிதம் - 44 : வேறு முத்திகள் — அபரமுத்தி பரமுத்தி: சீவன் முத்தி, முதலிரண்டின் விளக்கம்; பதமுத்தி அபரமுத்தி தானங்கள்—சாலோகம் சாமீபம் சாரூபம்—இவற்றின் விளக்கம்; சாயுச்சம்பற்றிய கருத்து—விளக்கம்; சிவக்குமாரர்கள் 339-348

கடிதம் - 45 ; சீவன்முத்தர்—விளக்கம்; பிராரத்தம் தவிர ஏனைய இரண்டும் இவரைச் சாரா; புறமுகத்தில் துரிய நிலை; இவர்தம் உண்டி, உறையுள் உலகியல்பற்றிய வெறுப்பின்மை—சீவன் முத்தி நிலை அனைவருக்கும் கை வரப் பெறாமை விளக்கம். 349-357

கடிதம் - 46 ; தசகாரியம் பற்றிய விளக்கம்; சித்தாந்தம் கூறும் பொருளியல்புகளைச் சுருக்கமாகக் கூறுதல்—தசகாரியங்கள் அறிவுச் செய்கை—ரூபம், தரிசனம், சுத்தி இவை பற்றி மாயை, ஆன்மா, சிவம் பற்றிக் கூறுமிடத்தில் விளக்கம்; தசகாரியங்கள் பத்தின் சுருக்க விளக்கம்; நான்கில் பத்தும் அடங்குதல். 357-365

கடிதம் - 47 : ஐந்தவத்தைகள் சுத்தத்திலும் நிகழ்தல் — விளக்கம், அவத்தைகளின் தன்மை—உபாய் நிட்டை; சில வரலாற்று நிகழ்ச்சிகள். 365-373

கடிதம் - 48 : அணைந்தோர் தன்மை—சாதனங்களில் நிற்பவர்கட்கும் சாத்தியங்களில் நிற்பவர்கட்கும் இடையேயுள்ள வேறுபாடு—உவமைமூலம் விளக்கம் 373-376

## பிரிவு 7 : வழிபாட்டியல் (377—409)

பக்கம்

கடிதம் - 49 : ஆலய வழிபாடு—தொடக்கத்தில் அழகுள்ள இடங்களில் வழிபாடு—இன்றுள்ள திருக்கோயில்கள் இடைக் காலத்தில் உண்டானவை : ஆகமத்தின் அடிப்படையில் கட்டப்பெற்றவை; மானுட உடலின் புறச் சின்னமே ஆலயம்; இராசகோபுரம்—பலி பீடம்—கொடி மரம்—கருவறை—இவற்றின் விளக்கம்—வழிபாட்டிற்குச் செல்லும் பக்தனின் மனப்பான்மை. 379-389

கடிதம் - 50 : பூசை முறைகள்—அபிடேகம்—இதன் தத்துவம்; மூர்த்தியின் அலங்காரம்

மனமலர்ச்சி; நைவேத்தியம்—பிரசாதம்—அந்தக் கரணசுத்தி செய்தல்; வெறுங் கையுடன் கோவிலுக்குப் போகலாகாது; சிரியைகள் — இவற்றின் தத்துவம்—ஆராதனையில் ஐம் பொறிகளும் இடம் பெறுதல்—இதன் தத்துவம்; நடராசர் ஆலய அமைப்பு; தண்டம் சமர்பிக்க வேண்டிய இடம். 389-395

கடிதம் - 51 : பூசை வழிகள் தெய்வத் தன்மை மனிதனுக்கு உரியது—விளக்கம்; உடல் சிறந்த ஆலயம்—விளக்கம்; ஞானச் செல்வர்களின் திருவாக்குகள் — பூசையின் பொருள்—விளக்கம்; மானச பூசை, பாகிய பூசை—விளக்கம், நாடோறும் இறைவனைப் போற்றுதல்—பயன். 395-409

## பின்னிணைப்புகள்(411—432)

1. பயன்பட்ட நூல்கள் 412—414

2. பொருட்குறிப்பு அடைவு 415—428

3. பேராசிரியர் ரெட்டியாரின் நூல்கள் 431—432

## வினைவழி

அவரவர் வினைவழி அவரவர் வந்தனர்
அவரவர் வினைவழி அவரவர் அநுபவம்
எவரெவர்க் குதவினர் எவரெவர்க் குதவிலர்
தவரவர் நினைவது தமை உணர் வதுவே.[1]

—குருஞான சம்பந்தர்

1.சிவபோக சாரம்—தனிப்பாடல்கள்-4

## திருவருட் செல்வர்
## மெய்கண்ட தேவ நாயனார் துதி

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவரி தயகமல முகைக ளெல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய்மேவ
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வோம்.[1]

---

1. *சிவஞான சித்தியார்—மங்கல வாழ்த்து-6.*

# 1

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன். உன் கடிதம் கண்டு மகிழ்ந்தேன். சைவ சமயத் தத்துவங்களின்மீது உன் நாட்டம் செல்வதாகவும், அவற்றைத் தெளிவாக விளக்கு மாறும் கேட்டிருந்தாய். உன் நல்லெண்ணத்தைப் பாராட்டுகின்றேன். முன்னைய நல்வினைப் பயன் காரண மாக உன் மனம் சமய தத்துவங்களில் ஈடுபட விழை கின்றது என்பது என் கருத்து.

முதலில் சைவ சித்தாந்தப் பொருளைத் தொகை முறையில் உணர்தல் நலமாகும். 'சித்தாந்தம்' என்பது என்ன? 'முடிந்த முடிபு' என்பது இதன் பொருளாகும். எந்த ஒரு பொருளைப்பற்றியும் முதற்கண் ஒரு முடிவு கொள்ளப்படுதல் இயல்பாக அமைவது; பின்பு அப் பொருளை நன்கு ஆராய்ந்து பார்த்து இறுதியாக ஒரு முடிவு கொள்ளப்படும். இதுவே முடிந்த முடிபாகும். சில சமயம் முதல் முடிவே முடிந்த முடிபாகவும் வரலாம்; ஆயினும் அஃது ஆராயாமல் கொள்ளப்பட்ட நிலைபோல இல்லாமல், நிலைத்து நிற்கும் முடிபாகித் திகழுமாகை யால், அதுவே 'முடிந்த முடிபு' என்று வழங்கப்பெறும்.

சைவ சித்தாந்தத்தில் 'முடிந்த முடிபாக' கொள்ளப் படும் பொருள்கள் மூன்று. இவை பதி, பசு, பாசம் என்று வழங்கப்பெறும். இவற்றுள் பதி என்பது, இறைவன்; கடவுள். 'பரமான்மா' எனப்படுவதும் இதுவேயாகும். பசு என்பது, ஆன்மா; உயிர். 'சீவான்மா' எனப்படுவதும் இதுவே. பாசம் என்பது, தளை; அஃதாவது உயிரைப்

பிணித்துள்ள கட்டு. இவை தமிழில் முறையே இறை, உயிர், தளை என்று சொல்லப்படும் என்பதையும் அறிவாயாக. சைவ சித்தாந்தப்படி இந்த மூன்றும் தனித் தனிப் பொருள்களாகும். இவை எந்தப் பொருளின் காரியமும் அன்று என்பதை உளங்கொள்வாயாக. இந்த மூன்று பொருள்கட்கும் எந்நாளிலும் தோற்றமும் இல்லை; முடிவும் இல்லை. தோற்றம், முடிவு அற்ற பொருள் 'அநாதி'யாகும்; அஃதாவது 'ஆதி' இல்லாதது. ஆதி இல்லையாதலின் அந்தமும் இல்லை. இதனை,

> பதிபசு பாசம் எனப்பகர் மூன்றின்
> பதியினைப் போற்பசு பாசம் அநாதி.[2]

என்று தெளிவுபடுத்துவர் திருமூலர். எனவே, 'பதியாகிய கடவுள் என்று உண்டோ, அன்றே பசுவாகிய உயிரும் உண்டு; அன்றே அவ்வுயிர்களைப் பிணித்துள்ள பாசம் உண்டு' என்பது சைவ சித்தாந்தத்தின் 'முடிந்த முடிபாகும்' என்பதை உளங்கொள்வாயாக. இவற்றைத் தனித்தனியே பின்னர்த் தெளிவாக்குவேன்.

இவற்றுள் பதிப்பொருள் ஒன்றேயாகும்; இரண்டாவது இல்லை என்பதைத் தெளிக. பசுக்கள் எண்ணில. பாசம் மூன்று; அவை ஆணவம், கன்மம், மாயை என்பனவாகும். இவை உயிரைக் கட்டுப்படுத்தல்பற்றிப் 'பாசம்' எனப்படுதல் போல, உயிர்களின் தூய்மையைக் கெடுத்து நிற்றலாலும், பின்னர் அகற்றப்படுதலாலும் 'மலம்' எனவும் வழங்கப்பெறும். மலம்-அழுக்கு. 'மும்மலங்கள்' என்ற வழக்கையும் உன்னுக.

மேலே குறிப்பிட்ட 'பதி பசு பாசம்' என்ற மூன்று பொருள்களும் 'தோற்றமும் அழிவும் இல்லாது என்றும் உள்ள பொருள்கள்' என்ற உண்மை 'சற்காரிய வாதம்'

---

2. திருமந். முதல்தந்திரம், உபதேசம்-3.

என்பதன் அடிப்படையில் அமைந்துள்ளது. இதனை அடுத்து வரும் கடிதமொன்றில் தெளிவாக்குவேன். சந்தர்ப்பத்துடன் விளக்கும்போதுதான் தெளிவு பிறக்கும்.

இன்னும் ஓர் ஐயமும் நின்பால் எழலாம். பதி, பசு, பாசம் என்ற மூன்று பொருள்களும் 'உள்ளன' என்பதால் நீ அந்த மூன்றையும் சமமாகக் கருதும் குழப்பமே அஃதாகும். இதனையும் தெளிவுறுத்துவேன். 'உள்ளன' என்பதால் எல்லாப் பொருள்களும் சமமாய் விடுதல் யாங்ஙனம்? அங்ஙனம் பொருள் கொள்ளல் அசம்பாவிதம் என்பதையும் தெளிவுறுத்துவேன். 'ஒரு நாட்டில் அரசன் என்று உள்ளானோ அன்றே குடிகளும் உள்ளனர்' என்று கொள்ளும்போது 'அரசனும் குடிகளும் சமம்' என்று கருதுவது பொருந்துமோ? அங்ஙனமே, 'உலகில் மக்கள் என்று உள்ளனரோ, அன்றே விலங்கு முதலியனவும் உள்ளன' என்று கொள்ளும்போது மக்களும் விலங்கு முதலியனவும் சமம் என்று கொள்ளல் பொருந்துமோ? இந்த இரண்டு எடுத்துக்காட்டுகளிலும் பொருத்தமின்மையைக் காண்பது போலவே, 'பதி உண்டு; அன்றே பசுவும் பாசங்களும் உள்ளன' என்பதனால் முப்பொருள்களும் சமம் ஆமாறு இல்லை என்பது வெள்ளிடை மலை. ஆகவே, 'முப்பொருளும் அநாதி நித்தியம்' என்பதனால் இறைவனை 'முதற் பொருள்' என்று கொள்ளற்குத் தட்டில்லை என்பதைத் தெள்ளிதின் உணர்க.

இந்த முப்பொருள்களைப்பற்றி அடுத்தடுத்த கடிதங்களில் உரிய இடம் வரும்போது மேலும் தெளிவுறுத்துவேன். அதற்கு முன்னர் சைவ சித்தாந்தத்தை இன்று இனிது விளக்கும் நூல்கள் உள்ளன. அவை பதினான்காகும். இவையே 'சித்தாந்த சாத்திரம்' என்று வழங்குகின்றன; இவற்றைப் பற்றிய குறிப்புகளை அடுத்து எழுதும் கடிதத்தில் தெளிவுறுத்துவேன்.

அன்பன்,

கார்த்திகேயன்.

# 2

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைந்திடுக. இக்கடிதத்தில் 'ஞான நூல்கள்', நூலின் வகைகள், சித்தாந்த முதல் நூல்கள் இவைபற்றித் தெளிவாக்க முயல்கின்றேன்.

உலகில் 'ஞான நூல்கள்' என்ற பிரிவில் எத்துணையோ நூல்கள் அளவின்றிக் கிடக்கின்றன. இவைபற்றி முடிந்த முடிபாகச் சில கருத்துகளைத் தெரிவிப்பேன். 'வேதம், ஆகமம், பொதுமறை (திருக்குறள்), திருமுறை' என்பவை முதல் நூல்கள். 'ஸ்மிருதிகள், புராணங்கள், அறுபத்து நான்கு கலைகள், உபாகமங்கள், பண்டைத் தமிழ் இலக்கியங்கள், அற நூல்கள், தல புராணங்கள்' என்பவை வழி நூல்களாகின்றன. 'சிட்சை, கற்பம், சோதிடம், வியாகரணம், இயல், இசை, நாடகம், முத்தமிழ்களின் இலக்கண நூல்கள், உந்தி, களிறு முதலிய மெய் நூல்கள்' என்பவை சார்பு நூல்களில் அடங்கும். இந்த மூன்று வகை நூல்களும் ஏதோ ஒரு வகையில் 'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள்களை விளக்குதலையே நோக்கமாக உடையன என்று சொல்லலாம். இதனை,

> பலகலைஆ கமவேதம் யாவையினும்
> கருத்துப் பதிபசுபா சந்தெரித்தல்.

என்று அருளிச் செய்தார் கொற்றவன் குடி உமாபதி சிவம். இவர் சந்தான குரவர் நால்வருள் நான்காமவராவர். எனவே, 'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள்களை முறைப்படி உணர்தலே ஞான நூல்களின் முடிந்த முடிபை உணர்தலாகும் என்பதைத் தெளிவாயாக.

எல்லா நூல்கட்டும் கருத்து முப்பொருள் இயல்பைக் கூறுவதாக அமையினும், அந்நூல்களைச் செய்தோர்

அனைவரும் ஒரு தரத்தினர் அல்லர் என்பதையும் அவர்கள் பல்வேறு தரத்தினர் ஆவர் என்பதையும் யாவரும் அறிவர்.

'முதல்வழி சார்பென நூல் மூன்றாகும்'[3]

என்று நூல்களை மூன்று வகையாகப் பிரிவினை செய்து பேசும் இலக்கணம். இவற்றுள் முதல் நூலே வினையின் நீங்கி விளங்கிய அறிவனாகிய இறைவனால் செய்யப் பெற்றது. இனித் தம்வயம் இழந்து இறைவனது அருள் வயப்பட்டு நின்ற அருளாளர் செயல் எல்லாம் இறைவன் செயலாக இருத்தலால், இந்த அருட் செல்வர்கள் செய்த நூல்களும் முதல் நூல்களில் அடங்கும் என்பதையும் அறிவாயாக.

சிவனும்இவன் செய்தியெல்லாம் என்செய்தி யென்றும்
............... உடனாகி நின்றுகொள்வன்.[4]

என்று சித்தியார் கூறுவதனால் இதனை அறியலாம்.

துரியம் கடந்தசுடர்த் தோகையுடன் என்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான் —துரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யும் தன்மைகளும்
ஆக்கியிடும் அன்பர்க்கவன்.[5]

[துரியம்—பேருறக்கம்; அது கடந்த நிலை, துரியா தீதம்.]

என்ற திருக்களிற்றுப் பாடியார் செய்யுளாலும் தெளியலாம்.

வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்.[6]

என்ற தொல்காப்பிய நூற்பாவும் இக்கருத்தினையே

3. நன்னூல்—பாயிரம்.
4. சித்தியார் 10-1
5. களிறு-69
6. தொல். பொருள். மரபு-96

அரண் செய்தல் காண்க. இவ்வாற்றால் நாம் கொள்ளும் முதல் நூல்கள் வட மொழியில் 'வேதம், சிவாகமம்' என்னும் இரண்டும், தமிழ் மொழியில் திருக்குறள், தேவாரம் முதல் திருத்தொண்டர் புராணம் ஈறாக உள்ள பன்னிரு திருமுறைகள் என்பனவுமாகும்.

சிவனைத் தலைப்பட்டுச் சிவனேயாய் நின்றவர்களும் உளரோ என்ற ஐயம் நின்பால் எழலாம். கூறுவேன்; இவர்கள் வாயிலாக இறைவன் இயற்றியருளும் அதியற்புதச் செயல்களாலே இதனை நாம் அறிந்து கொள்ளலாம். ஓடம் கரையேற்றுதல், முத்துச் சிவிகையேறுதல், உலவாக் கிழி பெறுதல், திருமறைக் காட்டில் கதவடைத்தல், ஆண் பனையைப் பெண்பனை யாக்குதல், பொற்றாளம் பெறுதல், பாலை நிலத்தை நெய்தல் நிலமாக்குதல், ஆற்றில் ஏடு எதிரேறப் பண்ணுதல், பாண்டியனுக்கு வெப்பு நோய் தவிர்த்தல், எலும்புக்கு உயிர் கொடுத்தல்—இவை ஞான சம்பந்தப் பெருமான் நிகழ்த்திய அற்புதச் செயல்கள்.[7] யானையினாலேயும், நீற்றறையினாலேயும் நஞ்சினாலேயும் உண்டான கொலையை நீக்குதல், கல்லைத் தெப்பமாகக் கொண்டு கடலை நீந்துதல், திருமறைக் காட்டில் வாசலைத் திறப்பித்தல்—இவை அப்பர் பெருமானின் அற்புதச் செயல்களாகும்.[8] வீடுபேறு நல்கும் சிவபெருமானைத் தூது அனுப்பின நம்பியாரூரரின் செயல் சாமானியமானதா?[9] முதல்வனைக் குதிரைமேல் எழுந்தருளச் செய்தல், திருவடிப் பேரின்பத்தினை அவனருளால் திருவாசகம், திருக்கோவையார் என்ற இரண்டு நூல்களாகப் பாடியருளுதல், அப்பெருமானையே அவற்றை எழுதிக் கொள்ளச் செய்தல்—ஆகியவை செயற்கரிய செயல்களன்றோ?[10] "தெய்வப் புலமைத்

7. களிறு—70
8. ஷை—71
9. ஷை—72
10. ஷை.-73

திருவள்ளுவர் மொழிந்த—மெய் வைத்த சொல்"[11] என்ற தாலும் தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைகளும் திருக்குறளும் சித்தாந்த முதல் நூல்களாகக் கருதப் பெறுதல் இனிது விளங்கும்.

நூலைக் கற்று அதன் வழி நின்று பயன்பெறுவார் இரு திறத்தினர். அறத்தின் பெருமையை உணர்த்தி அதன் வழியொழுகி இம்மை மறுமை இன்பங்களை அடைவார் ஒரு திறத்தினர்; இறைவனது அருளின் பெருமையை உணர்ந்து அதன் வழியொழுகி வீட்டின்பத்தினைப் பெறுவார் மற்றொரு திறத்தினர். இவர்கள் முறையே 'உலகர்' எனவும், 'சத்தி நிபாதர்' எனவும் வழங்கப் பெறுவர். உலகர் பொருட்டுக் செய்யப்பெற்ற நூல் அற நூல் எனப்படும்; இது பொது நூலாகும். சத்தி நிபாதர் பொருட்டுச் செய்யப் பெற்றது 'அருள் நூல்' எனப்படும். இது சிறப்பு நூல்.

> ஆரணநூல் பொதுசைவம்; அருஞ்சிறப்பு நூலாம்
> நீதியினால் உலகாக்கும் சத்திநிபா தாக்கும்
> நிகழ்த்தியது.[12]

என்னும் சிவஞான சித்தியினையும்,

> வேதமோ டாகமம் மெய்யாய் இறைவன் நூல்
> ஓதும் பொதுவும் சிறப்புமென் றுள்ளன.[13]

என்னும் திருமந்திரத்தையும்,

> உலகியல் வேதநூல் ஒழுக்கம் என்பதும்
> நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதும்.[14]

என்றருளிய சேக்கிழார் விளக்கத்தையும் நோக்கினால்

---

11. நெஞ்சுவிடு தூது-25
12. சித்தியார்-8.15
13. திருமந், எட்டாந்தந். ஆநந்தம்-28
14. பெ. பு. திருஞா. புரா-8.20

பொது, சிறப்பு என்பதன் கருத்து தெளிவாகும். இம் முறையில் திருக்குறள் பொதுநூல்; திருமுறைகள் சிறப்பு நூல் என்பது தெளிவாகும்.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 3

அன்புநிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைக. இக்கடிதத்தில் 'சித்தாந்த சாத்திரங்கள்' பதினான்கு எவை என்பதையும் அவற்றின் ஆசிரியர்களையும் சுருக்கமாக விளக்குவேன்.

1. திருவுந்தியார், 2. திருக்களிற்றுப் பாடியார், 3. சிவஞான போதம், 4. சிவஞான சித்தியார், 5. இருபா இருபஃது, 6. உண்மை விளக்கம், 7. சிவப்பிரகாசம், 8. திருவருட் பயன், 9. வினா வெண்பா, 10. போற்றிப் பஃறொடை வெண்பா, 11. கொடிக் கவி, 12. நெஞ்சுவிடு தூது, 13. உண்மைநெறி விளக்கம், 14. சங்கற்ப நிரா கரணம் என்ற பதினான்கும் சித்தாந்த சாத்திரங்களாகும். இவற்றை,

உந்தி களிறே உயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம்—வந்த அருள்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்பம் உற்று.

என்ற பழைய வெண்பா ஒன்று பட்டியலிட்டுக் காட்டு கின்றது.

நூல்களைப் பற்றி அறிந்து கொள்வதற்கு முன் நூலாசிரியர்களைப் பற்றி அறிந்துகொள்வது இன்றியமை யாததாகின்றது. திருவுந்தியார் (1) என்ற நூலை அருளிச்

செய்தவர் திருவியலூர் உய்யவந்த தேவனார் என்பார். இவர் மாணாக்கர் திருவியலூர் ஆளுடைய தேவ நாயனார். இவர் மாணாக்கராகிய திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனாரே திருக்களிற்றுப் படியார் (2) என்ற நூலை அருளிச் செய்தார். இது திருவுந்தியாரின் பொருளை இனிது விளக்கும் வழி நூலாக அமைகின்றது. இந்த நூலைப்பற்றிய ஒரு வரலாறு உண்டு. அதனையும் நீ அறிந்துகொள்ள வேண்டும்.

நூலாசிரியர் ஆட்டு வாணியக் குலத்தில் தோன் றியவர். இக்காரணம்பற்றி இவர்தம் மெய்யுணர்வு நூலை ஏற்றுக்கொள்ளச் சிலர் ஐயுற்றனர். சிவதீக்கை பெற்ற பின்னர் ஒருவரை உலகியல் குலம்பற்றி உளங் கொண்டு வேறுபாடு கருதுதல் உண்மைச் சிவநெறிக்கு ஒரு சிறிதும் ஒவ்வாது என்ற உண்மையை அறியாதவர்கள் இவர்கள். இதன் பெருமையை அறியும் பொருட்டு இந்நூல் திருச்சிற்றம்பலத்தின்கண் அம்மை-அம்பலவாணர் திருமுன் காணப்படும் 'திருக்களிற்றுப் படியார்' என்னும் திருப்படியில் வைக்கப் பெற்றது. அம்பலவாணரின் திருவருளால் அப் படியொடு பொருந்திய கல்லாலமைந்த 'களிற்றுக்கை' எனப்படும் தூம்புடைக் கை தூக்கி அம்பலவாணர் திருவடியில் வைத்தது. இக்காட்சியினைக் கண்டோர் வியப்பெய்தினர். நூலினைத் தலைமேற் கொண்டு போற்றினர். இமமுறையால் இந்நூலுக்குத் 'திருக்களிற்றுப் படியார்' என்னும் திருப்பெயர் வழங்க லாயிற்று.

திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி' மாணிக்கவாசகர் என்ற சமய குரவர் நால்வருக்குப்பின் சைவ சமயத்தை தழைத்தோங்கச் செய்வதற்குத் தமிழ் நாட்டில் பல ஞான சந்தானங்கள் தோன்றின. பழமை யாகவே 'திருமூலர் மரபு' என்ற ஒரு சந்தானம் பேசப் பெறுகின்றது. தாயுமான அடிகளும் தமது குருநாதராகிய மௌன குருவை 'மூலன் மரபில் வருபவராகவே' கொண்

டிருத்தல் ஈண்டு நினைக்கத் தக்கது.[15] இதுபோல் 'திருவியலூர் உய்யவந்த சந்தானம்' என்பதாக ஒரு சந்தானம் இருந்ததை மேற்கூறப்பெற்ற இரண்டு நூல்களால் அறிய முடிகின்றது.

**சிவஞான போதத்தினை** (3) அருளிச் செய்தவர் திருப்பெண்ணாகடத்தில் தோன்றித் திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியிருந்த மெய்கண்ட தேவநாயனார் என்பவராவார். 'மெய்கண்டார்' என்பது தீட்சையால் பெற்ற பெயர். இவரது பிள்ளைத் திருநாமம் 'சுவேதவனப் பெருமாள்' என்பது. இவரது சந்தானமே 'திருக்கயிலாய பரம்பரை' என்று வழங்கப்பெறுகின்றது. இஃது இரு கிளையாய் திருவாவடு துறையில் ஒன்றும், தருமபுரத்தில் ஒன்றுமாக இரண்டு ஞான பீடங்களைக் கொண்டிலங்குகின்றது.

**சிவஞான சித்தியார்** (4) **இருபா இருபஃது** (5) என்ற இரு நூல்களையும் அருளிச் செய்தவர் மெய்கண்டாரின் மாணாக்கர் அருணந்தி தேவ நாயனார் என்பவர். மெய்கண்டாரின் 49 மாணாக்கர்களுள் இவரே முதல்வராகத் திகழ்ந்தவர். 'அருள் நந்தி' என்பது தீட்சாத் திருநாமம். இதற்குமுன் இவர் 'சகலாகம பண்டிதர்' எனப் பெயர் பெற்றிருந்தார். மெய்கண்டதேவரைச் சிவபெருமானுடனும், இவரை நந்தி தேவருடனும் ஒப்பிட்டுப் போற்றுவர் சைவப் பெருமக்கள்.

**உண்மை விளக்கத்தை** (6) அருளிச் செய்தவர் மனவாசகங் கடந்தார் என்பவர். இவரும் மெய்கண்டாரின் மாணாக்கருள் ஒருவரே. இந்நூலைத் தவிர இவரைப் பற்றிய வேறு குறிப்பு ஒன்றும் அறியக்கூட வில்லை. **சிவப் பிரகாசம்** முதலிய எட்டு நூல்களையும்[16] அருளிச் செய்தவர்

15. தாயுமான அடிகள்—'மௌன குரு வணக்கம் காண்க.

16. இவை 'சித்தாந்த அட்டகம்' என்ற பெயராலும் வழங்கப் பெறும். இவற்றுள் உண்மைநெறி விளக்கம் எனைதைச் சீகாழித் தத்துவராயர் என்பார் செய்ததாகச் சொல்வதும் உண்டு.

கொற்றவன்குடி உமாபதி தேவநாயனார். இவர் அருள் நந்தி தேவரின் மாணாக்கராகிய மறைஞான சம்பந்தரின்[17] மாணாக்கராவர். இவர் தில்லைவாழ் அந்தணர்களுள் ஒருவர். இவர் அதிதீவிர பக்குவத்தால் மறைஞான சம்பந்தரை அடைந்து உபதேசம் பெற்று அவர் வழி நின்றமையால் ஏனைத் தில்லைவாழ் அந்தணர்கள் விலக்கி விட்டனர். இதனால் இவர் தில்லைக்கு அருகிலுள்ள கொற்றவன் குடியில்[18] மடம் அமைத்துக்கொண்டு தங்கி யிருந்த காலத்தில் தில்லைவாழ் அந்தணர்களும் பிறரும் வியக்கும் வண்ணம் பல அற்புதங்களை நிகழ்த்தினார்.

மெய்கண்ட சந்தானத்தில் உள்ள மெய்கண்டார், அருள் நந்தி தேவர், மறைஞான சம்பந்தர், உமாபதி தேவர் ஆகிய நால்வரும் 'சந்தான குரவர்' எனப் போற்றப்பெறுவர். இவர்களுடைய வரலாறுகள் விரிவானவை. இவற்றைச் 'சந்தனாச்சாரியர் புராண சங்கிரகம்' என்ற நூலின் காணலாம். ஆண்டுக் கண்டுகொள்வாயாக.

மேற் குறிப்பிட்ட பதினான்கு நூல்களும் 'மெய் கண்ட நூல்கள்' எனவும் வழங்கப்பெறுகின்றன. இவையேயன்றி சீகாழிச் சிற்றம்பல நாடிகள் செய்த 'துகளறு போதமும்' திருவொற்றியூர் ஞாகச முனிவர் செய்த ஞானாமிர்தமும் குறிப்பிடத்தக்க சித்தாந்த நூல்களாகும் என்பதையும் அறிவாயாக. இவற்றைத் தவிர, சித்தாந்த சாராவளி, அட்டப் பிரகரணம், பவுட்கர விருத்தி முதலிய வட நூல்களும் சித்தாந்தத்தை விளக்குபவையாகும்.

இன்னொரு கருத்தையும் நீ அறிந்து கொள்வது இன்றி யமையாதது. மெய்கண்டாரது கொள்கை அல்லது

17. வைதிக அந்தணமரபினர். யாதொரு நூலும் செய்திலர்.

18. அண்ணாமலைப் பல்கலைக் கழக வளாகத்தில் உள்ளது 'கொற்றவன் குடிக் குடியிருப்பு' என்ற பெயருடன் வழங்கும் இதில் இப்போது பல்கலைக்கழக ஆசிரியர்கள் வாழ்கின்றனர்.

சித்தாந்தம் 'ஆகமாந்தம்' எனப்படும் சைவசித்தாந்தமாக உள்ளது, இதனால் அவரை சைவ சித்தாந்தத்தின் முதலாசிரியர் எனக் கொள்ளும் மரபு ஒன்று உண்டு. ஆனால், உண்மையில் சைவ சித்தாந்தத்தின் முதலாசிரியர் சிவபெருமானே. அவர் திருக்கயிலையில் தென்முகக் கடவுளாக (தட்சிணா மூர்த்தியாக) இருந்து நந்தி பெருமானுக்கு உண்மை ஞானத்தை அருளினார். நந்தி பெருமானின் மாணாக்கர் சனற் குமார முனிவர்; இவர் மாணாக்கர் சத்திய ஞான தரிசிகள்; இவர் மாணாக்கர் பரஞ்சோதி மாமுனிகள். இவர்கள் யாவரும் என்றும் திருக்கயிலையில் இருப்பவர்கள். ஆதலின் இவர்கள் 'அகச் சந்தானாச் சாரியர்கள்' எனப்படுவர்.[19] இம்மரபு "தட்சிணா மூர்த்தி வழி" என்று பேசப்படும்.

இவர்களில் பரஞ்சோதி மாமுனிகள் ஒருகால் வான் வழியாகச் செல்கையில் தமிழகத்தில் திருவெண்ணெய் நல்லூரில் 'சுவேத வனப் பெருமாள்' என்னும் பிள்ளைத் திருநாமத்துடன் எழுந்தருளியிருந்த மெய் கண்ட தேவருக்குத் தம் வழிவழி உபதேசத்தைச் செய்து சென்றார். இவர் வழியாக இந்நிலவுலகில் சித்தாந்தம் பரவியது. மெய் கண்ட தேவர், அருணந்தி தேவர், மறை ஞான சம்பந்தர், உமாபதி சிவம் என்கின்ற இந்நால்வரும் நிலவுலகில் விளங்கினமையால் 'புறச் சந்தானாசாரியர்கள்' என்று வழங்கப் பெறுகின்றனர்.[20] இம்மரபு 'பரஞ்சோதி

19. சித்தியார்—நூற்சிறப்பு-10

20. இத்தகைய குரு பரம்பரை வைணவ சமயத்திலும் உண்டு. பெரிய பெருமாள் (ஸ்ரீமந் நாராயணன்) முதல் குரு. சிஷ்யைகள்-பெரிய பிராட்டியார், பூமிப் பிராட்டியார்- நீளாதேவி என்ற நாச்சிமார்கள். பெரிய பிராட்டியாரின் சீடர்கள்: அனந்தன், கருடன், விஷ்வக் சேநர். இவர்கள் யாவரும் வைகுந்தத்தில் இருப்பவர்கள். நம்மாழ்வார் திருப் புளியாழ்வாரின்கீழ் தியானத்திலிருக்கும்போது விஷ்வக் சேநர் இவருக்கு உபதேசித்தார். இவரிடமிருந்து நாத

முனிவர் வழி'' என்று வழங்கப்பெறும். சித்தாந்தத்தைத் தெரிந்துகொள்ள விழையும் நீ இந்த மரபுகளையும் அறிந்து கொள்ள வேண்டும்.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 4

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைவதாகுக. இக்கடிதத்தில் பதினான்கு சாத்திரங்களைப்பற்றிய சில குறிப்புகளைத் தருகின்றேன். இவை இந்நூல்களின் பெருமைகளைப் புலப்படுத்துவனவாகவே அமையும்.

முன்னர்க் குறிப்பிட்ட (இரண்டாவது கடிதம்) பதினான்கு நூல்களுள் திருவுந்தியார் (1) திருக்களிற்றுப் படியார் (2) என்ற இரண்டு நூல்களும் 'திருவியலூர் உய்யவந்த சந்தானத்தில்' தோன்றியவை என்பதை நினைவு கூர்க. இவையே காலத்தால் முற்பட்ட நூல்களாகும். ஏனைய பன்னிரண்டும் 'மெய்கண்ட சந்தானத்தில்' தோன்றியவை. இந்த இரு திறத்து நூல்களும் நுவலும் பொருளால் ஒன்று பட்டவை. ஆயினும் அவற்றைத் தெரிவிக்கும் முறையில் சிறிது வேறுபாடு உடையவை.

உந்தியும் களிறும் சித்தாந்தப் பொருள்களை உபதேச முறையால் கூறுகின்றன. இங்குப் பரபக்கப் பார்வைக்கே

---

முனிகள் உபதேசம் பெற்றார். நாத முனிகள் தொடங்கி இராமாநுசர்வரையிலும் அவருக்குப் பின்னரும் உள்ள ஆசாரியர்கள் இந்நில உலகிலிருப்பவர்கள். மேய்கண்டாரை முதல் ஆசாரியராகக் கருதப் பெறுவதைப் போலவே, நம்மாழ்வாரையும் முதல் ஆசாரியராகக் கருதுவது தவறில்லை.

இடம் இல்லை. இவை அநுபவத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளன. அதனால் இவை அறுபான் மும்மை நாயன்மார் முதலிய திருத்தொண்டர்களது உண்மை வரலாறுகள், திருக்குறள், தேவாரம் முதலிய திருமுறைகள் போன்ற தமிழ் நூல்கள் ஆகியவற்றை முதன்மை மேற்கோள்களாகக் காட்டுகின்றன. 'பிரமாணம் இலக்கணம், சாதனம், பயன்' என்னும் நான்கனுள் பின்னைய இரண்டுமே இந்நூல்களில் கூறப் பெற்றுள்ளன. இவற்றுள் திருவுந்தியார்(1) முதல் நூல். இது நாற்பத்தைந்து கலித்தாழிசையால் ஆனது. சில தாழிசைகள் திருமந்திரம் போலவும் பொருள்களைப் பிசி செய்யுள் போல் மறைத்துக் கூறுவனவாய் அமைந்திருப்பதைக் காணலாம். திருக்களிற்றுப்படியார் (2) திருவுந்தியாரின் வழிநூலாய் அமைந்துள்ளது. ஒவ்வொரு தாழிசையின் பொருளையும் சில வெண்பாக்களாலேயே விரித்து விளக்குனவாய் அமைந்திருப்பதைக் கண்டு தெளியலாம். இது நூறு வெண்பாக்களைக் கொண்டது. இவ்வெண்பாக்கள் யாவும் இனிய தெளிவான நடையில் செல்லுகின்றன.

மேற் குறிப்பிட்ட இரண்டைத் தவிர, சிவஞான போதம், சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் என்னும் மூன்றும், பரபக்க நோக்கில், அளவை நெறி கொண்டு ஆய்வு முறையில் தடை—விடைகளால் விளக்குகின்றன. இந்த மூன்று நூல்களிலும் பிரமாணம், இலக்கணம், சாதனம் பயன் என்ற நான்கும் கூறப்பெறுகின்றன. எஞ்சிய நூல்கள் ஒன்பதிலும், இவை ஏற்ற பெற்றி கூறப் பெறுகின்றன. 'பிரமாணம், இலக்கணம்' இந்த இரண்டும் பொது வியல்பு; 'சாதனம், பயன்' என்னும் இரண்டும் உண்மை இயல்பு என்பதை ஈண்டு நீ உளங்கொள்ளல் வேண்டும்.

சிவஞான போதம் (3) என்னும் நூல் சித்தாந்தத்தின் தலை மணிநூல் என்பதை நீ அறியவேண்டும். பன்னிரண்டே நூற்பாக்களில் (சூத்திரங்களில்) எல்லா மெய்ந் நூல்களின் கருத்துகளையும் அடக்கி, அளவை நெறி

கொண்டு (தருக்க முறையைப் பின்பற்றி) மிகத் திட்பமும் நுட்பமும் அமையச் சித்தாந்தக் கருத்துகளை முழுமையாக விளக்கும் முதல் நூல் இது. முதற்கண் தற்சிறப்புப் பாயிர மாக அமைந்த 'மங்கல வாழ்த்து, அவையடக்கம்' ஆகிய இரு செய்யுட்களும் பல பொருள்களைத் தம்மிடத்தே கொண்டு செறிந்துள்ளன. இதன் நூற்பாக்களைப் பல கூறுகளாகப் (அதிகரணங்களாகப்) பிரித்து ஆசிரியரே சுருக்கமான பொழிப்புரை (வார்த்திகம்) கூறியுள்ளார். இந்த உரை 'மேற்கோள், ஏது, எடுத்துக் காட்டு' என்னும் உறுப்புகளைக் கொண்டது. எடுத்துக்காட்டுகள் வெண் பாவால் ஆகியவை. 'சூசிப்பது, ருத்திரம்' என்பதற்கு இந்நூல் சிறந்ததோர் எடுத்துக்காட்டு இலக்கியமாகும்.

இத்தகைய ஒப்புயர்வற்ற முழு முதல்நூலைச் செய் தருளினவர் மெய்கண்டார்; இந்நூலாலும் பிறவாற்றா லும் அருணந்தி தேவர் முதலிய மாணாக்கர்கட்குச் சித்தாந்தத்தினைத் தெளிய உணர்த்தியருளினார். இந்த மாணாக்கர்களும் தங்கள் நூல்களாலும் உபதேசங்களா லும் எங்கும் சித்தாந்தத்தினை விளங்கச் செய்தனர். இவ்வாறு மெய்கண்டார் சந்தானம் அன்றுதொட்டு இன்றுவரை தமிழ் நாட்டில் சிறந்தோங்கி நிற்கின்றது. இக்காரணங்களால் மெய்கண்ட தேவரைச் சித்தாந்தத்தின் முதல் ஆசிரியராகக் கருதுவர் சிலர். இங்ஙனம் கருதுவதற் குரிய பெருமையுடையவர் மெய் கண்டார் என்பதில் எள்ளளவேனும் ஐயமில்லை. ஆயினும், சித்தாந்தத்தை அவரே படைத்தார் என்று கருதுவது சரியன்று, மெய் கண்டாருக்கு முன்னரே திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார் என்னும் இரண்டு சித்தாந்த நூல்கள் உள்ளன; மற்றும் ஞானாமிர்தம் முதலியனவும், சித்தாந்த சாராவளி, அட்டப் பிரகரணம் முதலிய வடநூல்களும் இருத்தலை நாம் அறிகின்றோம். ஆகவே, பரந்து கிடந்த சித்தாந்தப் பொருள்களை ஒரு கோவைப்பட அளவை முறையால் நூல்

முறைப்படிச் செய்தருளினவர் மெய் கண்டார்[21] என்பதை நாம் ஒப்புக் கொண்டேயாக வேண்டும். இதனால் இது 'சித்தாந்த முதல் நூல்' என்று போற்றப் பெறுகின்றது என்பதை அறிவாயாக. இதன் பெருமையைத் "திருக் குறள் ஆகிய வேதம் பசு; திருமூலர் திருமந்திரம் ஆகிய ஆகமம் அந்தப் பசுவின் பால்; அப்பர், சம்பந்தர், சுந்தரர், மணிவாசகர் என்னும் நால்வரின் பாடல்களாகிய திரு முறைகள் அப்பாலின் நறுநெய்; மெய் கண்டார் இயற்றிய சிவஞான போதம் அந்நெய்யின் இனிய சுவையாகும்." என்று பெரியோர்கள் பாராட்டியுள்ளனர் என்பதனையும் ஈண்டு நீ அறிவாயாக.

இந்த அரிய நூலுக்கு மாதவச் சிவஞான யோகிகள் "சிற்றுரை, பேருரை' என இரண்டு உரைகள் செய்துள்ளார். பேருரை 'பாடியம்' (பாஷ்யம்)[22] என வழங்கப்பெறு கின்றது. இவ்வுரைகளின்றி இந்நூற் பொருளை உணர்தல் இயலாது. மாபாடியத்துள் சித்தாந்தப் பொருள் பலவற் றையும் நுணுக்கமாக விளக்கியிருக்கும் அருமைப் பாட்டைக் காணலாம். இவற்றைத் தெளிவாக உணர்வதற்குச் சிறந்த தமிழறிவும், ஓரளவு வடமொழியறிவும், அளவை நூல் பயிற்சியும் வேண்டும் என்பது என் கருத்து.

சிவஞான சித்தியார் (4) சிவஞான போதத்தின் பொருளை மிக விரித்துச் செய்யப்பெற்ற வழிநூலாகும். சித்தாந்த சாத்திரம் பதினான்கனுள் இதுவே மிகப் பெரிய நூலாகும். இது 'பரபக்கம், சுபக்கம்' என்னும் இரண்டு பெரும் பிரிவுகளைக் கொண்டது. இரண்டையும் இருவேறு நூல்கள் என்று கருதும் அளவுக்கு மிகப் பெரிய நூல். பரபக்கம் 301 திருவிருத்தங்களையும் சுபக்கம் 323த் திரு

21. இராமாநுசர் வைணவ நெறியை முறை படுத்தினதை ஈண்டு நினைத்தல் தகும்.

22. இராமாநுசர் பாதராயனரின் பிரம்ம சூத்திரத்திற்கு வகுத்துள்ள 'ஸ்ரீ பாஷ்யம்' ஈண்டு நினைக்கத் தகும்.

விருத்தங்களைபம் கொண்டவை. எனவே, இதனைச் சிவ ஞான போதத்திற்குச் செய்யுளால் அமைந்த மாபாடியம் என்று கருதலாம். இதன் பரபக்கம் பிற சமயங்களின் பொருளை அவை கூறுமாறே கூறி, அவற்றை அவ்விடத்தி லேயே சித்தாந்தப் பார்வையால் மறுக்கின்றது. அதனால் பரபக்கம் முழுவதும் மதமும் மறுதலையுமாக அமைந் துள்ளது. சுபக்கம் சிவஞான போதத்தின் ஒவ்வோர் நூற்பாப் பொருளையும் ஒவ்வோர் இயலாக வைத்து அதன் போக்கிலேயே சித்தாந்தக் கருத்துகளைத் தடை விடைகளால் விளக்குகின்றது. தடைகள் பரபக்கப் பார்வை யால் நிகழ்வனவாக அமைந்துள்ளன. இதன் பெருமையை,

> 'பார்விரித்த நூலெல்லாம்
> பார்த்தறியின், சித்தியிலே
> ஓர் விருத்தப் பாதிபோ தும்''[23]

என்று குருஞான சம்பந்தரும்,

> பாதிவிருத் தத்தால்இப்
> பார்விருத்த மாகஉண்மை
> சாதித்தார் பொன்னடி'[24]

என்று தாயுமான அடிகளும் சிறப்பித்துப் பேசுவர். "சிவத் துக்குமேல் இல்லை தெய்வம்; சிவஞான சித்திக்குமேல் இல்லை நூல்" என்ற பழமொழியும் வழக்கிலுள்ளது.

சித்தியாருக்கு மறைஞானசம்பந்தர், சிவாக்கிர யோகி கள், ஞானப்பிரகாசர், நிரம்ப அழகிய தேசிகர், மாதவச் சிவஞான யோகிகள், சுப்பிரமணிய தேசிகர் என்னும் அறுவர் உரைகள் கிடைக்கின்றன. இவர்களுள் இறுதியில் குறிப்பிட்ட சுப்பிரமணிய தேசிகர் சிவஞான யோகிகளின் பொழிப்புரையை, முறுக்கைச் சிறு துண்டுகளாக உடைத்து வழங்குவதுபோல், சொற் பொருளாக்கி விளக்கியுள்ளார். இது படிப்போருக்குச் சற்று எளிதாக அமைந்து விளக்கம்

23. சிவபோத சாகரம்-23.
24. தாயு. பாட. எந்நாட்கண்ணி—16

தருவதாக உள்ளது. இந்த உரையே ஏனையவற்றைவிட இன்றியமையாத சிறப்புடன் விளக்கமாக அமைந்துள்ளது.

மேலும் சித்தியார், அனைவரும் சித்தாந்தப் பொருளை உணருமாறு எளிமையாகவும், விரிவாகவும், சைவாகமப் பொருள்களை ஆங்காங்குத் தந்துரைத்து அவற்றிற்கு விளக்கமாகவும் அமைந்துள்ளது. இக்காரணங்களால் இதுவே சித்தாந்தப் பெரு நூலாய்த் திகழ்கின்றது. இது பற்றியே 'சிவத்திற்குமேல் தெய்வம் இல்லை; சித்திக்கு மேல் நூலும் இல்லை' என்ற ஒரு பழமொழியும் எழுந்தது போலும். தமிழ் நூல்கள் பலவற்றுள்ளும் சிறந்தவை யாகச் சிலவற்றைக் கூறும்,

> வள்ளுவர் நூல் அன்பர்மொழி
> வாசகம், தொல் காப்பியமே
> தெள்ளுபரி மேலழகன்
> செய்தஉரை—ஒள்ளியசீர்த்
> தொண்டர் புராணம்
> தொகுசித்தி ஓராறும்
> தண்டமிழின் மேலாந்
> தரம்.

என்ற வெண்பா சிவஞான சித்தியையே சாத்திரத்திற்குச் சிறந்ததாகக் காட்டுவதைக் காண்க. இதனைப் பாடிய முடையாரும் 'ஆகமங்கட்கெல்லாம் உரையாணி' என்ற புகழ் மாலையையும் சூட்டியிருப்பதைக் கண்டு தெளிவா யாக. சித்தாந்தத்தினைத் தெளிவாக அறிய விழையும் நீ இந்த நூலை, குறிப்பாகச் சுபக்கத்தினை, ஓதவேண்டியது மிகவும் இன்றியமையாதது என்பதை நினைவிலிருத்துவா யாக.

இருபா இருபஃது (5) என்னும் நூலில் இதன் ஆசிரிய ராகிய அருணந்திதேவர் சிவஞான போதத்தால் உணர்ந்த சித்தாந்தப் பொருளினும் மிக நுண்ணிய பொருள்களைத் தாம் தம் ஆசிரியராகிய மெய்கண்டதேவரை வினவியறிந்த

வற்றை விளக்கியுரைக்கின்றார். இங்கு வினாக்களை 20 பாடல்களில் வெளிப்படையாகக் கூறி விடைகளைக் குறிப்பால்தான் பெற வைத்துள்ளார். இவற்றைச் சிந்தித்து அறிதல் வேண்டும்.

உண்மை விளக்கம் (6) என்னும் நூலில் இதன் ஆசிரியர் திருவதிகை மனவாசகம் கடந்தார் தத்துவங்களைச் சுருக்கமாகவே உரைக்கின்றார். இதில் ஆசிரியர் தம் குருநாதர் மெய்கண்டாரை வினாவுகின்றார்; குருநாதர் சீடருக்கு விளக்கம் தருகிறார். வினா-விடையாக அமைந்த இந்நூல் சித்தாந்தம் பயில விரும்பும் நீ முதற்கண் பயில வேண்டிய நூலாகும். இதில் ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சுத்த சத்துவம், ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்கள், உயிரியல்பு, பதியியல்பு, ஐந்தெழுத்து, நடராச தத்துவம், அத்துவித முத்தி, குருலிங்க சங்கம வழிபாடு என்பவை விளக்கப்பெறுகின்றன. பக்தியுடன் பயின்றால் மெய்கண்டாரே நினக்கு உபதேசம் செய்யும் உணர்வு பெறுவாய். காப்பு, சிறப்புப் பாயிரம் உட்பட்ட 55 வெண்பாக்களால் அமைந்துள்ளது இந்நூல்.

சிவப்பிரகாசம் (7) இது சிவஞான போதத்தின் சார்பு நூலாகும். இது சிவஞான சித்தியார் போலச் சிவஞான போதத்தை அடியொற்றிச் செல்லுவதாக அமையவில்லை. போதத்தின் கருத்தை மட்டிலும் உளங்கொண்டு 'பொது, உண்மை' என்னும் இருபிரிவினதாய் நடைபெறுகின்றது. முன்னைய முதல், வழி நூல்களில் விளக்கப்பெறாத பல நுண்ணிய கருத்துகள் ஈண்டு விளக்கம் அடைகின்றன. இதனால் அவ்விரு நூல்களிலும் நுவலப் பெறாத சில மூல ஆகம, உப ஆகமக் கருத்துகளும் இதில் சொல்லப் பெற்றுள்ளதாக ஆசிரியரே தெரிவிக்கின்றார். இவ்வாற்றால் முன்னைய நூற் பொருள்களைச் சுருங்க உணர்வதற்கு இந்நூல் ஒருவாறு துணையாக இருக்கும். ஆகவே, அந்நூல்களைப் பயில்வதற்கு முன்னதாக இதனைப் பயிலலாம். நூறு விருத்தப் பாக்களால் அமைந்தது இந்நூல்.

திருவருட்பயன் (8) என்னும் இந்நூல் சித்தாந்தப் பொருள்களை அடைவுபடத் தொகுத்துக் குறள் வெண் பாக்களால் கூறுகின்றது. 10 குறள்கள் வீதம் 10 இயல் களில் அமைந்த இந்நூலில் 100 குறள் வெண்பாக்கள் அடங்கியுள்ளன. தொடக்கத்தில் காப்பாக முதற்கண் தனிக்குறள் வெண்பா ஒன்று உள்ளது. உலகியல் திருக் குறள், வீட்டினை அறத்துப் பாலில் அடக்கிக் கூறுகின்றது. இந்நூலில் வீடுபற்றிய கருத்து தனியாக எடுத்துக்கூறப் பெறுகின்றது; இதனால் இதனை மெய்ந்நெறித் திருக் குறளாகக் கொண்டு நாம் ஓதி வீடாகிய முடிந்த பயனைப் பெற வேண்டும் என்பது ஆசிரியரின் கருத்தாக இருத்தல் வேண்டும். சைவப் பெருமக்கள் இதனை உண்மை விளக் கத்திற்குப் பின்னர்க் கற்று, அதன் பின்னர்ச் சிவப் பிரகாசத்தைக் கற்றலை ஒரு மரபாகக் கொண்டுள்ளனர். இம்முறையை நீயும் கடைப் பிடிப்பாயாக.

வினாவெண்பா (9) என்னும் இந்நூல் இருபா இருபஃது போன்றது. அஃதாவது இதன் ஆசிரியர், தம் ஆசிரிய ராகிய மறைஞான சம்பந்தரிடம் வினவி அறிந்த நுண் பொருள்களை வினாவடிவிலே உணர்த்துகின்றார், இந்நூல் 13 வெண்பாக்களால் நடைபெறுகின்றது.

போற்றிப் பஃறொடை வெண்பா (10) இறைவன் உயிர் கட்குத் தன் பெருங் கருணையால் கைம்மாறு கருதாத பேருதவியைச் செய்து வருகின்றான். இதனைத் தத்துவ நெறியால் உணர்ந்து அவனைப் போற்றி உரைப்பதாகச் செய்யப் பெற்றது இந்நூல். ஆகவே, இதில் பல தத்துவக் கருத்துகள் தாமாகவே அமைந்து விளங்குவனவாயின, இது 95 கண்ணிகளையுடைய கலி வெண்பாவால் அமைந்தது.

கொடிக் கவி (11) என்னும் இந்நூல் ஐந்து திருப்பாடல் களால் ஆனது. இதன் ஆசிரியர் உமாபதி சிவம் தில்லை வாழ் அந்தணர்களுள் ஒருவர் என்பதை நீ அறிவாய்.

தில்லை வாழ் அந்தணர்கள் இவருடன் கருத்து மாறுபட்டு இவரை வெறுத்தொதுக்கியிருந்தனர். இதன் காரணமாக ஒரு சமயம் கொடி ஏறாதிருந்தது. பின் அசரீரி சொல்லிய படி இதன் ஆசிரியரை அழைத்து வந்து கொடி ஏற்றுமாறு வேண்டினர். ஆசிரியர் அக்கொடிதானே ஏறும்படி ஐந்து திருப்பாடல்களைப் பாடியருளினார். முதற் பாடல் கட்டளைக் கலித்துறை; ஏனைய நான்கும் வெண்பாக்கள். இந்நூலில் சித்தாந்தத்தின் மிக நுண்ணிய பொருள்களும், திருவைந்தெழுத்தின் மறைபொருள்களும் நுவலப் பெறு கின்றன.

நெஞ்சு விடு தூது (12) என்ற இந்நூல் ஆசிரியர் தம்மைத் தலைவியாகவும், தம் குருநாதர் மறைஞான சம்பந்தரைத் தலைவனாகவும் வைத்துப் பாடப்பெற்றது. ஆசிரியர் குருநாதரைக் காமுற்று வருந்தி அவர்பால் சென்று அவரது கொன்றை மாலையை வாங்கி வருமாறு தம் நெஞ்சைத் தூதாகவிட்டதுபோல் செய்யப்பெற்ற தூதுப் பிரபந்தமாகும். இதில் தத்துவங்கள், உபதேசங் கள், புறச் சமய மறுப்புகள் முதலியன உள்ளன. சிறப் பாகத் தசாங்கங்கள் பேசப்பெற்றிருப்பது குறிப்பிடத் தக்கது. 129 கண்ணிகளைக்கொண்ட கலிவெண்பாவால் ஆனது இந்நூல்.

உண்மை நெறி விளக்கம் (13) என்பது, இதன் ஆசிரியர் தம் ஞானாசிரியரிடம் உபதேசம் பெற்ற பின்னர் அதைச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடும் செயலில் உள்ள பத்து நிலைகளாகிய தசகாரியங்களை மிகவும் சுருக்கமாகக் கூறும் நூல். இஃது ஆறே திருவிருத்தங்களால் ஆனது. இதனைத் தத்துவ நாதர் என்ற வேறோர் ஆசிரியர் இயற்றியதாக வெண்பா ஒன்று உண்டு. எனினும், உமாபதி சிவம் செய்த தாகவே பெரும்பாலோர் கொள்ளுகின்றனர். இதனைத் துகளறு போதத்தின் சுருக்கமாகக் கொள்வதும் உண்டு.

சங்கற்ப நிராகரணம் (14) என்பது பதினான்கனுள் இறுதி நூலாகும். இது சிவஞான சித்தியாரின் பரபக்கம்

போன்றது. பரபக்கத்தில் புறச்சமயங்களே[25] மறுக்கப்படுகின்றன. இந்நூலின்கண் அகச்சமயங்கள்[26] மறுக்கப்படுகின்றன. இதுவே இவை தம்மில் உள்ள வேறுபாடு. இதனால் இது சித்தாந்தத்தினைத் தெளிவாக உணர்வதற்குப் பயன்படுகின்றது. புறச் சமயங்களில் மாயாவாதம் தமிழகத்தில் சித்தியாருக்குப் பின்னரும் வலிமை பெற்று நின்றமையால் அதனை இந்நூலின் தொடக்கத்தில் பரபக்கத்தினும் விரிவாகவும் நுட்பமாகவும் மறுக்கப் பெற்றுள்ளது. அகப்புறச்சமயமாகிய[27] ஐக்கியவாதம் பரபக்கத்துள் மறுக்கப் பெறாமையால் அதனை மாயாவாதத்தை அடுத்து இந்நூல் மறுக்கின்றது.

இக்கூறிய பதினான்கு சாத்திரங்களையும் நன்கு ஓதி உணர்ந்தால் சித்தாந்த ஞானம் ஐயந்திரிபின்றி நின்னிடம் இனிது அமையும். துகளறு போதம், ஞானாமிர்தம், பல கட்டளைகள்[28] முதலிய தமிழ் நூல்களையும் சித்தாந்த சாராவளி, அட்டப் பிரகரணம், பவுட்கர விருத்தி போன்ற வடநூல்களையும் அறிந்து கொண்டால் சித்தாந்தத்தில் மேலும் தெளிவு பிறக்கும். இதனால் நம் நாட்டுச் சமய

25. தருக்கம், மீமாம்சை, ஏகான்மவாதம், யோகம், சாங்கியம், பாஞ்சராத்திரம் அல்லது வைணவம் என்பன புறச் சமயங்களாகும்.

26. பாடாணவாத சைவம், பேதவாத சைவம், சிவசமவாத சைவம்,சிவ சங்கிராந்தவாத சைவம்,ஈசுவர அவிகாரவாத சைவம், நிமித்தகாரண பரிணாமவாத சைவம் அல்லது சிவாத்துவித சைவம் என்ற ஆறும் அகச் சமயங்களாகும். 'சுத்த சைவம்' என்பதும் ஒன்று உண்டு.

27. பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம், ஐக்கியவாத சைவம் என்ற ஆறும் அகப்புறச் சமயங்களாகும்.

28. சிவப்பிரகாசக் கட்டளை, திருவாலவாய்க் கட்டளை, சித்தாந்தக் கட்டளை (பூவை கலியாண சுந்தரமுதலியார் இயற்றியது) சித்தாந்த சாதனக் கட்டளை, சித்தாந்த தசகாரியக் கட்டளை (ஷியார் இயற்றியவை) ஆகிய ஐந்து கட்டளைகள் உள்ளன.

அறிஞர்கள் அக உலகத்தை எவ்வெவ்வாறெல்லாம் சிந்தித் துள்ளனர் என்பது தெளிவாகும்.

அன்பன்,
கார்த்திகேயன்.

# 5

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். விழைவதும் அஃதே. சைவ சித்தாந்தக் கருத் தினைப் பக்தியநுபவத்துடன் அறிவதற்குத் திருமுறை பயிற்சி மிகவும் இன்றியமையாதது. திருமுறைகள் பன்னி ரண்டு. இவைபற்றியும் சுருக்கமாக நீ அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாததால் இவற்றை இக் கடிதத்தில் அறிமுகம் செய்து வைப்பேன்.

சோழப் பேரரசன் இராசராசன் வேண்டு கோட் கிணங்கி நம்பியாண்டார் நம்பி வழக்காறற்று மறைந்து கிடந்த மூவர் பாடிய தேவாரப் பாக்களைத் தேடி எடுத்து அவற்றை ஏழுதிருமுறைகளாக வகுத்த வரலாறு திருமுறை கண்ட புராணத்தால் அறியப்பெறும் செய்திகளாகும். இவற்றின் விவரங்களைப் 'பன்னிரு திருமுறை வரலாறு'[29] என்ற நூலில் விரிவாகக் காணலாம்.

முதல் மூன்று திருமுறைகளில் திருஞான சம்பந்தர் பாடியுள்ள பாடல்கள் அடங்கியுள்ளன. நான்கு முதல் ஆறு திருமுறைகளில் திருநாவுக்கரசரின் திருப்பாடல்கள் முறைப் படுத்தப்பெற்றுள்ளன. ஏழாந் திருமுறையில் சுந்தரமூர்த்தி அடிகளின் திருப்பாடல்கள் அடங்கியுள்ளன. இந்த ஏழு திரு முறைகளும் தேவாரம் என்ற திருப்பெயரால் வழங்கி வருகின்றன.

---

29. வெள்ளை வாரணன், க: பன்னிரு திருமுறை வரலாறு- முதற்பகுதி. பக் (6—11)

மணிவாசகப் பெருமான் அருளிச்செய்த 'திருவாசகம்' 'திருக்கோவையார்' என்ற இரண்டு நூல்களும் எட்டாம் திருமுறையில் அடங்கும். ஒன்பதாந் திருமுறையில் திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பி காட நம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதர், புருடோத்தம நம்பி, சேதிராயர் என்னும் ஒன்பதின்மர் பாடிய திருவிசைப்பாப் பதிகங்கள் இருபத்தெட்டும் அவருள் சேந்தனார் பாடிய திருப்பல்லாண்டாகிய பதிகம் ஒன்றும் ஆக இருபத்தொன்பது பதிகங்கள் அடங்கும். திருமூலர் அருளிச் செய்த திருமந்திரப் பாடல்கள் பத்தாந் திருமுறையாகவும், திருவாலவுடையார் திருமுகப்பாசுரம், காரைக்கால் அம்மையார் பாடிய பிரபந்தங்கள் முதலியவற்றைப் பதினோராந் திருமுறையாகவும் வகுத்தருளினார்.

பின்னர் நம்பி சோழ மன்னனது விருப்பத்திற்கிணங்கத் தாம் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதி, ஞான சம்பந்தர்மீது பாடிய திருவந்தாதி, திருச்சண்பை விருத்தம், திரு மும்மணிக் கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை ஆகிய ஏழு பிரபந்தங்களையும்; திருநாவுக்கரசர்மீது பாடிய திருவேகாதசமாலையையும் பதினோராந் திருமுறையில் சேர்த்தருளினார்.[30] சேக்கிழார் இயற்றிய 'திருத்தொண்டர் புராணம்' என்ற பெரிய புராணம் பன்னிரண்டாம் திருமுறையாக அமைந்தது. 'திருமுறை' என்னும் பெயர் மூவர் அருளிய திருப்பதிகங்கட்கு மட்டுமே வழங்கி வந்தது. நம்பியாண்டார் நம்பியின் காலத்திற்குப் பின்புதான் திருவாசகம் முதலிய ஏனைய நூல்கட்கும் உரியதாய் வழங்கப்பெற்றதென்பது திருமுறை கண்ட வரலாற்றால் நன்கு தெளிவாகின்றது.

தேவாரத் திருமுறைகள் திருக்கோயில்களில் வைத்து வழிபடப்பெற்று வந்தன. அத் திருப்பதிக ஏடுகள் சிதை

30. திருமுறைப் பாகுபாடு பற்றிய கருத்து வேறுபாடு உள்ளது. இதுபற்றிய ஆய்வைப் பன்னிரு திருமுறை வரலாறு—முதற்பகுதி-பக்கம் (24-28) கண்டு தெளிக.

யாத வண்ணம் அவற்றைப் போற்றிக் காப்பதற்குத் தமிழ்ப் புலமை மிக்க தமிழ் விரகரும், அத்திருப்பதிகங் களைப் பொருளுணர்ந்து இசையோடு இறைவன் முன்னி லையிற் பாடிப் போற்றுதற்கு ஓதுவார்களும் அந்நாளில் திருக்கோயில்களில் நியமிக்கப்பெற்றுப்பணிபுரிந்துவந்தனர் என்பன போன்ற செய்திகள் கல்வெட்டுகளால் அறியக் கிடக்கின்றன.

பண்டை நாட்களில் இத்திரு முறைகளை நம் முன் னோர் சிவத்துவம் வெளிப்பட்டுத் திகழும் சிறந்த அருள் நூல்களாகக் கொண்டு வழிபட்ட உண்மைக்குப் பல சான்று கள் உள்ளன.[31] சிவபூசையின் ஒரு சிறந்த அங்கமாகவே இத்திரு முறை வழிபாடு முன்னுள்ள பெருமக்களால் மேற் கொள்ளப்பட்டு வந்ததென்று அறியக் கிடக்கின்றது.

இந்தத் திருமுறைகள் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் பன்னிரண்டாம் நூற்றாண்டு முடிய அமைந்த காலத் தில்தான் தோன்றின என்பதை நீ அறிதல் வேண்டும். இப் பன்னிரண்டு திருமுறைகளையும் அருளிச் செய்த ஆசிரியப் பெரு மக்கள் திருமூலர், காரைக்கால் அம்மையார் (காலத் தால் முற்பட்டவர்கள்) முதல் சேக்கிழார் (காலத்தால் பிற்பட்டவர்) ஈறாகவுள்ள இருபத்தெழுவர். இப்பெரு மக்களாற் பாடப்பெற்றனவாக இப்போது நமக்குக் கிடைத்துள்ள பன்னிரு திருமுறைகளிலும் ஏறக்குறைய பதினெண்ணாயிரம் திருப்பாடல்கள் காணப்படுகின்றன என்பதையும் நீ உளங்கொள்ளல் வேண்டும்.

சிவபூசை, அடியார் பூசை, குரு பூசை ஆகிய வழிபாடு களுக்கு எத்துணைப் பயன் உண்டோ அத்துணைப் பயன் இத்திருமுறை வழிபாட்டிற்கும் பாராயணத்துக்கும் உண்டென்பர் பெரியோர். சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப் பல படிகளாக வகுத்துச் செய்யப்படும் சிவ வழிபாட்டினைத் தவிர உயிர்கள் உய்தி பெறுவதற்கு

---

31. பன்னிரு திருமுறை வரலாறு—முதற்பகுதி—பக் (45—46)

வேறு சாதனம் இல்லை என்பது சைவ நூல் துணிபு. இறைவனது திருவருளாகிய சிவஞானம் ஒன்றினால்தான் அப் பெருமானை உள்ளவாறு உணர்ந்து வழிபடுதல் கூடும். இறைவன் அருளிய திருவருள் ஞானத்தால் அம்முதல்வனை வழிபடும் பதிகப் பெரு வழியினை அமைத்துத் தந்த திருவருட் செல்வர்கள் காரைக்கால் அம்மையார், திருஞான சம்பந்தர், அப்பர் பெருமான், சுந்தரமூர்த்தி நாயனார், மணிவாசகப் பெருமான் முதலிய திருமுறையாசிரியர்களாவர். சிவஞானிகளாகிய அப்பெரு மக்கள் அனைவரும் பொறிவாயில் ஐந்தவித்தானாகிய இறைவன் அறிவுறுத்த பொய்தீர் ஒழுக்க நெறி நின்ற செம்புலச் செல்வர்கள். ஆகவே, அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருமுறைகள் யாவும் உயர்ந்த ஞான நூல்களாகத் திகழ்கின்றன. இத் தகைய சைவத் திருமுறைகள் பன்னிரண்டையும் "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி" ஓதலும், பிறரை ஓதும்படி செய்தலும், பிறர் சொல்லத் தாம் கேட்டலும், பிறரைக் கேட்கும்படி தூண்டுதலும், ஞான நூல்களாகிய இவற்றின் பொருள் நலன்களை இடைவிடாது சிந்தித்தலும் என ஐந்து வகையாலும் பயின்று வழிபடுதல் வேண்டும் என்று உணர்த்தியுள்ளனர் பெரியோர். "ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு, ஞானத்தால் உனை நானும் தொழுவேனே"[32] என்றவாறு சிவஞானம் பெற்ற பெரியோர்கள் அருளிய இத்திருமுறைகளைச் சாதனமாகக் கொண்டு எல்லாம் வல்ல இறைவனை வழிபட்டுப் போற்றும் முறை ஞானபூசை யென நூல்களால் பாராட்டப் பெறுகின்றது. இந்த உண்மை,

ஞான நூல்தனை யோதல்; ஓது வித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல், தான்கேட்டல், நன்கு
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில்ஞான பூசை[33]

---

32. தேவாரம் 5·91 : 3
33. சித்தியார்—8-23

என்ற அருள்நந்தி சிவாச்சாரிய சுவாமிகளின் பொருள் பொதிந்த பொன்னுரையால் தெளியலாம்.

திருமுறைகளை அருளியவர்கள் யாவரும் நிறைமொழி மாந்தர்கள். இவர்கள் வரலாற்றினால் திருமுறைகள் யாவும் மறைமொழிகளாகிய தமிழ் மந்திரங்கள் என்பது தெளிவாகும். மந்திரம் என்பது, தம்மைப் பயில்வாரைப் போற்றிக் காப்பது என்னும் பொருளுடையது என்று கூறுவர் பெரியோர். இத்திருமுறைகளை அன்பினால் ஓதி யுணரும் இயல்புடையோர், இவ்வுலக வாழ்வில் நேரும் எல்லாத் தீங்குகளும் நீங்கி எல்லாவித நலன்களையும் பெற்று இன்புறுவர் என்பது ஆன்றோர்களின் அநுபவம்.

> இம்மை யேதரும் சோறும் கூறையும்
> ஏத்தலாம் இடர் கெடலுமாம்
> அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்கு
> யாதும் ஐயுறவு இல்லையே.[34]

என்ற திருவாக்கால் அறியலாம். இத்திருமுறைகளை ஓதி வழிபடும் இயல்புடையோர் இம்மை மறுமைப் பயன்களையும் ஒருங்கு பெற்று மகிழ்வர் என்பது திண்ணம்.

இக்காரணத்தால் அடுத்துத் தொடர்ந்து எழுதும் கடிதங்களில் தத்துவங்களை விளக்க வேண்டிய இடங்களில் இயன்றவரை இத் திருமுறைத் திருப்பாடல்களை பொருத்தமாக அமைத்துக் காட்டுவேன்.

அன்பன்,
**கார்த்திகேயன்.**

---

34. தேவாரம், 7-34 : 1

## பதி—சிவன்

பலகலைஆ கமவேதம் யாவையினும் கருத்துப்
பதிபசுபா சந்தெரித்தல் பதிபரமே அதுதான்
நிலவும்அரு உருவின்றிக் குணம்குறிக ளின்றி
நின்மலமாய் ஏகமாய் நித்த மாகி
அலகிலுயிர்க் குணர்வாகி அசல மாகி
அகண்டிதமாய் ஆனந்த உருவா யன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்து ளோரே![1]

அறிவானுந் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே—அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பார் ஆகாசம்
அப்பொருளுந் தானே அவன்.[2]

அம்மையப்ப ரேஉலகுக் கம்மையப்பர் என்றறிக
அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர்—அம்மையப்பர்
எல்லா உலகுக்கும் அப்புறத்தார், இப்புறத்தும்
அல்லார்போல் நிற்பார் அவர்.[3]

---

1. *சிவப்பிரகாசம்—13*
2. *அற்புதத் திருவந்தாதி—20*
3. *களிறு—1*

# 6

அன்புநிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைக.

சென்ற இயலில் சைவ சித்தாந்தத்தின் முடிந்த முடிபாகக் கொள்ளப்படும் பொருள்கள் பதி, பசு, பாசம் என்று குறிப்பிட்டேன் அல்லவா? அவற்றுள் பதியைப் பற்றிய சித்தாந்தக் கருத்துகளை இந்த இயலில் விளக்கு வேன். சித்தாந்தம் சற்காரிய வாதத்தின் அடிப்படையில் அமைந்துள்ளது என்று குறிப்பிட்டேன்.[4] அதனை ஈண்டு நினைவு கூர்க.

வைதிக சமயங்கள் யாவும் 'கடவுள் உண்டு' என்ற கொள்கையை உடையன. 'கடவுள்' என்ற தனித் தமிழ்ச் சொல்லின் பொருளிலேயே சைவ சித்தாந்த கருத்துப் பெரிதும் அடங்கியுள்ளது என அறிஞர் காட்டுவர். இத் தனித் தமிழ்ச் சொல் புறநானூறு,[5] தொல்காப்பியம்[6] போன்ற பழைய நூல்களிலேயே காணப் பெறுகின்றது. இச் சொல்லுக்கு மூன்று விதமாகப் பொருள் கூறலாம். கடவுதல் என்றால் இயக்குதல்; எனவே, 'கடவுள்' என்ப தற்கு உலகை இயக்குபவர் என்பது கருத்தாகின்றது. 'கடவுள்' என்பதற்கு உள்ளத்தைக் கடந்தவர் என்றும் பொருள் கொள்ளலாம். மூன்றாவது பொருளாக 'கடவுள் உலகைக் கடந்தவர்; அதே சமயம் உலகுள்ளும் உள்ளவர் எனக் கொள்ளுவது' என்றும் கொள்ளலாம். இப்பொருளில்

4. இயல்—1: கடிதம் 1.பக். 4
5. புறம்—106,399
6. தொல். பொருள். புறத்திணை—27

"உலகினுள்ளும் உயிர்களுள்ளும் வியாபித்து நிற்கும் நிலையை 'உள்' என்ற சொல்லும் அவற்றைக் கடந்து நிற்கும் நிலையைக் 'கட' என்ற சொல்லும் குறிக்கும்." 'உலகை இயக்குபவன் இறைவன். அவன் அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்தவன். அதே சமயம் அவன் உலகினையும் கடந்து நிற்பவனும் ஆவன்'—என்று 'கடவுள்' என்ற சொல்லிலேயே அடங்கியுள்ள கருத்துகள் சைவ சித்தாந்தக் கருத்துகளாகும்.

இனி, சைவ சித்தாந்தம் கடவுளைப்பற்றி நேரடியாகக் கூறுவனவற்றை விளக்குவேன். கடவுளைப்பற்றிய ஒன்று: சைவ சித்தாந்தக் கருத்துகளை இரு பிரிவாகப் பிரிக்கலாம். கடவுள் உண்டு என்பதை மெய்ப்பிப்பது. இரண்டு: கடவுளுக்குரிய இயல்புகளையும் குணங்களையும் கூறுவது. இங்கு முதற்பிரிவினை மேலும் இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவற்றைச் சித்தியார் சுபக்கம், பரபக்கம் என்று குறிக்கும். கடவுள் உண்டு என்பதைக் காரணங்கள் காட்டி மெய்ப்பிப்பது சுபக்கம்; கடவுள் இல்லை என்று வாதிப்போரது வாதங்கள் பொருந்தா என்பதை மறுத்துப் பேசுவது பரபக்கம்.

ஒரு பொருள் உண்டென்பதை மெய்ப்பிக்கப் பொதுவாக மூன்று வழிகள் உண்டு. இந்த வழிகளைப் பிரமாணங்கள் என்று குறிப்பிடுவர். பிரமாணம் என்பதைத் தமிழில் அளவை என்று கூறலாம். பிரத்தியட்சம் (காட்சி), அநுமானம் (கருதல்), ஆப்த வாக்கியம்[7] (பெரியோரது பெருமொழிகள்) ஆகிய மூன்றுமே பிரமாணங்களாகும். ஐம்பொறிகள் வாயிலாக நேரில் அறிவதைப் பிரத்தியட்சம் என்பர். தொலைவில் புகை தெரிகின்றது. ஆனால் நெருப்பு இருப்பது கண்ணுக்குப் புலனாவதில்லை. நெருப்பிலிருந்துதான் புகை உண்டாகின்றது என்பதை நாம் பல முறை நேரில் கண்டுள்ளோமாதலால் நெருப்பைக் காணாமலேயே புகையை மட்டிலும் கண்டு நெருப்பு

7. நம்பத் தகுந்த சொல்—என்பது நேர் பொருள்.

அங்கு உள்ளது என்பதைத் திடமாக அறிகின்றோம். இந்த அறிவு அநுமானம் மூலம் நமக்குக் கிடைக்கின்றது. மூன்றாவதாகிய ஆப்த வாக்கியம் ஒரு பொருளை அநுபவத்தால் அறிந்த மகான்களின் வாய்மொழிமூலம் அறிவதாகும். இவர்களது வாக்கைக் கேட்பதன்மூலம் அறிவதால் இதைச் சுருதிப் பிரமாணம் எனவும் குறிப்பிடுவர். 'ஸ்ரு' என்பதற்குக் 'கேட்டல்' என்பது பொருளாகும். இதன் அடியாகப் பிறந்தது 'சுருதி. சுருதிப் பிரமாணத்தை ஆகமப் பிரமாணம் (உரையளவை) என்றும் வழங்கலாம். இறுதியாகக் குறிப்பிட்ட பிரமாணத்தையே சைவ சித்தாந்திகள் மேற்கொள்ளுகின்றனர். ஏனைய இரண்டு பிரமாணங்களையும் கொண்டு 'கடவுள் உண்டு' என்பதை மெய்ப்பிப்பது கடினமாதலால், இப்பிரமாணமே முக்கிய பிரமாணமாகக் கொள்ளப்பெறுகின்றது.

இதனால் அநுமானப் பிரமாணத்திற்குச் சைவ சித்தாந்தத்தில் இடம் இல்லை என்று கருதுதல் வேண்டா. வேதம் அல்லது ஆகமம்[8]மூலம் பெறும் உண்மையை அநுமானம்மூலம் நிலை நாட்டச் சித்தாந்திகள் முயன்றுள்ளனர். இதற்கு இரு காரணங்கள் உண்டு. ஒன்று: வேதத்திலே நுவலப்பெற்றவற்றை மேலும் வலியுறுத்த அநுமானப் பிரமாணம் பயன்படும். இரண்டு: வேத வாக்கை ஒரு பிரமாணமாக ஒப்புக்கொள்ளாதவர்களுக்குக் கடவுள் உண்டு என்பதை மெய்ப்பிக்க அநுமானம் மட்டுமே ஓரளவு பயன்படும்.

அநுமானத்தைக் கொண்டு கடவுள் உண்டு என்பதை மூன்று விதமாக மெய்ப்பிக்கலாம். முதலாவது; உலகியல் உண்மையைக் கொண்டு அதனைப் படைத்தவனும் உளன் என்று மெய்ப்பிப்பது. இரண்டாவது: படைப்பின் நோக்கத்தை ஆராய்வதன்மூலம் படைத்தவனும் உளன் என மெய்ப்பிப்பது. மூன்றாவது: பொருள்களிலுள்ள குறை

8. ஆகமம்—ஒன்றிலிருந்து வந்தது என்பது பொருள்.

களைக் கொண்டு குறைவில்லாத பரிபூரணமான பொருளும் உண்டு என மெய்ப்பிப்பது. இக்கூறிய மூன்றாவதை யோக மதத்தினர் (பதஞ்சலி மதம்) கைக்கொள்ளுகின்றனர். காண்ட் போன்ற புகழ்பெற்ற மேலை நாட்டு மெய்ப்பொருளியல் அறிஞர்கள் இதனையே கைகொள்ளுகின்றனர். ஆயினும், சைவ சித்தாந்திகள் இதனைக் கையாளவில்லை. இவர்கள் முதலாவது காரணத்தையே அதிகமாக மேற்கொள்ளுகின்றனர் என்பதை அறிக.

பாயிர இயலில் 'சற்காரிய வாதம்'[9] என்ற ஒரு கொள்கையைக் குறிப்பிட்டேன் அல்லவா? ஒவ்வொரு காரியத்திற்கும் காரணம் இருந்தேயாக வேண்டும் என்பதை யாவரும் ஏற்றுக் கொள்வர். இதற்கு மேலும் ஒரு படி சென்று காரண நிலையிலும் காரியம் உண்டு என்பதை மெய்ப்பிக்கலாம். காரியம் எங்கிருந்தோ திடீரென்று புதிதாகத் தோன்றுவது அல்ல. அஃது உற்பத்திக்கு முன்னரும் உள்ளது. இதுவே சற்காரிய வாதம்[10]. இதனைத் தெளிவாக்குவது இன்றியமையாததாகின்றது. காணப்பட்ட உலகம் இதற்கு முன் ஒடுங்கிய நிலையில் காணப்படாத நுண் (சூக்கும) நிலையில் இருந்தது. பின்னர் காணப்படும் பரு (தூல) நிலையை அடைந்துள்ளது. இனி, முன்போலவே ஒடுங்கி நுண்ணிலையை அடையும். ஆகவே 'உலகம் என்றும், யாதேனும் ஒரு நிலையில் உள்ளதேயன்றி, இல்லாது ஒழிவதில்லை' என்பது புலனாகும்.

இதனை மேலும் தெளிவாக்குவேன். காணப்படாத நுண்ணிலையில் இருந்த உலகம் காணப்படும் பரு நிலையை அடையும்பொழுதுதான் பயன் உண்டு. ஆதலால்

---

9. இயல்-1; கடிதம்-1. பக். 4.

10. 'காரியங்கள் பலவும், தோற்றத்திற்கு முன்னும் தத்தம் காரணங்களில் உள்ளனவே'—என்பது சற்காரிய வாதம். சத்—உள்ளது; சற்காரியம்-உள்ளதாகிய காரியம். இல்லது தோன்றும் என்பவர் 'அசற்காரிய வாதிகள்' ஆவர்.

நுண்ணிலையில் உள்ளதாகிய உலகம் பரு நிலையில் தோன்ற வேண்டுவது இன்றியமையாததாயிற்று. இங்ஙனம், நுண்ணிலையில் இருந்த உலகத்தை இப்பரு நிலையில் கொணர்ந்தவன் இறைவனாதலின் 'இவ்வுலகத்தைப் படைத்தவன் ஒருவன் உளன்' என்பது பொருந்துவதாகின்றது. இதனால் நாம் தெளியும் பொருள் இது: 'தோற்றம்' என்பது 'காணப்படாத நுண்ணிலையின் நீங்கிக் காணப்படும் பரு நிலையை அடைவது'; 'நிலை' என்பது, 'காணப்படும் நிலையில் இருத்தல்' ஆகும்; 'அழிவு' என்பது, 'காணப்பட்ட பரு நிலையின் நீங்கி முன் போலக் காணப்படாத நுண்ணிலையை அடைதல்' ஆகும்; இதனைச் சுருக்கமாக 'இல்லது தோன்றாது; உள்ளது அழியாது என்று கூறலாம். இதுவே சற்காரியவாதத்தின் சுருக்கம் ஆகும்.

சற்காரிய வாதத்தைச் சார்ந்து 'உள்ளது என்றும் அழிவதில்லை' என்பதும் சொல்லப்படும். 'ஒரு மெழுகு வத்தி எரிவதால் இழப்பு ஒன்றும் இல்லை' (Nothing is lost when a candle is burnt) என்ற வேதியியல் உண்மையும் இதனையொத்ததாகும் என்பதையும் சிந்திப்பாயாக. இதனையும், தெளிவாக்குவது இன்றியமையாததாகின்றது. உள்ளது எக்காலத்தும் உள்ளதே; அஃது என்றும் இல்லதாதல் இல்லை. இங்ஙனமே, இல்லது எக்காலத்தும் இல்லதே; அஃது என்றும் உளதாதல் இல்லை. ஆகவே, 'தோற்றம்' என்பதும் 'அழிவு' என்பதும் அவற்றையுடைய பொருள்களின் நிலை மாற்றங்களேயன்றி வேறல்ல என்பதைத் தெளிவாயாக. தோன்றி அழியும் நிலை காரிய நிலை என்றும், தோற்றத்திற்கு முன்னும் அழிவிற்குப் பின்னும் உள்ள நிலை காரண நிலை என்றும் வழங்கப்படும். இதனால், தோன்றுதல் என்பது காரண நிலையிலிருந்து காரிய நிலையை அடைவதாகும்; அழிதலாவது, காரிய நிலையிலிருந்து மீண்டும் காரண நிலையை அடைவதாகும்.

இதனை ஓர் எடுத்துக் காட்டால் தெளிவிப்பேன். 'குடம் தோன்றிற்று' என்பதில் அது 'மண்' என்னும் நிலையிலிருந்து 'குடம்' என்னும் நிலையை அடைந்தது என்பதே பொருள். 'குடம் அழிந்தது' என்பதில் 'குடம்' என்னும் நிலையிலிருந்து முன் போல் 'மண்' என்னும் நிலையை அடைந்தது என்பதுவே பொருளாகும். இவ்வாறு நிலை வேறுபடினும், இரு நிலையிலும் பொருளின் தன்மை ஒன்றாகவே இருக்கும். அதாவது, 'மட்குடம்' மண்ணின் தன்மையையும், 'பொற்குடம்' பொன்னின் தன்மையையும் கொண்டிருத்தலால் இதனைத் தெளியலாம். இதனால் பயன் வேறுபாடுபற்றிக் காரணப் பொருளையும் காரியப் பொருளையும் 'மண்' என்றும் 'குடம்' என்றும் 'பொன்' என்றும் 'ஆபரணம்' என்றும் வேறு வேறு பொருள் போல வழங்கினாலும் பொருட்டன்மையால் அவை ஒன்றேயாதல் கண்டு தெளிவாயாக.

இதனை இன்னொரு விதமாகவும் விளக்குவேன். தோற்றமும் அழிவும் பொருள்களின் நிலை மாற்றங்கள் என்பது எப்படி? முன் சூக்குமமாய்—நுட்பமாய்—விளங்காது உள்ள பொருளே பின் தூலமாய்—பருமையாய்—விளங்கி நிற்கும் என்பதே இதன் விளக்கமாகும் என்பதை அறிவாயாக. இரண்டு எடுத்துக் காட்டுகளால் இந்த உண்மையைத் தெளியலாம். எள்ளைப் பிழிந்தால் எண்ணெய் தோன்றும். மணலைப் பிழிந்தால் எண்ணெய் தோன்றுமோ? தோன்றாது. ஏன் தோன்றாது? எள்ளில் எண்ணெய் சூக்குமமாய் உள்ளது. மணலில் எண்ணெய் எவ்வகையிலும் இல்லை. அதனால் எள்ளைப் பிழிந்தால் எண்ணெய் தோன்றுகிறது; மணலை அவ்வாறு செய்தால் எண்ணெய் தோன்றுவதில்லை. மற்றுமோர் எடுத்துக்காட்டு: முயற்குட்டி, பசுங் கன்று, யானைக் கன்று இவற்றின் தலையில் தொடக்கத்தில் கொம்பு இல்லை; நாளடைவில் பசுங்கன்றின் தலையில் கொம்பு தோன்றுகிறது. இது போலவே யானைக் கன்றின் வாயிலிருந்தும் தந்தம்

தோன்றுகின்றது. ஏன்? பசுங்கன்றின் தலையில் கொம்பு சூக்குமமாய் உள்ளது. அதனால் அது பின்பு தூலமாய்த் தோன்றுகின்றது. யானைக் கன்றின் வாயிலும் தந்தம் சூக்குமமாய் உள்ளது. அதனால் அது பின்பு தூலமாய்த் தோன்றுகிறது. முயல் குட்டியின் தலையில் கொம்பு முன்பு எவ்வகையிலும் இல்லை. அதனால் அஃது எக்காலத்திலும் தோன்றுவதில்லை. இவற்றால் இல்லாதது எக்காலத்தும் இல்லாததே. அதனால், உள்ளதுதான் தோன்றும்; இல்லது தோன்றாது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். ஆகவே, தூலமாய்த் தோன்றும் பொருள்கள் யாவும், அவ்வாறு தோன்றுவதற்கு முன்னர் சூக்குமமாய் உள்ள பொருள்களே என்பது தெளிவாகின்றதல்லவா? இங்ஙனம் கூறும் சற்காரியத்தையே உமாபதி சிவாச்சாரியாரும் 'மருவு சற்காரியத்தாய்'[11] என்று தமது சிவப்பிரகாச நூலில் கூறியருளினார் என்பதையும் உளங்கொள்வாயாக.

'இல்லாமல் பிறவாது', 'சட்டியில் இருந்தாலன்றோ அகப்பையில் வரும்?' என்பன போன்ற முதுமொழிகள் பலவும் சற்காரிய வாதத்தையே விளக்குவனவாகக் கொள்வதில் தவறில்லை. இந்த வாதமுறை இல்லையாயின் மண்ணிலிருந்து ஆடையும் நூலிலிருந்து குடமும், நெல்லிலிருந்து கமுகும் தோன்றாமல் மண் முதலியவற்றிலிருந்து முறையே குடமும், ஆடையும், நெல்லுமே தோன்றுகின்ற வரையறை இல்லாதொழியும். நிலத்தை அகழ்ந்தால் நீர் தோன்றுகின்றது; சில இடத்தில் பாறை தோன்றுகின்றது; சில விடத்தில் பொன் முதலிய விலையுயர்ந்த பொருள்கள் கிடைக்கின்றன. இவற்றுக்குக் காரணம் அப்பொருள்கள் ஆங்காங்கு இருப்பதேயாகும் என்பது தெளிவு. அதனால் 'உள்ளதே தோன்றும்' என்னும் சற்காரிய வாதம் எளிதில் உடன்படக் கூடியது என்பதும் தெளிவாகின்றது அல்லவா? இன்னோர் உண்மையையும் நீ சிந்தித்து அறிதல்

11. சிவப்பிரகாசம்

வேண்டும். நிலத்தினுள் நீர் முதலியன பரு நிலையில் உள்ளனவாதலால் அவற்றது உண்மை எளிதில் புலனாகின்றது. ஆனால், மண் முதலியவற்றில் குடம் முதலியவை நுண்ணிலையில் இருத்தலால் அவற்றது உண்மையை அரிதில்தான் உணர வேண்டும்; சிந்தித்துதான் தெளிதல் வேண்டும்.

இந்த விளக்கத்தின் அடிப்படையில் 'பதி, பசு, பாசம்' என்ற முப்பொருள்களை நோக்குவோம். இந்த மூன்று பொருள்களுள் 'ஒன்றே உள்ளது; ஏனையவை அதில் தோன்றி ஒடுங்குவன' என்று கொள்ளின் அதனால் வரும் குற்றம் என்ன? அங்ஙனம் கொண்டால் ஒன்று காரணப் பொருளும், ஏனையவை அதன் காரியப் பொருளும் ஆகும். இங்கு காரணப் பொருளின் தன்மையே காரியப் பொருளிலும் உளவாதல் வேண்டும்; அதாவது மூன்று பொருள்களின் தன்மையும் ஒன்றாக இருத்தல் வேண்டும். ஆனால் அவ்வாறு இல்லை; மூன்று பொருள்களும் மாறுபட்ட தன்மைகளைக் கொண்டுள்ளன. ஆகவே, இந்த முப்பொருள்களுள் ஒன்றை மற்றொன்றின் காரியம் என்னாது மூன்றும் தனித் தனிப் பொருள்களே எனக் கோடலே பொருந்துவதாகும் என்பது தெளிவாகின்றதல்லவா?

இனி, 'இல்லாது தோன்றாது, உள்ளது அழியாது' என்ற சற்காரியக் கொள்கையின்படி மாறுபட்ட மூன்று தன்மைகளால் வேறு வேறாய்த் தோன்றும் மூன்றுபொருள்களுள் யாதொன்றினையும் 'ஒரு காலத்துத் தோன்றிற்று' என்றோ 'ஒரு காலத்தில் அழியும்' என்றோ கூறுதல் கூடாது ஆகலின் இந்த மும் பொருள்களும் அனாதி நித்தியப் பொருள்களாகக் கொள்ள வேண்டியதன் இன்றியமையாமை தெளியப்படுதலைக் காண்க. இன்னும் 'மாறுபட்ட பலதன்மை ஒரு பொருளின் கண் இருத்தல் இயலாது' என்பதும் ஒரு சித்தாந்த உண்மையாகும். அதாவது தட்பமும் வெப்பமும் போன்ற மாறுபட்ட தன்மைகள் உண்மையும் இன்மையும் போன்ற மாறுபட்ட தன்மைகளும் ஒரு

பொருளிடத்தே இருத்தல் இயலாது. இவ்வாறே பிறவற்றையும் சிந்தித்து அறியலாம்.

மேற்கூறிய (i) இல்லது தோன்றாது; உள்ளது அழியாது. (ii) 'மாறுபட்ட தன்மைகள் ஒரு பொருளின்கண் இருத்தல் இயலாது' என்ற இரு முடிவுகளின் அடிப்படையில் நோக்கினால் 'பதி, பசு, பாசம்' என்ற முப்பொருள்களும் உள்ளன என்பதும் 'அவை மூன்றும் அனாதி நித்தியப் பொருள்கள்' என்பதும் நிலை பெற்ற உண்மை முடிவுகளாகும் என்பது இனிது தெளிவாகின்றதன்றோ?

இப்படித் தெளிவானாலும், 'இறைவன் உலகைப் படைக்கின்றான்; அழிக்கின்றான்' என்பதன் கருத்து நின்பால் ஒரு குழப்பத்தை விளைவிக்கலாம். இக் குழப்பத்தையும் போக்க வேண்டுவது இன்றியமையாததாகின்றது. 'உலகம்' என்பது 'காரணப் பிரபஞ்சம்', 'காரியப் பிரபஞ்சம்' என இருவகைப்படும். 'காரணப் பிரபஞ்சம்' என்பது, 'மண்', 'பொன்' போல்வது: காரியப் பிரபஞ்சம்' என்பது 'குடம்', 'அணி' போல்வது. குயவன்மண்ணிலிருந்து குடத்தையும் பொற்கொல்லன் பொன்னிலிருந்து அணியையும் தோற்றுவித்தலன்றி அவர்கள் மண்ணையோ பொன்னையோ தோற்றுவித்தல் இல்லை. அது போலவே, இறைவன் காரியப் பிரபஞ்சத்தைக் காரணப் பிரபஞ்சத்திலிருந்து தோற்றுவித்துப் பின் அதிலே ஒடுக்குவதன்றிக் காரணப் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தல் இல்லை. ஆகவே, இறைவன் 'படைக்கின்றான், அழிக்கின்றான்' என்றால் அவ்வாறு செய்வது காரியப் பிரபஞ்சத்தைத்தான் எனவும், காரணப் பிரபஞ்சம் 'அனாதி நித்தியம்' எனவும் பகுத்துணர்ந்து தெளிவு பெறவேண்டும். காரியப் பிரபஞ்சம் தோற்ற ஒடுக்கங்களை உடையதாயினும் காரணப் பிரபஞ்சத்திற்கு அவை இல்லாமையால் அஃது அனாதி நித்தியமேயாம் என்று தெளிவு பெறுக.

இதனால் உலகம் 'உள் பொருள்' என்பது தெளிவாயிருக்கும் என்று கருதுகிறேன். கடிதம் நீண்டு விட்டதால்

'உலகத் தோற்றத்திற்குக் கருத்தா ஒருவன் வேண்டும்' என்பதையும் அதனோடொத்த கருத்துகளையும் அடுத்த கடிதத்தில் விளக்குவேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

# 7

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன்; நலனே விளைந்திடுக.

முன்னர் நுண்ணிய நிலையிலுள்ள பொருள் பருநிலையில் புலனாய்த் தோன்றும் என்பதைச் சென்ற கடிதத்தில் விளக்கினேன். உலகத்தைத் தோற்றுவித்தற்குக் இக்கருத்தா ஒருவன் உளனாதல் வேண்டும் என்பதை கடிதத்தில் விளக்குவேன். உலகம் தானே தோன்றிற்று என்று கொள்ளலாகாது. ஏனெனில், உலகத்தை இல்பொருள் எனக் கொள்ளாது உள்பொருள் எனக் கொண்டது எதனால்? இல்லது தோன்றாமையை அறிந்த கருதலளவைபற்றியன்றோ?

'உலகம் உள் பொருள்' என்றற்கும் 'உலகத்திற்குக் கருத்தா ஒருவன் உண்டு' என்பதற்கும் முற்றிலும் தொடர்பு உண்டு. எங்ஙனம்? 'இல்லது தோன்றாது' என்பது போல், 'உள்ளது, அதனைத் தோற்றுவிக்கின்ற முதல்வன் ஒருவன் இல்லாமல் தோன்றாது' என்பதும் ஒரு பேருண்மையாகும். இவ்வுண்மை காட்சியளவையிலேயே எளிதில் விளங்குவதாகும். இதனை எடுத்துக் காட்டுகளால் விளக்குவது இன்றியமையாததாகின்றது. குடம், ஆடை, அணிகலன் முதலியன காரியப் பொருள்கள் என்பதை நீ நன்கு அறிவாய். அதாவது ஒவ்வொரு முதற் காரணப் பொருள்களாகும் இவை என்பது உனக்குத் தெரியும். அதாவது, குடம் 'மண்' என்னும் காரணப் பொருளி

விருந்து தோன்றியது; ஆடை 'நூல்' என்னும் காரணப் பொருளிலிருந்து உண்டானது; அணிகலன் 'பொன், வெள்ளி' போன்ற உலோகங்களிலிருந்து புதிய உருவம் கொண்டது. ஆகவே, ஏற்கெனவே நீ நன்கு அறிந்த சற்காரிய வாதப்படி நோக்கினால், தோற்றத்திற்கு முன்னும் அவை முறையே மேற்குறிப்பிட்ட காரணப் பொருள்களில் இருந்தனவேயாகும். ஆயினும், காரணங்களில் நுண்ணிய நிலையில் புலனாகாமல் இருந்த அவை பருநிலையில் தாமே தோன்றா. குயவனும் நெசவாளனும் பொற் கொல்லனும் ஆகிய செய்வோர்களால் தோன்றினமை கண்கூடாகும். இனி, குடமோ ஆடையோ அணிகலனோ பிற காரியப் பொருள்களோ செய்வோர் இன்றித் தோன்றாமையும் காட்சியளவையால் பெறப் படுவதேயாகும். ஆகவே, 'உள்ளனவாய் நின்று தோன்றும் பொருள்கள் யாவும் செய்வோனையுடையன' என்பது வெள்ளிடை விலங்கலாகும். இதனால், சற்காரிய முறைப் படித் தோன்றுவதாகிய உலகத்திற்கு அதனைத் தோற்று வித்தற்குக் கருத்தா ஒருவன் இன்றியமையாதவன் என்பது வலியுறுதல் தெளிவாகின்றதன்றோ?

இதனை இன்னொருவிதமாகவும் விளக்கலாம். ஒரு காரியத்திற்கு 'முதற்காரணம், துணைக் காரணம், நிமித்த காரணம்' என்னும் மூன்று காரணங்கள் இன்றியமையாதவை என்பதை நீ நன்கு அறிவாய். எ-டு. குடமாகிய காரியத்திற்கு மண் முதற்காரணம்.; தண்ட சக்கரம் துணைக்காரணம்; குயவன் நிமித்த காரணம். அதுபோல உலகமாகிய காரியத்திற்கு மாயை முதற்காரணம்; கடவுளது ஆற்றல் துணைக் காரணம்; கடவுள் நிமித்த காரணம். இவற்றால் (i) காரியப் பொருள்கட்குக் கருத்தா இன்றியமையாமை என்பதைத் தெளிவாயாக.

இன்னோர் உண்மையையும் நீ அறிதல் வேண்டும். சற்காரியவாதம் அறிவும் அறிவல்லாததும் வேறே என்று கூறுகின்றது. உள்ளது தோன்றுமேயன்றி இல்லது தோன்

றாமையின் 'அறிவில்லாத பொருளில் அறிவு என்றும் தோன்றுவதில்லை' என்றும் தெரிவிக்கின்றது. மேலும், 'அறிவில்லாத பொருள் தானாகவே செயற்படுவதில்லை, என்பதும் நன்கு அறியத் தக்கது. எனவே, உலகம் செயற் படுவதென்றால் அஃது அறிவுடைய ஒரு கருத்தாவினாலே யாகும் என்பதையும் நீ உளங்கொள்ளல் வேண்டும். உலகம் மிகப் பெரிய பொருளாகலின் அதனை இயக்கும் கருத்தா எல்லையற்ற பேரறிவும் பேராற்றலும் உடையவனாக இருத்தல் வேண்டும்.

காந்தம் இரும்பை ஈர்ப்பதையும் நஞ்சு பற்றின இடமே யன்றி பல இடங்களில் பரவுவதையும் எடுத்துக்காட்டி அறிவில்லாத பொருள்களும் செயற்படும் என்று கூறுவர் சிலர். இது தவறு; பெருந்தவறு; பொருந்தாத எடுத்துக் காட்டுகள் காந்தம், இரும்பை ஈர்ப்பது அவ்விரண்டை யும் ஒருவன் நேர் முகமாகக் கொணரும் பொழுது தான், நஞ்சு பரவுவதும் உயிருள்ள உடம்பில்தான். இதனால் அறிவுடைய பொருளின்றி அறிவில்லாத பொருள் செயற் படாது என்பதைத் தெளிக. ஆனால் நீ அறிவுக் கூர்மை யுடையவனாதலால் 'உயிர்கள் உலகத்திற்குக் கருத்தா வாதல் அமையாதோ?' என்று வினவலாம். 'அமையாது' என்பதே அதற்கு விடை. உயிர்கள் அறிவுடையன வாயினும் அவ்வறிவு உடம்போடு கூடிய பின்னரே விளங்கப் பெறும் தன்மையுடையது என்பதை நீ அறிதல் வேண்டும். இதனால் உடம்பில்லாத உயிர்கள் உடம் பையோ மற்றொன்றையோ தோற்றுவித்தல் இயலாது என்பதைத் தெளிக. ஆகவே (ii) பேரறிவுப் பொருளாகிய இறைவனே உலகத்திற்கு இன்றியமையாது வேண்டப்படும் கருத்தா ஆவன் என்பதைத் தெரிந்து தெளிக.

பிறிதோர் உண்மையையும் நீ அறிந்து தெளிதல் வேண்டும். (iii) 'உலகம் முத்தொழில்களையுடையது' என் பதுவே அது. அதாவது, தோன்றல், நிற்றல், அழிதல் என்ற மூன்று நிலைகளையுடையது என்பதாகும். இதனை

விளக்க மெய்கண்டார் மூன்று ஏதுக்களைக் கூறுகின்றார். அவை', அவயவப் பகுப்புடைமை, சடமாயும் பலவாயும் இருத்தல், சுட்டியறியப்படுதல் என்பவை யாகும். இவை ஒவ்வொன்றையும் தெளிவாக்குவேன்.

அவயவப் பகுப்பு : இது பிரிக்கப்படும் தன்மையாகும். குடம் உடைக்கப்படும்; ஆடை கிழிக்கப்படும். அதனால் அவை அவயவப் பகுப்புடையவை என்பது தெளிவாகும். அவைபோலவே. உலகமும் 'நிலம், நீர்' என்பன முதலாகப் பிரிக்கப்படும்; நிலமும் தோண்டப்படும்; நீரும் முகக்கப் படும். பிறவும் பிரிக் கப்படுவனவாகும். 'எல்லாப் பொருள் களும் அணுக்களாகப் பிரிக்கப்படும்' என்பது எல்லோர்க் கும் உடன்பாடு.[12] இதனால் 'உலகம் அவயவம் பகுப் புடையது' என்பது தெளிவாகின்றது. இவ்வாறு பிரிக்கப் படும் தன்மை ஆக்க அழிவுகட்குக் காரணமாதலை அனை வரும் நன்கு அறிவர்.

சடமாயும் பலவாயும் இருத்தல் : சடம்—அறிவில்லாதது. அறிவில்லாத பொருள் ஒன்றாய்ப் பலவாய் இருப்பின், அவை தோன்றி அழிவனவாகும். இதனை மண்ணால் ஆக்கப்படும் பொருள்களும், பொன் வெள்ளி முதலிய உலோகங்களால் ஆக்கப்படும் பொருள்களும் பிற ஆக்கப் பொருள்களும் ஒன்றாய் இல்லாது பலவாய் இருத்தல் கொண்டு அறியலாம்.

சுட்டியுணர்தல் : கண் முதலிய பொறிகளுக்கு உட்படு மாறு, 'இஃது' இன்ன தன்மையது' என்று வரையறுத்து உணர்வதாகும். இவ்வாறு கருவிகரணங்களால் அளந் தறியப்படும் பொருள்களனைத்தும் தோன்றியழியக் கூடியன என்பது தெளிவாகும். காரணம், அளக்கும் கருவிகளாகிய ஐம்பொறி முதலியன தோன்றியழிவன

12. அணுவும் பல்வேறு துகள்களாகச் சிதைக்கப் பெறு வதை இன்றைய அறிவியல் தெளிவாக்கும்.

வாதலின் அவற்றிற்கு அகப்படும் பொருள்களும் அத் தன்மையுடையனவாய் இருக்கும் என்று சொல்லத்தேவை இல்லை. ஆகவே, உலகம், நிலம் நீர் நெருப்பு காற்று வானம் என்றாற்போல் அவயவப் பகுப்புடையதாயும் சடமும் பலவுமாயும் சுட்டியறியப் படுவதாயும் இருத் தலால் தோன்றியழியும் பொருள்களாகும். அதனால் உலகத்தினது தோற்றமும் அழிவும் ஏக காலத்தில் காட்சிக்கு வராவிடினும் கருதலுக்குரிய (அநுமானத்திற் குரிய) மூன்று ஏதுக்களையுடைமையால் அவைபற்றி அது தோன்றியழிதல் கருதி உணரப்படும் என்பதைத் தெளி வாக அறிவாயாக. இம் மூன்று ஏதுக்களையே மெய் கண்டார் "அவன் அவள் அது' எனும் அவை"[13] என்றும், வார்த்திகத்தில் "ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப் பட்ட பிரபஞ்சம்"[14] என்றும் கூறியுள்ளதை ஆய்ந்து தெளிக.

இவற்றால் உலகம் முத்தொழில் உடைமையால் உள் பொருளே என்பதும், உளதாய்த் தொழிற்படும் உலகத்தை அவ்வாறாகத் தொழிற்படுத்தும் கருத்தா ஒருவன் உளன் என்பதும் ஐயமின்றிப் பெறப்பட்டதை ஓர்ந்து அறிவாயாக.

உலகிற்கு முதல்வன் ஒருவனோ பலரோ என்ற ஐயமும் நின்பால் ஏழலாம். இந்த ஐயத்தையும் போக்குவேன், ஒரு தொழிலைப் பலர் கூடிச் செய்யுமிடத்து அனைவரும் ஒரு தலைவன்வழி நின்று அவன் சொற்படிச் செய்வதை நீ உலகியலில் காண்கின்றா யன்றோ? இவ்வாறே உலகத்தைச் செயற்படுத்துவதில் பல கடவுளர் இருப்பினும், அவர் அனைவரும் முதற் கடவுள் ஒருவன்வழி நின்று அவன் திருவுளத்தின்படி தம் தொழிலைச் செய்வர். எல்லோரும் முதற் கடவுள்

13. சி. ஞா. போ. சூத். 1

14. ஷெ. ஷெ. முதலதி, வார்த். 3 (i)

ஆகார். ஆகவே,(iv) 'உலகிற்கு முதல்வன் ஒருவனேயன்றிப் பலர் இல்லை' என்று தெளிவு பெறுக.

வேதத்தில் ஒரு கடவுளை முதற் கடவுளாகக் கூறாமல் ஓரோர் இடத்தில் ஒவ்வொருவனை முதற் கடவுளாகக் கூறுவதற்குக் காரணம் என்னை?" என நீ வினவலாம். கூறு வேன்; அங்ஙனம் வேதம் கூறுதல் அவரைப் புகழ வந்த இடத்தில் அவரை முகமனாக உயர்த்துக் கூறிய உரையே யன்றி, ஆய்ந்து ஒரு படித்தாக முடித்துக் கூறிய உரை யன்று. ஆயினும், அதே வேதத்தில் 'கடவுள் ஒருவனோ? பலரோ?' என்ற ஐயத்தை நீக்கி ஒரு தலையாக முடிவு கூறும் இடத்தில் 'கடவுள் ஒருவனே' என்று கூறுவதைக் காணலாம். "ஏகமே வாத்விதீயம் பிரஹம்", "ஏகம் சத்" முதலிய வாக்கியங்களை நோக்கினால் இவ்வுண்மை புலனாகும்.

உலகில் உள்ள தொழில்கள் பலவாயினும் அவற்றை அடக்கி நிற்கும் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்றும் பெருந் தொழில்கள் மூன்று என்பதும், அத் தொழில்களைச் செய்யும் கடவுளர் மூவர் என்பதும், அவருள் ஒருவன் முதற் கடவுள்: ஏனைய இருவரும் அம் முதல்வன் அருள்வழி நிற்பவர் என்பதும் பொதுவாக யாவராலும் சொல்லப்பெறுவதை நீ அறிவாய். ஆயினும் 'முழுமுதற் கடவுள் இவன்' என ஒருவனை வரைந்து அறுதியிடுதலில் மட்டும் கருத்து வேறுபடுகின்றனர். இதனை நேரிய முறையில் ஈண்டு வரைந்து காட்டுவேன். ஒவ்வொரு தொழிலையன்றி, எல்லாத் தொழில்களையும் செய்யவல்லவனாய், எல்லா முதன்மையும் உடையவனே முதற் கடவுள்; அவ்வாறில்லாமல் ஒவ்வொரு தொழிலை மட்டிலும் செய்யவல்லவராய், அவ்வத் தொழிலில் முதன்மை பெற்று, அவ்வத் தொழில்கட்கு மட்டிலும் உரியவராயிருப்பவர்கள் முதற் கடவுளின் அருள்வழி நிற்கும் தொழிற் கடவுளர் ஆவர். இதனை மேலும் தெளி வடையச் செய்வேன்.

படைத்தற் கடவுளும் காத்தற் கடவுளும் தாம் தாம் ஏனைய இருவரையும் படைத்தலும் காத்தலும் செய்வர் எனக் கூறின் பொருந்துவதாகும்; ஆயினும் ஏனைய இரு வரையும் அழிப்பர் எனக் கூறின் அது பொருந்தாத கூற்றாகும். ஏனெனில் படைப்பவனுக்கும் காப்பவனுக் கும் அழிப்பது தொழிலோடு எவ்வாற்றானும் இல்லை. இனி, அழித்தற் கடவுளுககு அவ்வாறின்றி 'அழிப்புக் காலத்தில் எல்லாப் பொருள்களோடுங்கூட, ஏனைய இருவரையும் கூட அழிப்பன்' என்றே கூறுதல் வேண்டும். ஏனெனில், அழிப்பின் இன்றியமையாமை கருதி எல்லோ ரையும் அழிக்கும்பொழுது 'ஒருவர், இருவரை அழியாது நிறுத்தி வைப்பன்' என்றற்கு ஒரு காரணமும் இல்லை யன்றோ? எனவே, அழிய வேண்டிய காலத்தில் அழிந்த உலகம் மீளத் தோன்ற வேண்டிய காலத்தில் தோன்று மாறு அனைத்தையும் தோற்றுவிப்பவன் அழித்தற் கடவுளேயன்றி பிறர் இல்லை என்பதை அறிக. இதனையே மெய்கண்ட தேவ நாயனார் "ஒடுங்கிய சங்காரத்தின் அல்லது உற்பத்தி இன்மையின்"[15] என்று உரைத்தருளினமை யையும் நோக்குக.

இதனை மேலும் தெளிவாக்குவேன். சற்காரிய வாதத்தை விளக்கும்போது "'அழித்தல்' என்பது தூய நிலையில் உள்ளவற்றைச் சூக்கும நிலையில் படுத்து ஒடுக்கு தலாகும்; 'படைத்தல்' என்பது சூக்கும நிலையிலுள்ள வற்றைத் தூல நிலைக்குக் கொணர்தலாகும்; 'காத்தல்' என்பது, அங்ஙனம் கால நிலைக்குக் கொணர்ந்தவற்றை அந்நிலையிலே நிறுத்துதலாகும்" என்று விளக்கினதை ஈண்டு மீண்டும் சிந்திக்க. மெய்கண்ட தேவரும் சங்கா ரத்தை 'ஒடுங்கின சங்காரம்' (சூத்-1, அதிக-2. வார்த்-4) என்று குறித்தது இதுபற்றியே யாகும் என்பதையும் தெளிக. சூக்கும நிலை என்பது, காரணமும், முன்னே உள்ளதும், பெரியதும், நிலைபேறுடையதுமாகும்; 'தூல

15. சி. ஞா. போ. சூத் 1. அதிக-2. வார்த்-4.

நிலை' என்பது, காரியமும், பின்னே தோன்றுவதும், சிறியதும், நிலையில்லாததுமாகும். இந்நிலையில் அழித்தல் சூக்குமத் தொழிலாதலின் அத்தொழிற்குத் தலைவன் காரணமும், முன்னே உள்ளவனும், பெரியோனும், நிலைபேறுடையவனுமாவன்; தூலத் தொழிற்குத் தலைவர் காரியரும், பின்னே தோன்றுவோரும், சிறியோரும், நிலையில்லாதவரும் ஆவர் என்பது நுண்ணுணர்வினோர்க்குப் புலனாகாமற் போகாது. ஆகவே காரணனாகிய அழித்தற் கடவுள் தொழிற்படுத்தும் தலைவனும், காரியராகிய ஏனையோர் அவனால், தொழிற் படுத்தப்பட்டு அவன் ஏவல்வழி நிற்போரும் ஆதல் வெள்ளிடை விலங்கலெனப் புலனாகின்ற தன்றோ? இவற்றையெல்லாம் கருதியே மெய்கண்ட தேவ நாயனாரும் "சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம்"[16] என்று கூறினார். இக்காரணங்களால் முதற் கடவுளைச் சங்காரத் தொழில் புரிபவனாகவும், முது காட்டில் உறைதல், சுடலைப் பொடி பூசுதல், என்பு மாலையும் தலைமாலையும் அணிதல் முதலிய கோலங்களையும், 'உருத்திரன்'[17] என்னும் திருப் பெயரையும் உடையவனாகவும் கூறுதல் ஆன்றோர் வழக்காயிற்று என்பதையும் உன்னுக.

'அழித்தற் கடவுளே முதற் கடவுள்' என்ற உண்மையை உணர்ந்த பின்னர் அவனை அவ் ஒரு தொழிற்கு மட்டிலும் உரியவனாக நினையாது, முத்தொழிற்கும் முதல் வனாக உணர்தல்வேண்டும். ஆகவே "சங்கார காரணன்' என்னும் திருப் பெயர் உருத்திரனைக் குறியாது, மூவரிலும் மேம்பட்டவனான சிவபெருமானையே குறிப்பதாகும். சிவபெருமான் முத்தொழிற்கும் முதல்வன் என்பதை,

---

16. சி. ஞா. போ. சூத். 1 (வார்த்திகம்-1)
17. உருத்திரன்— 'துக்கத்தை நீக்குவோன்' என்பது பொருள்.

**நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்தில்**
**தாக்காது நின்றுளத்தில் கண்டிறைவன்—ஆக்காதே**
**கண்ட நனவுணர்விற் கண்ட கனவுரைக்**
**கண்டவரில் இற்றிட்டாய் கட்டு.[18]**

(நொடித்தல்—அழித்தல்)

என்ற வெண்பாவில் மெய்கண்டார் விளங்கக் கூறியிருத்தலால் தெளியலாம்.

இன்னும், சங்காரகாரணன் அன்றி ஏனைய படைத்தல் கடவுளும் காத்தல் கடவுளும் அவர்களோடு இந்திரன் முதலிய வானவர் பலரும் பசுக்களாகிய உயிர் வகையினரே என்பதையும் நீ உணர்தல் வேண்டும். இவரெல்லாரும் புண்ணிய மிகுதியால் முதற் கடவுளின் அருள்வழி அவ்வப் பதவிகளைப் பெற்று, அவ்வித தொழில்களை நிகழ்த்தி, அவ்வவற்றிற்கேற்ற காலம் முடிவுற்ற பின்னர் அப்பதவியினின்றும் நீங்குவர். இதுபற்றியே மெய்யுணர்வுடையோர் இப்பதவிகளை விரும்புதல் இல்லை.

மேலும், இவர்கள் யாவரும் உடம்பாகிய கருவியைப் பற்றி நின்று, அவ்வுடம்பின் அளவான சுட்டுணர்வையே[19] உடையராய் இருத்தலே அவர் உயிர்த் தொகுதியைச் சார்ந்தவர் என்பதை விளக்கும். முதற் கடவுள் உடம்பின்றி எல்லையற்ற வியாபக உணர்வுடையவன்[20] என்ற மற்றோர் இலக்கணமும் முதல்வனுக்குக் கூறி நிலை நிறுத்துவர் மெய்கண்டார். பரமசிவனுக்கும் 'திருமேனி'

---

18. சி. ஞா. போ. சூத். 1. அதிகர. 2. 2-ம். 4. வெண்பா.

19. சுட்டுணர்வு—ஒரு காலத்தில் ஓரிடத்தில் ஒருபொருளையே குறித்துணர்தல். இது 'சிற்றறிவு' என்றும் சொல்லப்பெறும். (கிஞ்சிஞ்ஞத்துவம்)

20. வியாபக உணர்வு—காலவரையறையும் இடவரைறையும் இன்றி, என்ஞான்றும் எவ்விடத்தும், எல்லாப் பொருளையும், முழு தோருங்குணர்தல். இது 'முற்றறிவு' எனவும் வழங்கப் பெறும் (சர்வஞ்ஞத்துவம்)

பகரப் பெறுகின்றதே என்று நீ நினைக்கலாம். அத் திருமேனி பிறர் பொருட்டுத் தன் இச்சையால் கொண்டது; அத்திருமேனியைப் பெற்ற பின்னரே அவனுக்கு உணர்வு உண்டாயிற்று என்பது இல்லை. அஃது இன்றியே அவன் இயற்கை உணர்வுடையவன். இத்திருமேனிகள் கொண்ட கருத்து அடுத்த கடிதத்தில் விளக்கம் அடையும். எல்லாக் கடவுளர்க்கும் பிறப்பு இறப்புகள் சொல்லப்படுவதாலும், பரமசிவனுக்கு அவை ஓரிடத்தும் சொல்லப் படாமை யாலும் இது தெளியப்படும். இதுபற்றியே அவன் 'பிறப்பில் பெருமான்' என்று போற்றிப் புகழப்படுவதையும் ஓர்ந்து உணர்க.

எனவே, இதுகாறும் கூறியவற்றால் 'உலகத்தைப் படைத்துக் காத்து அழிக்கும் முதற் கடவுள் ஒருவன் உளன்' என்பதையும், 'அக்கடவுள் சிவபிரானே' என்பதையும், 'அயன் அரி அரன்' என்னும் மூவரும் அவன் ஆணை வழி ஒவ்வொரு தொழிலைச் செய்யும் அதிகார மூர்த்திகள் என்பதையும், பிற தேவர்களும் அத்தன்மையினரே என்ப தையும் ஒருவாறு தெளிவித்தேன். இவற்றால் பதி உண்மை பற்றிய ஐயங்கள் யாவும் நீங்கித் தெளிவு பெற்றிருப்பாய் எனக் கருதுகின்றேன்.

**ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்**
**வானம் நணிய துடைத்து** [21]

என்ற வள்ளுவர் வாக்கையும் உன்னுக. இதனால் 'பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும்' விபரீத உணர்வு தூர்ந்து மெய்யுணர்வு எய்தப் பெறுவாய் என்றும் நம்புகின்றேன். இத்துடன் இக்கடிதத்தை நிறைவு செல் கின்றேன்.

அன்பன்,
**கார்த்திகேயன்.**

---

21. குறள்-353 (மெய்யுணர்தல்)

# 8

அன்பார்ந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைந்திடுக. சைவசிந்தாந்தத்தின் முடிந்த முடிபாகக் கொள்ளப்படும் முப்பொருள்களுள் பதியைப் பற்றிய சித்தாந்தக் கருத்துக்களை இந்தக் கடிதத்தில் விளக்குவேன்.

பதியைப்பற்றிப் பகர்வதற்கு முன்னர் பொருளின் இயல்புபற்றி நீ அறிந்து கொள்ள வேண்டும். ஒரு பொருளுக்குப் 'பொது இயல்பு' என்றும், 'சிறப்பு இயல்பு' என்றும் இரண்டு இயல்புகள் உண்டு. 'இயல்பு' என்றாலும் 'இலக்கணம்' என்றாலும் ஒன்றேயாகும். ஒரு பொருட்கு அதன் தன்மையில் இயல்பாக என்றும் உள்ள இயல்பு 'சிறப்பியல்பு' என்றும், 'மற்றொரு பொருளின் சார்பு காரணமாக ஒரு பொருளின்கண் உண்டாகி அச்சார்பு நீங்கியவழி உடன் நீங்கும் இயல்பு 'பொது இயல்பு' என்றும் சித்தாந்தம் பேசும். சிறப்பியல்பைச் 'சொரூப இலக்கணம்' என்றும், பொது இயல்பைத் 'தடத்த இலக்கணம்' என்றும் வழங்குவர் சித்தாந்திகள்.[22]

'பதி பசு பாசம்' என்னும் முப்பொருள்களின் இந்த இரண்டு இலக்கணங்களையும் நீ அறியவேண்டும். இந்த முப்பொருள்களுள் பதி ஏனையவற்றைவிடப் பேராற்றல் வாய்ந்தது. சுதந்திரம் உடையது. பசுவும் பாசமும் சுதந்திரத் தன்மையின்றிப் பதியின் விருப்பப்படி செயற் படுவனவாகும். மேலும், பசுவும் பாசமும் மற்றொன்றின் சார்பினால் தன்மையில் மாறுபடும். பதியோ அங்ஙனம் எந்தப் பொருளின் சார்பினாலும் மாறுபடாமல் என்றும்

---

22. சொரூபம்—தன் இயல்பு; தடத்தம் அயலிலுள்ள பொருட்கண் இருப்பது.

ஒரே பெற்றியதாய் இருக்கும். இது பற்றியே பதியை வட மொழியில் 'சித்' என்றும், தமிழில் 'மெய்ப்பொருள்', 'செம்பொருள்' என்றும் வழங்குவர். 'சத்' என்பதை 'உள்ளது' என்று மொழிபெயர்த்துப் பேசுவர் சித்தாந்திகள். 'உள்ளது' என்பதை 'என்றும் ஒரு பெற்றியதாய் உள்ளது' என்று கொள்ளல் வேண்டும். ஆகவே, பிறிதொரு பொருளின் சார்பினால் மாறுபடாத தன்மையையுடைய பதியிடம் பிறிதொன்றை நோக்காது தன்னையே தான் நோக்கி நிற்கும் நிலையில் காணப்படும் இயல்புகளே பதியின் சொரூப இலக்கணமாகும். பதி உலகத்தை நோக்கி நிற்கும் நிலையில் காணப்பெறும் இயல்புகள் தடத்த இலக்கணமாகும். உயிர்களும் 'உலகம்' என்பதனுள் அடங்கும் என்பதையும் அறிக.

இனி, பதியின் சொரூப இலக்கணத்தை விளக்குவேன். இது குணம் குறிகளைக் கடந்த நிலை. பதி ஒன்றே; அதாவது அஃது ஏகமாய் இருக்கும். எல்லாவற்றிற்கும் மேலானது; அது காணப்படும் உருவமற்றது; காலம் இடம் இவற்றால் அளவுபடுத்தப்படாதது; குணங்களும் இல்லை; அடையாளங்களும் இல்லை; மலமற்றது; என்றும் அழியாதிருப்பது; ஆன்மாக்களுக்கு அறிவாய் நிற்பது; சலிப்பற்றது; அளவுபடாததால் போக்கு வரவாகிய அசைவு இல்லாதது. காட்சிக்கும் கருத்துக்கும் அப்பாற்பட்டது.[23]

குணம்இ லான்குணம் குறிஇலான்
குறைவிலான் கொடிதாம்
புலம்இ லான்தனக் கென்னஓர்
பற்றிலான் பொருந்தும்

23. வைதிக சமயங்கள் பதிக்குக் கூறும் 'சத்து சித்து ஆனந்தம்' என்ற இயல்புகள் ஒருவகையில் பொது வியல்புகளாகின்றன.

இலம்இ லான்மைந்தர் மனைவிஇல்
லான்எவன்? அவன்சஞ்
சலம்இ லான்,முத்தி தரும்பர
சிவன்எனத் தகுமே.[24]

என்று தாயுமான அடிகள் 'சிவன் எனத் தகுவோன்' என்று கூறும் பாடலில் பதியின் இலக்கணம் அமைந்திருப்ப தாகக் கருதலாம்.

சைவாகமங்கள் அளவை முறையில் எடுத்துக் காட்டும் சிறப்பியல்புகள் எண் குணங்களாகும். அவை: தன் வயம், தூயஉடம்பு, இயற்கை உணர்வு, முற்றுணர்வு, இயல்பாகவே பாச நீக்கம், முடிவில் ஆற்றல், பேரருள் உடைமை, வரம் பிலின்பம் உடைமை என்பனவாகும்[25]. இவையே வட மொழியில் சுதந்திரம், விசுத்த தேகம், அனாதி போதம், சருவஞ்ஞதை, நிராமயம், அனந்த சத்தி, அலுத்த சத்தி, திருப்தி என்று நுவலப்பெறும். மேற்கூறிய எட்டில் தூய உடம்பு, பாசங்களின் நீக்கம் இவையின்றியாயினும் இயற்கை உணர்வை முற்றும் உணர்தலாலும், தூய உடம்பைப் பாசங்களின் நீங்குதலிலும் அடக்கியாயினும் ஆறாகக் கூறும் மரபும் உண்டு. இன்ன சிறப்பியல்புகள் நோக்கிச் சொல்லப்படும் இடத்தில் சிவம் 'பரசிவம்' என்று வழங்கப்பெறும். தாயுமான அடிகளின் 'பரசிவ வணக்கம்' காண்க. முதற் பாடலில்[26] 'சிவத்தின் சொரூப இயல்பு' நுவலப் பெற்றிருப்பதைக் கண்டு தெளிக.

அடுத்து, பதியின் 'தடத்த இலக்கணத்தை' விளக்கு வேன். இது குணங்குறிகளோடு கூடிய நிலை. தன்னையே நோக்கி நிற்கும் 'பரசிவம்' அந்நிலையினின்றும் நீங்கி

---

24. தா. பா. ஆசையெனும்—30.

25. குறள்—9 இல் 'எண்குணத்தான்' என்பதற்கு இவற்றையே காட்டுவர் பரிமேலழகர்.

26. 'அங்கிங்கெனாதபடி'— (1)

உலகத்தை நோக்குங்கால் தனது சிறப்பியல்புகளில் ஒன்றாகிய பெருங்கருணை காரணமாக உயிர்களின் பொருட்டுத் தானே தனது விருப்பத்தால் தனது ஆற்றலை (சக்தியை)க் கொண்டு பல்வேறு நிலைகளை உடையதாக இருக்கும். இந்த நிலைகளே பதியின் தடத்த நிலைகளாகும். இவை யாவும் பதியின் அனந்த சக்தியாகிய அளவில்லாத ஆற்றலால் வருவனவாதலின், பதியின் தடத்த நிலைகள் யாவும் அதன் சக்தியினால் ஆவனவாகும் என்பதை நீ அறிதல் வேண்டும். இதனால் சொரூப நிலையில் பதி 'சிவம்' என்றும், தடத்த நிலையில் 'சக்தி' என்றும் பேசப்படும். சொரூப நிலையில் சக்தி செயற்படாது அடங்கியிருத்தலால் பதி 'சிவம்' என ஒன்றேயாக இருக்கும்; சக்தி செயற்படும் தடத்த நிலையில், சிவம் அதனோடு அச் செயலையெல்லாம் உடன் இயைந்து இயற்றி நிற்றலால் 'சிவமும் சக்தியும்' இரண்டாய்—அம்மை அப்பனாய்—மாதொரு பாகனாய்—இரண்டாய்த் தோற்றம் அளிக்கும். இந்நிலைகளை ஆளுடைய பிள்ளையார்,

> 'ஓர்உரு ஆயினை; மானாங் காரத்து
> ஈர் இயல்பாய்[27]

என்றுதமது திருஎழுகூற்றிருக்கையில் அருளிச் செய்திருத்தலைக் கருதுக. அடுத்து,

> பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று; அவ்வுருத்
> தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்.[28]

என்ற புறநானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பகுதியும் இத் தடத்த நிலைகளையே குறித்தது என்பதையும் எண்ணி ஓர்க.

தடத்த நிலையில் பதி சக்தியினால் பல நிலைகளை யுடையது. இந்த நிலையில் அதற்கு உருவம் உண்டு;

---

27. தேவாரம் 1.128 : அடி 1—2.
28. புறம்—1

தொழில் உண்டு; அவற்றிற்கு ஏற்ற பலப் பல பெயர்களும் உண்டு. ஆயினும், இவையனைத்தும் இறைவனின் அருள் காரணமாக உண்மையாற் கொண்டனவேயன்றி வெறும் கற்பனையல்ல என்பதை நீ அறிதல் வேண்டும். சொரூப இலக்கணம் எப்படி உண்மையோ, அப்படியே தடத்த இலக்கணமும் உண்மையாகும்.

தடத்த நிலைகளில் சிலவற்றை ஈண்டு விளக்குதல் பொருத்த முடையதாகும். சொரூப நிலையில் பதி 'பரசிவம்' என நிற்குங்கால் அதன் சக்தி பராசக்தி என வழங்கப் பெறும். அஃது உயிர்களின் அறிவை விளக்கி நிற்கும் அறிவு வடிவமானது. அந்த அறிவே சக்தியின் சொரூபம். பாரதியாரின் சக்தி வழிபாடெல்லாம் இந்தச் சக்தியை நோக்கியே யாகும் என்று கருதுவதில் தவறில்லை.

தன்னை மறந்து சகல உலகினையும்
மன்ன நிதங்காக்கும் மகாசக்தி—அன்னை
அவளே துணையென்று அனவரதம் நெஞ்சம்
துவளா திருத்தல் சுகம்.

எண்ணிற் கடங்காமல் எங்கும் பரந்தனவாய்
விண்ணிற் சுடர்கின்ற மீனையெல்லாம்—
பண்ணியதோர்
சக்தியே நம்மைச் சமைத்தது காண், நூறாண்டு
பக்தியுடன் வாழும் படிக்கு.[29]

என்ற பாடல்களை நோக்கி இதனை அறியலாம். மற்றும்,

சித்தத்தி லேநின்று சேர்வ துணரும்
சிவசக்தி தன்புகழ் செப்பு கின்றோம்;
இத்தரை மீதினில் இன்பங்கள் யாவும்
எமக்குத் தெரிந்திடல் வேண்டு மென்றே.[30]

என்ற தாழிசையிலும் இதனைக் கண்டு தெளியலாம்.

---

29. தோ. பா. மகாசக்தி வெண்பா—1, 4

30. ஷை. வையமுழுதும்—5

பதி உலகத்தை நோக்குங்கால் மேற்குறிப்பிட்ட பராசக்தியில் ஒரு சிறு கூறு உலகத்தைத் தொழிற்பட முற்படும்; அதனை 'ஆதிசக்தி' என வழங்குவர். இது, சிவம் தோன்றாது உலகமே தோன்றுமாறு பிறப்பு இறப்பு களில் செலுத்தி நிற்றலால் 'திரோதான சக்தி' என்ற திருப் பெயரையும் உடையது. திரோதானம்—மறைப்பது. இந்தச் சக்தியையே பாரதியார்,

> பரிதியென்னும் பொருளிடை யேய்ந்தனை;
>     பரவும் வெய்ய கதிரெனக் காய்ந்தனை;
> கரிய மேகத் திரளெனச் செல்லுவை;
>     காலு மின்னென வந்துயிர் கொல்லுவை;
> சொரியும் நீரெனப் பல்லுயிர் போற்றுவை;
>     சூழும் வெள்ள மெனவுயிர் மாற்றுவை;
> விரியும் நீள்கட லென்ன நிறைந்தனை;
>     வெல்க காளி யெனதம்மை வெல்கவே.[31]

என்ற பாடலை அடுத்து வரும் பாடல்களெல்லாம் இந்தச் சக்தியையே குறித்தனவாகும் என்று கருதலாம்.

திரோதான சக்தி உலகத்தைத் தொழிற்படுத்த வேண்டும் என இச்சித்தலால் அது இச்சாசக்தி எனப் பெயர் பெறுகின்றது. அதற்குரிய வழிகளை அறிதலால் ஞானசக்தி என்ற திருநாமத்தையும் ஏற்கின்றது. அவ்வழியே தொழிற் படுத்தி நிற்றலால் கிரியா சக்தி என்ற திருப்பெயரையும் கொள்கின்றது. எனவே, 'பராசக்தி, ஆதிசக்தி, இச்சா சக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி' என்று இவை 'பஞ்ச சக்திகள்' என்று தொகைநிலை பெற்றுத் திகழ்வதையும் தெரிந்து கொள்வாயாக.

இச்சாசக்தி எப்பொழுதும் செயற்பாட்டுக்குத் துணை யாய் நிற்கும். மற்றைய இரண்டும் ஒவ்வொன்றும் தனித்

---

31. ஷெ: மகாசக்தி வாழ்த்து—3

தனியாகவும் இணைந்தும் ஏறியும் குறைந்தும் செயற் படும். இதனால் தடத்த நிலைகள் பெரும்பான்மையாக ஐந்து வகைப்பட்டு நிற்கும். இவற்றையும் நீ தெரிந்து தெளிய வேண்டும். ஞானசக்தி மாத்திரம் தொழிற்படும் நிலையில் பதி 'சிவம்' என நிற்கும்; கிரியா சக்தி மாத்திரம் தொழிற்படும் நிலையில் 'பதி சக்தி' என நிற்கும்; இரண்டும் ஒப்பத் தொழிற்படும் நிலையில் பதி 'சதா சிவம்' என நிற்கும். ஞானசக்தி குறைந்து நிற்க கிரியாசக்தி மிக்குத் தொழிற்படும் நிலையில் பதி 'மகேசுவரன்' என நிற்கும். கிரியா சக்தி குறைந்து நிற்க, ஞானசக்தி மிக்குத் தொழிற் படும் நிலையில் பதி 'வித்தை' என நிற்கும்—இந்த விவரங் களையும் அறிவாயாக.

மேற்கூறியவற்றால் சொரூப நிலையில் இறைவன் தன்க்கென்று ஓர் உருவும், தொழிலும், பெயரும் இல்லாதவ னாயினும் தடத்த நிலையில் உயிர்களின் பொருட்டுப் பலப் பல உருவும் தொழிலும் பெயரும் உடையவனா கின்றான் என்பதை அறிய முடிகின்றது. இதனைத் தம் அநுபூதியில் தெளிந்த மணிவாசகப் பெருமான்,

> ஒருநாமம் ஓருருவம்
> ஒன்றுமிலார்க் காயிரம்
> திருநாமம் பாடிநாம்
> தெள்ளேணம் கொட்டாமோ?[32]

என்று அருளிச் செய்துள்ளதை ஈண்டு நினைத்தல் தகும். இவை தடத்த நிலையே யன்றி கற்பனையாகாமையை அறிந்து தெளிக.

இச் செய்திகளையே இன்னும் விளக்கமாகத் தொடர்ந்து வரும் கடிதம் ஒன்றில் சரியான சந்தர்ப்பத் தில் மேலும் தெளிவாக்குவேன்.

அன்பன்,
கார்த்திகேயன்

32. திருவாச—திருத்தெள்ளேணம்-1

## 9

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன்.

இறைவன் 'படைத்தல், காத்தல், அழித்தல்' என்ற முத்தொழில்களைச் செய்கின்றான் என்பதை முன் ஒரு கடிதத்தில் குறிப்பிட்டிருந்தேன். இத் தொழில்களைச் செய்வது எதன் பொருட்டு? என்பதை இக்கடிதத்தில் விளக்குவேன்.

கம்பன் போன்ற கவிஞர்கள் இறைவன் இவ்வாறு செய்வதை 'அலகிலா விளையாட்டு'[33] என்கின்றனர். மணி வாசகப் பெருமானின்,

> காத்தும் படைத்தும்
> கரந்தும் விளையாடி[34]
> [விளையாடி-விளையாடுபவனே!]

என்ற அருள் மொழியாலும் இதனை அறியலாம். ஈண்டு 'விளையாட்டு' என்று கூறுதல் 'சிறார்கள் யாதொரு குறிக்கோளும் இன்றிப் பொழுது போக்கும் விளையாட்டுப் போன்றது' அன்று. மிகப் பெரியதாகிய உலகத்தைப் படைத்துச் செயற் படுத்துவது மிகப் பெரிய தொழிலாயினும், பேராற்றலுடைய பெரியோனோகிய முதல்வனுக்கு[35] அது ஒரு விளையாட்டு போல சிறிதும் வருத்தமின்றி மிக எளிதில் செய்வன் என்பதைத் தெரிவித்தல் பொருட்டே யாகும் என்பதை நீ அறிதல் வேண்டும். உயிர்கள் 'இம்மை, மறுமை, வீடு' என்னும் நலங்களைப் பெறுதலே

33. கம்பரா. காப்பு-1

34. திருவா, திருவெம்பாவை-12 (அடி-4) ஐந்தொழில் ஆற்றுதல் இறைவனுக்கு விளையாட்டு போன்றது.

35. 'வரம்பிலாற்றலுடைமை' - என்பது இறைவனின் எண் குணங்களுள் ஒன்று என்பதை ஈண்டு நினைவு கூர்க.

முதல்வனது தொழில்களின் பயனாகும் என்பதை ஈண்டு நீ உளங்கொள்வாயாக.

ஐயாநீ யாட்கொண் டருளும் விளையாட்டின்
உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்.[36]

என்ற வாதவூரடிகளின் திருமொழியே இதற்குச் சான்றாகும். இதனால் கைம்மாறு கருதாத கருணையே முதல்வன் தொழில் செய்வதற்குக் காரணம் என்பது தெளிவு. 'கருணாநிதி', 'கருணாகரன்'—என்பன போன்ற இறைவனின் திருப்பெயர்களை உன்னுக.

**படைத்தல் :** இறைவன் புரியும் தொழில்கள் யாவும் ஆருயிர்களின் நலத்தின் பொருட்டே என்பதை மேலும் தெளிவிப்பது இன்றியமையாததாகின்றது. இறைவன் உயிரையோ உலகத்தையோ புதிதாகப் படைத்தல் இல்லை என்பது சற்காரிய முறைப்படி முன்னர் விளக்கப் பட்டதை ஈண்டு நினைவுகூர்க. உலகம் சடம்; அறிவில்லாதது. உயிர், சித்து; அறிவுடையது. உலகில் நேரிடும் நன்மை தீமைகள் அறிவுடைய பொருளுக்கன்றி, அறிவில்லாத பொருளுக்கில்லை என்பதை நீ அறிவாய். ஆகவே, அறிவில்லாத உலகினை அறிவுடைய ஆருயிர்க்குத் துணையாகும் வகையில் அமைத்து அவ்விரண்டினையும் ஒன்றுபடப் பிணைத்து வைப்பதே 'படைத்தல்' என்ற தொழிலாகும்.

'உயிர்கட்குத் துணையாகும் வகை' என்பது, அவை விரும்பும் விருப்பம். இந்த விருப்பம் எண்ணிறந்தவை யாயினும் அவை 'இம்மை, மறுமை, வீடு' என்ற மூன்றில் அடங்கும். சில உயிர்கள் இம்மையிலேயே மூழ்கிக் கிடக்கும்; சில மறுமையில் நாட்டம் கொள்ளும்: சில வீட்டின் பத்தில் அவாவுடையனவாக இருக்கும். இவற்றையெல்லாம் உயிர்கள் உடம்பின்றி அடைதல் இயலாது. ஆகவே,

36. திருவா. திருவெம்-11 (அடி.6)

உயிர்களின் விருப்பத்திற்கேற்ப உடம்பு முதலியவற்றை உயிருக்கு அமைத்துக் கொடுத்தலே 'படைப்பு' என்பதாகின்றது என்பது தெளிவாகின்றதன்றோ? அப்பர் அடிகளும்,

> வேண்டுவார் வேண்டுவதே
> ஈவான் கண்டாய்.[37]

என்று அருளிச் செய்துள்ளமையையும் காண்க. 'உலகம்' காரியப் பொருள் என்பதையும் அதற்கு முதற்காரணம் 'மாயை' என்பதையும் நீ நன்கு அறிவாய். மாயையினின்று உலகைத் தோற்றுவித்து உயிர்கட்குக் கூட்டுவிப்பதே 'படைத்தல்' ஆகும் என்பதைத் தெளிக.

மாயையாகிய சடப்பொருளிலிருந்து தோற்றுவிக்கப்படும் உலகம் 'தனு கரணம், புவனம், போகம்' என் நான்கு வகைப்படும். தனு என்பது உடம்பு; கரணம் என்பது, மனம் முதலிய உட்கருவிகள் (அந்தக்கரணங்கள்); புவனம் என்பது, உலாவும் இடம்; போகம் என்பது, நுகர்ச்சிப் பொருள். இறைவன் உயிர்களை ஒரே வகையாகப் படைக்காமல் பல வகையான வேற்றுமைகள் அமையப் படைத்ததற்குக் காரணம் அவ்வவற்றின் வினைகளே என்று சமய நூல்கள் முழங்குவதை நீ அறிவாய். இந்த வினையே மேலே குறிப்பிட்ட விருப்பமாகும். விருப்பத்திற்கேற்பப் படைத்தலால் வினை நீங்குவதற்குரிய வழியை அடைவிப்பது படைத்தலின் பயனாகின்றது. இறைவன் அருளிய தனு கரண புவன போகங்களை அழியாமல் நிறுத்திப் பயன்படச் செய்வதே 'காத்தல்' ஆகும். ஆகவே, உயிர்கள் தம் விருப்பத்தை நிறைவேற்றுவதற்குரிய வழியில் நின்று, அதனை அங்ஙனமே நிறைவித்துக் கொள்ளத் துணை புரிவதே 'காத்தல்' என்பது தெளிவாகின்றது. வினைநீக்கத்திற்கு உரித்தாகிய வழியில் நின்று வினை நீங்கப் பெறு

37. தேவாரம் 6-23: 1

தலே காத்தலின் பயனாகின்றது. இங்ஙனம், இம்மை மறுமை உலகங்களில் இன்பங்களை நுகர்வதற்குரிய உடம்புகளை எடுத்துப் பிறந்து, பின் இறந்து உழலும் நிலையினின்றும் நீங்கிச் செயலற்றிருக்குமாறு தனு கரண புவன போகங்களைப் பிரித்து விடுதலே 'அழித்தல்' ஆகும். ஆகவே, பிறப்பு இறப்புகளில் உழன்ற இளைப்பு நீங்குதலே அழித்தலின் பயனாகின்றது. இங்ஙனம் இறைவனது முத்தொழிலும் உயிருக்குப் பயன்படுவதை அறிந்து தெளிக.

இந்த முத்தொழில்களைத் தவிர, 'மறைத்தல், அருளல்' என்ற வேறு இரண்டு தொழில்களையும் சைவ சித்தாந்தம் பேசும். இவற்றையும் விளக்குவேன். உயிர்களின் அறிவை மறைப்பது ஆணவ மலம்[38]. இதன் மறைக்கும் ஆற்றலைத் தூண்டி, மாயை கன்மங்களால் உலக இன்பத்தைத் தோற்றுவித்து, இறைவன் உயிர்கட்குத் தன்னைக் காட்டாது உலகத்தையே நோக்கியிருக்கச் செய்தலே 'மறைத்தல்' ஆகும். இச்செயலால் ஆணவ மலத்தின் ஆற்றல் நாளடைவில் குறைந்து ஒடுங்கிவிடும். இதுவே மறைத்தலின் பயனாகின்றது. ஆணவ மலத்தின் ஆற்றல் ஒடுங்கியவுடன் உயிர்கட்கு இறைவனை நாடும் விருப்பம் நிகழும். அப்பொழுது இறைவன் தன்னைக் காட்டி, உயிர்களை மலங்களினின்றும் நீக்கித் தன்னைக் அடைவித்தலே 'அருளல்' ஆகும். ஆகவே, இறைவன் திருவடியின்பமாகிய பேரின்பத்தைப் பெறுதலே அருளல் தொழிலின் பயனாகின்றது. இக் கூறியவற்றால் இறைவனது ஐந்தொழில்களும் ஆருயிர்களின் பொருட்டுச் செய்யும் அருட்டொழில்களே என்பது தெளிவாகின்றதன்றோ?

இன்னும் ஓர் உண்மையையும் ஈண்டு நீ அறிந்து கொள்ளல் வேண்டும். வீட்டின்பத்தை அடைந்த பின்னர் உயிர்கட்குத் தனுகரணம் முதலியன வேண்டா; ஆயினும்,

38. இதன் இயல்புபற்றிய விரிவான விளக்கம் பின்னர்த் தரப்படும்.

அதனை எய்தும் நெறியிற் செல்வதற்குத் தனு, கரணம் முதலியன இன்றியமையாதனவாகும். ஆகவே, வீட்டின்பத்தை நாடுவோர்க்கும் அதனை அடைதற்பொருட்டு இறைவன் தனு கரணம் முதலியவற்றைக் கொடுத்தருளுவன் என்பதையும் அறிந்து தெளிக.

இனி, இறைவனுக்கு உலகத்தோடுள்ள[39] தொடர்பை விளக்குவேன். மெய்கண்டார் இத்தொடர்பை 'அத்துவிதம்' என்று விளக்குகின்றார். அத்துவிதமாவது, இரண்டல்லாமை (அதாவது பிரிவின்மை) என்பது அவர் தரும் விளக்கம். "'அத்துவிதம்' என்ற சொல்லே அந்நியநாத்தியை (பிரிப்பின்மையை) உணர்த்துமாயிற்று"[40] என்று உரைத்தருளினமையைக் காண்க. 'பிரிவின்மை' எனவே, 'பொருள் இரண்டு' என்பதும் 'இரண்டாயினும் வேறு வேறாய் நில்லாது' ஒன்றியே நிற்கும் என்பதும் பெறப்படும். அத்துவிதத் தொடர்பில் அபேதம், பேதம், பேதாபேதம் என்ற மூன்று தன்மையும் ஒருங்கு காணப்படுகின்றது. இம்மூன்றற்கும் பொதுவாய் நிற்றலையே வேதம் 'அத்விதீயம்' (அத்துவிதம்) என்று கூறுகின்றது. இதன் உண்மைப்பொருள் சித்தாந்தத்துள்தான் விளங்குகின்றது. 'இறைவன் உயிர்களோடு கலப்பினால் ஒன்றாயும், பொருட்டன்மையால் வேறாயும், உயிர்க்கும் உயிராதல் தன்மையால் உடனாயும் நின்று உலகத்தைச் செயற்படுத்துவான்' என்பது சித்தாந்தம் தரும் விளக்கம்.

இந்த விளக்கத்தை மேலும் விரித்துக் காட்டுவது இன்றியமையாததாகின்றது. இறைவனும் உலகமும் ஒன்றி நிற்கும் கலப்பினை நோக்குங்கால் இரண்டும் ஒன்றே எனக் கூறுமாறு அபேதமாய் நிற்கின்றான். பொருள் தன்மையை

39. 'உலகம்' என்பதில் சேதநப் பிரபஞ்சம், அசேதநப் பிரபஞ்சம் என்ற இரண்டும் அடங்கும்.

40. சி.ஞா.போ. 2-ஆம் சூத்திரம் முதலதிகரணம்-வார்த்திகம் (7-b)—(சிற்றுரை) காண்க.

நோக்குங்கால், 'இறைவன் தன்மை வேறு, உலகின் தன்மை வேறு' என்று காணப்படுவதால் பேதமாய் நிற்பது தெரிகின்றது. உலகத்தை இறைவன் தொழிற்படுத்தலே யன்றி, அதன் பொருட்டுத் தானும் உடன் தொழிற்பட்டு நின்றும் உலகம் போலத் தான் விகாரம் அடையாது நிற்றலை நோக்குங்கால் அபேதமாய் இருந்தே பேத மாகின்ற பேதாபேத என்ற நிலையைக் காணமுடிகின்றது. அவ்வாறு அபேதம், பேதம், பேதாபேதம் என மூன்றற்கும் பொதுவாய் நிற்கும் அத்துவித நிலையை மெய் கண்டார் 'அவையே தானேயாய்'[41] என்ற ஒரு சிறு தொடரால் மின்கைவிளக்கொளியைக் காட்டுவார்.

மேற்காட்டிய 'மின்கைவிளக்கொளியை' மெய் கண்டாரின் மாணாக்கர்கள் விரித்து விளக்கியுள்ளனர். இதனையும் ஈண்டு எடுத்துக் காட்டுவது மிகவும் பொருத்த மாகும் என்று கருதுகின்றேன். அருணந்தி சிவாச்சாரியார் "உலகெலாமாகி வேறாய் உடனுமாய்"[42] என்று விளக்கினார். உமாபதி சிவமோ "பொற்பணிபோல் அபேதப் பிறப்பிலதாய் இருள் வொளி போல் பேதமும், சொற் பொருள் போல் பேதா பேதமும் இன்றி...உடல்—உயிர், கண்—அருக்கன், அறிவு—ஒளிபோல் பிரிவரும் அத்துவித மாகும் சிறப்பினதாய்"[43] எனப் பிற மதங்களையும் எடுத்துக் காட்டி மறுத்தும், சித்தாந்தத்தை உவமை முகத்தால் இனிது விளக்கினார். இவர்களுள் அருணந்தி வாக்கினால் மெய்கண்டாரது "அவையே தானேயாய்" என்ற தொடர், 'அவையேயாய் தானேயாய், அவையே தானேயாய்' என இரட்டுற மொழிதலாய் நின்று, "முதல்வன், கலப்பினால் உலகத்தோடு ஒன்றேயாயும், பொருள் தன்மையால் வேறேயாயும், உயிர்க்கு உயிராதல்

41. சி. ஞா. போ. சூத். 2
42. சித்தியார்—2. 1
43.

தன்மையால் உலகத்தோடு உடனாய் நிற்பன்'' என்ற பேரொளியைப் பெற்று விளக்கம் அடைகின்றது. உமாபதியின் வாக்கினால், "முதல்வன் உலகத்தோடு பொன்னும் மணியும்போல் அபேதமும் ஆகாமல், இருளும் ஒளியும் போலப் பேதமும் ஆகாமல் சொல்லும் பொருளும்போலப் பேதாபேதமும் ஆகாமல், கலப்பினால் உடலின் உயிர்போல ஒன்றாயும், பொருள் தன்மையால் கண்ணில் அருக்கன் (சூரியன்) போல் வேறாயும், உயிர்க்கு உயிராதல் தன்மையால் கண்ணொளியும் ஆன்ம போதமும் போல உடனாயும் நிற்பன் என்று விளக்கம் பெறுகின்றது. இவ்வாறு அபேதம், பேதம், பேதாபேதம் என்னும் மூன்றற்கும் பொதுவாய் நிற்கும் நிலையே அத்துவிதமாகும் என்பது தெளிவாகின்றதல்லவா? இவற்றையெல்லாம் இவ்வாறே கண்டு சிவஞானபோத மாபாடிய ஆசிரியர் தம் பேருரையில் ஆங்காங்கு இனிது விளக்கியுள்ளார். அமயம் வரும்போது அவ்வுரையையும் பயின்று மேலும் தெளிவு பெறுக.

அதற்கு முன் அந்த ஞானச் செல்வர் 'அத்துவிதம்' என்ற சொல்லுக்குப் பொருள் விளக்கம் தருவதை ஈண்டுச் சுட்டிக் காட்டுவது பொருத்தமாகும்[44]. இச் சொல் அ + துவிதம் என்று பிரியும். இதில் 'அ' என்னும் நகாரம் அன்மை, இன்மை, மறுதலை என்னும் மூன்று பொருளைத் தரும். 'அப்பிராமணன்' என்பதில் நகாரம் அன்மைப் பொருள் தந்தது; பிராமணனாய் இருந்தும் பிராமணன் அல்லனாயினான் எனப் பொருள் தருவதைக் காண்க. 'அப்பிரகாசம்' என்பதில் நகாரம் இன்மைப் பொருள் தந்தது. இங்குப் 'பிரகாசம் இல்லை' எனப் பொருள் தருவதைத் தெளிக. 'அதர்மம்' என்ற சொல்லில் நகாரம் மறுதலைப் பொருள் தந்தது; தருமத்திற்கு மறுதலையாய் 'பாவம்' எனப்

44. சி. ஞா. போ. 2—ஆம் சூத். அதிகரணம்—1. வார்த் 7 (b)—(சிற்றுரை)

பொருள் தருவதை ஓர்ந்து தெளிக. இம்மூன்று பொருள்களில் 'அத்துவிதம்' என்பதிலுள்ள நகாரத்திற்கு இன்மைப் பொருளும் மறுதலைப் பொருளும் கொண்டு 'ஒன்று' எனப் பிறரெல்லாம் பொருள் கூறுவர். ஆயினும், எண்ணுப் பெயர்மேல் வரும் நகாரம் அன்மைப் பொருளையன்றி வேறு பொருள் தராது.[45] இது 'அநேகம்' என்ற சொல்லால்தெளிவாகும். 'அநேகம்'என்பது ஒன்றல்ல எனப் பொருள் தந்து 'பல' என்றே பொருள் தருகின்றது. அதனால் 'துவிதம்' என்னும் எண்ணுப் பெயர்மேல் வந்த நகாரமும் அன்மைப் பொருளே தருமாதலின்', 'அத்துவிதம்' என்பது 'இரண்டாய் இருந்தே இரண்டல்லவாய் நிற்கும்' எனப் பொருள்தரும்.''— இந்த விளக்கத்தைச் சிந்தித்துத் தெளிவு பெறுக.

இங்ஙனம் 'அத்துவிதம்' என்ற சொல்லுக்கு உண்மைப் பொருள் கண்டவர் மெய்கண்டார். இங்ஙனம் சுத்தாத்துவித மெய்யைக் கண்டு இனிது விளக்கினமைபற்றியே மெய் கண்டார் மெய்கண்டார் என்ற பெயர் பெற்றார் என்பதைத் தாயுமான அடிகள்,

---

45. இவ்விடத்தில் இன்மைக்கும் அன்மைக்கும் உள்ள வேறுபாட்டை நீ அறிதல் வேண்டும். இன்மை முற்றிலும் மறுப்பது; அன்மை சிறிது மறுத்துச் சிறிது உடன்படுவது. எ-டு. 'சாத்தன் இல்லை' என்றால் 'அங்கு அவனோடு ஒத்த வேறொருவன் 'உளன்' என்னும் பொருள் எவ்வாற்றானும் தோன்றாது. ஆனால், 'சாத்தன் அல்லன்' என்றால், 'அவனோடு ஒருவாற்றான் ஒத்த வேறொருவன் உளன்' என்ற பொருள் தோன்றும். அதுபோலவே, 'இரண்டு இல்லை' என்றால் அங்கு 'இரண்டு என்பதற்கு ஒத்த பொருள் உண்டு' என்பது எவ்வாற்றானும் பெறப் படாது. ஆனால், 'இரண்டு அல்ல' என்றால், அங்கு 'ஒரு வாற்றான் இரண்டு எனற்கு ஒத்தபொருள் உண்டு' என்பது பெறப்படும். இதுவே இன்மைக்கும் அன்மைக்கும் உள்ள வேறுபாடாகும் என்பதை அறிந்து தெளிக.

பொய்கண்டார் காணாப்
புனிதமெனும், அத்துவித
மெய்கண்ட நாதன்அருள்
மேவுநாள் எந்நாளோ?[46]

என்று கூறியிருத்தலால் தெளிலாம். தாயுமானவரின் கொள்கையும் 'சுத்தாத்துவிதம்' எனபதனை,

அத்துவிதம் பெறும்பேறென்று அறியாமல்
யான்எனும்பேய் அகந்தை யோடு
மத்தமதி யினர்போல மனங்கிடப்ப
இன்னம் இன்னம் வருந்து வேனோ[47]

என்ற அவர் வாக்காலேயே கண்டு தெளியலாம்.

சுத்தாத்துவிதக் கொள்கையை விளக்க 'மூன்று உவமைகள்' கூறப் பெறும். இவற்றையும் ஈண்டு விளக்கு வது பொருத்தமாகும். இறைவன் உயிர்களோடு கலப் பினால் ஒன்றாய் நிற்றற்கு "உடலும், உயிரும் போல" என்ற உவமை கூறுவது வழக்கம். உடலில் உயிர், அது எனத் தான்என வேற்றுமையின்றி அதுவேயாய்க் கலந்து நிற்றலை மெய்கண்டார் உடலுக்கு இட்ட பெயரை, அதாவது 'சாத்தன், கொற்றன்' முதலிய பெயர்களைச் சொல்லி அழைக்கும்பொழுது 'உயிர்' தன்னையே அழைத் ததாகக் கொண்டு 'ஏன்?' என்று கேட்பதை எடுத்துக் காட்டி விளக்குவார். இங்கு உயிர் உடம்பெனத் தானென வேற்றுமையின்றி அபேதமாய் நிற்றல் கண்டு தெளியலாம்.

---

46. தாயு. பாடல்: எந்நாட்கண்ணி—4 (குரு மரபின் வணக்கம்) இங்குப் 'புனிதமெனும் அத்துவிதம்'என்பது 'சுத்தாத்து விதம்' ஆகும்.

47. ஷை. ஆசையெனும்—9

இதனை மேலும் விளக்குவேன். இங்கு உயிர் உடலோடு ஒட்டி நிற்கும்போது உயிர் உயிரே; உடம்பு உடம்பே; உடம்பு உயிர் உடம்பாகாது; உடம்பும் உயிராக மாட்டாது. அவ்வாறாயினும் உயிர் உடம்பாயும் அதனின் வேறாயும் நிற்கும்; உடம்பு அங்ஙனம் நில்லாது. அதுபோல முதல்வன் முதல்வனே; உயிர் உயிரே; முதல்வன் உயிராக மாட்டான்; உயிர் முதல்வனாக மாட்டாது. அவ்வாறாயினும், முதல்வன் உயிராயும் அதனின் வேறாயும் நிற்பன்: உயிர் அங்ஙனம் நில்லாது.[48]

இறைவன் பொருட்டண்மையால் வேறாதற்குக் 'கண்ணருக்கன் போல்' (கண்ணொளியும் கதிரவன் ஒளியும் போல) என்று உவமை கூறப்பெறும். இதனையும் விளக்குவேன். கண்ணொளியும் கதிரவன் ஒளியும், இருளும் ஒளியும் போலத் தொடர்பே இல்லாத வேறு வேறு பொருளாகாது; இரண்டும் கலந்து நின்றே பொருள் தன்மையால் வேறாகின்றது. கண்ணொளியால் பொருளைக் காண்கின்றோம்; கதிரவன் ஒளி பொருளைக் காட்டுகின்றது. இவையே இவற்றின் வேறுபட்ட தன்மைகள். உடலினின்றும் உயிர் வேறு காணப்படாமையின் வேறாதற்கு இவ்வுவமை கூறி விளக்கப்படுகின்றது.

உயிர்க்கு உயிராதல் தன்மையால் உடனாதற்கு 'கண்ணொளியும் ஆன்மபோதமும் (உயிர் அறிவும்) போல' என்ற உவமை கூறப்பெறுகின்றது. இதனையும் விளக்குவேன். கண்ணொளியும் ஆன்ம போதமும், சொல்லும் பொருளும் போல அன்றி, கண் ஒரு பொருளைக் காணும் பொழுது ஆன்மபோதமும் உடன் சென்றே கண்டு அப் பொருளை இன்னதெனை அறிகின்றது. இதனால்

---

48. சி. ஞா. போ; 2—ஆம்சூத். அதிகரணம். 1. 'சுட்டு முறுப்பும்' என்ற வெண்பாவையும் அதன் உரையையும் காண்க (சிற்றுரை).

உடனாதற்கு இவ்வுவமை சொல்லப் பட்டது என்பதை அறிந்து தெளிக.[49]

இவ்வாறு இறைவன் உலகத்தோடு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் இருத்தலை மெய்கண்டாருக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்பிருந்த ஞான சம்பந்தப் பெருமான் தமது திருவீழிமிழலைத் திருப்பதிகத்துள் கூறியுள்ளமை ஈண்டு உளங்கொள்ளத்தக்கது.

---

49. மேற்கூறிய மூன்று தன்மைகளில் ஒவ்வொன்றை மாத்திரமே கூறும் ஒவ்வொரு சாரார் உள்ளனர். இறைவனும் உயிர்களும் ஒன்றே என்பவர் 'பொன்னும் பணியும் போல்' என்ற உவமை கூறுவர். இவர்கள் அபேத வாதம் கூறுவோர். இவர்கள் தம் கொள்கை நிலை பெறுவதற்கு, 'பிரம்மம் கேவலம், அத்துவிதம்' என, 'அத்துவிதம்' என்பதனோடு 'கேவலம்' என்ற ஒரு சொல்லைச் சேர்த்துப் பொருள் கொள்வர். இதனால் இவரது கொள்கை 'கேவலாத்துவிதம்' எனப்படும். 'இறைவனும் உயிர்களும் வேறே' என்பவர் 'ஒளியும் இருளும் போல்' என்ற உவமை கூறுவர். இவர்கள் துவிதிகள். இவர்கள் பேத வாதிகள்; இவர்தம் கொள்கை பேத வாதம். இவர்களது சமயம் 'துவைதம்' என்பது. 'இறைவனும் உயிரும் ஒன்றும் வேறும்' என்பவர் 'சொல்லும் பொருளும் போல்' என்று உவமை கூறுவர். இவர்கள் கொள்கை 'பேதா பேதம்' என்பது; இது 'பேதம், அபேதம்' என்ற இரண்டையும் கொண்டு நிற்றல். 'சொல்லும்' அதன் 'பொருளும்' வேறு வேறாயிருப்பினும், சொல்லைச் சொன்னவுடன் அதன் பொருள் உடன் தோன்றுதலால், ஒன்றாகவும் உள்ளன என்பது இவர்தம் கருத்து. இவர்கள்தம் கொள்கை நிலை பெறுவதற்கு, 'பிரம்மவிசிட்டத்தினால் அத்துவிதம்' என, 'அத்துவிதம்' என்பதனோடு 'விசிட்டம்' என்ற ஒரு சொல்லைச் சேர்த்துப் பொருள் கொள்வர்; இதனால் இவர் தம் கொள்கை 'விசிட்டாத்துவிதம்' என்று சொல்லப் பெறும். மெய்கண்டார் தமது கொள்கையின் பொருட்டு 'அத்துவிதம்' என்பதனோடு யாதொரு சொல்லையும் சேர்க்காமல் அப்படியே வைத்துப் பொருள் கொள்வதனால் அவரது கொள்கை 'சுத்தாத்துவிதம்' என்று வழங்குகின்றது.

ஈறாய்முதல் ஒன்றாய்இரு
பெண் ஆண்குணம் மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு
பூதம்மவை ஐந்தாய்
ஆறாய்சுவை ஏழோசையொடு
எட்டுத்திசை தானாய்
வேறாய்உடன் ஆனான்இடம்
வீழிம்மிழ லையே.[50]

என்ற திருப்பாடலால் அறிந்து தெளியலாம். இதனை மெய்கண்டாருக்கு முன்பிருந்த திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார் என்பவர் தமது திருக்களிற்றுப் படியார் என் நூலில்,

ஈறாகி அங்கே
முதல்ஒன்றாய் ஈங்கிரண்டாய்
மாறாத எண்வகையாய்
மற்றிவற்றின்—வேறாய்
உடனாய் இருக்கும்
உருவுடைமை என்றும்
கடனாய் இருக்கின்றான்
காண்.[51]

என்று கூறியிருத்தலையும் கண்டு தெளியலாம்.

இவற்றால் சைவ சமயம் 'இறைவன் உலகத்தோடு ஒன்றாய், வேறாய், உடனாய் இருக்கின்றான்' என்று தொன்று தொட்டுக் கூறிவருதல் தெள்ளிதின் விளங்கும். முதல்வனாகிய ஒரு பொருளிடத்து இம்மூவேறு தன்மைகளும் ஒருங்கு கூடியிருத்தலை—அத்துவிதமாயிருத்தலை—மெய்கண்டார் அருமையாகத் தெளிவாக்குவார்.[52]

---

50. தேவாரம் 1.11:2
51. களிறு—86
52. சி. ஞா போ. சூத்-2. அதி-1.

அரக்கை உருக்கி அதனொடு கற்பொடி சேர்த்துச் சாணை செய்யப்படுதலை நீ அறிவாய். இச்சாணையில் கல் அரக் கொடு உடன் விரவிக் கிடக்கின்றது. இவ்விரண்டும் தன் தன் தன்மையில் குறைவுபடவில்லை. சேர்த்துப் பிடிக்கும் தன்மையாகிய அரக்கின் தன்மையும், கத்தியினைக் கூர்மைப்படுத்துந் தன்மையாகிய கல்லின் தன்மையுமாகிய இரண்டு தன்மைகளும் சாணையிற் காணப்படுகின்றன. இச்சாணையில் கல் தன் சுய வடிவத்தில் காணப்படாது அரக்கொடு அரக்காய்க் காணப்படுகின்றது. எனவே, சாணை என்னும் ஒரு பொருளில் மூவேறு தன்மைகள் ஒருங்கு கூடியிருக்கக் காண்கிறோம். அது போலவே முதல்வன்பாலும் இறத்தல் பிறத்தல் புரியும் உயிர் களோடு ஒன்றாந் தன்மை வேறாந் தன்மை உடனாந் தன்மை ஆகிய மூன்று தன்மைகளும் ஒருங்கிருத்தல் கூடும். இம்மூவேறு தன்மைகளின் சேர்க்கையே 'அத்துவிதத் தன்மை' எனப்படும். இத்தன்மையோடு கூடி நின்றே இறைவன் அவ்வுயிர்கள் இறத்தல் பிறத்தல் புரிதற் பொருட்டு உபகரிக்கின்றான் என்பதைத் தெளிக. இத் தன்மையை உணர்த்தவே முதல்வன் "அவையேயாய், தானே யாய், அவையேதானேயாய்"[53] நிற்கும் என்று கூறினார் மெய் கண்டார். இந்தச் சுத்தாத்துவிதத் தன்மையையே திரு முறைகளும் பேசுகின்றன.

இங்ஙனம் முத்தொழில்களையும் சித்தாய், அதினும் சூக்கும சித்தாய் நிற்கும் இறைவனே, ஏனைய எல்லாப் பொருட்கும் பரம ஆதாரமாய் நிற்றலன்றி, அவனுக்கு ஓர் ஆதாரம் வேண்டாமையும் பெறப்படும். இதனால் கருத்தாவாதல் மாத்திரத்துக்கு எடுத்துக் காட்டப்படும் 'குயவன்' என்னும் உபமானம்பற்றி 'குயவனுக்கு ஆதாரம் இருத்தல் போல, இறைவனுக்கும் ஓர் ஆதாரம் உண்டோ?' என்னும் ஐயத்திற்கு இடன் இல்லை. இதனை அருணந்தி சிவாசாரியார்,

53. சி. ஞா. போ. சூத்-2.

ஞாலம் ஏழினையும் தந்து
நிறுத்திப்பின் நாசம் பண்ணும்
காலமே போலக் கொள்நீ
நிலைசெயல் கடவுட் கண்ணே.[54]

என விளக்குவர். அஃதாவது, "எல்லாப் பொருள்களையும் ஆக்கியும், வளர்த்தும், அழித்தும் நிற்கும் கால தத்துவம், தனக்கு ஓர் ஆதாரம் இன்றி நின்றே அவற்றைச் செய்தல் போல, இறைவனும் ஆதாரம் இன்றி நின்றே தன் செயலைச் செய்வன்" என்பதாகும். இதனால், "குடம் முதலிய செயப்படு பொருள்கட்குக் கருத்தாவாகிய குயவன் அவற்றின் வேறாய் நிற்றல் போல, உலகமாகிய செயப்படு பொருள்கட்குக் கருத்தாவாகிய இறைவன் அதனின் வேறாய் நில்லாது அத்துவிதமாய் நின்றே தொழிற்படுத்துவன்" என்பதும் தெளியப்படும்.

இன்னும், "படைத்துக் காத்து அழிக்கப்படும் உலகத்தால் பயன் பெறுவன உயிர்களே; அதனால் அவை குயவன் செய்யும் குடம் முதலியவற்றைப் பெற்றுப் பயன் அடையும் மக்கள் போல்வனவாகும். குயவன் அம்மக்களின் வேறாய் இருத்தல் போல, இறைவன் உயிர்களின் வேறாய் நில்லாது, அவற்றோடு அத்துவிதமாய் நின்றே அவற்றின் பொருட்டுத் தனது தொழிலைச் செய்வன்" என்பதும் இதனாலே விளங்கும். இத்துடன் இக்கடிதம் நிறைவு பெறுகின்றது.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 10

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலம். நலனே விளைந்திடுக. 'அத்து விதமாய்' இருக்கும் இறைவன் உலகத்தைச் செயற்படுத்தும் முறையை இக்கடிதத்தில் விளக்குவேன்.

---

54.

பேரறிவும் பேராற்றலும் பெருங் கருணையும் உடைய இறைவன், 'உயிர்கட்கு நலம் செய்தல் வேண்டும்' என்னும் கருத்தோடு படைத்தல் முதலிய செயல்களைச் செய்கின்றான் என்பதை நீ ஒருவாறு நன்கு அறிவாய். ஆயினும், சேதநப் பிரபஞ்சத்தையும், அசேதநப் பிரபஞ்சத்தையும் ஒரு படித்தாகப் படைக்காமல் வெவ்வேறு விதமாகப் படைத்துள்ளான்.

சேதநப் பிரபஞ்சத்தில் 'மக்கள், பறவை, விலங்கு, தாவரம்' என்று பல்வேறு இனங்கள்; இங்ஙனம் படைக்கப் பெறும் ஓர் இனத்துள்ளும் உயர்ந்தோர்—தாழ்ந்தோர், நிரம்பிய உறுப்பினர்—குறை உறுப்பினர், செல்வர்—வறியவர், கருடன்—ஊர்க்குருவி, புலி—மான், பசு—எருமை, புல்—மரம் என்று எத்தனையோ வேறுபாடுகளுடன் காணப்பெறுகின்றன. இவற்றால் உறவும் — பகையும், வாழ்வும்—தாழ்வும், இன்பமும்—துன்பமும், சிறிது காலம் வாழ்வனவும் நெடுங்காலம் வாழ்வனவும், வாழ்வதற்குரிய காலம் முழுதும் வாழாது இடையிலே அழிவனவுமாய்— இங்ஙனம் பல்வேறு விதமாக, பலபடியாகக் காணப்படுகின்றன.

அசேதநப் பிரபஞ்சத்திலும் மண்ணுலகம்—பொன்னுலகம், ஒளியுலகம்—இருள் உலகம், காடு—நாடு, மலை—மடு என்று இங்ஙனம், பலதிறப்பட்டனவாகவே காணப்படுகின்றன. ஆகவே, இவற்றையெல்லாம் 'ஆக்கியும், அளித்தும், அழித்தும்' நடத்துகின்ற இறைவன் எந்த ஒழுங்கில், எந்த நியதிப்படிச் செய்கின்றான்? இதனால் யாருக்கு என்ன பயன்? உயிர்கள் பயன் அடைந்தால், அதனை அவை எவ்வாறு பயன் அடைகின்றன?—இன்னோரன்ன ஐயங்கள் நின்பால் எழலாம். இவற்றை விளக்குவது இன்றியமையாததாகின்றது.

இறைவன் இங்ஙனம் படைத்தல் தன் கருத்துப்படியன்று; உயிர்களின் கருத்துப்படியேயாகும். அது மண்ணி

லிருந்து பாண்டங்களைச் செய்யும் குலாலன் அவற்றைத் தன் கருத்துப்படிச் செய்யாமல்,கொள்வோர் கருத்துப்படிக் குடம், சால், பானை, கரகம் முதலாகவும், அவற்றைச் சிறியனவும் பெரியனவுமாகவும் பலபடச் செய்தல் போலாகும் என்று சொல்லி வைக்கலாம். இவ்வாறு செய்யும் ஒழுங்கு முறையை வினை அல்லது கன்மம் என்று விளக்குவர் சித்தாந்திகள். அவரவர் வினைக்கேற்றவாறு படைத்தல் இறைவனின் நடுவுநிலையே யன்றி நடுவுநிலை பிறழ்ந்த நிலையாகாது. வேண்டுவார் வேண்டுவதை முன்னின்று கொடுத்தல் கருணையே யன்றி வன்கண்மை ஆகாது.

வேண்டத் தக்க தறிவோய்நீ
வேண்ட முழுதும் தருவோய் நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ
வேண்டி யென்னைப் பணிகொண்டாய்.[55]

என்று மணிவாசகப் பெருமான் கூறுவது இந்த நியதியைத் தான் என்று கருதலாம். இவ்வாறு இறைவன் தனது செயல்களை வினைவழியே செய்வது வினையின் ஆற்றலைக் கடந்து தன் விருப்பின்வழி நடக்க மாட்டாமையால் அன்று. பல்லுயிர்களின் பயன் கருதியேயாகும். செங்கோல் நடத்தும் அரசர்கள் தங்கள் செயல்களை அரசியல் முறைப்படி நடத்துதல் போலாகும் இறைவன் வினைவழியே தன் செயலை நடத்துவதும் என்று இதனை ஒருவாறு விளக்கலாம். வினையையும் அரசியல் நெறியையும் ஒப்பிட்டு அறியின் இது நினக்கு நன்கு விளங்கும்.

இன்னோர் ஐயமும் நின்பால் எழ வழியுண்டு. உயிர்கள் உடம்பைக் கொண்டுதானே வினையைச் செய்தல் கூடும்? உடம்பு இல்லாதபோது வினை ஏது? வினை இல்லாதபோது உடம்புகள் எங்ஙனம் அமையும்? இந்த

55. திருவா. குழைத்தபத்து-6

ஐயம் எல்லோர்க்கும் ஏற்படுவதுதான். இதனை விளக்கு வதும் இன்றியமையாததாகின்றது. இது 'விதை முதலா? மரம் முதலா?' என்ற ஐயத்தைப் போன்றது. மரத்திற்குக் காரணம் விதை; விதைக்குக் காரணம் மரம். இவ்விரண்டில் ஒன்று இல்லாதபொழுது மற்றொன்று இல்லை என்பது தெளிவு. ஆனால் 'இவை முதன் முதலில் எப்படி உண்டாயின?' என்ற வினாவிற்கு ஒருவராலும் விடை அறியக் கூடியதாக இல்லை. 'இரண்டில் இன்னதுதான் முதல்' என்று உறுதிப்படுத்துவதற்குத் தக்க சான்றுகள் இல்லையாயினும் 'விதையினால் மரமும் மரத்தினால் விதையும் உண்டாகின்றன' என்ற உண்மையை மறுக்க முடியாது, இது போலவே 'வினையும் உடம்பும்' ஆகிய இரண்டில் 'இன்னது முதல்' என்பதை உறுதிப்படுத்த இயலாவிடினும், 'இரண்டில் ஒன்று எவ்வகையிலோ முதலில் தோன்றியிருத்தல் வேண்டும்; அதன் பின்னர் அவர் காரண காரியத் தொடர்பால் ஒன்றால் மற்றொன்று தோன்றித் தொடர்ந்து வருகின்றன' என்றுதான் நாம் முடிவு செய்தல் வேண்டும்.

உயிர்கள் இன்பத்தை விரும்புவதன்றி துன்பத்தை விரும்புவதில்லை; அங்ஙனமே, அறிவும் ஆற்றலும், உடல் உறுப்பும் அழகும், செல்வமும், வாழ் நாளும் குறைந்து நிற்றலையும் எந்த உயிரும் விரும்புவதில்லைதான். ஆயினும், அக்குறைபாடுகளைத் தரும் காரணத்தை விரும்பு கின்றன. பிறப்பே துன்பம் உடையது; அதனைத் தருவது இறைவனின் விருப்பமன்று. ஆயினும், உயிர்கள் இவ்வுல கத்தில் ஏதோ இன்பம் இருப்பதாக நினைத்து அதனை நுகர்தற்குப் பிறப்பை எடுக்க விரும்புகின்றன. அவ்வின் பமும் பலவகைப்படுவதாக அமைகின்றது. ஆயின், உலக இன்பமோ முட்செடியில் உள்ள மலர் போன்றுள்ளது. அதாவது, பெருந்துன்பத்தின் பயனாகச் சிறிது இன்பம் விளைகின்றது. முட்கள் பலவற்றால் கீறப்பட்ட பின்பே முட்செடியில் உள்ள ஒரு மலரைப் பறிக்க முடிவது

போல, உலகத்தில் துன்பங்கள் பலவற்றை அநுபவித்த பின்பே சிறிது இன்பத்தைப் பெற முடியும் என்ற நிலை அமைகின்றது. ஆகவே, உலக இன்பத்தை விரும்புவதே துன்பத்தை விரும்புவதாய் அமைகின்றது. இன்னும், உயர்பிறப்பை எடுத்த உயிர்கள் தாழ் பிறப்பை விரும்பு வதில்லை. எனினும், தாழ்பிறப்பை எடுத்த உயிர்கள் உயர் பிறப்பை விரும்புகின்றன. ஆயினும், எந்தப் பிறப் பிலும் துன்பம் இல்லாமல் இல்லை.

ஓர் உயிர் தான் துன்பத்தை விரும்பாது இன்பத்தை விரும்புவது போலவே, பிற உயிர்களும் துன்பத்தை விரும் பாது இன்பத்தையே விரும்புகின்றன என்பதை உணர்ந்து பிற உயிர்கட்குத் தீங்கு செய்யாதிருத்தல் வேண்டும். அப்படித் தீங்கு செய்தால் தீங்கு செய்த உயிர்களை ஒறுப்பது இறைவனின் கடமையாகின்றது. தீங்கிற்குரிய ஒறுத்தலே இழிபிறப்பும், உடற்குறையும், வறுமையும் ஆக இறைவன் தருகின்றான். ஆயினும், இவையனைத்தை யும் அவன் விரும்பிச் செய்வதுமில்லை. ஆருயிர்களின் பிறப்பை நீக்கித் தன்னை அடையச் செல்வதே அவனது விருப்பம். ஆயினும், இக் கூறிய பலவகைக் காரணங்களால் படைப்பு முதலிய தொழில்களைப் பலபடச் செய் கின்றான். இவையனைத்தும் உயிர்களின் பக்குவ வேறு பாடுகள் நோக்கிச் செய்வதல்லது தன் தன்மையால் செய் வதில்லை. அனைத்தும் ஆருயிர்களின் வினையின் காரண மாகவே நடைபெறுகின்றன.

வினை தோன்றுவதற்குக் காரணம் என்ன? சைவ சித்தாந்தம் இதனைத் தெளிவாக விளக்குகின்றது. இந்த விளக்கத்தை உனக்குக் காட்டுவேன். செம்பு இயற்கையிலே 'களிம்பு' என்ற குற்றத்தை உடையதாய் இருத்தல் போல ஆன்மா இயற்கையிலேயே 'ஆணவம்' என்ற ஒரு குற்றத்தை உடையதாய் உள்ளது. அக்குற்றம் காரண மாகவே 'வினை, மாயை' என்னும் குற்றங்கள் அதனை வந்து பற்றுகின்றன. உயிர்கள் உலகப் பொருள்களால்

வரும் இன்ப துன்பங்களில் அழுந்துதல் அவற்றின் மேலுள்ள விருப்பு வெறுப்புகளே காரணமாகும். இவ்விருப்பு வெறுப்புகள் ஆணவ மலத்தின் செயல்களாகும். உயிர் களால் விரும்பவும் வெறுக்கவும் படுகின்ற இன்ப துன்பங் களை விளைப்பது வினையாகிய கன்ம மலமாகும். ஆதலின் ஆணவமலத்தால் விருப்பு வெறுப்புகளை உடையதாய் நிற்கும் உயிர் அவ்விருப்பு வெறுப்புகளுக்கு விடயமாகிய இன்பதுன்பங்களைத் தருகின்ற கன்ம மலத்தோடு தான் முதற்கண் தொடர்வதாகின்றது. இதனால் கன்மமே முதலில் ஆன்மாவைப் பற்றுகின்றது என்பது தெளிவு. இதனால் ஆணவத்தின் காரியம் கன்மமும், கன்மத்தின் காரியம் மாயையும் ஆதல் விளங்கும், 'கன்மம் ஆணவத்தின் காரியமேயன்றி மாயையின் காரிய மன்று' என்பதைத் திருவள்ளுவரும், "இருள்சேர் இரு வினை"[56] என்று குறிப்பிடுவதையும் காணலாம். பரிமேலழ கரும் "இன்னதன்மைத்தென ஒருவராலும் கூறப்படாமை யின் அவிச்சையை 'இருள்' என்றும், நல்வினையும் பிறத்தற் கேதுவாகலான் இருவினையும் சேராவென்றும் கூறினார்" என்று கூறுவதனாலும் இதனைத் தெளியலாம்.

இதனை மேலும் தெளிவிப்பேன். இன்பதுன்பங்க ளுக்கு.விதை போல்வது கன்ம மலம். அவ்விதை முளைத்து வேரூன்றி வளர்ந்து, மற்றும் பலவிதைகளைத் தருவதற்குச் சார்பாய் உள்ள நிலத்தின் ஆற்றல் போல்வது ஆணவ மலம். அவ்வாற்றலை உடைய நிலம் போல்வது ஆன்மா. விதையை முளைப்பித்து, நிலத்தின் ஆற்றலையும் வெளிப் படுத்தி முளையை நிலத்தோடு இயைவிக்கும் நீர்போல்வது மாயாமலம். முதலில் நிலமும் பின்னர் அதன் ஆற்றலும் வேண்டப்படும். அதன்பின் வேண்டப்படுவது விதை. இவை யெல்லாம் அமைந்தபின் வேண்டப் பெறுவதே நீர். இவை போலவே, 'ஆன்மா, ஆணவம், கன்மம், மாயை' என்ப

56. குறள்-5

வற்றையும் பொருந்திப் பார்த்து உண்மையைக் கண்டு தெளிக. இப்படித் தெளிந்தாலும், இவற்றின் செயற்பாடுகளுக்கு முன்பின் கூறுதல் அரிதாகும், இதனால்தான் சைவ சித்தாந்தம் இவையனைத்தையும் 'அனாதி' என்று கூறுகின்றது.

உயிர்கள்தோறும் ஆணவமலப் பிணிப்பும் ஒருவகையாய் இராது. அது பலவகையாயிருத்தலின் அவற்றின் விருப்பு வெறுப்புகளும் பலவகையாக இருக்கும் என்பது தெளிவு. ஆகவே, அவற்றிற்கேற்ப வரும் வினை வகைகளும் பலதிறத்தனவாக இருக்கும். அவ்வகைகளுக்கேற்பவே உடம்புகளும் பலவகையாய் அமையும். இவை யனைத்தையும் அறிந்து இறைவன் அவ்வவற்றிற்கேற்றவாறு கூட்டுவிக்கின்றான் என்பதை அறிந்து தெளிக. இவ்வாறு இறைவன் இருவகைப் பிரபஞ்சங்களையும் செயற்படுத்துகின்றான் என்பதை ஓர்ந்து அறிக.

அன்பன்,
கார்த்திகேயன்.

# 11

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலம் பல விளைவதாகுக.

இறைவன் உலகத்தைச் செயற்படுத்துங்கால் உருவத்தையுடையவனாய் நின்றுதான் செயற்படுத்துகின்றான். உருவம் இல்லாத உயிர் உடலை இயக்கச் செயற்படுத்துவது போல, உலகிற்கு உயிராய் நிற்கும் இறைவன் உருவம் இன்றியே அதனைச் செயற்படுத்தக் கூடுமாயினும், உலகத்தின் செயற்பாடு உயிக்கட்குப் பயன்படுதற்பொருட்டே உருவமுடையவன் ஆகின்றான். சில எடுத்துக் காட்டுகள் இதனைத் தெளிவாக்கும்.

ஆனைமுகக் கடவுள், முருகக் கடவுள் போன்றாரை இறைவன் உருவமின்றியே தருதல் கூடுமாயினும், அவர்கள் இறைவனின் திருக்குமாரர்கள் என நின்று அவர்தம் அறக் கருணைக்கும் மறக்கருணைக்கும் உரியராயினார் என்பதை உணர்ந்து அப்பயனைப் பெறுதல் கூடாமையின் அன்னோரை இறைவன் உருவங்கொள்ளச் செய்துள்ளான். கொடிய பன்றியைக் கொன்று அர்ச்சுனனைக் காத்துப் பாசு பதம் கொடுத்ததும் உருவத்துடன் நின்றுதான் செய்தான். உருவமின்றிச் செய்யின், பார்த்தன் அதனைத் தெளிந்து பயன் கொள்ளுதல் இயலாது. கல்லாலின் கீழிருந்து சனகாதி முனிவர் நால்வர்க்கும் மெய்யுணர்வைத் தரும் போது உருவம் இன்றியமையாதது என்பதைச் சொல்ல வேண்டா. ஆகவே, பயன் பெறுதற்கு உரியார் பயன் பெறுதற் பொருட்டே இறைவன் உருவங்கொண்டு செய் வான் என்பது தெளிவாகின்ற தன்றோ?

இன்னோர் உண்மையையும் ஈண்டு நீ சிந்தித்து உணர்தல் வேண்டும். பிறவிக் கடலில் வீழாத பெருமையு டையவனாகிய இறைவன் பிறவிக் கடலில் வீழ்ந்த உயிர் கட்கெல்லாம் உடம்புகளைத் தருபவனாதலின், அவன் தனக்கு வேண்டும் உடம்பைத் தானே தன் இச்சையால் கொள்வன் என்பதை அறிக. மேலும், மலமுடைய உயிர் கள் கொள்ளும் உருவத்திற்கு உரிய குற்றங்கள் யாவும் இறைவன் கொள்ளும் உருவத்திற்கு இல்லை. இறைவன் மலமற்றவனாதலின், மலத்தின் தொடர்பு அவனுக்கு உண்டாதல் இல்லை. அவனுக்கு அவனது சக்தியாகிய அருளே உருவமாய் அமைதலால் அவன் கொள்ளும் திருமேனிகள் யாவும் அருட்டிரு மேனிகளாகும் என்பதை யும் தெளிக. அன்றியும், அவன் உருவத்துடன் நின்று ஐந்தொழில்களை ஆற்றும்போது, நம்மைப் போல் கருவி களைக் கொண்டு செய்யாது, சங்கற்ப (நினைவு) மாத்திரை யிற்செய்தலால், நமக்கு வரும் இளைப்பு, களைப்பு, விருப்பு, வெறுப்பு, இன்பம், துன்பம் போன்ற வேறுபாடுகள் அவனை அடையமாட்டா. இதனை மெய்கண்டார்,

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்தில்
தாக்காது நின்றுளத்தில் கண்டிறைவன்—ஆக்காதே
கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்
கண்டவனில் இற்றிட்டாங் கட்டு.[57]

[தாக்காது—விகாரப்படாது; ஆக்குதல்—படைத்தல்; காண்டல்-படைத்தல்; நொடித்தல்-அழித்தல் (நொடித்தான் மலை-தேவாரம் 7.100 காண்க.]

என்று விளக்குவர்.

இறைவனுக்கு 'உருவம் உண்டு' என்போரும், 'உருவம் இல்லை' என்போரும் உளர். இக்கருத்தினை ஈண்டு தெளிவாக்குவது இன்றியமையாததாகின்றது. 'இறைவனுக்கு உருவம் இல்லை' என்று கூறுவது அவனது சொரூப நிலையை நோக்கியே யாகும். அவனுக்குப் பலவகையான உருவங்கள் உண்டு என்று நூல்களில் நுவலப்பெறுவது அவனது தடத்த நிலையை நோக்கியே யாகும்.

ஒருநாமம் ஓருருவம்
ஒன்றுமிலார்க் காயிரந்
திருநாமம் பாடிநாம்
தெள்ளேணம் கொட்டாமோ.[58]

என்ற மணிவாசகப் பெருமானின் திருவாக்கில் முற்பாதி சொரூப நிலையையும் பிற்பாதி தடத்த நிலையையும் குறிப்பிடுவதை நுனித்து அறிந்து தெளிக. தடத்த நிலையில் இறைவன் 'வேண்டிய வடிவத்தை வேண்டியவாறு கொள்வான்.' இங்ஙனம் கொள்வது அவனது சக்தியாலே என்பது அறியத்தக்கது.

57. சி. ஞா. போ. சூத். 1 அதி. உ. பாட்டு—4 (சிற்றுரை)
58. திருவா. திருத்தெள்ளேணம்—1.

நாயகன் எல்லா ஞானத்
தொழில்முதல் நண்ண லாலே
காயமோ மாயை யன்று;
காண்பது சக்தி தன்னால்[59]

என்பது சிவஞான சித்தியார். சக்தி என்பது இறைவனது திருவருள் என்பதை நீ அறிவாய். ஆகவே, இறைவனது திருமேனியும், அவற்றில் அமைந்த படைக்கலம், ஆடை, அணிகலம் முதலியனவும், அவன் எழுந்தருளியிருக்கின்ற இடமும், அவற்றைக் கொண்டு ஆற்றுகின்ற செயல்களும் அவனது அருளாலன்றி வேறில்லை. இவற்றை,

உருவருள்; குணங்க ளோடும்
உணர்வருள் உருவில் தோன்றும்
கருமமும் அருள்; அரன்றன்
கரசர ணாதி சாங்கம்
தரும்அருள்; உபாங்க மெல்லாந்
தான்அருள்; தனக்கொன் றின்றி
அருள்உரு உயிருக் கென்றே
ஆக்கினன் அசிந்த னன்றே.[60]

என்பது அருணந்தியின் வாக்கு. இத் திருப்பாடலில் 'இறைவன் உருவங்கொள்ளுதல் தன் பொருட்டன்றி உயிர்களின் பொருட்டேயாகும்' என நுவலப் பெற்றிருத்தலைக் கண்டு மகிழ்க. அதாவது, 'எச்செயலையும் அவன் உருவம் இன்றியே செய்ய வல்லனாயினும், உருவங்கொள்ளாவிடில் உயிர்கள் அவனை அறியமாட்டா என்பது பற்றியே இறைவன் உருவங் கொள்கின்றான்' என்ற விளக்கமும் இதில் குறிப்பாகப் புலப்படுவதைக் கண்டு தெளிக.

தியானத்திற்கு உருவம் மிகவும் இன்றியமையாதது. உருவம் இல்லாத பொருளை உயிர்கள் மனத்தால் நினைக்

59. சித்தியார்—1.42
60. ஷை—1-47.

கவும் இயலாது. ஆதலின் அவை தன்னை நினைந்தும் வாழ்த்தியும் வணங்கியும் உய்தல் வேண்டும் என்னும் பெருங்கருணையால் இறைவன் பலவகைத் திருமேனி களைக் கொள்ளுகின்றான் என்பதை அறிக. உருவமின்றி இவற்றைச் செய்தல் இயலாது. அவ்வாறு செய்ய முயலுங் கால் இறைவனையன்றி வேறொன்றையே நினைக்க வேண்டி வரும். அதாவது, 'கடவுள்' என்ற சொல்லையோ அல்லது கடவுளைப்பற்றின பாடலின் வடிவங்களையோ, பாடலைப் பாடிய அல்லது இறைவனைப்பற்றி உபதே சித்த ஆசிரியரையோ நினைக்க வேண்டி வருமேயன்றி இறைவனை நினைத்தல் இயலாது. இதனால் இறைவ னுக்கு உருவம் இன்றியமையாததாகின்றது.

முன்னொரு கடிதத்தில்[61] இறைவன் கொள்ளும் வடிவங்களைப்பற்றிக் குறிப்பிட்டிருந்தேன். அவற்றை ஈண்டு நினைவு கூர்க. அவற்றை ஈண்டு மீண்டும் தெளி வாக, விரிவாக, 'விளக்குவேன். வடிவம் என்பன யாவும் 'அருவம், உருவம், அருவுருவம்' என்னும் மூவகையினுள் அடங்கும். அருவம் என்பது காட்சியளவையால் அறியப் படாது கருதலளவையால் அறியப்படுவது. எ-டு. ஆகாயம் முதலியவை. உருவம் என்பது காட்சியால் அறியப்படுவது. எ-டு. நிலம், நீர் முதலியவை. அருவுருவம் என்பது, ஒரு கால் காட்சியால் அறியப்பட்டும், ஒருகால் காட்சியால் அறியப்படாமலும் இருப்பது. எ-டு. தீ முதலியவை. காற்று கண்ணுக்குப் புலனாகாவிடினும் ஊற்றுணர்விற்குப் புலனா வதால் உருவமுடையதாகக் கொள்ளப்படும். கண்ணுக்குப் புலனாகாமைப்பற்றி' அருவம்' எனக் கொள்ளலும் உண்டு.

இறைவனுடைய திருமேனிகளை மூன்று வகையாகப் பிரித்துப் பேசும் சைவசித்தாந்தம். இறைவன் தன் பொருட்டு யாதொரு வடிவத்தையும் வேண்டாதவன்; ஆருயிர்களின் பயன் கருதியே இந்த மூவகை வடிவங்களை

---

61. இயல். 2. கடிதம் 8-பக். (55-58)

யும் மேற்கொள்ளுகின்றன. இறைவன் உலகை நோக்காது தன் நிலையில் நிற்கும்பொழுது 'சிவன்' என்று வழங்கப் பெறுவான். இதுவே சொரூப நிலை எனப்படும் உண்மை நிலையாகும். இந்நிலையில் அவன் பரமசிவன் சொரூப சிவன், சுத்தசிவன் என்றெல்லாம் பேசப்பெறுவன். இந்நிலையில் அவனது சக்தி பராசக்தி எனப் பெயர் பெறுகின்றது. இந் நிலையில் இறைவனுக்கு யாதொரு வடிவமும் இல்லை. இதுவே இவன் அருவ நிலை.

இறைவன் இந்நிலையினின்றும் நீங்கி உலகத்தை நோக்கி ஐந்தொழில் புரியப் புகுமிடத்து சக்தி என்ற பெயரைப் பெறுகின்றான். விண்வெளியில் ஒளிரும் கதிரவன் மண்வெளியில் தன் ஒளிக்கதிரகளால் வியாபித்து நிற்பதைப் போலவே, மேலிடத்திலுள்ளோனாகிய இறைவன் தனக்குக் கீழுள்ள உலகத்தில் தன் சக்தியினால் வியாபித்து நிற்கின்றான். இதுபற்றித்தான் இந்நிலையை சக்தி என்றே வழங்குகின்றனர் சித்தாந்திகள்.

ஒரு சக்தியே செயலால் பலவகையாகப் (சுடும் சக்தி, அடும் சக்தி, ஒளிரும் சக்தி முதலியவை) புலப்படுவது போலவே, இறைவனது சக்தியும் பல வகைகளில் புலப் பட்டு பல்வேறு பெயர்களைப் பெறுகின்றது. இறைவனது மேலான பராசக்தி உலகத்தை நோக்கும்போது ஆதிசக்தி என்ற பெயரைப் பெறுகின்றது. உலகத்தை இயக்கும் எல்லாச் சக்திகட்கும் இதுவே முதல் மூலமாக இருப்பதால் இப்பெயர் பெற்றது என்பதை அறிக. இச்சக்தி உயிர்கட்கு இறைவனைக் காட்டாமல், உலகத்தையே காட்டி அவற் றைப் பிறப்பு-இறப்புச் சுழலில் அகப்பட்டு உழலச் செய்வ தால் அது திரோதான சக்தி என்றும், திரோதாயி என்றும் வழங்கப்பெறும். திரோதானம்—மறைப்பது; திரோதாயி-மறைத்தலைச் செய்வது. இறைவன் உலகத்தை இயக்க அவனது பேராற்றலுள் ஒரு சிறிதே போதும். ஆகவே, பராசக்தியின் ஒருசிறு கூறே ஆதிசக்தி எனப்படும் திரோ தான சக்தியாக நிற்கும் என்பதைத் தெளிக. ஆதிசக்தி

'பராசக்தியின் ஆயிரத்தில் ஒருகூறு' என்று கூறுதல் சித்தாந்த மரபு என்பதையும் அறிக.

ஆதிசக்தி செயற்படும்போது அது செயலாற்றுவதற்கு ஏற்ப விழையும் ஆற்றல், அறியும் ஆற்றல், செய்யும் ஆற்றல் என வேறு வேறு விதமாகப் புலப்படும். அங்ஙனம் புலப்படும்போது இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி[62] என மூன்றாகப் பிரியும். பின்னர் படைத்தல் சக்தி, காத்தல் சக்தி, அழித்தல் சக்தி முதலாக எண்ணிறந்த சக்திகளாக விரிந்து தொழில் செய்யும். சைவ ஆகமங்கள் அவற்றிற்கெல்லாம் பலவாறு பெயரிட்டு விரித்துக்கூறும். சக்திகள் எண்ணற்றவைகளாகச் சொல்லப்பெறினும், அவற்றுள் 'பராசக்தி, ஆதிசக்தி, இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி' என்றும் ஐந்துமே முதன்மையானவையாகும். இதனையே,

ஒன்றதாய், இச்சா ஞானக்
கிரியையொன் றொருமூன் றாகி
நின்றிடும் சக்தி; இச்சை
உயிர்க்கருள் நேச மாகும்;
நன்றெலாம் ஞான சக்தி
யால்நயந் தறிவன் நாதன்;
அன்றருட் கிரியை தன்னால்
ஆக்குவன் அகில மெல்லாம்.[63]

என்று சிவஞான சித்தியார் பேசும்.

இங்ஙனம் மேற்கூறிய சக்திகளைக் கொண்டே இறைவன் தனது தொழில்கள் அனைத்தையும் செய்கின்றான். இதனை,

---

62. இச்சை-விருப்பம், இது 'உயிர்கட்கு நலம் செய்யவேண்டும்' என விரும்பும் கருணையாகும் ஞானம்—அறிவு. இது விரும்பியவாறே நலம் செய்வதற்கு ஆவன அறிவதாகும். கிரியை-செயல். இஃது அறிந்தவாறே செய்வதாகும்.

63. சித்தியார் 1.63.

நங்கையினால் நாம் அனைத்தும்
செய்தாற்போல் நாடனைத்தும்
நங்கையினால் செய்தளிக்கும்
நாயகனும்.[64]

என்று மிக அழகாகக் கூறுகின்றது திருக்களிற்றுப்படியார். குணமும் குணியும் வேறல்லவாயினும், செலுத்துவது குணி; செலுத்தப்படுவது குணம். எனவே, குணி செலுத்தியபடியே குணம் செல்வதல்லது வேறாகச் செல்லாது. அதனால் 'சக்தி' மனைவி என்றும், 'சிவம்' கணவன் என்றும் கொள்ளப்படுகின்றன. இதுபற்றிதான், மேற்குறித்த களிற்றின் பாடலில் சக்தி 'நங்கை' என்றும், சிவம் 'நாயகன்' என்றும் கூறப்பட்டன என்பதைத் தெளிக. 'சிவபெருமான் தனது ஒரு பாதி ஆண் உருவாகவும், மற்றொரு பாதி பெண் உருவாகவும் உள்ளான்' என்று சொல்வதும், முதல்வன் ஒருவனே சிவமும் சக்தியும் என இரு திறப்பட்டு இயைந்து நிற்றலையே குறிப்பதாகும். மற்றும், சிவமூர்த்தங்கள் பலவும் அம்மை உடனாகக் காணப்படுவதும் இவ்வுண்மையை விளக்குவதாகும் என்பதையும் தெளிக.

இறைவனது ஐந்து தொழில்களையும் அருள் தொழில்களாகவே புரிகின்றான் என்பதை முன்னரே விளக்கியுள்ளேன்.[65] அவற்றை ஈண்டு நினைவு கூர்க. அவற்றை ஈண்டு மேலும் தெளிவுறுத்துவேன். குணம் குணி வழியே செயற்படுமாதலால் சக்தி சிவத்தின்வழியே நிற்பதாகும் என்பதை நீ நன்கு அறிவாய். இறைவன் அயனாய் நின்று படைத்தல் தொழிலைச் செய்ய நினையுங்கால் அவனது சக்தி வாணி என நிற்பாள். இறைவன் அரியாய் நின்று காத்தல் தொழிலைச் செய்ய நினையுங்கால் அவனது சக்தி திருமகளாய் நிற்பாள். இறைவன் அரனாய் நின்று அழித்தல்

64. களிறு-78

65. இயல்-2; கடிதம். 9. பக். (60-62)

தொழிலைச் செய்ய நினைக்குங்கால், அவனது சக்தி உமையாய் நிற்பாள். மறைத்தலை இறைவன் மகேசுவரனாய் நின்று செய்யும்போது, அவனது சக்தி மகேசுவரியாய் நிற்பாள். இறைவன் கொள்ளுகின்ற உருவத் திருமேனிகள் யாவும் இம் மகேசுவர நிலையின் வேறுபாடுகளே. 'ஏகபாதர், அர்த்த நாரீசுவரர், உமாசகாயர், சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், நடராசர்' முதலான மகேசுவர மூர்த்தங்கள் இருபத்தைந்து எனக் கணக்கிடப்பெற்றுள்ளன. மற்றும், அடியார்கட்கு ஆங்காங்குத் தோன்றியருளிய வடிவங்களும் பலவாகும். தேவர்கள் பொருட்டும், ஏனைய உலகத்தார் பொருட்டும் திரிபுரத்தை எரித்தது முதலியனவும் சனகாதி முனிவர்கட்குத் தட்சிணாமூர்த்தியாய் இருந்து ஞானத்தை அருளியது முதலியனவும் இம் மகேசுர மூர்த்தமாதல் அறிந்து தெளிக. இறைவன் அருளலைச் சதாசிவனாய் நின்று செய்யும்பொழுது, அவனது சக்தி மனோன்மணியாய் நிற்பாள். இறுதியில் குறிப்பிட்ட நிலை செயலில் புகும் நிலையே யல்லது செயல் ஆற்றும் நிலையன்று. அதனால் இது பொதுவாய் நின்ற அருவமும் ஆகாமல், பின்பு சிறப்பாய் வரும் உருவமும் ஆகாமல் அருவுருவத் திருமேனியாய் அமையும். இவ்வடிவமே ஒளிப்பிழம்பான சிவலிங்கத் திருமேனியாகும்.

அசேதனப் பிரபஞ்சமாகிய சட உலகத்தை இறைவன் படைத்துக் காத்து அழித்தல் ஆணவத்தின் சக்தியைத் தேய்த்ததற்கே யாகும் என முன்னரே விளக்கி யுள்ளேன். அம்முத்தொழிலில் அகப்பட்ட உயிர்கள் தம்மையும், தம் தலைவனாகிய இறைவனையும் தம்மைப் பற்றியுள்ள பாசத்தையும் அறிவதில்லை. ஆகவே, படைத்தல் முதலிய முத்தொழில்களும் மறைத்தல் தொழிலின் வகைகளாகின்றன. ஆணவத்தின் சக்தி சடசக்தியாதலால், அது செயற்படச் செயற்படத் தேய்ந்து தேய்ந்து மெலிவடை

* 66. இயல். 2; கடிதம். 9. பக் (60.62]

யும். ஆணவத்தின் சக்தி மெலிவடைய மெலிவடைய உயிர்களின் அறிவு மறைப்பு நீங்கி விளக்கம் பெற்று இறைவனை அறிதற்கு உரியதாகும். ஆகவே, அந் நன்மை கருதியே இறைவன் மறைத்தல் தொழிலைச் செய்கின்றான். அதனால், அதுவும் உயிர்களின் நன்மையின் பொருட்டே ஆகிவிடுகின்றது.

'அருளல்' என்பது ஆணவத்தின் சக்தி மெலியப்பெற்ற உயிர்கட்கு இறைவன் தன்னையும் உயிர்களையும், அவ்வுயிர்களைப் பற்றியுள்ள பாசங்களையும் நன்கு உணருமாறு காட்டிப் பகையாகிய பாசத்தினின்றும் நீங்கி உறவாகிய தன்னை அடைந்து இன்புறச் செய்தலாகும். 'முத்தி' என்பது இதுவேயாகும் என்பதைத் தெளிக.[67]

பாசத்தைப் பசுக்கள் விட்டுப்
பதியினை அடைதல் முத்தி.[68]

என்று கூறுவர் அருணந்தி சிவாச்சாரியார். இவ்வருளைப் புரியும் இறைவனது சக்தி அருட்சக்தி என வழங்கப்படும். இறைவனது ஒரு சக்தியே இங்ஙனம் 'திரோதான சக்தி, அருட் சக்தி' என இரண்டாகி நின்று மறைத்தல், அருளல் என்னும் இரு தொழில்களைச் செய்யும். எனவே, 'படைத்தல், காத்தல், அழித்தல்' என்பவற்றுடன் 'மறைத்தல், அருளல்' என்று இரண்டும் சேர்ந்து இறைவன் செய்யும் ஐந்தொழில்களாகின்றன என்பதை அறிவாயாக. இவற்றை முன்னரும் குறிப்பிட்டுள்ளேன்.[69] ஐந்தொழில் 'பஞ்ச கிருத்தியம்' என்றும் பேசப்பெறும்.

மேற்கூறப் பெற்ற ஐந்து தொழில்களுள் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்றும் அசேதனப்

---

67. இது பற்றி 'பயனியலில்' தெளிவான விளக்கம் காட்டப் பெறும்.

68. சித்தியார்—பரபக்கம் பாஞ்சராத்திரிமத மறுதலை—23.

69. இயல்—2; கடிதம்—9. பக். (60—62)

பிரபஞ்சமாகிய சட உலகத்தின் மீதும், 'மறைத்தல், அருளல்' ஆகிய இரண்டும் சேதனப் பிரபஞ்சமாகிய உயிர்களின்மீதும் செய்யப்படுவன வாதலாகும் என்பதை அறிந்து தெளிக. இந்த ஐந்து தொழில்களும் ஒருவகையில் அருள் தொழிலேயாகும்; எங்ஙனம்? என்பதைக் கூறுவேன்; உலகத்தை இறைவன் படைத்தல் உயிர்களின் வினை தீர்த்தற் பொருட்டு; காத்தல் வினைய நுகர்வித்தல் பொருட்டு; அழித்தல் இளைப்பு நீங்குதற் பொருட்டு; மறைத்தல் மலபரி பாகம் அடைதற் பொருட்டு; அருளல் பேரின்பத்தை அடைதற் பொருட்டு. இந்த விளக்கத்தையும் உளங்கொள்வாயாக.

இன்னும் ஒரு கருத்தையும் இவண் அறிந்து கொள்வது இன்றியமையாததாகின்றது. மறைத்தல் உயிர்கட்குப் பந்தத்தை (கட்டினை)ச் செய்வது: அருளல் உயிர்கட்கு வீட்டினை (விடுதலையை)த் தருவது. ஆகவே, ஐந்தொழில்களையும் 'பந்தம், வீடு' என்று இரு தொழில்களாகவே அடக்கில் பேசப்பெறும் மரபும் உண்டு. படைத்தல் முதலிய மூன்றும் ஒருவகையில் மறைத்தலே யாகும் என்பதை முன்னரே கூறியுள்ளேன்.

> 'பந்தம் வீடவை யாய பராபரன்'[70]

என்பது நாவுக்கரசரின் திருவாக்கு.

> 'பந்தமும் வீடும் படைப்போன் காண்க'[71]

என்பது வாதவூரடிகளின் மணி வாக்கு.

> 'பந்தம் வீடுதரும் பரமன்'[72]

என்பது சேக்கிழார் பெருமான் அநுபூதி நிலையில் கூறியது. பந்தம், வீடு என்ற கருத்து திருமுறைகளுள் பலவிடத்தும்

---

70.

71. திருவா. திருவண்டப் பகுதி—அடி. 52

72. பெரியபுரா. தடுத்தாட் கொண்ட புராணம்—154

வருதலைக் காணலாம். திருமுறைகளை நீ ஓதுங்கால் இவற்றைக் குறிப்பாகக் கவனித்து அறிவாயாக.

இறைவன் செய்யும் ஐந்தொழில் மூவகைப்படும். அவை தூல ஐந்தொழில், சூக்கும ஐந்தொழில், அதி சூக்கும ஐந்தொழில் என்பவையாகும். உலகத்தைப் படைத்துக் காத்து அழித்து மறைத்து அருளுவது தூல ஐந்தொழிலாகும்; உலக முழுவதையும் அழித்த பின்னர் மீளவும் தோற்றுவித்தற்கு ஆவன செய்தல் சூக்கும ஐந் தொழில்; உயிர்கள் தம் உடம்பைக் கொண்டு பொருள்களை அறிந்து அநுபவிக்குங்கால், அவற்றின் அறிவுக்கு அறிவாய் நின்று அவற்றை அறிவித்து நிற்றல் அதிசூக்கும ஐந்தொழில், அதிசூக்கும ஐந்தொழிலை மெய்கண்டார் சி. ஞ. போ. ஆறாம் சூத்திரத்தில் கூறி யுள்ளார். அதில் கூறியவாறு இறைவன் அறிவியா தொழி லின், உயிர்கள் எதையும் அறியமாட்டா.

மேலும் சில கருத்துக்களை அடுத்த கடிதத்தில் தெரிவிப்பேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 12

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலம். நலமே விழைகின்றேன்.

இறைவனின் திருமேனி பற்றி மேலும் சில கருத்து களைத் தெரிவிப்பேன், இறைவனுடைய உருவத் திருமேனி 'போக வடிவம், யோக வடிவம், வேக வடிவம்' என்று மூவகைப்படும். போக வடிவம் உலக இன்பத்தைத் தருதற் பொருட்டு மணக்கோலம் கொள்ளுதல்

போன்றவை. யோக வடிவம் ஞானத்தைத் தருதற் பொருட்டுக் குருமூர்த்தியாய் எழுந்தருளியிருத்தல் போன்றவை. வேக வடிவம் உலகத்தார்க்கு உண்டாகும் துன்பத்தைப் போக்கப் போர்க்கோலம் கொள்ளுதல் போன்றவை யாகும்.

இறைவன் போகவடிவம் கொண்டாலல்லது உயிர் கட்குப் போகம் அமையாது; யோக வடிவம் கொண் டாலல்லது உயிர்கட்கு ஞானம் உதியாது; வேக வடிவம் கொண்டாலல்லது உலகிற்கு வரும் துன்பம் நீங்காது. இறைவன் சனகாதி முனிவர் பொருட்டு யோகியாய் இருந்த காலத்தில் உயிர்கட்குப் போகம் முதலியவை அமையாதிருந்தமையைப் புராணங்கள் வரித்துப் பேசும். இறைவன் திருப்பெருந்துறையில் தம்மை யாட்கொண்ட அருமைப் பாட்டினை மணிவாசகப் பெருமான்,

'கோகழி யாண்ட குருமணி'[73]

'ஈர்த்து என்னை யாட்கொண்ட எந்தை பெருமான்'[74]

'குருந்தின்கீழ் அன்றிருந்த கொள்கையும்'

என்று பேசுவர். தாயுமான அடிகளும் இறைவன் குருவாய் வந்தமையை "புத்தமிர்த போகமும்"[76] என்ற பாடலாலும் குரு உபதேசம் செய்ததை "வந்தேன் உடல் பொருள் ஆவி"[77] என்ற பாடலாலும் குறிப்பிடுவர்.

இறைவன் ஐந்தொழில் செய்யுமிடத்து உயிர்களின் மேல் உள்ள கருணையாகிய இச்சாசக்தி இறைவனுக்கு எஞ்ஞான்றும் ஒரு தன்மையதாகவே இருக்கும். ஏனைய

---

73. திருவா. சிவபு, அடி. 3. கோகழி-திருப்பெருந் துறை
74. ஷை. ஷை. அடி. 74.
75. ஷை. கீர்த்திதிரு. அடி. 61
76. தா. பா. தேசோமயானந்தம்-11
77. ஷை. ஆகார புவனம்-18

ஞானசக்தியும் கிரியாசக்தியும் அடங்குதல், மிகுதல், குறை தல் என்னும் தன்மைகளை அடையும். இந்நிலைகள் பற்றி இறைவனும் பல நிலைகளை உடையவனாய் இருப்பான். இந்நிலைகள் ஒரு வகையில் ஐந்தாகவும், மற்றொரு வகையில் ஒன்பதாகவும் கூறப்பெறும். அவற்றுள் ஐந்தாவன: கிரியா சக்தி அடங்கியிருக்க ஞானசக்தி மட்டிலும் தொழிற்படும் நிலையில் சிவன் என்று பெயர் பெறுகின்றது. ஞானசக்தி அடங்கியிருக்க, கிரியாசக்தி மட்டிலும் தொழிற்படும் நிலையில் சக்தி என்று வழங்கப் பெறுகின்றது. ஞான சக்தியும் கிரியாசக்தியும் தொழிற் படும் நிலையில் சதாசிவன் என்று திருநாமம் பெறுகின்றது. ஞானசக்தி குறையக் கிரியாசக்தி மிகுந்து தொழிற்படும் நிறையில் மகேசுரன் என்றும், கிரியாசக்தி குறைய ஞான சக்தி மிகுந்து தொழிற்படும் நிலையில் வித்தியேசுரன் என்றும் பெயர்களைப் பெறுகின்றன. இவற்றை முன்னர் வேறொருவிதமாகவும் விளக்கியுள்ளேன்.[78]

இனி இறைவனது நிலைகள் ஒன்பதாவதை விளக்கு வேன். ஞானமும் கிரியையும் தனித்தனியாகத் தொழிற் படும் நிலையில் பொதுவாகத் தொழிற்படுதல், சிறப் பாகத் தொழிற்படுதல் என இரண்டாகி நிற்கும். ஞானம் பொதுவாகத் தொழிற்படும் நிலையில் சிவம் என்றும் கிரியை பொதுவாகத் தொழிற்படும் நிலையில் சக்தி என்றும் பெயர்களைப் பெறுகின்றன. அவை சிறப்பாகத் தொழிற்படும் நிலையில் நாதம், விந்து என இருநிலைகள் உளவாகும். வித்தியேசுரனாய் நிற்கும் ஒரு நிலையில், இறைவன் ஒருவனாய் நில்லாது, 'உருத்திரன், மால், அயன்' முதலிய பலப்பல நிலைகளை அடைவன். எனினும், இம்மூன்று நிலைகளே சிறந்தெடுத்துக் சொல்லப்பெறும். அதனால், 'வித்தியேசுரன்' எனத் தனியே கூறாது 'உருத் திரன், மால், அயன்' என மூன்றாக வைத்துச் சொல்லப்

78. இயல்-2; கடிதம் 11. பக். 86-88

பெறும். இவற்றை மேற்சொன்னவற்றோடு கூட்ட, 'சிவம்' சக்தி, நாதம், விந்து, சதாசிவன். மகேசுரன், உருத்திரன், மால், அயன்' என ஒன்பதாகும், இவை நவந்தருபேதம் என்று வழங்கப் பெறும். ஆகவே, ஒருவனாகிய இறைவனே உலகத்தைச் செயற்படுத்த வேண்டி நவந்தரு பேதங் களாய் நிற்பன் என்று அறிந்து தெளிக.

மேற்கூறியவற்றுள், முதலில் உள்ள 'சிவன், சக்தி, நாதம், விந்து' என்னும் நான்கும் அருவத் திருமேனிகள். இறுதியில் உள்ள 'மகேசுரன், உருத்திரன், மால், அயன்' என்ற நான்கும் உருவத் திருமேனிகள். இடையிலுள்ள சதாசிவன் மட்டிலும் அருவுருவத் திருமேனி. உருவம் கண்ணுக்குப் புலனாவது; அதாவது நம்மனோர் கண்ணுக் குப் புலனாகாவிடினும், தவத்தோர் கண்ணுக்குப் புல னாவது. அருவம், அங்ஙனம் புலனாகாதது; எனினும், வரம்புபட்டு நிற்பது. அருவுருவம் கண்ணுக்குப் புலனா யினும், ஒளிப்பிழம்பாய் நிற்பதன்றிக் கை, கால் முதலியன இல்லாதது. இலிங்க வடிவமே அருவுருவத்திருமேனி என்பதை அறிக. இக்கூறிய உருவத் திருமேனிகள் நான்கும் 'அதிகாரம்' (தலைமைப்பாடு) எனவும், அவ்வுருவத் திருமேனி போகம் எனவும், அருவத்திருமேனி நான்கும் 'இலயம்' எனவும் வழங்கப்படும். அதனால் இந் நிலைகளில் நிற்கும்பொழுது, இறைவனும் 'அதிகார சிவன், போக சிவன், இலய சிவன், என்று சொல்லப் பெறுவான் (இலயம்-ஒடுக்கம்). ஆகவே, இறைவனின் தடத்த நிலையை நோக்குமிடத்து 'இலயம் யோகம் அதிகாரம்' என மூன்றாய் அடங்கும் என்பதை உணர்ந்து தெளிக.

வித்தியேசுரனாய் நின்று இறைவன் புரியும் செயல் களைச் சற்று விரிவாக விளக்குவது இன்றியமையாத தாகின்றது. இறைவன் உயிர்கட்குப் போகம் முதலிய வற்றைச் செய்யுங்கால் தானேயாயும் செய்வன்; பிறரைக் கொண்டும் செய்விப்பன். அவற்றுள், தானே செய்யுங்கால்

மகேசுரனாய் நின்று செய்வன்; பிறரைக்கொண்டு செய்விக்குங்கால், அவற்றை அவ்வாற்றால், நோக்குதல் பெரிதாகவும். கருதுதல் சிறிதாகவும் நிகழ 'வித்தியேசுரன்' என்னும் நிலையில் நின்று செய்விப்பன். இந்நிலையில் செய்விப்பது பொதுபட ஒன்றாயினும், சிறப்பினால் பலவாய் நிற்கும். அரசன் (மக்களாட்சியில் முதலமைச்சர்) ஆணையைப் பெற்று ஆட்சி முறைக் கடமைகளில் சிலவற்றைச் செய்யும் அமைச்சர்கள் போல, இறைவன் ஆணையைப் பெற்று, உலகத்தைச் சிலவகைகளில் தொழிற்படுத்தும் சிறந்த தலைவர் சிலர் உளர். அவர்கள் 'அனந்ததேவர், சீகண்ட ருத்திரர், மால், அயன்' என்போர். மற்றும் இந்திரன், வருணன், வாயு, அக்கினி, சூரியன், சந்திரன், நாள், கோள் முதலான எண்ணற்ற தலைவர்களும் உளர். இவர்கள் பெற்றுள்ள வடிவும் பெயரும் அவரவர்கள் ஆற்றும் தொழிலுக்கேற்ப அமைந்தனவாகும். இவற்றை இவர்கள் தத்தம் புண்ணிய விசேடத்தால் பெற்றவர்கள். இவர்களை இவ்வாற்றால் இயக்குவதற்கு அமைந்த நிலையே 'வித்தியேசுர நிலை'யாகும். எனவே, இந்நிலையில் நோக்கப்பெறுவாரது நிலைபற்றி இறைவனும் பல்வேறு நிலையினனாய், அவ்வப் பெயரைப் பெற்று நிற்பன் என்பது விளங்கும். இறைவன் போகியாய் நில்லாதவழிப் போகமும், யோகியாய் நில்லாதவழி யோகமும் உயிர்கட்கு அமையாது என்பதை நீ நன்கு அறிவாய். அங்ஙனமே இறைவன் அனந்தர் முதலிய நிலையினனாய் நில்லாதவழி, அவ்வந் நிலையினருக்கு அவை அமையா. ஆதலின், அவர்பொருட்டு இறைவன் அப்பல்வேறு நிலையினனாய் நிற்பன் என்பதை அறிந்து தெளிக.

இன்னோர் உண்மையையும் ஈண்டு நீ அறிதல் வேண்டும். 'அனந்தர், உருத்திரர், மால், அயன்' என்னும் பெயர்கள் முழுமுதற் கடவுளாகிய இறைவனையும், அவ்வத் தொழில் மட்டிற்கும் முதல்வராய் நிற்கும் தலைவர்களையும் குறிப்பனவாக வரும். இப் பெயர்கட்குரிய

இறைவனது நிலைகள் 'சம்பு பட்சம்' (சம்பு-சிவன், இறைவன்) என்றும், இப்பெயர்களுடைய தலைவர்களின் நிலைகள் 'அணுபட்சம்' (அணு-உயிர்கள்; பட்சம்—பகுதி) என்றும் வழங்கப்பெறும்:

திருமுறை இலக்கியங்களில் உருத்திரர், மால், அயன்' முதலான பெயர்கள் வருமிடத்து இவை சம்பு பட்சமாகிய சிவபிரானது நிலையையும், அணுபட்சமாகிய பிற தேவர்களின் நிலையையும் குறிக்கின்றன என்பதை அறிதல் எவ்வாறு? என்ற ஐயம் நின்பால் எழலாம். கூறுவேன்; பாடல்களில் முன்னும் பின்னும் வருகின்ற சொற்குறிப்புகளால் அவற்றை உணர்ந்து கொள்ளலாம். அதாவது, சிவபிரானாயினும் ஏனைய தேவர்களாயினும் அவரவர்க்குரிய சிறப்பியல்புகள் உள்ளன. அச்சிறப்பியல்புகளை முதன்மையாகவும் ஏனையவற்றைப் பொதுவாகவும் கூறும் முறையால் அவ்வேறுபாடு தெளிவாகும். எடுத்துக்காட்டு ஒன்றினால் இதனைத் தெளிவாக்குவேன்.

நாரணன்காண் நான்முகன்காண் நால்வே தன்காண்
ஞானப் பெருங்கடற்கோர் நாவாய் அன்ன
பூரணன்காண் புண்ணியன்காண் புராணன் தான்காண்
புரிசடைமேற் புனலேற்ற புனிதன் தான்காண்[79]

என்ற நாவுக்கரசரின் திருத்தாண்டகப் பகுதியில் நாரணன், நான்முகன், நால்வேதன் என்பன அருளிச்செய்யுமிடத்து 'புரிசடைமேல் புனல்ஏற்ற புனிதன்தான் காண்' என்று அருளினமையின் அச்சிறப்பு பற்றி முன்னர் வந்த 'நாரணன், நான்முகன்' என்பன சம்புபட்சத்தைக் குறிக்கின்றன என்பதை அறிந்து தெளிக. இன்னும்,

---

79. தேவாரம், 6.8:3

சுருதிவா னவனாம் திருநெடு மாலாம்
சுந்தர விசும்பில்இந் திரனாம்
பருதிவா னவனாம் படர்சடை முக்கட்
பகவனாம் அகவுயிர்க் கமுதாம்
எருதுவா கனனாம் எயில்கள்மூன் றெரித்த
ஏறுசே வகனுமாம் பின்னும்
கருதுவார் கருதும் உருவமாம் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே.[80]

என்ற கருவூர்த் தேவர் திருப்பாடலில் அயன், மால் இந்திரன் முதலிய பெயர்கள் 'எருதுவாகனனாம் எயில்கள் மூன்றெரித்த ஏறு சேவகனுமாம்' என்று அருளிச் செய்துள்ளமையின் சம்பு பட்சத்தையே குறிக்கின்றமையைத் தெளியலாம். 'கருதுவார் கருதும் உருவமாம்' என்றதனால் 'யாவராயினும் யாதானும் ஓராற்றால் யாதானும் ஒரு தெய்வத்தை நினைந்து வழிபடினும் அத்தெய்வ வடிவமாயும் சிவபெருமான் நிற்பன்' என்று உணர்த்தப்பட்டமையையும் சிந்தித்து நன்கு உணர்வாயாக. இதனை,

ஆருருவ உள்குவார் உள்ளத் துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்.[81]

என்ற அப்பர் பெருமானின் திருத்தாண்டகப் பகுதியும் அரண் செய்வதை அறிந்து மகிழ்க. இவையெல்லாம் எண்ணற்ற தேவர்களது நிலைகளும் சம்பு பட்சத்திலும் உள்ளன என்பதனையே விளக்கி நிற்பனவாக அமைந்துள்ளன.

இவ்வாறின்றி அணுபட்சத்தையே குறிப்பனவற்றையும் காட்டுவேன்.

---

80. திருவிசைப்பா. 3:5
81. தேவாரம் 6. 18:11

நூறுகோடி பிரமர்கள் நொந்தினார்
ஆறு கோடி நாரயணர் அங்ஙனே
ஏறு கங்கை மணல்எண்ணில் இந்திரர்
ஈறு இலாதவன் ஈசன் ஒருவனே.[82]

என்ற அப்பர் பெருமானின் திருவாக்கில் அயன், மால், இந்திரன் ஆகிய மூவரே சுட்டப்பெற்று சிவபிரானின் குறிப்பு இல்லாமையால் அணுபட்சத்தையே குறிப்பனவாக இருத்தல் தெளிவாகின்றதன்றோ? வாதவூரடிகளின்,

வான்வந்த தேவர்களும்
மாலயனோ டிந்திரனும்
கானின்று வற்றியுய
புற்றெழுந்தும் காண்பரிய
தான்[83]

என்ற திருவாக்கினாலும் இவ்வுண்மையைத் தெளியலாம்.

இனி, சம்புபட்ச அணுபட்ச விளக்கங்களை அடுத்த கடிதத்தில் தெரிவிப்பேன்.

அன்பன்,
கார்த்திகேயன்

## 13

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன்; நலம் பல விளைந்திடுக.

சம்புபட்ச-அணுபட்ச விளக்கங்களை இக்கடிதத்தில் தருவேன். இக்கடிதத்தைச் சற்று ஆழ்ந்து பயின்று சிந்திக்க வேண்டும். புண்ணிய விசேடத்தால் உலகத்தைத் தொழிற்படுத்தும் தலைமைப் பாட்டினை எய்தின அணுக்களும்—

82. தேவாரம்-5.100:3
83. திருவா. திருவம், 4

அதாவது உயிர்களும்-சம்பு பட்சம்போலவே நவபேதங்களை அடையுமோ என்ற ஐயம் நின்பால் எழலாம். இந்த ஐயத்தையும் தெளிவிப்பேன். அணுக்களாகிய உயிரினத்தவர் தம் புண்ணிய விசேடத்தால் 'அயன், மால்' என்ற நிலைக்கு மேல் செல்லுதல் இல்லை என்பர் சிலர். 'அயன், மால்' என்பவரோடு 'உருத்திரனாகவும்' உயிரினத்தவர் ஆதல் உண்டு என்பவர் வேறுசிலர். நவந்தரு பேதங்களிலும், உயிர்கள் நிற்றல் உண்டு என்பர் இன்னும் சிலர். இவர்கட்கு இடையில் ஒரு சாரார் 'நவந்தரு பேதங்கள் என்று சொல்லப் படுகின்ற அவை அனைத்தும் அணுபட்சமேயன்றி ஒன்றேனும் சம்பு பட்சம் அன்று' என்பர். இறைவனது தடத்த நிலையும் அதுபற்றி வரும் மூவகைத் திருமேனி முதலியனவும் உளவென்றால் கூடாதாய் முடியுமாதலின் இவர்கள் கூற்று பொருந்துமாறில்லை.

இந்த இடத்தில் ஒரு முக்கியமான கருத்தை நீ நினைவில் கொள்ள வேண்டும். உயிர்கள் தம்முடைய தாழ்நிலையினின்றும் படி முறையால் உயர் நிலை அடைந்து முடிவில் சிவமேயாய் நிற்கும் என்பது சைவ சித்தாந்திகள் எல்லோர்க்கும் உடன்பாடாகும். எல்லாவற்றிற்கும் மேலான பரசிவ நிலையை அடைதற்குரிய உயிர் அச்சிவத்தின் தடத்த நிலைகளாகிய நவந்தரு பேதங்களிலும் நிற்கும் என்பதனால் வருவதொரு குற்றம் இன்று. ஆகவே, நவந்தரு பேதங்கள் சம்பு பட்சத்திலும் உண்டு; அணு பட்சத்திலும் உண்டு என்பது உண்மையே யாகும். ஆயினும், தடத்த உலையில் 'அதிகாரம்' அல்லது தலைமைப்பாடு என்பது—அஃதாவது உலகத்தைச் செயற்படுத்தும் நிலை—மகேசுரனுக்கு மேல் இல்லாமையால் அணுபட்ச பேதங்கள் மகேசுரனுக்குமேல் இல்லை என்று சொல்லப்படும். இந்த நுணுக்கத்தை நீ உளங்கொள்ளல் வேண்டும்.

மேலும், இறைவன் உயிர்களோடு உடனாய் நின்று எல்லா வகையிலும் உதவுதல் அவனது தடத்த நிலையாத

லால் மகேசுரனுக்குக் கீழ் சம்பு பட்சம் இல்லையென்றலும் கூடாதாகும். ஆயினும், உலகத்தைத் தோற்றுவித்தல், நிலை நிறுத்தல் ஆகிய இரண்டு செயல்களும் ஒடுக்குதல் தொழிலுள் அகப்பட்டு நிற்றலால், இவற்றுக்குரிய அயன் மால்களின் வடிவம் முதலியன அணுபட்சத்திற்கே உரியன எனவும், ஒடுக்கம் முதலிய தொழில்கட்குரிய மகேசுரன் முதலியோரது வடிவம் முதலியன சம்பு பட்சத்திற்கே உரியன எனவும் பாகுபாடு செய்யப்பட்டமையின், 'மகேசுரனுக்குக் கீழ் சம்பு பட்சம் இல்லை' எனவும் கூறப்படும் என்பதை அறிந்து தெளிக. எனவே, மகேசுரனுக்குமேல் செல்லும் உயிர்கள் இந்நிலையில் உண்டாகும் இன்பங்களை நுகர்ந்து மகிழுமேயன்றி உலகத்தைச் செயற்படுத்தல் இல்லை; மகேசுரனுக்கீழ் வரும் சம்பு பட்சங்களது உண்மை தத்துவ உணர்வு கைவரப் பெற்றோர்க்கு அன்றி ஏனையோரால் உணர்தல் இயலாது. இந்நுண்ணிய கருத்தே மேற்கூறிய கூற்றிற்குப் பொருளாகும் என்பதையும் சிந்தித்து உணர்க.

இவ்வாறாக, இறைவன் உலகத்தைத் தொழிற்படுத்துதல் தானே செய்தல், பிறர் வாயிலாகச் செய்வித்தல் என்ற இரு வகையில் நடைபெறும் என்பதும், இவற்றுள் தானே செய்தல் எவ்விடத்தும் உரித்து என்பதும், பிறர் வாயிலாகச் செய்வித்தல் அவன் அதை விரும்பியவழி மகேசுரனுக்குக்கீழ் அனந்தர், உருத்திரர் முதலியவரிடத்தே நிகழும் என்பதும் அறிந்தவையே. இச் 'செய்வித்தல்' சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்ற மூன்று நிலைகளில் 'வைகரி மத்திமை' என்ற வாக்குகளிலும், காலம், கலை முதலிய முப்பத்தொரு தத்துவங்களிலும் நடைபெறும்; 'செய்தல்' என்பது, அதீதம் முதலிய ஐந்து நிலைகள், சூக்குமை முதலிய நான்கு வகை வாக்குகள், சிவ தத்துவம் முதலிய முப்பத்தாறு தத்துவங்கள் ஆகிய அனைத்திலும் நிகழ்வதாகும். இவை யாவும் தத்துவங்களின் இயல்பை விரித்துக் கூறுமிடத்து இனிது விளக்கம் எய்தும்.

சிவபெருமானுக்குக்கீழ் செயலாற்றும் 'அயன், அரி, அரன்' என்னும் காரணக் கடவுளர்கள் முதலியோரைப் பற்றியும் சிறிது கூறுவேன். இவர்கட்கெல்லாம் வடிவம் தொழிலுமாக ஆகமங்கள், புராணங்கள், இதிகாசங்கள் இவற்றில் கூறப் பெற்றுள்ளன; இவர்கட்குள்ளே அமைந்த வேறுபாடுகளையும் ஆங்குக் காணலாம். மாசுடை உலகில் நிற்பினும் மக்கள் போலன்றி பொதுச் சிவ புண்ணியத்தால் [84]ஏதோ ஒரோவழித் தூய உலகில் அரிதிற் சென்று இறைவனின் உண்மைத் திருமேனியை அரிதிற்கண்டு திரும்பக் கூடுபவர்கள் தேவர்கள்; இவர்களுக்குள்ளும் மேற்கூறியவற்றைச் சிறிது எளிதிற் பெறக் கூடியவர்கள் இந்திரன் முதலிய இறையவர்கள். இவ்விரு வகைத் தேவர்கள் போலன்றி தமது உண்மைச் சிவ புண்ணியத்தால் தூய உலகத்தைப் பெற்று இறைவனை அவனது உண்மைத் திருமேனியில் எளிதிற் கண்டு வாழ்வோர் உருத்திரர்களாவர்.

மற்றும், தேவரும் திசைக் காவலரும், 'அயன், மால்' என்னும் காரணக் கடவுளரும் இறைவனை ஏதோ ஒருகால் காணப்பெற்றாலும், தம் 'இடம்பு தாம் இருக்கும் உலகு முதலியவற்றின் சார்பால் பலகாலும் அவனை மறப்பர்; தம் தொழிலுக்குத் தம்மையே முதல்வராகவும் கருதி மயங்குவர்; அம்மயக்கம் காரணமாக அத்தொழில் நிகழுங்கால் சில சமயம் மகிழ்ச்சியும் சில சமயம் வாட்டமும் உற்றுத் தொடக்குறுவர். தம் தம் பதவிகளின் உயர்வு தாழ்வுகளில் விருப்பு வெறுப்புகளில் பொருந்துதலும் உடையர். உருத்திரர் நிலையோ முற்றிலும் வேறு. இவர் தம் உடம்பு, உலகு முதலியவற்றின் சார்பால் இறைவனை யாண்டும் மறவாதும், தம் தம் தொழில் நிகழ்ச்சிகளில்

84. மனம் மொழி மெய்களான் சிவபிரானை நோக்கிச் செய்யப்பெறும் நற்செயல்கள் யாவும் சிவபுண்ணியமாகும்; இவை பதிபுண்ணியம் எனவும் வழங்கப்பெறும்.

தொடக்குறாதும் நிற்பர். எனினும், தம் தம் பதவியது உயர்வு தாழ்வுகளில் விருப்பு, வெறுப்புகளை முற்றும் நீங்கு வாரல்லர். தேவரின் மேம்பட்ட இந்திரன் முதலிய இறை யவர்போல், இவ்வுருத்திரரின் மேம்பட்டோர் அனந்தர் முதலிய வித்தியேசுரர் என்பதை அறிவாயாக.

தேவர்கள் மூலப்பிரகிருதிக்குமேல் செல்ல மாட்டாத வர்கள். இறைவனின் ஆணை உள்ள பொழுது சிறிது காலம் சுத்த வித்தையிற் சென்று கடிதின் தம்மிடத்திற்கு மீளுதல் உடையர். உருத்திரரோ அவ்வாறின்றிச் சுத்த வித்தையிலேயே வாழ்பவர்கள். ஆயினும், இவர்கள் அதற்குமேல் செல்லமாட்டாதவர்கள். இறைவனின் ஆணை உள்ளபொழுது ஈசுர தத்துவத்திற்குச் சென்று மீண்டும் சுத்த வித்தையை அடைவர். வித்தியேசுரர் ஈசுர தத்துவத் திலேயே வாழ்பவராவர். மேன்மேல் உள்ளவர்கள் யாவருமே கீழ்கீழ் உலகுகளில் சென்று மீளும் உரிமை பெற்றவர்கள். கீழ்கீழ் உள்ளவர்கள் அவ்வாறின்றி மேலுள்ளவர் ஆணையாலன்றித் தாமே மேற்செல்லும் உரிமை உடையவரல்லர். இந்த விவரங்களையும் நீ அறிதல் வேண்டும்.

இன்னொரு முக்கிய செய்தியையும் நீ அறிதல் வேண்டும். ஈசுவர தத்துவத்தில் மகேசுரனாய் நின்று அனந்தர் முதலியோரைச் சுத்த வித்தையில் செலுத்தி ஆள் கின்ற இறைவனும், சுத்த வித்தையில் உருத்திரனாய் நின்று உருத்திரர்கட்கு எளிதிலும், மால் அயன் முதலி யோருக்கு அரிதிலும் காட்சியளித்து அவர்க்கு வேண்டுவன வற்றை முடிக்கும் இறைவனும் பொருளால் வேறல்லவரா யினும், அவ்வச்சிறப்பியல்பு தோன்ற அவ்வந்நிலையில் அவனது வடிவும் பெயரும் வேறுபட்டு நிற்கும் என்பதை உளங் கொள்க. கறைமிடறு உடைமையும் அஃது இன்மை யுமே உருத்திர வடிவத்திற்கும் மகேசுரவடிவத்திற்கும் உள்ள வேறுபாடாகும். கறைமிடறு நஞ்சுடைமையை உணர்த்துவது; அதுமாசுடை உலகத்தார்க்கு அம்மாசு நீக்கி ஆளுதலுடை

மையைக் குறிக்கும் சிறப்படையாளமாகும். ஆகையால் உருத்திரனாய் நிற்கும் இறைவன், சீகண்ட பரமசிவன் என வழங்கப்படுகின்றான் என்பதை அறிக.

சீகண்ட பரமசிவனை யோகத்தால் வழிபட்டோர் அவனது உருவத்தையும் பெயரையும் பெறுவர்; இவர்கள் சீ கண்ட ருத்திரர் என வழங்கப்பெறுவர். ஆயினும், அவர் கட்கு பரமசிவன் என்ற பெயர் வழங்குதல் இல்லை. ஆகவே, பரமசிவனாகிய சீ கண்ட ருத்திரன் இறைவன் ஆகின்றான்; சாரூப நிலையினால் [85]அவனது உருவும் பெயரும் பெற்ற சீ கண்ட ருத்திரர்கள் உயிரினத்தவர்கள் ஆகின்றனர். ஆகவே, மாசுடை உலகத்தில் முத்தி அடையும் நிலையி லிருப்போர்க்கு யாண்டும் முத்தியை அருளுபவன் சீ கண்ட பரமசிவனே யாவான். ஏனைப் பயன்களை அடைய விரும்புவோர்க்கு சீ கண்ட பரம சிவனேயாதல், சீ கண்ட ருத்திரர்களேயாதல் ஏற்றபெற்றியான் முன்னின்று அருளுவர் என்பதையும் அறிந்து தெளிக. சீ கண்ட ருத்திரர் அந்நிலையின் நீங்கி மேல் நிலையை அடைதலும் உண்டு என்பதை நீ அறிவையாதலின் அவர்கள் என்றும் ஒருவரே ஆகார் என்பதையும் உணர்க.

எல்லையின்றிப் பெரிதாய் நிற்கும் தூய உலகத்தின் ஒரு பகுதியே மாசுடை உலகம் என்பதை நீ நன்கு அறிவாய். மாசுடை உலகத்திலும் தூய உலகம் உண்டு என்பதையும் தூய உலகில் மாசுடை உலகம் உண்டு என்பதையும் தெளிந்துள்ளாய். ஆகவே, மாசுடை உலகிலும் இறைவன் சுத்த தத்துவத்தில் தனது சக்தியால் திருமேனி கொண்டு நிற்பான். ஆதலின் மாசுடை உலகில் அவனைக் காண்டலும் அவனை அணுகி நிற்றலும் கூடா என்ப தில்லை. இதனால் அறுபான் மூன்று நாயன்மார்க்கும் ஆளுடைய அடிகட்கும் நம்பி ஆரூரர்க்கும் வெளி

85. சாரூபம—நெருங்கி அளவளாவும் உரிமையைப் பெற் றிருக்கும் நிலை.

நின்றருளினவன் பரமசிவனே யன்றி உருத்திரர் அல்லர் என்பதையும் அறிக. அவர்கள் யாவரும் பெற்றது தூய உலகப் பேறேயன்றி மாசுடை உலகப் பேறன்று என்பதையும் உணர்ந்து தெளிக. மேலும், இதனாலேயே இறைவன் உலகப் பெரு நலத்தின்பொருட்டு நிகழ்த்திய 'வேகம், போகம், யோகம்' என்ற முத்திறத்து நிகழ்ச்சிகளாகத் திருவிளையாடற் புராணம், பெரிய புராணம், போன்ற புராணங்கள் நுவலும் நிகழ்ச்சிகள் அனைத்தும் பரமசிவனுடையனவேயன்றி உருத்திரனுடையவை அல்ல என்பதை அறிக. மற்று ஒரோவிடத்து, ஒவ்வொரு காலத்து ஒரோ ஒருவர் பொருட்டு நிகழ்ந்த நிகழ்ச்சிகளே உருத்திரனுடையன என்பதையும் தெரிந்து உணர்ந்து கொள்க. திருமுறைகளிலும் சிவாகமப் பொருள்களை வடித்தெடுத்துக் காட்டும் சிவஞான சித்தியாரிலும் இவை தெரிவிக்கப் பெற்றுள்ளன என்பதையும் சிந்தித்து உணர்க.

இனி, சிவக்குமரார்களைப்பற்றியும் சிவகணங்களைப் பற்றியும் சிறிது விளக்கம் தருவேன். உலகில் ஒருவருக்கு யாதொரு தலைமைப் பதவி வருவது இறைவனது திருவருளால்தான் என்பதை நீ உணர்தல்வேண்டும். தலைமையைத் தரும் திருவருள் 'அதிகார சக்தி' எனப்படும். தலைமைகள் பலவகைப்படுதலால் அதிகார சக்தியும் பலவாகக் கூறப்பெறும். அவற்றுள் ஒவ்வொருவரிடத்து ஒவ்வோர் அதிகார சக்தி பதிந்து நின்று ஒவ்வொரு தலைமையை நடத்துகின்றது. இவ்வுண்மையைத் தெளிவாக உணர்ந்து அத்தலைமையில் பற்றின்றி நிற்பவர் முத்தராவர். அவர்கட்கு அத்தலைமைப் பதவி கிடைத்தற்குக் காரணமாய் நின்ற பிராரத்த கன்மம் உள்ளத்தைத் தாக்காது, உடனூழாய்க் கழியும், அதனால் அவர்கள் சன்மம் நீங்கிய பின்னர் இறைவனோடு இரண்டறக் கலந்து பரமுத்தியை [86] அடைவர். அவர்கள் அப்பதவியைத் தம் முயற்சியால் பெற்றதாகக் கருதி அதில்

86. இதன் விவரம் 'பயணியுவில்' தெளிவாகக் காணலாம்.

அழுந்துவோர் பெத்தராவார். இவர் பிராரத்தம் நீங்கிய வுடன் பிறிதொரு பிறப்பினை எய்துவர். இவ்வகையில் மால், அயன், இந்திரன் முதலிய தேவர்கள் பலரும் பெத்த நிலையில் உள்ளவர்களே என்பதை அறிந்து தெளிக. உருத்திரரும் வித்தியேசுரரும் இடை நிலையில் இருப்ப வர்கள். இவர்கட்கு மேல்—அஃதாவது ஈசுர தத்துவத்திற்கு மேல்—அணுசதாசிவர் முதலாகச் 'சிவர்' எனப்படுவோர் பலர் உளர். அவர் அனைவரும் முத்தர், அபர முத்தர் ஆவர். இக் கூறிய முத்திறத்தவர்களுள் 'சிவக்குமாரர்' என்று வழங்கப்பெறுபவர்கள் 'சிவர்' என்றே கொள்ளற் பாலர். எனினும் இவரை உருத்திரருட் சிறந்தோராகக் கொள்வோரும் உளர். இதுவே தேவர் முதலியோரிடை உள்ள வேறுபாடாகும். இன்னோர் உண்மையையும் ஈண்டு நீ அறிதல் வேண்டும். அபரமுத்தர் 'இலயம், போகம்' என்ற இரு நிலைகளில் நிற்பவர்களே யன்றி, அதிகார நிலைக்கு வாரார்; இடையில் நிற்போரும் பெத் தரும் அதிகார நிலையில் நிற்பவராவர். மேலும் 'கணம்' என்பது சுற்றம்; அவ்வத்தலைவரது நிலையே கணத்த வர்க்கும் வந்து சேரும் எனத் தெளிந்து உணர்க.

இவ்விடத்தில் இன்னோர் உண்மையையும் நினைவு கூர்வேன்; விளக்கமும் தருவேன். 'பெத்த நிலையில் உள்ளோர்க்குப் பிறப்பு நீங்காது; முத்தி நிலையில் உள் ளோர்க்குப் பிறப்பு இல்லை'— என்பதை நீ அறிவாய். இதனால் மால், அயன், இந்திரன் முதலிய தேவர்கட்குப் பிறப்பு நீங்கிற்றிலது என்பது அனைவர்க்கும் உடன்பாடு என்பதை அறிக. இடை நிலையில் உள்ள உருத்திரர்க்குப் பிறப்பு சிறுபான்மை நிகழினும் நிகழும். எடுத்துக் காட்டாக ஆலாலசுந்தரருக்கும் அநிந்திதை, கமலினி என்பார்க்கும் பிறப்பு நிகழ்ந்தமையைக் கூறலாம்.[87] முருகக் கடவுள் உருத்திரசன்மராய் வந்தமை கூறும் ஒரு

87. நம்பியாரூரர் வரலாற்றை நோக்கி இதன் விவரத்தை அறிக.

வரலாறு பற்றியே அக்கடவுளை உருத்திரராகக் கருது வோரும் உளர். அங்ஙனமே ஆனை முகத்தோனையும் உருத்திரராகக் கருதுவோரும் உளர். ஆயினும், அவர்கள் பிறப்பெய்தினமைக்கு நூல்களில் ஆதாரம் இல்லை. ஆகவே அவர்களைச் 'சிவர்—அபர முத்தர்' என்றலே பொருந்தும் என்பதை அறிந்து தெளிவாயாக.

திருஞானசம்பந்தரை 'முருகக் கடவுளே' என்று கருது வோரும் உளர். இங்ஙனம் கருதினால் அவர் உருத்திரரா கின்றார். முருகக் கடவுளைச் 'சிவர்' என்று கருதினால் ஞானசம்பந்தர் உருத்திரர்களுள் ஒருவரது அவதாரத் தினர் ஆகின்றார். இங்ஙனம் இருதிறக் கொள்கைகள் சித்தாந்தத்தில் இருத்தல்பற்றியே சேக்கிழார் பெருமான்.

> பண்டுதிரு வடிமறவாப்
> பான்மையோர் தமைப்பரமர்
> பண்டுதவ மறைக்குலத்தோர்
> வழிபாட்டின் அளித்தருள, [88]

என்று ஞானசம்பந்தப் பெருமானைப் பொதுப்பட அருளிச் செய்திருத்தல் சிந்தித்தற்குரியது.

இன்னொரு கருத்தும் உண்டு. உருத்திரசன்மராயும், ஞானசம்பந்தராயும் பிறந்தவர்கள் பிறப்பிறப்பற்ற முழுமுதற் கடவுளாகிய முருகப் பெருமானை வழிபட்டு அவரது உலகினை அடைந்த அபரசுப்பிரமணியர்கள் ஆயினார் என்று கருதுவோரும் உளர். இம் முருகக் கடவுள் சம்பு பட்சமாகிய முருகக் கடவுள் அன்றி வேறொருவர் அல்லர். அவரைச் சிவபெருமானுக்கு வேறாகக் கருதினால் அவர் அபர முத்தராகிய சிவரா கின்றார். ஆகவே, முருகப் பெருமானைச் சிவபெரு மானுக்கு வேறல்லாதவராகக் கருதியும், அவரை வேறான

88. பெரியபுரா. திருஞான. 55

வராகக் கருதியும் வழிபட்டு அபரசுப்பிரமணியராவோர் பிறப்பற்ற நிலையை அடையின் அவர் அபர முத்தராகிய சிவர் ஆகின்றார்; பிறவியுறும் நிலையில் இருப்பின் அவர் இடை நிலையில் இருக்கும் உருத்திரராகின்றார். இக் கருத்தினையும் உணர்ந்து தெளிக. இங்ஙனமே வைரவர் வீரபத்திரர் முதலியோரின் நிலைகளும் அமையும் என்ப தையும் தெரிந்து தெளிக.

மேற் காட்டியவற்றால் பதியாகிய இறைவனையும் பசுக்களாகிய உயிர்களையும் அவர்களின் தன்னியல்பு (சொரூப இலக்கணம்) பற்றிப் பிரிந்தறிந்து கொள்ள லாமேயன்றி அவர்தம் பொது இயல்பு (தடத்த இலக் கணம்) பற்றி அறிந்து கொள்ளுதல் அரிதாகும். பதி, பசு இவற்றின் தன்னியல்புகளுள் (Essential nature) எவ ராலும் எளிதில் அறியத்தக்தனவாக உள்ளவை இவை: பதி இயல்பாகவே பாசத்துட் படாது தூய்மையாய் நிற்கும்; பசு இயல்பாகவே பாசத்துட் பட்டு மாசுபட்டு நிற்கும். பாசம் இல்லையேல் பிறப்பு இல்லை; பாசம் உண்டேல் பிறப்பு உண்டு என்பதை நீ நன்கு அறிவாய். ஆகவே, எங்காயினும் எவ்வாறாயினும் 'பிறப்பினை உறுவது உயிர்' என்றும், 'பிறப்பில்லாதது கடவுள்' என்றும் நீ உணர்ந்து தெளிதல் வேண்டும். அங்ஙனம் நீ உணர்ந்தால் 'சிவபிரான் ஒருவனே கடவுள்' என்பதையும் 'ஏனைய எல்லோரும் உயிரினத்தவர்' என்பதையும் நீ நன்கு தெளிவாய். ஆதலின், 'சிவபெருமானே முதற் கடவுள்; ஏனையோர் முதற்கடவுள் அல்லர்' என்று வரை யறுத்துக் கூறுவோர் பதியின் பிறப்பின்மையையும் 'பசுக் களின் பிறப்பு உண்மையையுமாகிய அவர்தம் தன்னி யல்புபற்றிக் கூறுகின்றாரேயன்றி சிவன், மால், அயன், இந்திரன் இவர்தம் பெயர்கள், வடிவு, தொழில் ஆகிய பொது இயல்புபற்றிக் கூறுகின்றார் அல்லர் என்பதை அறிவாயாக. எனவே, பல் கோடியினராகிய தேவர்கள், உருத்திரர்கள், சிவர்கள் முதலிய அனைவர்தம் இயல்பு

களையும், யாவர்க்கும் முன்னோனும் முதல்வனுமாகிய பரமசிவனது இயல்பினையும் ஐயம் திரிபின்றித் தெளிக. சிவக்கூறுபற்றிக் கூறி வந்த இவையெல்லாம் சக்திக் கூறாய் நிற்கும் தேவியர் அனைவர்க்கும் பொருந்துதலையும் சிந்தித்து உணர்க. சக்திபற்றிச் சில சித்தாந்தக் கொள்கைகளை அடுத்த கடிதத்தில் விளக்குவேன். மேலும் ஐயங்கள் இருப்பின் நேரில் பேசுவோம்.

அன்பன்,
கார்த்திகேயன்.

# 14

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலம் பல விளைவதாகுக. இதுகாறும் எழுதிய கடிதங்களாலும் சம்புபட்ச அணுபட்ச விளக்கங்களாலும் இறைவன் தனது செயல்களைத் தனது சக்தியினாலேயே நடத்துகின்றான் என்பதை நீ நன்கு உணர்ந்திருப்பாய் எனக் கருதுகின்றேன். எனினும், இறைவனும் அவன் சக்தியும் ஒன்றா? அல்லது வேறா? என்ற ஐயம் நின்பால் எழலாம். இதனையும் தெளிவாக்குவேன்.

முதல்வனும் அவனது சக்தியும் வேறல்ல; ஒன்றே. இரண்டு பொருள்களை 'ஒன்று' என்பது எப்படி? கூறுவேன்; 'பொருள்' என்ற சொல் இரண்டு பொருள்களைத் தரும். 'சொல்லால் குறிக்கப் பெறுவன எல்லாம் பொருள் என்பது ஒன்று. இதுவே 'பொருள்' என்ற சொல்லின் நேர் பொருளாகும். 'பல பெற்றிகளுக்குச் (தன்மைகட்குச்) சார்பாய் நிற்கும் பொருள்' என்பது மற்றொன்று. இது பல வற்றிற்கும் பொதுவாய் நிற்கும் ஒரு பெயரை, அவற்றுள் தலைமையுடைய ஒன்றனை மட்டும் குறிப்பதாகக் கொள்ளப்படும் முறையில் வரும் பொருளாகும்.

பல பெற்றிகட்குச் சார்பாய் நிற்கும் பொருள், குணத்தை நோக்கி 'குணி' என்றும், அவயவத்தை நோக்கி 'அவயவி' என்றும், உடைமையை நோக்கி 'உடையது' என்றும், இங்ஙனம் பலவாறாகவும் கூறப்படும். இதற்கு அமைந்த நேர் சொல் 'முதல்' என்பது. எனினும், 'பொருள்' என்பது 'முதல்' என்னும் கருத்திலேயே பெரும்பாலும் வழக்கின் கண் உள்ளது. ஏனையவை குணம் அல்லது பண்பு, அவயவம் அல்லது சினை—உறுப்பு, உடைமை முதலிய சொற்களால் வழங்கப்பெறுகின்றன. 'முதல்' என்பதனை வடநூலார் 'திரவியம்' என வழங்குவர். 'திரவியமோ' தமிழில் 'பொருள்' என்றே வழங்கிவருகின்றது. இம்முறையில் நோக்கினால் சிவமும் சக்தியும் வேறு பொருள்கள் அல்ல; அஃதாவது, 'இரண்டும் இரண்டு முதல்கள் அல்ல; சக்தி குணமும், சிவம் அதனையுடைய குணியுமாகும். எனவே சிவம் முதலாகின்றது; சக்தி அதன் தன்மையாகின்றது. இதனால் முதலின்றி அதன் பெற்றி இல்லை; பெற்றி இன்றி முதல் இல்லை என்பது தெளிவாகின்றது. ஆகவே, சிவமும் சக்தியும் ஒருவாற்றான் இரண்டாகப் புலப்பட்டாலும் உண்மையில் அவை இரண்டும் ஒன்றேயாகும்.

சிவம் இன்றிச் சக்தியில்லை; சக்தியின்றிச் சிவமும் இல்லை, சிவமே சக்தி, சக்தியே சிவம் சிவஞான சித்தியாரும்,

> அருளது சக்தி யாகும்
> அரன்றனக் கருளை யின்றித்
> தெருள்சிவம் இல்லை; அந்தச்
> சிவம்அன் றிச் சக்தி இல்லை.[89]

என்று இதனைத் தெளிவாக்குவதைக் காணலாம். இக்கால அறிவியல் மேதை ஐன்ஸ்டைன் என்பார் தந்துள்ள $E = mc^2$ என்னும் மந்திரமும் (E—ஆற்றல்; m-பொருண்மை;

89. சித்தியார். 5. 9

C-ஒளிவேகம்) அம்மையப்பர் நிலையிலுள்ள இரகசியத்தை-அணுவின் அற்புத அமைப்பை—விளக்குகின்றது. 'சடமே சக்தி' என்று அம்மந்திரம் கூறுகின்றது. பொருண்மையே ஆற்றலாக மாறுகின்றது என்பது ஐன்ஸ்டைன் உணர்த்திய உண்மை. இவ்வாறு முதலுக்கும் அதன் பெற்றிக்கும் உள்ள பான்மை இயைபைத் தமிழில் 'தற் கிழமை' என்றும் வடமொழியில் சமவாயம், தாதான்மியம்' என்றும் வழங்கப் பெறுகின்றன, சிவன் ஒன்றேயாக அதன் சக்தி பலவாறாகச் செயற்படுகின்றது என்பதை முன்னரே விளக்கியுள்ளேன்.[90] அதனை ஈண்டு நினைவுகூர்க. ஒருவனாகிய இறைவன் பலவாய்ப் பரந்த எல்லா உலகு உயிர்களோடும் கலந்து நிற்கின்றான் என்பதை,

> நிலநீர் நெருப்புயிர்
> நீள்விசும்பு நிலாப்பகலோன்
> புலனாய மைந்தனோ
> டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்
> உலகே ழெனத்திசை
> பத்தெனத்தான் ஒருவனுமே
> பலவாகி நின்றவா
> தோணோக்கம் ஆடாமோ.[91]

என்று மணிவாசகப் பெருமானும் விளக்கியுள்ளதைக் கண்டுதெளிக. இதுதான் 'அவனது வியத்தகு சக்தி. சாதாரண மக்கட்கு விளங்காப் புதிர். ஒருவனாய் இருக்கும் இறைவன், பல பொருள்களிலும் நிறைந்து நிற்றற்குக் கதிரவன்—கதிர், விளக்கு—ஒளி என்ற எடுத்துக்காட்டுகளால் விளக்கின்மையை ஈண்டு நினைவு கூர்க.

பல் பொருள் சக்திகளைத் தொகுத்துக் கூறிவிளக்கினால் நினக்கு மேலும் தெளிவு பிறக்கும். இனி, 'பொருள்'

---

90. இயல்—2. ; கடிமம்—11. பக். (83—85)

91. திருவா. திருத்தோணோக்கம்—5

என்று சொல்லப்பெறுவன யாவும் தத்தம் அளவிற்குச் சக்திகளை யுடையவை. நியூட்டனின் விதிகளாலும் இதனை அறிந்து தெளியலாம். ஐம்பெரும் பூதங்களுள் ஆகாயமே பெரியது; ஏனைய பூதங்களின் சக்திகளைவிட இதன் சக்தி பெரியது. ஏனையவை யாவும் இதனுள் அடங்கி நிற்கின்றன. 'ஏனைய பூதங்கள் உள்ள இடங்களில் ஆகாயம் உள்ளது; ஆகாயம் உள்ள இடங்களிலெல்லாம் ஏனைய பூதங்கள் இல்லை'— என்பதைச் சிந்திக்க, எல்லாவற்றிலும் மிகப் பெரிய பொருளாகிய (பிரம்மம்—என்ற வட சொல்லின் பொருளும் இதுதான்) இறைவனது சக்தியை ஆகாயத்தோடு ஒப்புமைப் படுத்தி வழங்குவர் நம் நாட்டு ஞானச் செல்வர்கள். "தன்னருள் வெளிக்குளே, அகிலாண்ட கோடியெல்லாம் தங்கும் படிக்கு இச்சை வைத்து"[92] என்று தாயுமான அடிகளும் சிவத்தின் சொரூப இயல்பினைக் கூறுவதனால் இது தெளிவாகும். ஆகாயத்தை 'அருள் வெளி' என்று கூறியுள்ள நுட்பத்தை உணர்ந்து மகிழ்க. மேலும், அந்த ஞானச் செல்வர் பதியையே 'சுகாரம்பப் பெருவெளி', 'சித்தாந்தப் பேரொளி', 'தீதில் பொருள்', 'பூரண ஆனந்தப் பொருள்', 'பெரிய பொருள்' (பிரம்மம்) என்றெல்லாம் குறிப்பிடுவதைச் சிந்தித்து மகிழலாம்.[93] 'பொருள் வணக்கம்' என்ற பகுதியில் உள்ள' 12 திருப்பாடல்களும் இறைவனின் சொரூப—நிலையை விளக்குவதைப் படித்து உணர்ந்து தெளிக.

பூதம் முதலிய தத்துவங்களும் அவற்றின் காரியங்களாகிய உலகங்களும் 'மாயை' என்ற ஒரு பொருளாகும். இதனால் மாயை மிகப் பெரிய சக்தி என்பது தெளிவாகும். 'கன்மம்' என்பது இவ்வுலகங்களில் எங்கும் நடைபெறும் எல்லாச் செயல்களிலும் உண்டாகி எங்குச் செல்லினும்

---

92. தா, பா. பரசிவ வணக்கம்—1

93. ஷை. பொருள் வணக்கம்—1

அங்கு வந்து பயன் கொடுக்கக் கூடியதாக இருப்பதால், மாயையின் சக்தியளவிற்குக் கன்மத்தின் சக்தியும் நிறைந்து நிற்றல் விளங்கும். 'ஆணவம்' என்ற மூல மலத்தின் சக்தி அளவில்லாதனவாகிய அனைத்து உயிர்களையும் மறைத்து நிற்பதால் உயிரின் (சித்தின்) ஆற்றலளவிற்கு ஆணவத்தின் சக்தியும் நிறைந்துள்ளமையை அறியலாம்.

'ஆணவம், கன்மம், மாயை' என்னும் பாசங்களின் சக்தியாவும் சடசக்திகளாகும். இறைவனது சக்தி சிற்சக்தி; அறிவு வடிவமான சக்தி. தாயுமானவரும் 'சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே'[94] என்று இதனைக் குறிப்பிடுவதைக் கண்டு மகிழலாம்.

'பதி, பசு, பாசம்' என்பவற்றில் முதலிரண்டின் சக்திகளும் சிற்சக்திகள்; அஃதாவது அறிவு வடிவமான சக்திகள். பாசத்தின் சக்தி சடசக்தி; அறிவற்ற சக்தி. பதி பசு ஆகியவற்றின் சக்திகளிலும் பசுவின் சக்தி தூல சக்தி; இதனைச் 'சிற்றறிவு' என வழங்கலாம். அதாவது பசுவின் அறிவு, அஃது அடையும் பொருளின் தன்மையாக மாறிவிடும் தன்மையையும் உடையது. இதனைச் சித்தாந்தம் "சார்ந்ததன் வண்ணமாதல்' என்று பேசும். 'நிலத்தியல்பால் நீர் திரிந் தற்றாகும்'[95] என்ற உவமையால் இதனை வள்ளுவரும் விளக்கிப் போந்தார். இச் சிற்றறிவு—பசுவின் அறிவு—பாசத்தால் மறைக்கக் கூடியதாகின்றது.

பதியின் அறிவு இதற்கு நேர்மாறானது; அது தன்னை அடைந்த பொருள்களையெல்லாம் தன் வண்ணமாகச் செய்துவிடும் தன்மையது. இது தன்னை அறிவிப்பதற்குப் பிறிதொரு பொருளை வேண்டாதது; தானே

94. ஷ்டி தேசோமயானந்தம்—பாடல்கள் காண்க.

95. குறள்-452 (சிற்றினஞ் சேராமை)

அறிவதன்றியும் பிறிதொன்றினை துறிவிக்கவும் வல்லது. இவைபற்றியே இது 'சூக்குட சித்தி' என்றும் 'பேரறிவு' என்றும் வழங்கப்படுகின்றது. இத்தன்மைகளால் பதியின் அறிவு பாசத்தால் மறைக்கப்படும் தன்மையற்றதாகி விடுகின்றது. இத்தகைய நுண்ணிய பேரறிவாகிய சிற் சக்தியினால்தான் இறைவன் 'பார்க்குமிடம் எங்கு ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணாநந்தமாகித்'[96] திகழ் கின்றான். ஏனைய பொருள்கள் ஒவ்வோர் அளவில் நிற்பினும் அவை முழுநிறைவைப்—பரிபூரணத் தன்மை யைப்—பெற்றவை அல்ல. இறைவனாகிய முதற் பொருள் ஒன்றே பரிபூரணத்துவம் பெற்றிலங்குகின்றான் என்பதை அறிந்து தெளிக. பாரதியாரும்,

பரிபூரணனுக் கேஅடிமை
செய்து வாழ்வோம்.[97]

என்று 'சுதந்திரப் பள்ளு'வை முடிக்கும் இறுதியடியில் உள்ள 'பரிபூரணன்' என்ற சொல் இறைவன் ஒருவனையே முழு நிறைவுப் பொருள் என்று குறிப்பிடுவதாகக் கருத லாம்.

'பரிபூரணத்துவம்' என்பதுபற்றிச் சில சொற்கள். 'பூரணத்துவம்' என்பது பிற பொருளின் இன்மையன்று; பிற பொருள்களும் இருக்க, அவற்றின் சக்தியிலே தனது சக்தி உடலில் உயிர்போலக் கலந்து நிற்பதே பூரணத் துவம் ஆகும். இவ்வாறு எல்லாப் பொருள்களிலும் இறைவன் இரண்டறக் கலந்து நிற்கும் நிலையையே

பண்ணில் ஓசை;
பழத்தினில் இன்சுவை[98]

என்று பேசுவர் ஆளுடைய அடிகள். மெய்கண்டாரும்.

---

96. தா. பா. பரிபூரணானந்தம-பாடல்கள் தோறும் இச் சொற்றொடரைக் காணலாம்.

97. தே. கீ. சுதந்திரப்பள்ளு-5

98. தேவாரம் 5. 47 ;8

பண்ணையும் ஓசையும்
போலப் பழமதுவும்
எண்ணும் சுவையும் போல்
எங்குமாம் அண்ணல்தாள்[99]

என்று கூறுவர். இதுவே 'அத்துவிதம்' ஆகும் என்பதையும் அறிந்து தெளிவாயாக.

இதுகாறும் எழுதிய கடிதங்களில் 6—14 வரை இறைவனது பொதுவியல்புபற்றி ஒருவாறு விளக்கினேன். அடுத்து வரும் ஒரு சில கடிதங்களில் (15—17) இறைவனது உண்மை இயல்புபற்றி, அதாவது சொரூப இலக்கணம் பற்றி, விளக்குவேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 15

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன். இறைவன் உயிர்களின்மீது கொள்ளும் கருணையினால் ஐந்தொழில் புரியும் நிலையே அவனது பொதுவியல்பாகும் என்பதை நீ தெளிவாக அறிந்து கொண்டிருப்பாய். அவன் ஐந்தொழில் புரியாது தன் நிலையில் தான் நிற்றலே அவனது உண்மை இயல்பாகும். உண்மை இயல்பை சொரூப இலக்கணம் என்றும் வழங்குவர். ஐந்து தொழில்களைப் புரியுமிடத்து இறைவன் அவற்றிற்கேற்ற வடிவும் பெயரும் கொண்டு வரையறைப்பட்டுப் பலவாகி நிற்பன் என்பதை நீ நன்கு அறிவாய். அத்தொழில்களைப் புரியாமல் அவன் வாளா இருக்கும் போது வடிவு பெயர் முதலியன ஒன்றும் இன்றி எல்லையற்ற பொருளாக நிற்பன். இதுவே அவனது

99. சி. ஞா. போ. சூத்-2: அதி, 1

சொரூப நிலை; உண்மை இயல்பாகும் என்பதை அறிவாயாக.

இறைவன் உயிர்களால் அறியப்படுபவனும் அல்லன்; அறியப்படாதவனும் அல்லன். இவ்விரண்டு பண்புகளும் அவனிடம் பொருந்தியுள்ளன. இதனை விளக்குவது இன்றியமையாததாகின்றது. 'உயிர்களால் அறியப்படாதன் இறைவன்' என்பதற்கு 'ஏனைய பசு பாசங்களை அறியும் முறையில் அறியப்படாதவன்' என்பது பொருளாகும். 'அறியப்படுபவன்' என்பதற்கு 'வேறு முறையில் அறியப்படுபவன்' என்பது பொருளாகும். இதனை மேலும் தெளிவிப்பேன். 'அருவம், உருவம், அருவுருவம்' என்று மூவகையாகக் கூறிய பொருள்கள் யாவும் பாசப் பொருள்கள்; அவற்றை உயிர் கண் முதலிய புறக்கருவிகளையும் மனம் முதலிய அகக்கருவிகளையும் வாயிலாகக் கொண்டு அறியும். அங்ஙனம் அறியுமிடத்து உயிர் தன் உண்மை நிலையை அறியாமல், தனக்கு வேறாய அப்பொருள்களே தான் என்று மயங்கி அறியும் இவ்வறிவு 'பாச அறிவு' அல்லது 'பாச ஞானம்' என்று வழங்கப்பெறும், 'சுட்டறிவு' எனப்படுவதும் இதுவே. அறிதற்கருவிகளாகிய பொறிகளும், அவற்றால் அறியப்படும் பொருளாகிய புலன்களும் ஆகிய அனைத்தும் பாசமேயாதலின், 'பாசத்தைப் பற்றி நின்று, பாசத்தை அறியும் அறிவு பாச அறிவாம்' என்பதை உளங்கொள்வாயாக.

இங்ஙனம் பாசங்களையே தானாக மயங்கி அறிந்து வரும் உயிர் அறிவு முதிர முதிர கருவியும் பொருளும் ஆகிய அனைத்தும் சடப்பொருள் (அறிவில் பொருள்) ஆகும் என்பதன்றிச் சித்துப் பொருள் (அறிவுடைப் பொருள்) ஆகாமையையும் அறியும். மேலும், தான் சித்துப் பொருள் என்பதையும் அறிந்து தன்னை அவை அனைத்தினும் வேறாகவும் காணும். இங்ஙனம் காணுங்கால் கருவி கரணங்களுக்குத் தான் முதல்வனாதலை

உணரும். இவ்வுணர்வு தன்னையே பதிப் பொருளாக மயங்கி அறியச் செய்யும். இந்த அறிவுதான் 'பசு அறிவு' அல்லது 'பசு ஞானம்' என்று வழங்கப்பெறும். உயிர் பாசத்துக்குட்பட்ட பசுவாதலால், 'பசுவிற்குமேல் உள்ள பதிப் பொருளை அறியமாட்டாது, பசுவையே பதியாக அறிந்து நிற்கும் அறிவு பசு அறிவாம்' என்பதைக் கருத்தினில் இருத்துக.

இக்கருதினை மேலும் விளக்குவதற்கு திருநாவுக்கரசரின் திருமொழியைத் துணையாகக் கொள்ளலாம்.

மைப்படிந்த கண்ணாளும் தானும் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னின் அல்லான்;
ஒப்புடையன் அல்லன்; ஒருவன் அல்லன்;
ஓர்ஊரன் அல்லன்; ஓர்உவமன் இல்லி;
அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்
அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவன்இறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே.[100]

இறைவனின் சொரூப நிலையை விளக்குவதற்கு இத்திருத்தாண்டகம் நல்லதோர் எடுத்துக் காட்டு. இதிலுள்ள "இப்படியன்...காட்டொணாதே' என்ற பகுதி 'இறைவன் பாசஞான பசு ஞானங்கட்கு அகப்படாதவன்' என்பதே கருத்தாதலைக் கண்டு தெளிக.

மேலும், உயிர்கள் பெரும்பான்மையும் அறிவது பாசங்களையே. அப்பாசங்கள் 'அருவம், உருவம், அருவுருவம்' என்னும் மூன்று கூறுகளையுடையன. இம்முக்கூறுகளில் ஒன்றிலும் இறைவனது தன்மை அகப்படாதது. இதனை வியந்தே,

எந்தை யாரவர்
எவ்வகை யார்கொலோ[101]

100. தேவாரம் 6.97:10
101. ஷெ 3.54:3

என்ற ஞானசம்பந்தப் பெருமானின் திருமொழியும் எழுந்தது. இவ்வெடுத்துக்காட்டுகளால் இறைவனைச் 'சொல்லொணாத பொருள்' என்றோ, 'ஐயத்திற்குரிய பொருள்' என்றோ கருதி மயங்குதல் கூடாது என்பதையும் அறிந்து தெளிக.

இறைவனை 'மன வாக்குகளைக் கடந்தவன்' என்று கூறுவதிலும் உண்மைப் பொருள் உண்டு. 'மனம்' என்பது பசு ஞானத்தையும் 'வாக்கு' என்பது பாச ஞானத்தையும் குறிக்கும் என்பதையும் உணர்வாயாக.

இந்த இரண்டுவித ஞானங்களாலும் இறைவனது சொரூப நிலையை அறிதல் இயலாது. ஆகவே, இவ்வகையில் இறைவன் உயிர்களால் அறியக் கூடாதவனாகின்றான். இங்ஙனம் எவ்வகையிலும் யாரும் எப்பொழுதும் அறியாத பொருள் ஒன்று உள்ளது என்று கூறினால் அஃது உள்ளது எனக் கோடலே ஐயப்பாடாய் விடும். அதனால் பயன் விளைதலும் இயலாது. எடுத்துக்காட்டாக ஆமை மயிரா லான கம்பளியும், ஆகாயப்பூவாலான மாலையும் உள்ளன எனக் கூறின், அவற்றை யாவரே அறிய வல்லார்? அறிந்து பயன் கொள்வோர் யாவர்?

உணராத பொருள்சத் தென்னின்
ஒருபயன் இல்லை; தானும்
புணராது; நாமும் சென்று
பொருந்துவ தின்றாம் என்றும்;
தணவாத கருமம் ஒன்றும்
தருவதும் இல்லை; வானத்
திணரார்பூந் தொடையும் யாமைக்
கெழுமயிர்க் கயிறும் போலும்.[102]

என்பது சிவஞான சித்தியாரின் திருமொழி. இங்ஙனமே இறைவன் ஒரு காலத்தும் ஒருவராலும் அறியப்படான்

102. சித்தியார். 6.4

என்றிருக்குமாயின், அவன் உளன் என்பதும், அவனால் பயன் பெறுதலும் இல்லையாய் முடியும். ஆகவே, அவன் ஒருவகையில் அறியப்படுபவனே ஆவன். அஃதாவது, இறைவனது அருளையே தம் அறிவுக்குப் பற்றுக் கோடாகக் கொண்டு அறிதலாகும். இதுவே பதி ஞானம் எனப்படுவதாகும்.

இனி, பதி ஞானம் இன்னதென்பதை விளக்குவேன். உயிர் தான் அறிவுடைப் பொருள் என்பதை அறிந்தவுடன், தானே அறிவாய் இல்லாது, அறிவிப்பதொரு பொருளால் அறியும் அறிவாய் இருத்தலை உணரும். அவ்வகையில் உயிர் கண் முதலிய புறக்கருவிகளும், மனம் முதலிய அகக் கருவிகளும் முடவனுக்குக் கோல்போல் நின்று உதவுவதனால் அறிந்து வருதல் கண்கூடு. ஆனால், அக்கருவிகள் தாம் அல்ல என்று அவற்றினின்றும் நீங்கிய பின்னர் உயிர் தன்னைத் தான் அறிகின்ற நிலை உண்டாகின்றது. இந் நிலையில் கருவிகள் இல்லையாய் நீங்குகின்றன. இந்நிலையில் உயிருக்கு ஓர் அறிவு உண்டாகின்றது. இஃது எங்ஙனம் என ஊன்றி நோக்கினால் தன் அறிவுக்கு அறிவாய் நிற்கும் பதிப் பொருளினது அறிவு புலனாவதாகும். இதுவே 'பதி ஞானம்' என்று வழங்கப்படுவது. ஒருவாறு புலப்பட்ட அப் பதி ஞானத்தை விடாது பற்றி நின்று, முன் கண்டு கழித்த பாச ஞானத்தில் செல்லாது நின்றால், அந்தப் பதி ஞானத்திற்குப் பதிப் பொருள் இனிது விளங்குவதாகும். பதி ஞானத்தால் இறைவனை அறிவதையே சைவசமயாச்சாரியர்கள் 'அருட்கண்ணால் காணுதல்' எனக் கூறுவர். மேற் குறித்த அப்பரடிகளின் திருத்தாண்டகத்தில் (6.97 : 10) 'காட்டொணாதே' எனக் கூறப்பட்டதாயினும், 'அவன் அருளே கண்ணாகக் காணின் அல்லால்' என்ற தொடர் காணப்படுகின்றதன்றோ? இதனால் 'அருளே கண்ணாகக் காணின் காணலாகும்; அக்கண் இல்லாதார்க்கு எவ்வகையிலும் காட்டொணாது' என்பது தெளிவாகின்ற தன்றோ? பிறிதோர் இடத்திலும் இப் பெருமான்,

நின் அருட்கண்ணால்
நோக்காதார் அல்லாதாரே[103]

என்று கூறுவதையும் கண்டு கொள்க.

அவனருளாலே
அவன்தாள் வணங்கி[104]

என்ற மணிவாசகப் பெருமானின் அநுபூதி வாக்கினையும் காண்க. இதனையே,

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி [105]

என்று மெய்கண்டாரும்,

பாசஞா னத்தாலும் பசுஞா னத்தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞா னத்தாலே
நேசமொடும் உள்ளத்தே நாடி [106]

என்று அருணந்தி தேவநாயனாரும் தெளிவுறுத்துகின்றனர். ஆகவே, 'இறைவனது உண்மை நிலை அருவத்தையும் கடந்தது' என்பதும், 'அந்த நிலை பாச ஞானம், பசுஞானம் இவற்றால் அறியப்படாது, பதி ஞானத்தால் மட்டிலுமே அறியப்படும்' என்பதும் தெளிவாகின்றனவன்றோ? பதியாவான் சிவனேயாதலின் 'பதி ஞானம்' என்பது சிவ ஞானமே என்பதையும் அறிந்து தெளிக.

மேலும், 'இறைவன் பதி ஞானத்தால்தான் அறியப்படுபவன்' என்பதை இறைவனை அறிந்து அநுபவிப்போரின் திருவாக்குகளாலும் தெளிவாகும்.

---

103. தேவாரம்—
104. திருவா. சிவபு. அடி. 18
105. சி. ஞா. போ. சூ. 9
106. சித்தியார். 9.1

தோடுடைய செவியன் விடையேறியோர்
தூவெண் மதிசூடி
காடுடைய சுடலைப் பொடிபூசிஎன்
உள்ளம் கவர்கள்வன் [107]

என்று அருளுவர் ஞான சம்பந்தப் பெருமான்.

தேடிக் கண்டுகொண்டேன்—திரு
மாலொடு நான்முகனும்
தேடித் தேடொணாத் தேவனை—என்னுளே
தேடிக் கண்டுகொண்டேன் [108]

என்று கூறுவர் அப்பர் அடிகள் தம் திரு அங்கமாலையில். இப்பெருமானே பிறிதோர் இடத்தில்,

என்,
புந்திவட் டத்திடைப் புக்குநின்
றானையும் பொய்யென்பெனோ? [109]

என்று மொழிவதையும் காணலாம்.

எத்தான்மற வாதே நினைக்
கின்றேன மனத்துன்னை
வைத்தாய் [110]

என்று நம்பியாரூரரும் நவின்றுள்ளதைக் காண்க. வாத வூடிகளும்,

இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன் [111]

என்று திருவாய் மலர்ந்துள்ளதையும் கண்டு தெளியலாம்.

---

107. தேவாரம். 1.1:1
108. ஷை. 4 9:12
109. ஷை. 4.98:1
110. ஷை. 7.1:1
111. திருவா. கோயில் திருப்பதிகம்-7

இங்ஙனம் அநுபூதிமான்களின் அநுபவ உரைகள் அளவில்லவாய்த் தோன்றி நின்று ஆண்டவன் அநுபவப் பொருளாய் நிற்றலை அரண் செய்கின்றன. இவை யாவும் பதிஞானத்தால் விளைந்த அநுபவங்களேயாகும் என்பதையும் உணர்ந்து தெளிந்து உளங் கொள்க. இந்த உணர்வை சித்தாந்திகள் 'பாரிசேடப் பிரமாணம்'[112] (ஒழிபு அளவை) என்று கூறுவர்.

பாசத்திற் கட்டுப்பட்ட உயிர்களின் அறிவும் அவற்றின் கருவிகரணங்களுமே பசுஞானம் என்றும் பசுகரணம் என்றும் பெரியோர்கள் சொல்லுவர். அன்றியும், பாசத்தினின்றும் விடுபட்ட சீவன் முத்தர்களாகிய பெரியோர்களின் அறிவும் கருவிகரணங்களும் சிவபோகமாயும் சிவகரணங்களாயும் நிற்கும் என்றும் அவர்கள் பகர்வர். இக்கருத்துகளையும் தெளிவுறுத்துவேன். பழுக்கக் காய்ச்சிய இரும்பு ஒளி வீசுகின்றதைக் கண்டிருப்பாய். இங்ஙனம் ஒளி வீசுவது எது? இரும்பா? நெருப்பா? இதனை ஊன்றி நோக்கின் ஒளி வீசுவது நெருப்பு என்பது தெளிவாகும். அதுபோல, சிவத்தைச் சார்ந்த உயிரும் அதன் கருவி கரணங்களும் இறைவனை அறிகின்றன என்று சொல்லும்போது, அந்த அறிவு இறைவனது அறிவு என்பது விளங்கும். ஆகவே, இறைவன் தன்னாலேதான் அறியப்படுபவனல்லது பிறவற்றால் அறியப்படுதல் எக்காலத்தும் இல்லை என்பதை அறிவாயாக.

மேலும், சிவம் ஒரு தன்மையுடையதன்றி, கதிரவனும் கதிரும் போல, தானும் தன் சக்தியும் என இருதன்மையுடையதாய் நிற்கும் என்பதை முன்னர் விளக்கியதை ஈண்டு நினைவு கூர்க. கண் கதிரவனை நோக்க வேண்டுமாயின் அவனது ஒளியாகிய கதிர்களின் வழியேதான்

---

112. மூவர் உள்ள இடத்தில் ஒரு பொருள் களவு செய்யப்படின், இருவர் கள்வர் அல்லர் என்பது தெளியப்பட்டால், மற்றொருவனே கள்வன் எனத் துணிதல் போல்வது.

நோக்க வேண்டும். அதுபோலவே, உயிர் சிவத்தை அடைய வேண்டுமாயின் அஃது அவனது சக்திவழியேதான் அடைய வேண்டும். அந்தச் சக்திதான் அருள்; அதனால் சக்திவழி அவனை அடைதலையே முன்னோர்கள், 'அவன் அருளே கண்ணாகக் காணுதல்' என்றும் 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' என்றும் அருளிச் செய்துள்ளனர் என்பதையும் அறிந்து தெளிக.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 16

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைவதாகுக. 'இறைவன் பாச ஞான பசு ஞானங்களால் அறியப்பட்டான்' என்பதையும் 'பசு ஞானத்தால் அறியப்படுவான்' என்பதையும் ஐயமறத் தெளிந்திருப்பாய் எனக் கருதுகிறேன். இனி, அவற்றால் அறிய வேண்டுவன வேறு சிலவும் உள்ளன. அவற்றையும் ஈண்டு விளக்குவேன்.

இறைவனது உண்மை இயல்பை-சொரூப இலக்கணத்தை-உபநிடதங்கள் 'சத்து, சித்து, ஆனந்தம்' என்று மூன்று தன்மைகளாக அடக்கிக்கூறும். இவற்றுள் 'சத்து' என்பதற்கு 'உண்மை' என்பது பொருள். உண்மை என்பது உளவாந் தன்மை என்றும் எல்லாப் பொருள்களும் உள்ளனவன்றி, இல்லாதது ஒன்றும் இல்லையாதலின்—அஃதாவது, 'இல்லது வாராது; உள்ளது போகாது' என்பது சற்காரியவாதத்தை அடிப்படையாகக் கொண்ட சைவசித்தாந்தமாதலின் 'பொருள்' எனப்படுவன யாவும் சத்தேயாகும். ஆகவே, பதியின் உண்மை இயல்பாகச் சொல்லப்படும் 'சத்து' என்பதற்கு 'நிலை பேறு' அஃதாவது, 'என்றும் ஒரு படித்தாய் இருத்தல்' என்றே பொருள் கொள்வார் பேரருட் செல்

வராகிய மெய்கண்டார். அவர் கருத்துப்படி 'சத்து' என் பதை 'மெய்' என்றுதான் கூறவேண்டும். மெய்ம்மை யாவது, என்றும் மாற்றமேயின்றி ஒரு படித்தாய் நிலைத்து நிற்கும் தன்மையாகும். திருவள்ளுவப் பெருந்தகையும் முதற்பொருளை 'மெய்ப்பொருள்' [113] என்றும், அதனையுணர் தலை 'மெய்யுணர்தல்' [114] என்றும் கூறுவதை நினைவுகூர்க. 'செம்பொருள்' [115] என்று அவர் குறிப்பிடுவதும் இப்பொருளில் தான் என்பதையும் சிந்தித்து அறிக. எனினும், உபநிடதங் களின் வழக்குபற்றி முதற்பொருளை 'உள்ளது' எனவும் கூறுகின்றார். மெய்ப்பொருள் செம்பொருள் என அவ் வறிஞர் பெருமான் கூறுவதை நோக்கி 'உள்ளது' என்பதற்கு, மெய்கண்டார் கூறியவாறு, 'என்றும் ஒரு படித்தாய் உள்ளது' என்பதே பொருளாகும் என்பது அவர்க்கும் கருத்தாகும் என்று தெளியலாம்.

'சத்து' என்பது 'என்றும் ஒரு படித்தால் உள்ளது' என்பதைத் தெளிந்தபின், மாறுதல் அடையும் பொருள்கள் 'அசத்து' என்பது தானே விளங்கும். இதில் 'அசத்து' என்பதற்கு 'நிலையாமை' என்பது பொருளாகின்றது. ஆகவே, வள்ளுவப் பெருந்தகையும் 'நிலையாமை [116]

113. குறள்—355 'மெய்ப்பொருள் காண்பது அறிவு.'

114. ஷை—அதி. 36. 'அதாவது பிறப்பு வீடுகளையும், அவற் றின் காரணங்களையும் விபரீத ஐயங்களானன்றி உண்மையான் உணர்தல்' (பரிமேலழகர்). இதனை வடநூலார் 'தத்துவ ஞானம்' என்பர்.

115. ஷை. 358. 'சிறப்பென்னும் செம்பொருள் காண்பது அறிவு'. "தோற்றக் கேடுகளின்மையின் நித்தமாய், நோன்மை யால் தன்னையொன்றும் கலத்தலின்மையின் தூய்தாய்த், தான் எல்லாவற்றையும் கலந்து நிற்கின்ற முதற்பொருள் விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மைத்தாதல்பற்றி அதனைச் 'செம் பொருள்' என்றார்" (பரிமேலழகர்).

116. அதி. 34

என்னும் அதிகாரத்தில் ~~என்புதை~~ உலகம் அசத்தாலையே விளக்கினார் என்று அறிக.

> நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
> புல்லறி வாண்மை கடை [117]

என்னும் குறளில் 'அசத்தைச் சத்து என்று கருதி மயங்கும் மயக்கமே அஞ்ஞானம்' என்று கூறப் பெற்றதை உய்த்துணர்க. 'சத்து' என்ற சொல் 'உள்ளது' என்றே பொருள்பட்டு வேறு பொருள் படாமையின், எல்லாப் பொருளையும் உள்பொருளாகக் கொள்வார்க்கு 'அசத்து' என்பதே இல்லாததாய் முடியும் என்பாரை நோக்கி,

> உண்டுபோல் இன்றாம் பண்பின்
> உலகினை அசத்தும் என்பர் [118]

என்று அருணந்தி சிவாச்சாரியர் கூறுவதையும் அறியலாம். அதாவது, 'எல்லாப் பொருளும் உள்ளனவே யாயினும், சில பொருள்கள் முன் உள்ளனபோலக் காணப்பட்டுப் பின் இல்லனவாய் ஒழிதல்பற்றி அவற்றை அசத்து என்றும் கூறுவர் உயர்ந்தோர்' என்பது இதன் கருத்தாதலை அறிக. 'அசத்தாவது நிலையில்லாதது' என்பதால், 'சத்தாவது நிலை பேறுடையது' என்பது தானே விளக்கமாகின்றது. 'மெய்யாவது நிலைபேறுடையது' என்று மேலே கூறியதனாலேயே 'பொய்யாவது நிலையில்லாதது' என்பதும் இனிது விளங்குகின்றதன்றோ? எனவே, சத்தென்பது மெய்ம்மை; அதாவது என்றும் ஒரு படித்தாயிருக்கும் பதி ஒன்றே சத்து என்பது முடிவாகின்றது.

அடுத்து, சித்து என்பதை விளக்குவேன். 'சித்து' என்பது அறிவு, அஃதாவது எல்லாவற்றையும், எப்பொழுதும், தானே அறியும் அறிவாகும். இதுசிற்றறிவினைக் குறியாமல்

---

117. குறள். 331
118. சித்தியார்.

பேரறிவினையே குறிக்கும் என்பதை நீ அறிதல் வேண்டும். ஏனெனில், ஒன்றை அறியுங்கால் மற்றொன்றை அறியாது ஒவ்வொன்றாய் அறிதலும் ஒருகால் அறிந்து மற்றொருகால் அறியாது நிற்றலும், தானே அறியாது பிறர் அறிவித்தபின் அறிதலும் அறிவு எனப்படாது. ஆதலின், இக்குறைபாடுகள் எல்லாம் உயிர்கட்கு உண்டு. அதனால்,

> பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்கு
> அறிவு என்ற பேர்நன்று அற [119]

என்று கூறுவர் உமாபதி தேவ நாயனார். இதனை ஈண்டு நீ சிந்தித்து அறிக. இதனால் இறைவன் இக்குறைபாடுகளுள் ஒன்றும் இல்லாத பேரறிவினையுடையவன் ஆகின்றான் என்பது தெளிவாகின்றது. இவனே 'சித்துப் பொருள்' ஆகின்றான்.

இனி 'ஆனந்தம்' என்பதனை விளக்குவேன். 'ஆனந்தம்' என்பது இன்பம். அஃதாவது எல்லையற்ற இன்பத்துக்கு எல்லையாவன நிலையாமையும் துன்பமும் ஆகும். இவ்விரண்டும் இல்லாத இன்பமே இவண் குறிப்பிடுவது. இதுவே 'பேரின்பம்' என்றும் 'நிரதிசயானந்தம்' என்றும் குறிக்கப்பெறும். இதனை 'மெய்யறிவின்பம்' என்றும் கூறலாம். ஆகவே சத்தாவும், சித்தாவும், ஆனந்தமாயும் நிற்றலே பதியினது உண்மை இயல்பாகின்றது. உண்மை இயல்புகளாக வேறு பல கூறப்படினும், அவையெல்லாம் இவற்றுள் அடங்குவனவாகும். இம் மூன்று சொற்களும் (சத்து + சித்து + ஆனந்தம்) ஒன்றாகச் சேரும் பொழுது 'சச்சிதானந்தம்' ஆகின்றன. இதனால் இறைவனும் 'சச்சிதானந்தம்' என்று வழங்கப்பெறுகின்றான் என்பதையும் அறிந்து தெளிக.

உபநிடதங்கள் சத்து, சித்து ஆனந்தம், என மூன்றாகச் 'சுருங்கக்' கூறுவதை சைவ ஆகமங்கள் ஆறாகவும் எட்டாக

---

119. திருவருட்பயன்—2.5

வும் விரித்துக் கூறும். ஆறாகக் கூறப்படுவன தன்வயம், முற்றும் உணர்தல், இயற்கை உணர்வு, பேரருள், முடிவில் ஆற்றல், வரம்பில் இன்பம் என்பன. இவற்றுள் தன்வயம் சத்தென்பதைக் கூறியதாகும். வரம்பில் இன்பம் என்பது ஆனந்தத்தைக் கூறியதாகும். ஏனைய நான்கும் சித்து என்பதை விரித்துக் கூறியனவாகும். 'ஆறு குணங்களை யுடையவன்' (ஷாட் குண்யன்) என்று கூறப்படுவதையும் தெளிக.

இனி, எட்டு எனப்படுவன: மேற் கூறியவற்றுடன் தூய்மை, இயல்பாகவே பாசங்கள் இன்மை என்னும் இரண்டும் கூட்டிச் சொல்லப்படுவனவாம். இவை இரண்டும் 'சத்து' என்பதன் விரிவாகும். பாசத்தால் பற்றப்படாது தூயதாய் நிற்றல் நிலைபேறுடைய தன்மையினால் ஆவதாதலின் அவை 'சத்து' என்பதனுள் அடங்குவனவாயின என்பதை அறிக. இங்ஙனம் எண் குணங்களும் மூன்றில் அடங்குதல் அறிக.

திருவள்ளுவரும் இறைவன் எட்டு குணங்களை யுடையவன் என்பதை,

> கோளில் பொறியிற் குணம்இலவே எண்குணத்தான்
> தாளை வணங்காத் தலை. [120]

என்ற குறளில் குறித்தருளினார். திருமுறைகளிலும் இறைவன் எட்டுக் குணங்களையுடையவனாகப் பேசப் பெறுகின்றான்.

> எட்டுவான் குணத்தீசன்
> எம்மான் தன்னை [121]

> எட்டுக் கொலாம்அவர்
> ஈறில் பெருங்குணம், [122]

என்று திருநாவுக்கரசரும்,

---

120. குறள். 9
121. தேவாரம் 5.89:8
122. ஷை. 4.18:8

இரும்புயர்ந்த மூவிலைய சூலத்தி னானை
இறையவனை மறையவனை எண்குணத்தி
னானை [123]

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளும் கூறுவதால் இதனை அறியலாம். இன்னும், பதியினது தன்னியல்பை இந்த இயலின் தொடக்கத்தில் குறிப்பிட்ட 'பல்கலை ஆகம வேதம்' [124] என்ற திருப்பாடலில் கூறுவன பலவும் மூன்று, ஆறு, எட்டு என்பனவற்றின் விரிவே யாதல் என்பதை அறிந்து தெளிக.

அன்பன்,
கார்த்திகேயன்.

# 17

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைந்திடுக.

இக்கடிதத்தில் இறைவனது அருட்குணங்களின் இன்றியமையாத இயல்புகளாதலை விளக்குவேன். அருட்குணங்கள் தன்வயம், தூய உடம்பு, இயற்கை உணர்வு, முற்றுணர்வு, இயல்பாகவே பாசமின்மை, பேரருள், முடிவிலாற்றல், வரம்பிலின்பம் என்பனவாகும் என்பதை நீ நன்கு அறிவாய், இவை ஒவ்வொன்றும்பற்றி இயன்ற அளவு எடுத்துக்காட்டுகளுடன் தெளிவிப்பேன்.

தன்வயம் உடைமை : இது வடமொழியில் சுதந்திரத்துவம் (சுவதந்திரதை) என்று வழங்கப்பெறும். எவ்விடத்தும் தலைவராய் இருப்போர் அவர் பிறர் வழிபட்டு நடத்தற்குரிய தகுதியைப் பெற்றிருத்தல்வேண்டும். அப்பொழுதுதான் அவர் தாம் விரும்பும் செயல்களை

123. தே. 7.40:3

124. சிவப்பிரகாசம். 13

விரும்பியவாறே செய்தல் கூடும். இத்தன்மையை அப்பர் பெருமான்,

> தாம்ஆர்க்கும் குடியல்லாத்
> தன்மையான சங்கரன்.[125]

என்று அருளிச்செய்துள்ளார். சிவபெருமானின் அற்புதச் செயல்கள் பலவும் இத்தலைமைத் தன்மையை விளக்குவனவாகும். காமனை எரித்தது, நஞ்சை உண்டது, தாருகாவனத்து முனிவர்களின் கொடுஞ் செயலால் தாக்குண்ணாது நின்றது போன்ற வரலாறுகள் பலவும் அவன் பிறர் வயப்படாமையை எடுத்துக் காட்டும். காலனைக் காய்ந்தது, நான்முகனின் சிரங்கொய்தது, சிவபெருமானை விடுத்து அமுதம் பெறச் சென்ற தேவர்கட்கு ஆலகால விடம் கிடைத்தது போன்ற வரலாறுகள் பலவும் அவனது இச்சைப்படியே யாவும் நிகழ்தலாகிய தன்வயம் உடைமையை எடுத்துக் காட்டுவனவாகும். காலனும், திசைக் காவலனும், தேவர் பலரும் தம்வயம் உடையவராகாமையை இவ் வரலாறுகள் தெரிவிப்பன. இன்னும் காமனை எரித்த காலத்தில் திருமால் முதலிய பலரும் அவனைக் காக்கமாட்டாது ஒழிந்தமையும் அவர்களது தன் வயம் இன்மையைக் காட்டுவதாகும். இங்ஙனம் எவ்விடத்தும் யாவர்க்கும் அடிமைப்படாது எங்கும்தானே யாவரையும் அடிமை கொண்டு தன் இச்சைப்படி எல்லாவற்றையும் நடத்துபவனே யாவர்க்கும் மேலான தனிப்பெருந்தலைவனாகின்றான். இதுபற்றியே சிவபெருமானை 'மகாதேவன்' என்றும், 'பெரியோன்' என்றும் தமிழ் நூல்கள் குறிக்கின்றன என்பதை உளங்கொள்க. இதனால் பதிப் பொருளுக்கு முதலாவதாக இன்றியமையாது வேண்டப்படும் குணம் தன் வயமுடைமையாதல் என்பது தெளிவாகின்றதன்றோ?

---

125. தேவாரம். 6.98:1

தூய உடம்புடைமை: இது வட மொழியில் 'விசுத்த தேகம்' என்று வழங்கப்பெறும். இறைவன் தன்வயத்தால் செய்யும் செயல்கள் யாவற்றையும் உடம்பின்றியே செய்யக் கூடுமாயினும், பிறர் பொருட்டுச் சிலவற்றை உடம் பொடு செய்யவேண்டியவனாகின்றான். எனவே, தூய உடம்புடையனாதல் அடுத்து வேண்டப் படுவதா கின்றது. உடம்புடையனாக நிற்பது இறைவனுக்குப் பொதுவியல்பாயினும், அந்த உடம்பு உயிர்களின் உடம்பு அவற்றின் வேறாதல் போல அவனின் வேறாதலின்றி ஒன்றேயாகும் என்பது கருத்தாதலின் உண்மை இயல்பா பாயிற்று.

இயற்கை உணர்வினனாதல்: இதனை வட மொழி யாளர் 'அநாதி போதம்' என வழங்குவர். தன்வயத்தனா யும் தூய உடம்பினனாயும் நிற்கும் இறைவனுக்கு பிற பொருளால் வரும் அறிவு செயற்கையாதல் சிறிதும் பொருந்தாது. அரசர் முதலிய தலைவர்கட்கு ஐம் பொறிகள், மனம் முதலிய அந்தக்கரணங்களாலும், தாய் தந்தையர் ஆசிரியர், சூழ்ச்சித் துணைவர், கருமத் துணைவர் முதலாயினோராலும் அறிவு செயற்கையாக நிகழ்தல் கண் கூடு. இதனால் அவரெல்லாம் உண்மைத் தலைவராகாராயினர். இறைவனது அறிவு அவ்வாறின்றித் தானே விளங்குதலால் அவன் ஒருவனே உண்மைத் தலைவனாகின்றான் என்பதைத் தெளிக. இந்த இயற்கை யறிவு 'சுயம் பிரகாசம்' எனவும் வழங்கப்படும். பிற பொருள்கள் விளக்க விளங்கும் அறிவு பரப்ரகாச மாகும்; அது சுதந்திரத்திற்கு இழுக்குமாகும். இதனால் அரசர்கள் 'சூழ்வார் கண்ணாக' (குறள்-455) ஒழுக வேண்டியுள்ளது. இறைவனோ அனைத்தையும் தன் சங்கற்பத்தினாலேயே செய்கின்றான். ஆகவே, இயற்கை உணர்வினனாகச் செயற்படுகின்றான் என்பதை உளங் கொள்க.

முற்றும் உணர்தல்: வட மொழியாளர் இதனைக் 'சர்வஞ்ஞதை' என்பர். எனவே இது 'சர்வஞ்ஞத்துவம்'

ஆகும். அறிவு செயற்கையாக நிகழாமல் இயற்கையாகவே விளங்கினும் அஃது ஒரு காலத்து ஒன்றையே அறியும் சிற்றறிவாய்விடின் பயனின்றாதலின், அனைத்தையும் எஞ்ஞான்றும் தன் இச்சைவழி நடத்த ஒருங்குணர் தலாகிய இஃது அடுத்து வேண்டப்படுவதாகின்றது. இம்முற்றுணர்வு இல்லாத காரணத்தாலேயே வேந்தர்கள் ஒன்றர்களையும் உரைசான்ற நூல்களையும் கண்ணாகக் (குறள்-581) கொள்ள வேண்டியவர்களாகின்றனர். இறைவனோ அனைத்தையும் ஏக காலத்தில் தானாகவே உணர்கின்றான்.

இயல்பாகவே பாசங்களின்மை: இது வடமொழியில் 'நிராமயம்' என்று வழங்கப்பெறும். ஆமயம்—நோய். அது பாசமாகும். நிராமயம் இயல்பாகவே பாசமின்மை யாகின்றது. இயற்கையாக விளங்குவதும், எல்லாவற்றை யும் ஒருங்குணர்வதுமான இறைவனது அறிவு பாசத்திற்கு மறுதலையாய நுண்ணிய தன்மையை உடையதென் பதைக் குறிக்கும். இறைவனது அறிவைப் பாசம் எவ்வாற் றானும் மறைக்கும் ஆற்றலைப் பெற்றிலது என்பதை உணர்க.

பேரருளுடைமை: இது வடமொழியில் 'அலுப்த சக்தி' என வழங்கப்பெறும். 'குறைவில்லாத ஆற்றல்' என்பது இதன் சொற்பொருள். ஈண்டு ஆற்றல் என்பது அருளையே; செயல் அடுத்துக் (ஏழாவதாக) கூறப்படுதலின் இங்ஙனம் கொள்ளப் பெற்றது. இறைவன் பேரருளுடைமையால், எல்லாவுயிர்களிடத்தும் எஞ்ஞான்றும் குறையாத கைம் மாறற்ற பெருங்கருணை அவனிடம் உண்டு என்பதைத் தெளிக. "பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து"[126] என்ற மணிவாசகப் பெருமானின் திருவாக்கும், பன்றிக் குட்டிக்குப் பால் கொடுத்தது போன்ற திருவிளை

126. திருவா. பிடித்தபத்து. 9

யாடல்களும் இக்குணம் இறைவனிடம் அமைந்துள்ளதை அரண் செய்கின்றன.

முடிவிலாற்றலுடைமை : 'அநந்த சக்தி' என்பது இதன் வடமொழிப் பெயர். ஈண்டு சக்தி' என்பது செயலாற்றலைக் குறிக்கின்றது. அருளுடைமை பயன் தருவது, செயலாற்றல் வன்மையுடையதாக இருக்கும்போதுதான் என்பது உண்மையாதலின் பேரருளுடைமையின் பின் அமைந்துள்ளது. இஃது இறைவன் திரிபுரத்தை நகைத் தெரித்தது, இராவணனைத் தன் கால் விரலால் அடர்த்தது போன்ற வரலாறுகளால் தெளியப்படும்.

வரம்பிலின்பம் உடைமை : இது வடமொழியில் 'திருப்தி' என்று வழங்கப்பெறும். இஃது இறைவன் எவ்வாற்றானும் யாதொரு குறையும் இல்லாதவன் என்பதை உணர்த்தும். யாதானும் குறையுடைய வனாயின், மேற் குறிப்பிட்ட குணங்கள் பலவும் இல்லா தொழியும். ஆகவே, இஃது இறுதியாக அமைந்த குணமாயிற்று.

இங்ஙனம் எண் குணங்களையுடையவன் இறைவனாதலால் அவனே எல்லாப் பொருளினும் பெரும் பொருளாதல் தெளியப்படுகின்றது. பெரும் பொருள் என்பதனையே உபநிடதங்கள் 'பரப் பிரம்மம்' எனக் கூறுகின்றன. பெரும் பொருள் எனவே, அகண்டிதப் பொருள் என்பது போதருகின்றது; தாயுமான அடிகளும் இப் பெரும் பொருளை,

> "பார்க்கும்இடம் எங்கும்ஒரு
> நீக்கமற நிறைகின்ற
> பரிபூர ணானந்தம்'[127]

என்றும்,

127. தா. பா. பரிபூரணானந்தம்

பெருஞ்வெளியாய் ஐம்பூதப் பிறப்பிடமாய்
பேசாத பெரிய மோனம்
வரும்இடமாய், மனமாதிக் கெட்டாத
பேரின்ப மயமாய்[128]

என்றும் இன்னும் பலவிதமாகவும் கூறியுள்ளவற்றை அறிந்து தெளிக. இப் பொருளே சிவன் என்பதை உளங் கொள்க.

அன்பன்,
கார்த்திகேயன்.

128. ஷ. பொருள் வணக்கம், 3

## பசு—உயிர்

அசித்தரு வியாப கம்போல
வியாபகம் அருவம் இன்றாய்
வசித்திட ஷ்ரும்பி யாபி
யெனும்வழக் குடைய னாகி
நசித்திடா ஞானச் செய்தி
அநாதியே மறைத்து நிற்கும்
பசுத்துவம் உடைய னாகிப்
பசுவென நிற்கும் ஆன்மா.[1]

எண்ணரிய நித்தமாய் இருள்மலத்தில் அழுந்தி
இருவினையின் தன்மைகளுக் கீடான யாக்கை
அண்ணலரு ளால்நண்ணி அவை அவரா யதனால்
அலகில்நிகழ் போகங்கள் அருந்தும் ஆற்றால்
புண்ணியபா வம்புரிந்து போக்குவர வுடைத்தாயப்
புணரும்இருள் மலபாகம் பொருந்தியக்கால் அருளல்
உள்நிலவும் ஒளியதனால் இருளகற்றிப் பாதம்
உற்றிடும்நற் பசுவருக்கம் எனஉரைப்பர் உணர்ந்தோர்.[2]

1. சித்தியார். 4.20
2. சிவப்பிரகாசம். 19

## 18

அன்புநிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைந்திடுக.

'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள்களில் பதியாகிய கடவுளை இல்லையெனக் கூறுவோர் அப்பொருளை அடியோடு மறுக்கின்றனர். காரணம், அவன் கண்ணுக்கேயன்றிக் கருத்திற்கும் எட்டாதவனாக உள்ளனன். ஆதலால் அவன் இருக்கின்றானோ? இல்லையோ? என்ற ஐயம் நம்மனோர்க்கு உண்டாகின்றது. அங்ஙனம் உண்டாதல் இயல்பும் எளிதுமாகின்றது. ஆகவே, கடவுள் உண்மையை நிலைநாட்டுவதற்குப் பல சான்றுகள் சாத்திரங்களில் பகரப்பெறுகின்றன. ஆனால் பசுவாகிய உயிர் அவ்வாறில்லை; அது கண்ணுக்குப் புலனாகாவிடினும், கருத்திற்குப் புலனாவதாக ஏற்றுக்கொள்ளுகின்றோம்.

இதனைச் சிறிது விளக்குவது இன்றியமையாததாகின்றது. 'உயிர் உள்ளது; உயிர் போயிற்று; உயிர் வந்தது; உயிர் வாழ்கின்றது' என்றாற்போல் உயிரை உலகின்கண் பல வகையில் தொடர்பு படுத்திக் கூறுதல் வழக்கமாக உள்ளது. இன்னும், 'இஃது உயிருள்ள பொருள்; இஃது உயிர் இல்லாத பொருள்' என்று நாம் சொல்லி வருவதையும் நீ அறிவாய். ஆகவே, உயிரை நாம் கண்ணால் காணாவிடினும் கருத்தால் உணர்ந்து பலவகையாகப் பேசுகின்றோம் என்பது உனக்குத் தெரியும். ஆகையால், 'இறைவன் இருக்கின்றானோ? இல்லையோ?' என்பன போன்ற ஐயம் உயிரைப்பற்றி ஒருவரிடையேயும் எழுவதில்லை. ஆயின், 'உயிர்' என்று நம்மால் உணரப்படுவது எது? அங்ஙனம் உணரப்பட்டு அப்பெயரால் வழங்கப் பெறுவது எது? என்பதே நம்மிடையே எழும் ஐயப்பாடு.

தெளிவாகக் கூறினால் உயிர் உண்மையை நாம் ஒப்புக் கொள்ளுகின்றோம். 'இன்னதுதான் உயிர்' என்பதை ஆராய்ந்து வரையறுப்பதில்தான் பல்வேறு கருத்துகள் எழுந்துள்ளன.

சமயவாதிகளிடையே பல்வேறு விதமாக 'இதுவே உயிர்; இதுவே உயிர்' என்று வரையறுத்துக் கூறுவதில்தான் கருத்து வேறுபாடுகள் காணப்பெறுகின்றன. ஆயினும், இச்சமயங்கள் பலவும் 'உயிர்' என்பதற்குக் கூறும் பொது இலக்கணம் 'அறிவுரு வாதல்' என்பதாகும். எனவே, 'உலகில் அறிவாய் நிற்பது எது?' என்பதை வரையறுத்து உணர்வதே 'உயிராவது இது' என்பதை உணர்வதாக அமைகின்றது. அறிவை வரையறுத்துக் கூறுவதில்தான் பல்வேறு கொள்கைகள் எழுந்துள்ளன. அவற்றின் பொருந்தாமையை மறுப்பதையே உயிருண்மை கூறுவதாக அமைத்துக் கொள்கின்றார் மெய்கண்டார். சிவஞான போதம் மூன்றாம் சூத்திரத்தில் இதனைக் காணலாம். இதனை அடுத்த கடிதத்தில் தெளிவாக்குவேன். அதற்குப் முன் உயிரைப்பற்றிச் சைவ சித்தாந்தம் கூறுவதைச் சுருக்க மாக எடுத்துக் காட்டுவேன். 'உயிர் என்பது அறிவுடையது; ஆயினும் இறைவனது அறிவுபோன்று பேரறிவுடைய தாகாது; அது சிற்றறிவுடையதாய் உள்ள பொருள்'— இதுவே சைவசித்தந்தம் கூறும் உயிரைப்பற்றிய சுருக்க மான கொள்கையாகும். இத்துடன் இக்கடிதத்தை நிறைவு செய்கின்றேன்.

அன்பன்,

கார்த்திகேயன்.

## 19

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன்.

உயிரின் இயல்புபற்றிப் பலரும் பலவகையிற் கூறும் கொள்கைகளையெல்லாம் சைவ சித்தாந்தம் பொறுமை

யுடன் கேட்டு உரிய மதிப்புத் தந்து நன்கு சிந்தித்துப் பார்த்து ஆராய்கின்றது. பொருந்தாதவற்றைக் காரணம் காட்டி விலக்குகின்றது. பிறகு இவற்றிற்கெல்லாம் அப்பாற் பட்ட சிறந்த புதிய பொருத்தமான கொள்கையின் அறிவு நெறிக்கு இணங்க ஆராய்ந்து காட்டி நிறுவுகின்றது. இது தான் மெய்கண்ட நூல்கள் நுவலும் சைவ சித்தாந்தம் என் னும் தனிப்பெருங் கொள்கையாகும். இத்தத்துவம் 'ஆன்ம இலக்கணம்'பற்றிப் பலர் கூறும் கருத்துகளை எங்ஙனம் ஆய்ந்து விலக்குகின்றது என்பதை ஒன்றிரண்டு கடிதங் களில் தெரிவிப்பேன்.

உடம்பு உயிராகாமை : மக்கள் முதல் தாவரம் ஈறாகக் காணப்படுகின்ற பிறவிகள் பலவற்றிலும் அவற்றினது அறிவு கண்ணிற்குப் புலனாகும் பரு உடம்பிற்கு (தூல தேகத்திற்கு) வேறாகக் காணப்படாமையால், பருஉடம்பே உயிர் அல்லது ஆன்மா என்பர் தேகான்ம வாதிகள். மேலும், அவர்கள் உடம்பு பூதங்களின் காரியமேயாத லானும் பூதங்கள் யாவும் சடமேயாதலானும் சடப் பொருளிலிருந்து அறிவு தோன்றாது என்பதில்லை. வெற்றிலை பாக்கு சுண்ணாம்பு என்ற மூன்று பொருள்கள் ஒன்றிலும் சிவப்பு நிறம் இல்லை. ஆயினும், இம்மூன்றும் ஒன்றுபடும் காலத்தில் முன்பு இல்லாத சிவப்புநிறம் தோன்றுகின்றது. அதுபோலவே, பூதங்கள் தனித்தனியாய் இருக்கும்பொழுது சடமாய் இருப்பினும், அவை ஒன்று கூடும்பொழுது முன்பு இல்லாத ஓர் அறிவு தோன்றும் என அவர்கள் வாதிப்பர். ஆனால் சற்காரியவாதம், காரண காரிய இயைபு முதலிய வழிகளில் அவர்கட்கு உண்மையை விளக்குதல் அரிது என்னும் கருத்தால் வேறு ஓர் எளிய முறையில் அவர்களது கொள்கையை மறுப்பர் மெய்கண்டார்.

அவர் கூறுவது: ஒவ்வொருவனும் தனது ஊர், தனது வீடு முதலியவற்றை 'எனது ஊர், எனது வீடு' என்று கூறுதல் போலவே, தனது உடம்பையும் 'எனது உடம்பு'

என்று தனக்கு வேறாகக் கூறுதல் அல்லது 'யான் உடம்பு' என்று உடம்பையே தானாகக் கூறுதல் இல்லை. இதனால் ஒவ்வொருவனும் தனது உடம்பிற்கு வேறாகத் தான் இருப்பது புலனாவதால் 'தான் அல்லது யான்' எனப்படும் உயிர் காணப்படுகின்ற பரு உடம்பின் வேறேயாகும் என்று தெளிவிப்பர்.

இதற்கும் ஒரு தடையை நிகழ்த்துவர் தேகான்ம வாதிகள். 'எனது உடம்பு' என்பதை 'எனது உயிர்', 'எனது அறிவு' என்பனபோல ஒற்றுமைக் கிழமைப் பொருளாகக் கொள்ளல் வேண்டுமேயன்றி 'எனது ஊர்', 'எனது வீடு' என்பனபோல் வேற்றுமைக் கிழமைப் பொருளாகக் கொள்ளலாகாது; மேலும் 'யான் பருத்தேன்; நீ இளைத்தாய்; அவன் கறுப்பன்; இவன் சிவப்பன்' என்றாற் போலக் கூறுவனவற்றில் 'யான், நீ, அவன்' முதலியவை உடம்பைக் குறித்து நிற்றல் வெளிப்படையன்றோ? என்பதே அத் தடை. அதற்குத் மெய்கண்டார் விடை கூறுவார். அவர் கூறுவது! 'எனது உயிர், எனது அறிவு' என்பன சிறுபான்மை அவ்வாறு வழங்குவதாகும். 'எனது கை, எனது கால், எனது தலை' என்றாற்போல்வன', 'எனது ஊர்' எனதுவீடு, எனது மாடு,' என்றாற் போலப் பெரும்பான்மையாக வரும் வேற்றுமைக் கிழமைப் பொருள்களேயாகும். தனக்கு வேறாகவுள்ள பொருள்களையும் அவற்றின் மீதுள்ள பற்றுக் காரணமாகத் தானாக மதித்தல் உண்டு என்பதை, ஒருவன் தனது ஆடை அணிகலன் முதலியவற்றையும் மனைவி மக்கள் முதலியோரையும் அவ்வாறு மதித்து அப் பொருளை உயிராக நினைக்கு மாற்றால் அறியலாம்; 'யான் பருத்தேன்' 'யான் இளைத்தேன்' என்றாற் போலக் கூறுவனவும் அங்ஙனம் மயங்கிக் கூறுவனவேயாகும்.

இதற்கு மேலும் சில விளக்கங்களைக் கூறுவர் அருணந்தி சிவாச்சாரியார். அவர் கூறுவது: 'உடம்பே அறிவுடைய உயிர் எனின், உடம்பு பிணமாகிவிட்ட பொழுது அதில் அறிவு காணப்படாததற்குக் காரணம்

என்ன? பிணமான உடம்பில் பூதங்களுள் ஒன்றாகிய காற்றுப்போல் ஆகிவிடுமாதலால் அறிவு இல்லை என்று சமாதானம் கூறினும் கூறலாம். ஆனால் உறக்கத்தில் காற்று இருக்கவும் அறிவு செயற்படவில்லை. ஆகவே, பரு உடம்பு உயிரன்று; உயிர் பருவுடம்பிற்கு வேறானதாகும், என்பது.

**ஐம்பொறிகள் உயிராகாமை :** மெய், வாய், கண், செவி, மூக்கு என்னும் ஐம்பொறிகளும் ஊறு, சுவை, ஒளி, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புலன்களையும் அறிவனவாதலா லும், அவற்றை அறிபவை ஐம்பொறிகளேயன்றி வேறில்லையாதலாலும் ஐம்பொறிகளே உயிர் என்பர் இந்திரிய வாதிகள். இக் கருத்தினை மறுத்து மெய்கண்டார் கூறுவது: "ஐம்பொறிகளே உயிர் எனின், ஒவ்வொரு பொறி ஒவ்வொரு புலனை அறிவதன்றி, மற்றைய புலன் களை அறிவதில்லை. ஒரு பொறி அறிவதனை மற்றொரு பொறி அறிய முடிவதில்லை. அன்றியும், ஐம்பொறிகள் பிறபொருள்களை அறியுமேயன்றித் தம்மையே தாம் அறியமாட்டா. அதாவது கண் உருவத்தை அறியும்; யான் 'கண்' என்றும், 'யான் உருவத்தைக் காண்கின்றேன்' என்றும் அறியமாட்டாது; அதனால், 'இதுகண்' என்றும், 'இஃது உருவத்தைக் காண்கின்றது' என்றும் அறிய முடி கின்றதில்லை. எனவே, ஐம்பொறிகளையும் தனித்தனியே இயக்கி அவ்வைம் பொறிகளாலும் ஐம்புலன்களை அறிந்து பயன் கொள்வதாகிய ஆன்மா இவற்றின் வேறு ஆகும். ஆயின் இவர்தம் கருத்தும் ஏற்புடைத்தன்று" என்ப தாகும்.

**நுண்ணுடம்பு உயிராகாமை :** 'மனம் முதலிய உட்கருவி களையுடைய நுண்ணுடம்பே (அக உடம்பே) ஐம்பொறி கள் வழியாகப் புலன்களை அறிவதால் அதுவே ஆன்மா வாகும்' என்பர் சூக்கும தேகான்மவாதிகள். 'நுண்ணுடம்பு கனவு நிலையில் செயற்பட்டு நிற்பது' என்பது அனைவர்க் கும் உடன்பாடு. ஆனால் 'நுண்ணுடம்பே உயிர் என்பதை

மெய் கண்டார் மறுக்கின்றார். அவர் கூறுவது: "நுண்ணுடம்பே உயிராயின் நாம் காண்கின்ற கனவுகள் யாவும் விழித்தபின் முன்பு கண்டது போலவே தெளிவாக அறிந்து சொல்லுதல் வேண்டும். ஏனெனில், கனவு கண்டதும், விழித்தபின் பருவுடம்பு வழியாகப் பிறவற்றை அறிவதும் ஒரு பொருளேயாதலின அவ்விடத்து மாறுதல் உண்டாவதற்குக் காரணம் இல்லை. அதாவது இல்லத்தில் உணவு கொண்ட ஒருவன் உடனே வெளியில் வருவானாயின், உண்ட உணவின் தன்மைகள் பலவற்றையும் அவன் தெளிவாக அறிந்து சொல்ல முடிகின்றது. அதுபோலவே, முதல் நாள் நடைபெற்ற நிகழ்ச்சிகளை மறுநாள் மறதியின்றித் தெளிவாகச் சொல்ல முடிகின்றது. இங்ஙனமே இரவில் கண்ட கனவை மறுநாள் காலையில் மறவாது நினைத்திருந்து சொல்லுதல் அநுபவத்தில் இல்லை. கனவு கண்டு கொண்டே இருப்பவன் உடனே விழித்துக் கொண்டாலும், அந்தக் கனவு அவனுக்குத் தெளிவாக விளங்காமல் போகின்றது. கனவு கண்டதையே அடியோடு மறந்தும் விடுகின்றான். இதற்குக் காரணம், புறவுடம்பில் நின்று நனவு நிலையில் நிகழ்வனவற்றை அறிவதும், அகவுடம்பில் நின்று கனவு நிலையில் நிகழ்வனவற்றை அறிவதும் ஆகிய பொருள் இவ்விரண்டு உடம்பிற்கும் வேறாய் இருப்பதேயாகும். அஃது அங்ஙனம் சூக்கும உடம்பிற்கு வேறாய் இருப்பதால் அதனைவிட்டு நனவு நிலையில் புறவுடம்பில் வந்த காலத்தில் முன் வேறு உடம்பில் நின்று அறிந்ததை மறப்பதாகின்றது; அல்லது தெளிவின்றி ஒருவாறு நினைப்பதாகின்றது. 'ஆகவே நுண்ணுடம்பு ஆன்மாவன்று. அது நுண்ணுடம்பின் வேறு" என்பது.

**அந்தக்கரணங்கள்[3] உயிராகாமை :** மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கையும் ஆன்மா என்பர்

3. அந்தக் கரணம்—உட்கருவி.

அந்தக்கரணான்மவாதிகள். இக்கொள்கையையும் மறுப்பர் மெய் கண்டார். அவர் கூறுவது: "ஐம்பொறிகள் அறிந்த புலனைச் சித்தம் சிந்தித்தறியும். மனம் அதனைப் பற்றிச் சங்கற்ப விகற்பம் செய்யும். ஆங்காரம் ஒருப்பட்டு எழும். புத்தி நிச்சயிக்கும். இங்கும் 'ஒன்று செய்யும் செயலை மற்றொன்று செய்ய அறியாது' என்னும் மறுப்பே போதிய தாகும். ஆகவே, அந்தக்கரணங்கள் ஆன்மா அல்ல; ஆன்மா அவற்றின் வேறு" என்பது.

பிராணவாயு உயிராகாமை: பிராண வாயுவையே ஆன்மா என்று கூறுவர் பிராணான்ம வாதிகள். இதற்கும் மறுப்பு உண்டு. அம்மறுப்பு: "உறக்கம் விழிப்பு என்ற இருதிற நிலைகளிலும் பிராணவாயு ஒரு தன்மையாகவே இயங்கிக் கொண்டு நிற்கின்றது; ஆயினும் உடம்புக்கு விழிப்பு நிலையில் மட்டுமே இன்ப துன்ப நுகர்ச்சி உள்ளது. உறக்க நிலையில் அவை இல்லை. ஒரு தன்மையாக இயங்கிக் கொண்டிருக்கும் பிராணவாயு இவ் வேறு பாட்டுக்குக் காரணமாதல் அமையாது. மேலும், காற்று அறிவில்லாத சடப் பொருள் என்பது எல்லோர்க்கும் உடன்பாடாக உள்ளது. சடப் பொருளை அறிவுடைமை எனக் கூறுதல் முருட்டுவாதமாகும். ஆகவே 'சுகமாகத் தூங்கினேன்' என்று சொல்லத் தக்க அநுபவமும் பிராணவாயு அல்லாத வேறொன்றினுடையது. அதுவே ஆன்மா என்ற வேறொரு பொருளாகும்" என்பது.

கருவிக் கூட்டம் உயிராகாமை ; 'ஐம்பொறிகள் முதலாகக் காட்சிப் பொருளாய் விளங்கும் கருவிகளும், மனம் முதலாகிய கருத்துப் பொருளாய் விளங்கும் கருவி களும் ஆகிய அனைத்தும் கூடிய தொகுதியே உயிர்' என்பர் சமுதாய ஆன்மவாதிகள். "இங்ஙனம் திரண்டு நிற்கும் பொருள்கள் அனைத்தும் மாயா காரியப் பொருள் களேயன்றி ஒன்றேனும் சித்துப் பொருளாகா. இவை ஒன்றாகத் திரண்டிருக்கும்பொழுது உடம்பு என்ற பெய

ரால் வழங்கப்பெறுதலன்றி உயிர் என்று வழங்கப்பெறுவ தில்லை. 'உடம்பு', 'உயிர்' என்னும் சொற்கள் வேறு வேறு பொருளைக் குறிக்க அமைந்த சொற்கள். 'உடம்பு' என்ற சொல்லால் குறிக்கப்பெறும் பொருளை 'உயிர்' என்னும் சொல்லால் குறிக்கப்பெறும் பொருளாகக் கொள்ளுதல் எவ்வாற்றானும் பொருந்தாது. சடப் பொருள்களின்றும் எவ்வாற்றானும் சித்துப் பொருள் தோன்ற மாட்டாது. ஆகவே, அனைத்துக் கருவிகளும் ஒருங்கு கூடி நிற்பினும் அவற்றிலிருந்து அறிவு தோன்று மாறில்லை. அத்தொகுதிகளிடமாக நிகழும் அறிவு அவை அனைத்திற்கும் வேறானதேயன்றி அவற்றில் உள்ளதன்று. அதனால் அறிவுப் பொருளாகிய உயிர் அத்தொகுதியின் வேறானது. ஆகவே, நன்கு உற்று நோக்கினால் ஒளி மறைந்த கண்ணுக்கு உருவத்தை அறிய உதவுகின்ற கண்ணாடி போல், அறிவை இழந்த உயிருக்குப் பொருள்களை அறிய உதவுகின்ற கருவியே உடம்பாவ தன்றி, உடம்பு எவ்வகையிலுல் உயிராகாது'' என்பது மெய்கண்டாரின் மறுப்பாகும்.

உயிர் சூனியம் ஆகாமை: இனி. இவற்றையெல்லாம் நோக்கிய பௌத்தர்கள் "அறிவு என்பது முதலில் பொது வாகப் பார்க்கும்பொழுது ஏதோ இருப்பது போலத் தோன்றினாலும், நன்கு துருவி ஆராயும்பொழுது 'அஃது' இன்னது என்று மெய்ப்பிக்க முடியாததாய் உள்ளது. ஆகவே, உயிர் என்பது ஒரு சூனியப் பொருளே'' என் கின்றனர். 'சூனியம்' என்பதற்கு அவர்கள் கொள்ளும் பொருள் 'இல்லது மன்றி உள்ளது மன்றி இருப்பது' என்பது. இதற்கு மெய்கண்டார் கூறும் மறுப்பு: "உயிர் சூனியமாயின் 'உயிர் சூனியமே' என்று உணர்வதும் உணர்ந்து 'சூனியம்தான் உயிர் எனப்படுகின்றது' என்று பிறர்க்கு உணர்த்துவதும் ஆகிய அந்த அறிவு உளதோ? இலதோ? 'இலது' எனின், தான் உணர்ந்தும், தான் உணர்ந்ததைப் பிறர்க்கு உணர்த்தியும் நிற்கும் அறிவை 'இலது' என்பது, தன்னைப் பெற்ற தாயை ஒருவன் 'என்

தாய் மலடி' எனக் கூறுவதோ டொக்கும். ஆதலின் அந்த அறிவு உள்ளதேயாம்; அதனால் அந்த அறிவுதான் உயிர் என்று இனிது நிறுவப்படும். ஆகவே சூனிய வாதிகளின் கூற்றும் சிறிதும் பொருந்தா தாகின்றது" என்பது.

உயிர் பரப்பிரம்மம் ஆகாமை: 'பரப்பிரம்மம் ஒன்றே உள்ளது; இரண்டாவது பொருள் இல்லை' என்னும் கொள்கையுடையவர்கள் ஏகான்மவாதிகள்.[4] ஆகையால் அவர்கள் "அறிவு வடிவாய் உள்ளது பரப்பிரம்மமே; அதுவானத்திலுள்ள ஒரு சந்திரன் பூமியிலுள்ள பல நீர் நிலைகளில் பல சந்திரர்களாய்ப் பிரதிபிப்பதுபோல, மாயையின் காரியமாகிய பல உடம்புகளில் பல சீவான் மாக்களாகப் பிரதிபிம்பிக்கின்றது. ஆகவே, உயிர் பரப் பிரம்மமே யன்றி வேறில்லை" எனக் கூறுவர். இவர்கள் கூற்றின் பொருந்தாமையையும் மெய்கண்டார் தெளிவாக விளக்குவார்.

அவர் கூறுவது: "'பரப்பிரம்மம் அறிவே வடிவானது' என்பதை ஒப்புக் கொண்டால், 'அதற்கு அறியாமையும் உண்டு' என்று கூறுதல் மாறுகோள் உரையாகும். ஏனெனில், 'சூரியன் ஒளியே வடிவானவன்' என்று சொல்லி விட்டு, அதே சமயத்தில் 'அவனிடத்தில் இருளும் உண்டு' என்பது எப்படிப் பொருந்தும்? இதுபோலத்தான் 'அறிவே வடிவமான பரப்பிரம்மம் அறியாமையையும் உடைய தாகும்' என்று கூறுதலும் பொருந்தாது. உலகில் உடம்பு தோறும் காணப்படுகின்ற உயிர்கள் பருவுடம்பாயும் நுண்ணுடம்பாயும் நிற்கும் கருவிகள் முழுவதும் செய லற்றிருக்கும் பேருறக்கத்தில், ஒன்றும் அறியாத பேர் அறியாமையில் அழுந்தியும், அக்கருவிகள் எந்த அளவிற்குச் செயற்படுகின்றனவோ அந்த அளவிற்கு அறிவைப் பெற்றும் நிற்கின்றன. உயிர்களை ஓர் அறிவுயிர், ஈரறிவுயிர் முதலாக ஆறறிவுயிர் வரையிலும் பகுத்துக் கூறுதல் அவற்றின் உடம்புவகைபற்றியேயாகும். ஆகவே, உயிர்

4. இவர்களை 'அத்வைதிகள்' என்றும் கூறுவர்.

இயற்கையில் அறியாமையை உடையதாய், பலவகை உடம்புகள் அவ்வறியாமையைச் சிறிது சிறிது நீக்கி அறிவை உண்டாக்கிய பின்னே அறியும் தன்மை உடையனவாதல் தெளிவு. ஆகவே, பரம்பிரம்மமே இவ்வாறு இயற்கையில் அறியாமையுடையதாய் நின்று, பின் கருவிகள் வந்து அறிவைத் தர அதனைப் பெறும்' என்று கூறின், அது, 'சூரியன் ஒளியைப் பெற்று விளங்குதல், உலகில் ஏற்றப் படும் சிறிய விளக்குகளினாலேயாம்' என்று கூறுவதனோ டொக்கும். சந்திரன், சூரியன் பூமியில் உள்ள நீர் நிலைகளில் பிரதிபலிக்குமாயின், அவ்விடத்திலும் அவை ஒளியுடைய தாய் இருளை ஓட்டுவதல்லது, இருளில் மூழ்குவதில்லை. அதுபோல, பரப்பிரம்மமே மாயையில் பிரதிபலிக்குமாயின் அவ்விடத்திலும் அது மாயையை ஒழிக்குமேயன்றி அதனால் மயங்கி விடாது. ஆகவே, மாயையில் அகப்பட்டு மயங்கி நிற்கின்ற உயிரை, 'அறிவே சொரூபமான பரப்பிரம்மத் தின் பிரதிபிம்பம்' எனக் கூறுதல் அறிவுடைமை ஆகாது; அஃது அறியாமை நிறைந்த கூற்றாகும்''.

மேலும், ''இரவியோ மதியோ நீரில் பிரதிபலிக்குமாயின் அவ்விடத்திலும் அவை இரவியாகவும் மதியாகவும் தோன்று மேயன்றி பிறகோள்களாகவும், விண்மீன்களாகவும் தோன்ற மாட்டா. அது போல, பரப்பிரம்மமே பல உடம்பு களில் பிரதிபலித்து நிற்குமாயின், அவ்விடங்களிலும் அது பரப்பிரம்மமாய் நிற்குமேயன்றி, சீவான்மாக்களாய் நில்லாது. ஆகவே, சீவான்மாக்கள், பரமான்மாவாகிய பரப்பிரம்மத்தின் பிரதி பலனாகக் கூறுதல் எவ்விதம் பொருந்தும்?''

இன்னும், ''உடம்புதோறும் காணப்படுகின்ற சீவான் மாக்கள், அவ்வுடற் கருவிகள் செயற்படும்பொழுது அறிவைப் பெறுகின்றன. அப்பொழுதும் பிற பொருள் களை அவ்வாறு அறிவனவன்றித் தம் சொரூபத்தைத் தாம் அறிவதில்லை. தம் சொரூபத்தை ஓர் ஆசிரியர் வந்து அறி விக்கவே அறிகின்றன. தம் சொரூபத்தை அறியாது பிற

பொருள்களை அறியும்பொழுதும் எல்லாப் பொருள் களையும் ஒருங்கே அறிவதில்லை. ஒவ்வொன்றாகவே அறி கின்றன. அஃதாவது, ஒரு பொருளை ஒரு கணத்திலும், மற்றொரு பொருளை அடுத்தக் கணத்திலுமாக அறி கின்றன. இவ்வாறு ஒவ்வொன்றாக அறியும்பொழுதும் இடைவிடாது அறிதலின்றி விட்டு விட்டே அறியும். அப் பொழுது நினைப்பையும் மறப்பையும் மாறி மாறிப் பெற்று நிற்கும். அறிந்தவற்றை மறக்கும் தன்மையும் உயிர் களுக்கு இருப்பது தெளிவு. இத்துணைக் குறைபாடு களுடைய சிற்றறிவாகிய உயிரைப் பேரறிவாகிய பரப் பிரம்மத்தின் பிரதிபிம்பம் எனக்கூறின் அது பொருள் களின் பெற்றியை நன்கு உணராது கூறும் கூற்றேயாகும். அதனால் ஏகான்மவாதிகள் (பிரம்மான்மவாதிகள்) 'சீவான் மாவும் பரமான்மாவேயன்றி வேறில்லை' எனக்கொண்டு 'நானே பிரம்மம்,' எனக் கூறிக்கொள்ளுதல் மயங்கிக் கூறிக் கொள்ளுதலாகும்.''

மற்றும், ''பரப்பிரம்மத்தின் அறிவு எஞ்ஞான்றும் தனக்குப் பிறிதொரு துணை வேண்டாது தானே விளங்கி நிற்பதாகலின், அது 'சுயம் பிரகாசம்' என்பதாகும். உயிரின் அறிவு அவ்வாறின்றி எஞ்ஞான்றும் யாதாயினும் ஒரு துணையைக்கொண்டே விளங்குவதாகலின் அது 'வியஞ்சகப் பிரகாசம்' என்பதாகும். அதனால் வியஞ்சகப் பிரகாச அறிவாகிய உயிர் எவ்வாற்றானும் சுயம்பிரகாச அறிவாகிய பரப்பிரம்மம் ஆமாறு இல்லை.''

பின்னும், ''பரப்பிரம்மத்தின் அறிவு பிறிதொன்றால் திரிபெய்தாது, எஞ்ஞான்றும் தன் தன்மையிலேயே நிற்பது. அதனால் அது சுதந்திரமான அறிவாகும். உயிரின் அறிவு அவ்வாறின்றி அடுத்தது காட்டும் பளிங்குபோல், அறியப் பட்ட பொருளின் தன்மையே தன் தன்மையாகத் திரிந்து நிற்கும் இயல்புடையது. அதனால் அது பரதந்திரமான அறிவு ஆகும். இதனை நன்குஉணர்ந்தால் பரதந்திர அறி வான உயிர் எவ்வாற்றானும் சுதந்திர அறிவான பரம் பிரம்மம் ஆமாறு இல்லை என்பது தெளியப்படும்.''

இவ்வாறு 'பரப்பிரம்மமே உயிர்' என்பாரது கூற்றுச் சிறிதும் பொருந்தாமையைத் தெளிவுறுத்துவர். இவ்வாறு உயிர்பற்றிய பல்லோர் கூற்றையும் 'அன்று, அன்று' என மறுத்து உயிர்பற்றிய தம் கொள்கையைக் கூறுகின்றார் மெய்கண்டார். இதனை அடுத்தக் கடிதத்தில் தெரிவிப்பேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

# 20

அன்பு நிறைந்த கண்ணுதலிப்பனுக்கு,

நலன். நலனே விளைந்திடுக,

இக் கடிதத்தில் உயிர்பற்றிய மெய் கண்டாரின் கொள்கையை விளக்குவேன். ஒரு பொருளை 'அஃது உண்டோ? இல்லையோ?' என்று ஆராய்வதற்கு முன்னர் அதன் இயல்பு இன்னது என்பதை ஒரு சிறிதேனும் உணர்தல் வேண்டும். 'அறியும் தன்மை உடையது உயிர்' என்பதை முன்பு பல இடத்தும் கூறியுள்ளேன். இது பொதுவாக யாவராலும் கொள்ளப்படுவது. இனி, 'உயிர் அறிவித்தால் அறியக்கூடியது; அறியுமிடத்தும் ஒவ்வொன்றாகவே அறிவது; அறிவதையும் விட்டுவிட்டே அறிவது; அங்ஙனம் அறியுங்கால் அறியப்பட்ட பொருளில் அழுந்தி அதுவேயாய் நின்று அறிவது—ஆகிய இயல்பினையுடைய அறிவுப் பொருளே உயிர் அல்லது ஆன்மாவாகும்' என்பதே மெய் கண்டார் கூறுவது.

அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்
நின்றொன் றுளததுவே நீ; யனைத்தும்—நின்றின்று
தர்ப்பணம்போல் காட்டலால் சார்மாயை நீயல்லை
தற்பரமும் அல்லை தனி.[5]

[தர்ப்பணம்—கண்ணாடி]

அறிந்தும் அறிவதே யாயும் அறியாது
அறிந்ததையும் விட்டங் கடங்கி—அறிந்தது
எது? அறிவும் அன்றாகும்; மெய்கண்டான் ஒன்றின்
அதுஅது தான்என்னும் அகம்.[6]

என்ற வெண்பாக்களால் இது தெளிவாகும்.

இவற்றால் உயிர் என்பது தானே அறிந்தும் அறிவித்தும் நிற்பதாகிய பதியும் அன்று; அறிவித்தாலும் அறிய மாட்டாத பாசமும் அன்று; அறிவித்தால் அறியும் அறிவுடைய ஓர் இடை நிலைப் பொருள் என்பது மேலும் தெளிவாகும். அறிவே வடிவாகிய பதிப்பொருள் 'சித்து' என்று சொல்லப்படுவதை நீ அறிவாய். அறிவே இல்லாத சடப் பொருள்களாகிய பாசங்கள் 'அசித்து' என வழங்கப் பெறுவதும் உனக்குத் தெரியும். ஆதலால் அவ்விரண்டிற்கும் இடைப்பட்டதாகிய பசு 'சிதசித்து' என்று மொழியப் படும். சித்தாகிய பதி, என்றும் ஒரு பெற்றியதாய் இருத்தல்பற்றி 'சத்து' என்றும், அசித்தாகிய பாசங்கள் நிலை மாற்றத்தை அடைதல்பற்றி 'அசத்து' என்றும் சொல்லப் படுதலால் இடைப்பட்ட பொருளாகிய பசு 'சதசத்து' என்றும் சொல்லப்படும் என்பதையும் அறிவாயாக. இவற்றால் பதி, சித்து; பாசம், அசித்து; பசு, சிதசித்து என்பதும் தெளியப்படும். மேலும் பதி, சத்து; பாசம், அசத்து; உயிர்—பசு, சதசத்து என்பதும் பெறப்படும் என்பதையும் உளங்கொள்வாயாக. தாயுமான அடிகளின்,

அறியாமை சாரின் அதுவாய், அறிவாம்
நெறியான போததுவாய் நிற்கும்—குறியால்
சதசத் தருளுணர்த்தத் தான்உணரா நின்ற
விதமுற் றறிவெனும்பேர் மெய்.[7]

என்ற திருப்பாடலும் இக்கருத்தினை அரணாக அமைந்து விளக்குதல் கண்டு தெளிக.

---

6. ஷை· சூத் 3 அதி—6
7. தா. பா. உடல் பொய்யுறவு—22
   சை. ச. வி.—10

ஈண்டு இரண்டு மாறுபட்ட தன்மைகள் ஒரு பொருளின் கண் இருப்பதுபோல் தோன்றும். ஆனால் உண்மையில் அவ்வாறு இல்லை என்பதையும் தெளிவிப்பேன். 'சிதசித்து' என்பதற்கு 'சித்துத் தன்மை,' 'அசித்துத் தன்மை' என்ற இரு தன்மையுடையது என்பது பொருளன்று; இரண்டிற்கும் இடைப்பட்ட மற்றொரு தன்மை என்பதே பொருளாகும். அதாவது, சித்துப் பொருளை நோக்க 'அசித்து' என்னும் படியும், அசித்துப் பொருளை நோக்க 'சித்து' என்னும் படியும் நின்று, சித்தோடு கூடிச் சித்தாயும், அசித்தோடு கூடி அசித்தாயும் நிற்பதாய ஒரு தன்மை என்பதே பொருளாகும் என்பதை உணர்வாயாக. ஏனையவற்றிற்கும் இவ்வாறே பொருள் கொள்ளல் வேண்டும். உயிர் சதசத்து என்பதற்கு சத்தும் அன்றாய், அசத்தும் அன்றாய், சத்தை நோக்க அசத்தாயும், அசத்தை நோக்கச் சத்தாயும் நின்று, சத்தோடு கூடிச் சத்தாயும், அசத்தோடு கூடி அசத்தாயும் நிற்பதொரு தன்மையாகும் என்பதையும் அறிந்து தெளிவாயாக. உயிர் 'சூக்குமா சூக்குமப் பொருள்' என்பதும் இவ்வாறே யாகும். இதனால் உயிரை 'அருவப் பொருள்' என்றோ, 'உருவப் பொருள்' என்றோ, 'இரு தன்மைகளையுடைய பொருள்' என்றோ கூறுதல் பொருந் தாது. இங்ஙனமே, உயிரின் தன்மையை எல்லாவற்றையும் தனியாக வைத்து உணர்தல் வேண்டும். ஆகவே பதி, 'சத்து சித்து சூக்குமம்'. பாசம், 'அசத்து அசித்து தூலம்'. பசு பதியை நோக்க 'அசத்து, அசித்து, தூலம்' எனவும், பாசத்தை நோக்க, 'சத்து சித்து சூக்குமம்' எனவும் சொல் லத்தக்க தனித் தன்மையுடையது என்பதாயிற்று. 'பசு சதசத்து, சிதசித்து, சூக்குமா சூக்குமம்' என்பதற்கும் இதுவே பொருளாதலை அறிந்து தெளிக.

மேலும் மெய்கண்டார் தரும் விளக்கத்தைக் கூறுவேன். சித்தாயும் சத்தாயும் நிற்கும் பதிக்கும், அசித்தாயும் அசத்தாயும் நிற்கும் பாசத்திற்கும் சிறந்த தொடர்பு உண்டாவதில்லை. இதனால் இவற்றுள் ஒன்றால் மற்

றொன்றிற்கு வருவது ஒன்றும் இல்லை. இடையில் நிற்கும் பசுவே இரண்டனோடும் சிறந்த வகையில் தொடர்புடைய தாய் உள்ளது. இதனால் இஃது இரண்டாலும் வரும் நன்மை தீமைகளை எய்துகின்றது. இதனை மெய்கண்டார்,

இருதிறன் அறிவுளது
இரண்டலா ஆன்மா[8]

என்னும் ஓர் அரிய தொடரால் விளக்குவர். இத்தொடர் மூன்று வேற்றுமைத் தொகைகளாக நின்று, மூன்று வேறு பொருள்களைத் தருவதையும் காட்டுவேன். (1) இருதிறன் அறிவுளது என்று இரண்டாம் வேற்றுமைத் தொகையாக நின்று இருதிறன்களாகிய சத்து அசத்து இரண்டினையும் அறியும் அறிவையுடையது என்னும் பொருளையும்; (2) இதே தொடர் மூன்றாம் வேற்றுமைத் தொகையாக நின்று, இரு திறன்களாகிய சத்து அசத்துகளின் உதவியால் அறியும் அறிவினையுடையது என்னும் பொருளையும்; (3) இத்தொடர் ஏழாம் வேற்றுமைத் தொகையாக நின்று இருதிறன்களாகிய சத்து அசத்து ஆகிய இரண்டன்கண்ணும் நின்றறியும் அறிவையுடையது என்னும் பொருளையும் தருவதை அறிந்து தெளிக.

மேற்கூறிய மெய்கண்டாரது விளக்கத்தை மேலும் தெளிவாக்குவது இன்றியமையாததாகின்றது. பாசம் அறிவில்லாத பொருள் என்பதையும், பசு அறிவுடைய பொருள் என்பதையும் நீ நன்கு அறிவாய். பதிக்குப் பசு தன் இனமும் (ஸ்வஜாதி), பாசம் வேற்றினமும் (விஜாதி) ஆகின்றன. 'பதிக்குப் பசுதன் இனம்' என்பதை ஒப்புக் கொண்டு, 'பதியின் சாயை (நிழல்) அல்லது கூறே (அம்சம்) பசு' என்பவரது கூற்றை ஒப்புக் கொண்டால் நேரிடும்

8. சி. ஞா. போ. சூத்—7

அசம்பாவிதம் என்ன என்பதை விளக்க வேண்டியதா கின்றது. 'இனம்' என்பதும், 'சாயை அல்லது கூறு' என்பதும் ஒன்றாகாது. ஏன்? 'தேமா, புளிமா' என்னும் இரு மரங் களும் 'மரம்' என்னும் ஓர் இனத்தைச் சேர்ந்தவை என்பத னால், ஒன்றன் சாயை அல்லது கூறே மற்றொன்று என்று கூறுதல் கூடுமோ? தேமாவின் கனி இனிப்பது; புளிமாவின் கனி புளிப்பது; இரண்டிலும் ஒன்றன் கூறு மற்றொன்றாதல் எவ்வாறு? இங்ஙனமே, எட்டி மரமும் பலா மரமும் 'மரம்' என்னும் அளவில் ஓர் இனமாயினும் பலாவின் கனி இனிப் புடையதாயிருக்க, எட்டியின் கனி கசப்புடையதாய் நஞ்சாகி இருக்கின்றதன்றோ? இந்த இரண்டிலும் ஒன்றன் கூறு பிறிதொன்றாகாது என்பது வெளிப்படை. இவ்வா றெல்லாம் நுணுகி நோக்கின் 'இனம்' என்பதும், 'சாயை அல்லது கூறு' என்பதும் வெவ்வேறு கருத்துகளையுடை யவை என்பது தெளிவாகும். இக் காரணத்தால் 'பதிக்குப் பசு தன் இனம்' என்றிருந்தாலும், 'பதியின் சாயை அல்லது பிரதிபிம்பம் அல்லது கூறுதான் பசு' என்பவரது கொள் கையை ஒப்புக் கொள்ளுதல் இயலாது.

மேற்கூறியவற்றால் நீ ஒருவாறு தெளிவு பெற் றிருப்பாய் என்று கருதுகின்றேன். பதியின் அறிவு மேற் கூறிய பெருமையை எல்லாம் உடைமையால் அது சூக்கும சித்தாயும் மாற்றம் எய்தாததாயும் உள்ளது. ஆதலால், அதனைப் பாசம் பற்றுதல் இல்லை. பசு அவ்வாறின்றி மேற்கூறிய சிறுமைகளையெல்லாம் உடைமையால் அது தூல சித்தாயும் தான்அடுத்த பொருளின் தன்மையை எய்தி நிற்பதாயும் இருத்தலால் அதனைப் பாசம் பற்றுவ தாகின்றது. ஆகையால் பதி அநாதி முத்த சித்துரு (இயல் பாகவே பாசங்கள் நீங்கிய அறிவுடையது) என்பதும், பசு அநாதி பெத்த சித்துரு (இயல்பாகவே பாசத்திற் கட்டுண்டு கிடக்கும் அறிவுரு உடையது) என்பதும் தெளிவாகின்ற தல்லவா? 'பசு' என்பதற்கே பாசத்தால் கட்டுண்டு கிடப்பது' என்பதுதான் பொருள் என்பதை முன்னரும்

குறிப்பிட்டுள்ளதை ஈண்டு நினைவு கூர்ந்து தெளிவுபெறுக. இத்துடன் இக் கடிதத்தை நிறைவு செய்கின்றேன்.

அன்பன்,

கார்த்திகேயன்.

# 21

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன். இக் கடிதத்தில் உயிரின் இயல்புபற்றிய மேலும் சில கருத்துகளைத் தெரிவிப்பேன்.

'அறியும் தன்மை உடையது உயிர்' என்பதை நீ நன்கு அறிவாய். அறிவு பண்பு; உயிர் அதனையுடைய பண்பி. அறிவாகிய பண்பு வேறு சில பண்புகள் போலக் காட்சிக்குப் புலனாகாது; அது கருத்திற்கே புலனாகும். அறிவாகிய பண்பு காட்சிக்குப் புலனாகாதொழியவே, அதனையுடைய உயிராகிய பண்பியும் காட்சிக்குப் புலனாகாதாகின்றது. இதனால் கருத்திற்கு மட்டிலும் புலனாகின்ற அறிவை காணப்பட்ட உடம்பின் பண்பாகக் கூறுதல் பொருந்தாது. அங்ஙனமே கருத்திற்கு மட்டிலும் புலனாகின்ற மனம் முதலிய பிற கருவிகளின் பண்பாகவும் கொள்ளல் சிறிதும் பொருந்தாது. இவற்றை முன்னர் எழுதிய கடிதங்களில் விளக்கியுள்ளேன். ஆகவே, பருவுடம்பு, (தூல சரீரம்). நுண்ணுடம்பு (சூக்கும சரீரம்), நனிநுண்ணுடம்பு (பர சரீரம்) என்னும் கருவிகளாகிய சடப்பொருள்களினும், அறிவே வடிவாய் நிற்கும் பரம் பொருளினும் வேறாய் நிற்கின்ற அறிவுடைப் பொருள் எதுவோ அதுவே உயிர் எனப்படும் என்பதை அறிந்து தெளிக.

'பதி' என்ற கடவுட் பொருள் ஒன்றேயாகும். உயிர் அவ்வாறன்றி அளவிறந்தன. அதனால் இறையை 'ஏகன்' என்றும், உயிரை 'அநேகன்' என்றும் வழங்குவர்.

ஏகன் அநேகன்
இறைவன் அடிவாழ்க.[9]

என்ற மணிவாசகரின் மணிவாக்கால் இதனைத் தெளியலாம். உயிர்கள் எண்ணிறந்தன என்பதை மெய்ப்பிப்பதற்குச் சான்று ஒன்றும் வேண்டா. ஓர் உயிர் ஓர் உடம்பில் நின்று அநுபவிக்கும் இன்ப துன்ப அநுபவங்கள்—நுகர்ச்சிகள்—மற்றோர் உயிர்க்கு இல்லாமையால், ஒவ்வோர் உடம்பில் உள்ளதும் தனித்தனி வேறுவேறு உயிரே என்பது எளிதில் தெளிவாகும். அதுவன்றி, பல உடம்புகளில் உள்ள உயிர்களும் ஒன்றே என மெய்ப்பிப்பதற்கு வழி இல்லை. ஆதலின் உயிர்கள் ஒன்றல்ல; பலவேயாம் என்பதை அறிந்து தெளிக.

பதியும் அறிவுடையது, பசுவும் அறிவுடையது என்பதை நீ நன்கு அறிவாய். என்றாலும் பதியின் அறிவு தானே விளங்குவது; அறிவிப்பதற்குத் துணை ஒன்றையும் வேண்டாதது. ஒரு பொருளை அறியுங்கால் அறியப்பட்ட பொருளில் அழுந்தி அதன் தன்மையைப் பெறாது தன்னியல்பில் நின்றே அறிவது; அதனால் அது 'சுதந்திர அறிவு' என்று வழங்கப்பெறும். பசுவினது அறிவு அவ்வாறன்றிப் பிறிதொரு பொருள் அறிவிக்கவே அறியும் தன்மையுடையது. அங்ஙனம் அறியும்பொழுதும் அறியப்படும் பொருளில் அழுந்தி அதன் தன்மையதாகியே அறிவது; அதனால் அது 'பரதந்திர அறிவு' என வழங்கப்பெறும். அறியப்படும் பொருளில் அழுந்தி அதன் தன்மையதாதல் 'சார்ந்ததன் வண்ணமாதல்' என்று வழங்கப்பெறும். பதியினது அறிவு பொருள்களை ஒவ்வொன்றாய் அறியாமல் எல்லாவற்றையும் ஒருங்கே அறிவது; மேலும் அவற்றை இடைவிடாது அறிந்தவாறே அறிந்து நிற்பது. அதனால் அது 'பேரறிவு' அல்லது 'முற்றறிவு' என வழங்கப்பெறும். பசுவினது அறிவு அவ்வாறன்றி ஒருகாலத்து ஒரு பொருளை

9. திருவா. சிவபுரா. அடி.5

யன்றிப் பிறிதொன்றினை அறியமாட்டாது, ஒவ்வொன்றாகவே அறிவது; அதனையும் விட்டுவிட்டு அறிவது; அதனால் அது 'சிற்றறிவு' என்று பேசப்படும். பதியினது அறிவு தான் அறிதலேயன்றிப் பிறிதோர் அறிவுக்கு அறிவாய் நின்று, அதனையும் அறியச் செய்யும் தன்மையுடையது. அதனால் அது 'நுண்ணறிவு' என்றும் 'சூக்கும சித்து' என்றும் வழங்கப்பெறும். பசுவினது அறிவிற்கு அத்தகைய ஆற்றல் இல்லை; அறிவித்தல் அறியுந்தன்மையை மட்டுமே உடையது; அதனால் அது 'பருஅறிவு' என்றும் 'தூல சித்து' என்றும்வழங்கப்பெறும். பதியின் இயல்புகளை விளக்கும் போதும் இவற்றையெல்லாம் குறிப்பிட்டேன்.[10] இவண் குறிப்பிட்ட பசுவின் இயல்புகள் அனைத்தும் அதற்கு இயற்கையாய் என்றும் உள்ள தன்னியல்புகள் ஆகும்.

மேற்குறிப்பிட்ட பசுவின் தன்னியல்புகளுள் முதன்மையாகச் சொல்லப்படுவது 'சார்ந்ததன் வண்ணமாதல்' என்பது. இதனை விளக்குவேன். ஒரு பொருள் தன்னால் சாரப்பட்ட பொருளின் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டு நிற்பதுவே 'சார்ந்ததன் வண்ணமாத'லாகும். இத்தன்மையே உயிர்களின் உண்மை எனப்படும் 'சொரூப இலக்கணம் ஆகும். உயிர் பாசத்தைச் சார்ந்தவழிப் பாசமேயாயும், பதியைச் சார்ந்தவழிப் பதியேயாயும் நிற்கும் என்பதை அறிக. உயிர்கட்கு இன்பத்தை விரும்புதலே இயற்கையாதலின், இன்பப் பொருளாகிய பதியை[11] அடைதலே உயிரின் இயல்பாக அமைந்துள்ளது; ஒன்றிரண்டு எடுத்துக்காட்டுகளால் இந்த இயல்பைத் தெளிவிப்பேன்.

படிகம் தன்னை அடுத்துள்ள பொருளின் நிறத்தையே தன் நிறமாகக் கொண்டு நிற்பதை உன்னுக. அதாவது,

---

10. இயல்-2; கடிதம்—14; பக் (110-111)

11. அகமகிழ வருந்தேன், முக்கனி, கற்கண்டு, அமிர்தம்—என்றெல்லாம் தாயுமான அடிகள் பதியைக் குறிப்பிடுவது (தா.பா. பொருள் விளக்கம்—4) ஈண்டு நினைத்தல்தகும்.

படிகம் நீலமணியைச் சார்ந்தபொழுது நீலமாயும், செம் மணியைச் சார்ந்தபொழுது செம்மையாயும் விளங்கு வதைக் காண்க. இதனை நினைந்தே வள்ளுவப் பெருந் தகையும், 'அடுத்தது காட்டும் பளிங்குபோல்'[12] என்று குறிப்பிட்டுள்ளதைக் காண்க. தாயுமான அடிகளும் 'பளிங் கனையசித்து'[13] என்று குறிப்பிட்டுள்ளதையும் சிந்தித்து மகிழ்க. படிகத்தின் வண்ணம் இவ்வாறு சார்ந்ததன் வண்ண மாக மாறுவதாயினும் 'படிகத்தின் வண்ணம்' என்று ஒரு நிறம் உண்டு என்பதனை மறந்து விடுதல் கூடாது. இன்னோர் எடுத்துக்காட்டு: கண் ஒளியைச் சார்ந்த பொழுது ஒளி வடிவாயும், இருளைச் சார்ந்தபொழுது இருள் வடிவமாயும் நிற்றலை அநுபவத்தால் அறியப்படுவ தாகும். இங்கும் கண்ணின் ஒளி இவ்வாறு மாறுவதானா லும், கண்ணிற்கென்று ஓர் ஒளி உண்டு என்பதனையும் மறந்து விடுதல் கூடாது. இவ்வாறே பசுவாகிய உயிருக்கு ஓர் அறிவு உண்டு என்பதை அறிக. இந்த அறிவு அறியப் படும் பொருளின் தன்மையாய் மாறும் என்பதனை நன்கு உணர்ந்து தெளிக.

நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும்; மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகும் அறிவு.[14]

என்று வள்ளுவ வள்ளலும் குறிப்பிட்டுள்ளதைச் சிந்தித்து மகிழ்க. எனவே, 'சார்ந்ததன் வண்ணமாதல்' என்பது உயிரின் தன்னியல்பு களில் (Essential nature) முதன்மை யானது என்பதைத் தெளிக.

இதனால் உயிர் எப்பொழுதும் தனித்து நின்று விளங் காது எனவும், ஒரு பொருளின் துணைகொண்டே அஃது அறியப்படும் எனவும் அறிந்து தெளிக. இதனால் உயிர்கள் எப்பொழுதும் தனித்தறியப்படா. அவை பெத்த நிலையில்

12. குறள்—706.
13. தா.பா. ஆகார புவனம்—18.
14. குறள்—452

பாசத்தோடும், முத்தி நிலையில் பதியோடும் வைத்தே அறியப்படுவனவாகும். இனி, உயிர்களின் பொது இயல் பினை—தடத்த இலக்கணத்தை—அடுத்த கடிதத்தில் விளக்குவேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 22

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலம் பல விளைவதாகுக. இக்கடிதத்தில் உயிரின் விரிவளவு (பரிமாணம்)பற்றி விளக்குவேன். இதற்கு முன் பிறர் கூறும் கருத்துகளை ஆராய்வது இன்றியமையாததாகின்றது.

உயிர் உடம்பின் அளவு ஆகாமை: சமண சமயத்தினர் தாம் எடுத்த உடம்பின் அளவாய் செழுகம் போல (அட்டை எனும் நீர்ப் பூச்சிபோல) நீளுதல் சுருங்குதல் களை அமையும் தன்மையது என்கின்றனர். இஃது உண்மையாயின்,பெரிய உடம்பையுடைய உயிர்கள் பேரறிவுடையன வாயும், சிறிய உடம்பையுடைய உயிர்கள் சிற்றறிவுடையன வாயும் இருத்தல் வேண்டும். அஃதன்றியும், ஒருவகைப் பிறப்பிலேயும் அவ்வாறு வேறுபடல் வேண்டும். எடுத்துக் காட்டாக, மக்களில் பேருடம்புடையோர்பேரறிவினராயும் சிறியவுடம்பையுடைய உயிர்கள் சிற்றறிவினராயும் இருத்தல் வேண்டும். அநுபவத்தில் அவ்வாறு இருப்பதாகத் தெரியவில்லை; மாறியும் இருப்பதாகத் தெரிகின்றது. போர் முதலிய காரணங்களால் உறுப்புக் குறைபட்டவர் கட்கு முன் இருந்த அறிவு குறைந்து காணப்படவேண்டும். அவ்வாறில்லாமையால் உயிர் உடம்பின் அளவே நிற்கும் தன்மையது என்ற கொள்கை பொருந்தமின்றிப் போகின்றது.

உயிர் விளக்குப் போல்வது ஆகாமை: ‘ஓரிடத்தில் ஏற்றி வைக்கப்பெற்ற விளக்கின் ஒளி பல இடத்திலும்

பரவுவதுபோல், உயிர் இதயத்தில் புல் நுனிமேல் நிற்கும் பனித்துளி அளவினதாய் நிற்க, அதன் அறிவு (ஆற்றல்) உடம்பெங்கும் வியாபிக்கும்' என்று கூறுவர் பாஞ்சராத்திரிகள். இக்கொள்கையும் பொருந்தாது என்பதைக் காட்டுவேன். விளக்கு தூலமாய்க் காணப்படுவதும், அதன் ஒளி சூக்குமமாய்ப் பரவுதலும் வெளிப்படை. அதுபோல உயிரின் ஆற்றல் சூக்குமமாய்க் காணப்படாத நிலையில் உடம்பெங்கும் பரவி இருக்க, உயிர் இதயத் தானத்தில் புல்நுனி மேல் உள்ள பனித்துளிபோல் கட்புலனாதல் வேண்டும். கண்ணிற்கும் புலப்படாத நுண்மையுடையதெனின், வேறு எப்படியாகிலும் அஃது அகப்படுதல் வேண்டும். அதுவும் கூடாதெனின், 'உடம்பெங்கும் பரவும்' என்ற ஆற்றலுக்கும் 'இதயத் தானத்தில் நிற்கும்' என்ற உயிருக்கும் வேற்றுமை இல்லாமையால் அந்த வாதமும் தோற்றொழிகின்றது.

மேலும், விளக்கொளி பரவியுள்ள இடங்களிலெல்லாம் பொருள்கள் விளங்கி நிற்றல்போல் ஐம்பொறிகளிலும் அறிவு எப்பொழுதும் தடைபடாது நிகழ்ந்து கொண்டே இருத்தல் வேண்டும். உயிரின் ஆற்றல் உடம்பெங்கும் பரவியிருப்பினும், அது கன்மத்திற்கீடாக ஒவ்வோர் இடத்தே விளங்கும் என்று கூறலாம். அப்படியானால் எப்பொழுதாயினும் முழுவதும் விளங்குதல் நிகழ்தல் வேண்டும். அஃது ஒருபோதேனும் இன்மையால், உயிரின் ஆற்றல் உடம்பெங்கும் பரவி நிற்கும் என்பதற்குச் சான்றில்லை. அதனால் அவ்வாதமும் ஏற்க முடியாததாகின்றது.

**உயிர் அணு அளவு ஆகாமை:** பாஞ்சராத்திரிகளேயன்றி வேறு சிலரும் உயிரை அணு அளவினதாகக் கூறுவர். உயிர் 'அணு அளவு' என அளவுபட்டு நிற்பின் அது சடமாய் விடுமன்றிச் சித்தாகாது. மேலும் பெரியனவும் சிறியனவுமாய் எண்ணற்ற துளைகளையுடைய உடம்பில் உயிர்

யாதேனும் ஒரு துளையில் ஓடி விடாமல் நெடுங்காலம் அதன் கண்ணே கட்டுண்டிருத்தல் கூடுமோ? கன்மத்தால் அவ்வாறு கட்டுண்டு நிற்கும் எனக் கருதினால் சூக்கும மாகிய கன்மம் தூலமாகிய உடம்பில் அணுவைத் தடுத்து நிறுத்த முடியாது. தடுத்து நிறுத்த முடியுமெனின், விலங்குகள் கயிறு முதலியன இன்றியே தறிகளிலும், கள்வர்கள் விலங்கு முதலியன இன்றியே சிறைக் கோட்டத் திலும் கன்மத்தால் கட்டுண்டு கிடத்தல் வேண்டும். அவை கூடுவதில்லை என்பது தெளிவு. ஆகவே, சூக்குமமாகிய கன்மம் தூலப் பொருளைத் தூலப்பொருள் வாயிலாகப் பிணிக்குமேயன்றித் தானே பிணிக்க மாட்டாது என்பது புலனாகும். இங்ஙனம் புலனாகவே, உயிர் அணுவளவின தாயின், அஃது உடம்பில் நில்லாது வீழ்ந்து விடும் என்பது தெளிவாகின்றது. அணுவும் தூலப் பொருள் என்பதையும் சிந்தித்து அறிக.

இன்னும் உயிர் ஒரு பரமாணு அளதவினது எனக் கருதினால், அதனினும் பன்மடங்கு பெரியாயுள்ள உடம் பினை அஃது எங்ஙனம் செயற்படுத்தல் கூடும்? உயிரின் அளவு அணு அளவாக இருப்பினும், அதன் ஆற்றல் உடல் முழுவதும் சென்று பரவும் எனக் கொள்ளுதல் வேண்டும். அவ்வாறு கொண்டால், ஆற்றல் என்பது பொருளின் வேறன்மையால் 'உயிர், அணு' என்ற வாதம் தோல்வி யுற்று வீழ்கின்றது. ஆகவே, உயிருக்கு அணுபரிமாணம் கூறுதல் பொருந்தாதாகி விடுகின்றது.

**உயிர் பற்றிய சித்தாந்தக் கருத்து:** இனி, உயிரின் விரிவுபற்றிய சித்தாந்தக் கருத்தினை விளக்குவேன். உயிர் எல்லையற்று நிற்கும் வியாபகப் பொருளே; ஆயினும் இறைவனது வியாபகத்தில் அடங்கி நிற்பதாகும். அதாவது, பிற இயல்புகளிற்போலப் பரிமாணத்திலும் இடைப்பட்ட நிலையையுடையது. எனவே, உயிர் பாசத்தை நோக்க வியாபகமாயும், பதியை நோக்க வியாப்

பியமாயும் நிற்பது உயிர் அல்லது ஆன்மா. 'ஆன்மா' என்பதற்கே 'வியாபகம்' என்பதே பொருளாகும். ஆன்மா இங்ஙனம் எங்குமாய் நிற்கும் வியாபகப் பொருளாயினும், அவ்வியாபகத்தைத் தோன்றவொட்டாது மறைத்து நிற்கின்றது பாசம். அதனால் உயிரும் அணுப்போலத் தோன்றுகின்றது. வியாபகம் 'மகத்து' என்றும் ஏகதேசம் 'அணு' என்றும் சொல்லப்படும். எனவே, இயற்கையில் மகத்தாய் உள்ள உயிரை அணுத்தன்மை அடையச் செய்தது பாசமே. அணுத் தன்மையைத் தருதல்பற்றியே பாசத்திற்கு ஆணவம் என்ற காரணப் பெயர் உளதாயிற்று என்பதையும் அறிக. இந்தப் பாசம் நீங்கினால் உயிர் அணுத்தன்மை நீங்கி மகத்தாகவே நிற்கும் என்பதையும் உளங்கொள்க. ஆன்மாவின் இயல்பைத் தோன்ற வொட்டாது பாசம் மறைத்து நிற்றல் நீரின் இயல்பைத் தோன்ற வொட்டாது பாசி மறைத்து நிற்றல் போல்வது என்று விளக்கி வைக்கலாம். எனவே, பாசியை விலக்கினால் விலக்கிய அளவிற்கு நீர் தோன்றுதல்போல் மாயையின் காரியமாகிய உடல், பொறி, கரணங்கள் எந்த அளவில் நின்று ஆணவத்தை விலக்குகின்றனவோ அந்த அளவில் உயிரினது வியாபகம் புலனாகும் என்பதை உணர்ந்து தெளிக.

ஆணவ மலத்திற்கு மாற்றாய் உள்ளது உடம்பு. ஆணவத்தை நீக்கும் மாற்றுப் பொருளாக இறைவன் மாயையின் காரியமாகிய உடம்பை ஆன்மாவிற்குக் கூட்டியருளுகின்றான். உடம்பு உள்ள இடத்தில் ஆன்மாவிற்கு அறிவு நிகழ்தலும், ஏனைய இடத்தில் அறிவு நிகழாமையும் இயற்கையாகின்றன. ஆகவேதான் ஆன்மா தான் ஒன்றை அறியவும் செய்யவும் விரும்பும் இடத்திற்கு, இறைவனால் தனக்குக் கொடுக்கப்பெற்ற உடம்பைச் செலுத்துகின்றது. இத்தகைய உடம்பின் இடப் பெயர்ச்சியையே உயிரின் இடப் பெயர்ச்சியாக நினைத்து மயங்குகின்றோம். நுணுகி நோக்கினால் உண்மையில் இடம்விட்டுப் பெயர்வது உடம்பேயன்றி உயிரன்று என்பது தெளிவாகும். இவ்வுண்மை

*தத்துவ ஆராய்ச்சியில் ஆன்மாவின் இயல்பை நுனித்துணரு மிடத்தில்தான் தெளிவாகும். ஏனைய இடங்களில் இது தெளிவாகாமையால், வழக்கத்திலேயன்றி நூல்களிலும் கூட, உயிரே போக்குவரவு புரிவதுபோலக் கூறப் பெற் றிருப்பதையும் காணலாம்.*

துறக்கப் படாத உடலைத்
துறந்துவெந் தூதுவரோடு
இறப்பன்; இறந்தால் இருவிசும்
பேறுவன்; ஏறிவந்து
பிறப்பன்; பிறந்தால் பிறையணி
வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
மறப்பன் கொலோ என்றென்
உள்ளங்கிடந்து மறுகிடுமே.[15]

*என்ற அப்பர் பெருமானின் திருவாக்கிலும், 'இருவினை யின்'—போக்குவரவு புரிய'*[16] *என்ற அருள்ஞானச் செல்வர் மெய்கண்டாரின் பெருவாக்கிலும்,*

மலம்மாயை கன்மம் மாயே
யந்திரோ தாயி மன்னிச்
சலமாரும் பிறப்பி றப்பில்
தங்கிஇத் தரைகீழ் மேலும்
நிலையாத கொள்ளி வட்டம்
சுறங்கென நிமிடத் தின்கண்
அலமாரும் இறைவன் ஆணை
யால்உயிர் நடக்கு மன்றோ.[17]

*என்ற அருணந்தி தேவரின் திருவாக்கிலும் இதனைக் காண லாம்.*

---

15. தேவாரம். 4. 113:7
16. சி.ஞா.போ. சூத்.2.
17. சித்தியார்-2.88.

மேற்கூறியவாறு பொதுமை நோக்கில் கூறினும், உண்மை நோக்கில் ஆன்மா வியாபகப் பொருள் என்பதே யாகும். அங்ஙனமாயினும் உயிர் இறைவனது வியாபகத்துள் வியாப்பியமே யாகலின், அந்நிலையை அவனது திருவடிக்கீழ் நிற்றலாகவே அருளிச் செய்வதை அருளாசிரியன்மார் அனைவருமே மரபாகக் கொண்டுள்ளனர்.

அம்மான் அடிநிழற் கீழதன்றோ
என்றன் ஆருயிரே.[18]

என்ற நாவுக்கரசரின் திருவாக்கும்,

இருகாற் குரம்பை இதுநான்
உடையது, இது பிரிந்தால்
தருவாய் எனக்குன் திருவடிக்
கீழோர் தலைமறைவே[19]

என்ற அப்பெருமானின் அருள் வாக்கும்,

தெளித்தேன் சிவன்அடி சேர்ந்தேன்
இனிமிகத் தெள்ளியனே[20]

என்ற சேரமான் பெருமாள் நாயனாரின் பெருவாக்கும்,

மாவேறு சோதியும்
வானவரும் தாமறியாச்
சேவேறு சேவடிக்கே
சென்றூதாய் கோத்தும்பீ[21]

என்ற வாதவூரடிகளின் மணிவாக்கும்,

---

18. தேவாரம்-4.84:10
19. ஷை 4.113:2
20. பொன்வண்ணத் தந்தாதி-23
21. திருவா. திருக்கோத்தும்பி-1

தேனார் கமலமே
சென்றூதாய் கோத்தும்பீ.[22]
பொன்னங் கழலுக்கே
சென்றூதாய் கோத்தும்பீ[23]
தேனுந்து சேவடிக்கே
சென்றூதாய் கோத்தும்பீ.[24]
செய்யார் மலரடிக்கே
சென்றூதாய் கோத்தும்பீ[25]

என்ற அப்பெருமானின் தொடர் வாக்குகளும் இம்மரபை உணர்த்துகின்றன. இப்பதிகத்தின் பழைய குறிப்பு 'சிவனோடைக்கியம்' என்று தெரிவிப்பதையும் ஓர்ந்து உணர்க. இங்ஙனமெல்லாம் வரும் மரபினை நோக்கும் போது 'திருவடிக்கீழ் இருத்தல்' என்பதன் உண்மைப் பொருள் தெளிவாவதை உணர்ந்து மகிழ்க. இக்கூறிய வற்றால் ஆன்மா வியாபகமல்லது பிறிதாகாது என்பதை யும் உளங்கொள்க.

இன்னோர் உண்மையையும் ஈண்டு நீ அறிய வேண்டும். அறிவினது நிலை வேறுபாடே இச்சையும் செயலும் என் பதை நீ நன்கு அறிவாய். உயிர் அறிவுடையதாதலின் இச்சையும் செயலும் அதனுடையது என்பதும் பெறப்படும். ஆகவே, உயிர்களும் இறைவனைப்போலவே ஞானசக்தி, இச்சாசக்தி, கிரியாசக்தி என்னும் மூவகை சக்திகளையும் உடையனவாகின்றன. இதனால் இறைவனும் உயிரும் சமமாய் விடுமே என்று நீ கருதலாம். அதுதான் இல்லை. இறைவன் சூக்குமப் பொருள் என்பதையும் உயிர் தூலப் பொருள் என்பதையும் நீ அறிவாய். அதனால் இறைவனது அறிவு இச்சை செயல் ஆகியவை சூக்குமமுடையவை;

22. ஷை-2
23. ஷை-11
24. ஷை-15
25. ஷை-17

உயிரினது அறிவு இச்சை செயல்கள் தூலமுடையவை. ஆகவே, உயிரினும் தூலமாகிய ஆணவம் உயிரின் இச்சை செயல்களைப் பற்றுமேயன்றி இறைவனது இச்சை செயல்களைப் பற்றாது என்பதை நீ அறிதல் வேண்டும். ஆகவே, ஆணவ மலத்தால் பற்றப்பட்டு வலியிழந்து கிடக்கும் ஆன்மாவினது அறிவு இச்சை செயல்களை இறைவனது அறிவு இச்சை செயல்கள் பெத்த காலத்தில் மாயை கன்மங்களின் வழியாகவும் முத்திக் காலத்தின் நேரேயும் செயற்படுத்தி நிற்கும்என்பதை முன்னர் ஒருவாறுகூறியதை ஈண்டு நீ நினைவுகூர்வாயாக. இங்ஙனம் இறைவனது சத்திகள் என்றும் தூயனவாயும் செயற்படுத்துவனவாயும் உள்ளன. ஆயினும், ஆன்மாவினது சத்திகள் அனாதியே மாசுபடிந்தனவாயும் இறைவனது சத்திகள் செயற்படுத்தும் அளவிற்குச் செயற்படுவனவாயும் உள்ளன என்பதை அறிந்து தெளிவாயாக. இதனால் இம்மூன்று சத்திகளை உடைமை மாத்திரையில் ஆன்மா இறைவனோடு ஒரு நிகராதல் இல்லை என்பதையும் அறிவாயாக.

ஆயினும், ஆன்மா அறிவுடைப் பொருளாதலின், இறைவனோடு சிறப்பு வகையில் தொடர்பு கொள்ளுவதற்குரிய இனப் பொருளாகும். ஆனதுபற்றியே 'ஆன்மா' என்னும் பெயர் இரண்டற்கும் பொதுப் பெயராயிற்று என்பதையும் அறிந்து கொள்க. அப்பெயரைப் பொதுமை நீக்கிக் கூறினால், பரமான்மா, சீவான்மா என்றாகின்றது. எனினும் 'ஆன்மா' என்பது சீவான்மாவையே குறிப்பது எங்கணும் பெருவழக்காக உள்ளது. உயிர் இறைவனுக்கு இனப்பொருளாவதில்லை. அவை இனமல்லாத பிற பொருள்கள் என்பதை உளங்கொள்க.

இன்னோர் உண்மையையும் ஈண்டு நீ கருதுதல் வேண்டும். ஆணவ மலம் உயிரினது அறிவு, இச்சை, செயல்களை செயற்படவொட்டாது தடுத்து நிற்குமேயன்றி அவற்றை விடவும் இயலாது. ஏனெனில், தோற்றமும் கேடும் அறிவில்லாத பொருளிடத்தில் நிகழுமேயன்றி அறிவுடைய பொருளிடத்து நிகழா என்பதை அறிக.

ஆகவே, அறிவு, இச்சை, செயல்கள் இறைவனிடத்திலாயினும் உயிர்களிடத்தாயினும் அழிவில்லனவாகும். ஆணவ மலம் உயிரினது அறிவு இச்சை செயல்களைத் தடுத்து நிற்கும் அளவே செய்வதாகும். சடப்பொருள்களுள் ஒன்று மற்றொன்றால் இயல்பு கெடுமாதலின் மாயை கன்மம் என்பனவற்றால் ஆணவமலம் உயிரின் ஞானம் இச்சை செயல்களைத் தடுத்து நின்ற நிலைமை கெடப் பெறும். இங்ஙனம் நிலைமை கெடவே தடுக்கப்பட்டு நின்ற அறிவு முதலியவை செயற்படத் தொடங்கும். இது விடத்தால் தொடக்குண்டு மூர்சித்துக் கிடந்தவன் மணி மந்திர மருந்துகளால் விடம் இறங்கப்பெற்று உணர்வுடன் எழுதல் போல்வதாகும். உயிரை இந்நிலைக்கு உட்படுத்துவதால் ஆணவமலம் 'மூர்ச்சை' என்ற பெயராலும் வழங்கப்பெறுகின்றது.

இங்ஙனம் சூக்குமப் பொருள், தூலப் பொருள், அறிவில் பொருள் என்பவற்றை நுணித்து அறிந்தால்தான் ஆன்ம சொரூபம் தெளிவாய் விளக்கம் அடையும். இறைவனைப்போல் சூக்குமப் பொருளாகாத உயிர் தூலமாயிருத்தலின், ஆணவ மலத்தால் பற்றப்படும்போது பல்வேறு நிலையினை அடையும். இந்நிலைமைகளை அடுத்து வரும் கடிதத்தில் தெளிவாக்குவேன்.

அன்பின்,
கார்த்திகேயன்.

## 23

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு.

'நலன். நலனே விளைக.

உயிர் தூலசித்தாதலால் அஃது இயல்பாகவே பாசத்தால் கட்டுண்டு கிடத்தல் அதன் பொது இயல்பாகும். இந்நிலை ஒரு காலத்தில் நீங்குவதேயாகும். உயிர் ஆணவ மலத்தோடு மட்டும் இருப்பது, பின்னர் மாயை கன்மங்

களோடு கூடியிருப்பது, பின்னர் மும்மலங்களும் நீங்கப் பெற்று இறைவனோடு கலப்பது என்ற மூன்று நிலைகளை யுடையது. நிலைகளை அவத்தை (அவஸ்தை) என்று கூறுவர் வட மொழியாளர்கள். இந்த மூன்று நிலை களை யும் இக்கடிதத்தில் விளக்குவேன்.[25]

**கேவலாவத்தை :** உயிர் ஆணவமலத்தோடு மட்டும் இருக்கும் நிலை 'கேவலம்' என்று வழங்கப் பெறும். 'கேவலம்' என்ற சொல் 'தனிமை' என்று பொருள்படும். இந்த நிலையில் ஆன்மாவிற்கு அறிவு இச்சை செயல் இல்லை. உடம்பும் இல்லை உட்கருவி செயல்களாகிய மனம்முதலியனவும் இல்லை. அதனால் வினைகளை ஈட்டுவதும் இல்லை; அவற்றின் பயனாகிய இன்பதுன்பங்களை நுகர்வதும் இல்லை. உடல்,பொறி, கரணம் முதலிய எதுவும் இல்லாமல் அறியாமையே வடிவமாய்க்கிடக்கும் இந் நிலையை 'இருள் நிலை' என்று வழங்கலாம். 'உயிர் என்பது ஒன்று இல்லை' என்று சொல்லாமல் 'உள்ளது' என்பது மட்டும் கூற நிற்பதால், இது 'தன் உண்மை' என்றும் கூறப் பெறும்.

**சகலாவத்தை :** இருள் நிலையாகிய கேவலத்தில் மூழ்கிக் கிடக்கும் கொடுமையைக் கண்டு கண்ணுதலான் இரக்கங் கொண்டு தன் கருணை காட்டுகின்றான். உயிரினிடம் அறியாமையைத் தந்து நிற்பதாகிய ஆணவ மலத்தைப் போக்குதற்பொருட்டு மாயை கன்மம் என்ற இரண்டு மலங்களையும் கூட்டுவிக்கின்றான். அவற்றால் ஆணவமலம் சிறிதே நீங்கப் பெற்ற உயிர் உடல், பொறி, கரணங்களைப் பெற்று, விண், மண், பாதலம் என்னும் மூவுலகங்களிலும் "புல்லாய்ப் பூண்டாய்...கல்லாய் மனித ராய்...முனிவராய், தேவராய்...எல்லாப் பிறப்பும் பிறந் திளைத்து"[26] உழலும் நிலை 'சகலம்' எனப்படும்.

25. திருமந்திரம்—செய். 2142-2226-இல் அவத்தை பேதங்கள் விளக்கப்பெறுகின்றன. சிவப்பிரகாசம் 33-49இலும் இந்த அவத்தை நிலைகளைக் கண்டு தெளியலாம்.

26. திருவா. சிவபு. அடி 26-31

சகலம்—கலையோடு கூடுதல் எனப் பொருள்படும். கலை மாயா காரியம். இந்நிலையில் சகலாவத்தையில் உயிருக்கு அறிவு, இச்சை, செயல் ஆகிய அனைத்தும் உண்டு. வினைகளை ஈட்டி அவற்றின் பயன்களை நுகர்தலும் உண்டு. இந்நிலையில் உயிர் பெரிய பொருளை அறிய மாட்டாது; சிறிய பொருளையே பெரிதாக மயங்கி அவற்றை அடைய விரும்பி முயலும் சிற்றறிவு, சிற்றிச்சை சிறு தொழில் இவற்றை உடையதாகும். இந்நிலையை 'மருள் நிலை' என்று வழங்கலாம்.

**சுத்தாவத்தை :** மேற்குறிப்பிட்ட விண் மண் பாதலம் என்னும் மூவுலகங்களிலும் மாறி மாறிப் பிறந்து இன்பத்தைப் பெறவும் துன்பத்தைப் போக்கவும் விருப்பும் உயிர் அவற்றிற்குரிய வழிவகைகளை ஆராய்ந்து அறிகின்றது; அவ்வழிகளில் முயன்று எண்ணிய பயன் எண்ணியவாறே கை கூடுமாயின் இன்பத்தை அடைகின்றது. கைகூடாத வழி துன்பத்தை நுகர்கின்றது. விருப்பு வெறுப்புகளையும் அடைகின்றது. இந்தச் சுழற்சியால் ஆணவமலத்தின் சக்தி மெலிவடைவதால் சிறு பொருள்களின்மீதுள்ள நாட்டம் மாறிப் பெரும் பொருளை அடையும் நோக்கம் உண்டாகின்றது. அப்பொழுது இறைவன் குருவாகி வந்து முப்பொருள்களின் இயல்புகளை உள்ளவாறு உணர்த்தி மெய்யுணர்வைத் தருகின்றான். இந்த மெய்யுணர்வால் உயிரின் மூலம் மலங்கள் நீங்குகின்றன. இதனால் நின்மலனாகிய இறைவனை அடைந்து இன்புற்றிருக்கும் நிலை எய்தப்பெறுகின்றது. இந்த நிலையே சுத்தம் என்று வழங்கப் பெறும். மாசாகிய மலங்களினின்றும் முற்றிலும் நீங்கி உயிர் தூய்மை பெற்றதால் 'சுத்தாவத்தை' என்ற பெயரைப் பெறுகின்றது என்பதை அறிந்து தெளிக. இந்நிலையில் உயிர் இறைவனது அருளையே பற்றுக்கோடாகக் கொண்டிருப்பதால் இந்நிலையை 'அருள் நிலை' என்று வழங்கலாம்.

இந்த மூன்று அவத்தைகளைப்பற்றியும்,

கேவலம் சகலம் சுத்தம்
　　என்றுமுன் றவத்தை ஆன்மா
மேவுவன் கேவ லந்தன்
　　உண்மைமெய் பொறிக ளெல்லாம்
காவலன் கொடுத்த போது
　　சகலனாம் மலங்கள் எல்லாம்
ஓவின போது சுத்தம்
　　உடையன்உற் பவந்து டைத்தே.[27]

என்று சிவஞான சித்தியார் விளக்குதலைக் காண்க.

இக் கூறிய இம் மூன்று நிலைகளும் "காரண அவத்தை" என்று வழங்கப்பெறும். இறைவன் உடம்பைக் கூட்டுவதற்கு முன் இருந்த கேவல நிலை அனாதிகேவலம். அன்றாடம் வரும் கேவல நிலை நித்திய கேவலம். இனி உயிர்கள் உடம்பை எடுத்து வாழும் நிலையில் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்து நிலை வேறு பாடுகளை உடையனவாக இருக்கும். இந் நிலைகள் "காரியாவத்தை' எனவழங்கப் பெறும். இந்த ஐந்து நிலைகளும் அருந்தமிழில் நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்று வழங்கப்பெறுகின்றன. இந்த அவத்தைகளை அடைந்து நிற்பதே உயிரின் தடத்த இலக்கணம் எனப்படும் பொது இயல்பு ஆகும் என்பதை அறிந்து தெளிக.

மேற்குறிப்பிட்ட சாக்கிரம் முதலிய ஐந்தும் கீழாலவத்தை, மேலாலவத்தை, மத்தியாலவத்தை என்ற மூன்று வகையாக நிகழும் என்பதையும் நீ அறிந்து கொள்ள வேண்டும். கீழாலவத்தையில் அறிவு குறைந்து கொண்டே வரும். இம் முறையில் உயிர் சிறப்பாக நிற்குமிடமும் ஐந்தாகும். அவையாவன: சாக்கிரத்திற்குப் புருவ நடு; சொப்பனத்திற்குக் கண்டம் (கழுத்து); சுழுத்திக்கு

27. சித்தியார்—4-37

இதயம்; துரியத்திற்கு நாபி (உந்தி); துரியாதீதத்திற்கு மூலாதாரம் இடங்களாகும். இங்ஙனம் முறையே இறங்கிய உயிர், பிறகு அம்முறையே மேலேறிவருவதே மேலாலவத்தையாகும். இந்நிலையில் இறுதியாகப் புருவ நடுவை அடைந்த உயிர், அவ்விடத்திலேயே ஐந்து நிலைகளை அடையும். இவையே மத்தியாவத்தையாகும். இவை முறையே சகல சாக்கிரம், சகல சொப்பனம், சகல சுழுத்தி, சகலதுரியம், சகல துரியாதீதம் என்று வழங்கப் பெறும். இந்நிலையில் உயிர் தன்னால் அறியப்படும் பொருளில் அழுந்தி நிற்கும். இவ்வழுத்தம் சாக்கிரம் சொப்பனம் முதலியவற்றில் ஒன்றைவிட மற்றொன்றில் முறையே மிகுந்து நிற்பதாகும். இறுதி நிலையாகிய சாக்கிராதீதத்தில் உயிர்ப்பு அடங்குதலும் உண்டு. இந்நிலைகளைத் தெளிவாக எடுத்துக் காட்டல் இயலாது; அவரவர்களே தங்கள் தங்கள் அன்றாட நிகழ்ச்சிகளில் வைத்து அறிந்து கொள்ளல் வேண்டும். இந்நிலைகள் பொருள்களை அறியுங்காலத்தில் அவற்றை இடைவிடாது அறிதலும் விட்டு விட்டு அறிதலுமாகும். சாக்கிர நிலையில் பொருள்களை அறியும்பொழுது நாம் இடைவிடாது தொடர்ச்சியாய் அறிந்து கொண்டே இருப்பதில்லை. இடையிலே விட்டு விட்டுத்தான் அறி கின்றோம். அது நுனித்து நோக்கும் போதுதான் தெளி வாகப் புலனாகும். ஆயினும் விடுதலும், பற்றுதலும் மிகவிரைவில் மாறி மாறி நிகழ்தலால், சாக்கிர நிலையில் விடுதல் நமக்குப் புலனாதல் இல்லை; தொடர்ச்சியாய் அறிந்து கொண்டிருப்பது போலவே தோன்றுகின்றது. அஃது உண்மையன்று என்பதைச் சில பெரிய நிகழ்ச்சிகள் நிகழும்போது தெரிந்து தெளியலாம்.

கீழாலவத்தையில் உயிர் அறியாமையில் அழுந்துவ தால் அவை ஐந்தும் கேவல சாக்கிரம், கேவல சொப்பனம், கேவல சுழுத்தி, கேவல துரியம், கேவல துரியாதீதம், என்று சொல்லப்பெறும். இவ்விரண்டையும் விடுத்துச்

சிவத்தில் அழுந்தும் நிலையிலும் ஐந்து வகை உண்டு. அவை சுத்த சாக்கிரம், சுத்த சொப்பனம், சுத்த சுழுத்தி, சுத்த துரியம், சுத்த துரியாதீதம் என்று வழங்கப்பெறும். கேவலம்—மறப்பு; சகலம்—நினைப்பு; சுத்தம்—இவ்விரண்டும் அற்றது. கேவலத்தை இரவு என்றும் சகலத்தைப் பகல் என்றும் கூறுவர். ஆகவே, சுத்தம்—'இராப் பகல் அற்ற இடம்' என்ற பெயரைப் பெறுகின்றது. இவற்றை முத்தி நிலை கூறுமிடத்தில் தெளிவாக விளக்குவேன்.[28] ஆகவே, சாக்கிரம் முதலிய ஐந்தும், 'கேவலம், சகலம், சுத்தம்' என்ற மூன்று நிலைபற்றி நிகழும் எனவும்; முத்திறத்து ஐந்து அவத்தைகள் உயிர்கட்கு உள்ளன எனவும் நன்கு உணர்ந்து தெளிக. யோக நிலையிலும் ஐந்தவத்தைகள் உண்டு. அவற்றைப் பயன் இயலில் விளக்குவேன்.[29]

உயிர் மேற்கூறிய ஐந்து அவத்தைகளில் ஐந்து இடங்களில் நின்று செயற்படுவதை எடுத்துக்காட்டு ஒன்றால் விளக்குவேன். உயிர் புருவ நடுவில் நின்று சகல சாக்கிரம் முதலியவைகளை அநுபவித்தல் அரசன், அமைச்சர் படைத்தலைவர் முதலியவரோடு அத்தாணி மண்டபத்தில் வீற்றிருந்து அரசு புரிதல் போல்வது. பின் கீழாலவத்தையில் இறங்கி இறுதியில் மூலாதாரத்தில் செல்வது, அரசன் அத்தாணி மண்டபத்தைவிட்டுப் பல இடங்களைக் கடந்து அந்தப்புரத்திற்குச் செல்வது போல்வது. இங்ஙனம் இவ்விரு வகை ஐந்தவத்தைகளையும் விடுத்துச் சிவத்தை நாடுதல் அரசன் தனது ஆட்சியை முற்றிலும் விடுத்து ஓய்வு கொள்ளுதல் போல்வது.[30]

உயிர்கள் அளவிறந்தன என்பதை ஏற்கெனவே சுட்டிக் காட்டியுள்ளேன்[31]. இந்த உயிர்கள் மூவகை ஐந்தவத்தை

28. இயல்—6; கடிதம்—5;
29. இயல்—6; கடிதம்—5;
30. இந்த இயல்—3; கடிதம்—21; பக்
31. சி. ஞா. போ. சூத்-4. அதி-3. வார்த்-24 (a) சிற்றுரை காண்க.

களை அடையும்பொழுது உடம்பு தோறும் அவை வேறு வேறாய் நிகழ்கின்றன. அந்நிகழ்ச்சிகளால் வரும் இன்ப துன்ப நுகர்ச்சிகளும் உயிர்தோறும் வேறு வேறாகவும் உள்ளன. இதனால் உடம்புதோறும் உள்ள உயிர்கள் அனைத்தும் தனித்தனி உயிர்களேயன்றி ஒன்று அல்லது ஒன்றன் கூறாகாமை ஐயமற விளங்குவதாகும். இதனால் உடம்புகள் எண்ணிறந்தன என்பது கண்கூடாதலின், அவற்றையுடைய உயிர்களும் எண்ணிறந்தனவே என்பது தானே போதரும். 'தானே அவையே யாய்'[32] எனவும், 'தாம் தம் உணர்வின் தமிழ்[33] எனவும், 'அருட்கண்ணார்'[34] எனவும், "அறிவிக்க அன்றி அறியா உளங்கள்"[35] எனவும், 'தவஞ்செய்தார் என்றும் தவலோகம் சார்ந்து'[36] எனவும், 'சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்'[37] எனவும், 'நேசத்தர் தம்பால் நிகழும் ததிநெய்போல், பாசத்தார்க் கின்றாம்பதி'[38] எனவும், 'சிவபத்தர்'[39] எனவும், 'அல்லாதார்'[40] எனவும் இவ்வாறு உயிர்களை மெய்கண்டார் பன்மையாகக் கூறும் முகத்தால் அவை எண்ணிறந்தன எனக் காட்டுவார். அருணந்தி சிவாச்சாரியாரும் 'உலகெலாம் ஆதி,'[41] 'உயிரவை ஒடுங்கிப் பின்னும் உதிப்பதென் அரன் பால் என்னில்'[42] என்பது முதலாகக் குறிப்பாற் கூறியதேயன்றி 'உரை தரும் இப்பசு வர்க்கம்'[43] என்பது முதலாக இனிது விளங்கவும் கூறியருளினார். உமாபதி

---

32. சி. ஞா. போ. சூத்-2
33. ஷை. சூத்-5
34. ஷை. சூத்-5. உதாரண வெண்பா—33 (சிற்றுரை)
35. ஷை. சூத்-8 உதாரண வெண்பா—48
36. ஷை. சூத்-6. உதாரண வெண்பா—45 (சிற்றுரை)
37. ஷை. சூத்-10. உ. செ. 64
38. ஷை. சூத்-12. உ. செய். 76
39. ஷை. சூத்-12. வார்த்திகம்-52 (a) (சிற்)
40. ஷை. சூத்-12. வார்த்திகம்-52 (b) (சிற்)
41. சித்தியார்—2.1
42.
43.

சிவாச்சாரியார் 'எண்ணரிதாய்'[44] எனவும், 'பிறந்த நாள் மேலும் பிறக்கு நாள் போலும்—துறந்தார் துறப்பார் தொகை'[45] எனவும் எடுத்தோதி விளக்கினார். இச்சான்றோர்களின் வாக்குகளினால் 'உயிர்கள் எண்ணில' என்ற சித்தாந்தம் அறியப்படும் என்பதைத் தெளிக.

மூவகை உயிர்கள் : இங்ஙனம் 'அளவிலவாகிய உயிர்கள் பலவும் மூன்று வகையினவாய் உள்ளன' என்பது சித்தாந்தக் கொள்கை யாகும். இவ்வகை, அந்த உயிர்களின் பாசப்பிணிப்புபற்றி அமைந்தன என்பதை உளங் கொள்க. அஃதாவது, ஆணவம், கன்மம், மாயை எனப் பாசம் மூன்று என்பதைப் பல விடங்களிலும் கூறியதை நீ நன்கு அறிவாய். இவை மூன்றும் 'மலம்—அழுக்கு' எனப்படும். இம் மும்மலங்களுள் ஒன்றையே உடைய உயிர்கள், இரண்டை மட்டும் உடைய உயிர்கள், மூன்றையும் உடைய உயிர்கள் என்னும் முறைமையால் உயிர்கள் அனைத்தும் மூவகைப்படுவனவாகும்.[46] மும்மலங்களுள் மூலமாய் உள்ளது ஆணவமலம் என்பதை நீ அறிவாய். இஃது எல்லா உயிர்களையுமே பற்றியுள்ளது.

ஒரு மலம் உடைய உயிர்கள் என்பன ஆணவம் ஒன்றையே உடையனவாகும். ஒரு மலம் உடையவர் விஞ்ஞானகலர் என்று வழங்கப் பெறுவர். ஆணவத்தை அடுத்து நிற்பது கன்மம். அதனால் இருமலம் உடைய உயிர்கள் ஆணவம், கன்மம் என்னும் இரண்டையும் உடையனவாகும். இருமலம் உடையவர் பிரளயாகலர் என்று பேசப் பெறுவர். மூன்றாவது மலம் மாயை. மூன்று மலங்களை

---

44.

45. திருவருட் பயன். 2-வது உயிரவை நிலை—1

46. வைணவத்திலும் ஆன்மாக்கள் மூவகைப்படும். அங்கு பத்தர்கள் (தளைப்பட்டிருப்பவர்கள்), முத்தர்கள், நித்திய சூரிகள் என்று இவர்கள் வகைப்படுத்தப்பெறுவர் (டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்: முத்தி நெறி-பக் 27 காண்க)

உடைய உயிர்கள் ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றையும் உடையன. மும் மலத்தையும் உடையவர் சகலர் என்ற பெயரைப் பெறுவர். இதனைத் திருமூலர்,

ஆணவ மாகும் விஞ்ஞான கலருக்குப்
பேணிய மாயை பிரளயா கலருக்கே
ஆணவ மாயையும் கன்ம மூன்றுமே
காணுஞ் சகலர்க்குக் காட்டு மலங்களே.[47]

என்று விளக்குவர். மேலும், இந்த விவரங்களை,

திரிமலத்தார் ஒன்று அதனில்
சென்றார்கள் அன்றி
ஒருமலத்தா ராயும் உளர்.[48]

என்றும்,

மூன்றுதிறத் துள்ளாரும்
மூலமலத் துள்ளார்கள்;
தோன்றலர்தொத் துள்ளார் துணை.[49]

என்றும் உமாபதிதேவ நாயனர் கூறியுள்ளமை காண்க.

உரைதரும்இப் பசுவருக்கம் உணரின் மூன்றாம்;
உயிரும் விஞ்ஞானகலர் பிரளயாகலர், சகலர்;
திரையின்மலம் மலம்கன்மம் மலம்கன்மம் மாயை
நிற்கும்.[50]

என்றும் அருணந்தி சிவாச்சாரியாரும்,

மூவகைஆ ருயிர்வருக்கம், மலத்தார், கன்மம்
மூலமலத் தார்மூன்றும் உடையார் அன்றே[51]

என்று உமாபதி சிவாச்சாரியாரும் கூறியுள்ளவற்றால் இவ்வகையினைக் கண்டு தெளியலாம். மெய்கண்டாரும்,

---

47. திருமந்திரம்-எட்டாந் தந்திரம்-கேவல சகல சுத்தம்-15
48. திருவருட் பயன்—2:2
49. ஷை. 2:3
50. சித்தியார்—8.2
51. சிவப்பிரகாசம்—8

மெய்ஞ்ஞானம் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான அச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்.[52]

என்ற வெண்பாவில் இம்மூவகை உயிர்களையும் குறிப்பிட்டுள்ளார்.

இவர்களுள் 'சகலர்' என்பதற்குக் 'கலையோடு கூடியவர்' என்பது பொருள். 'அகலர்' என்பதற்கு 'கலை இல்லாதவர்' என்பது பொருள் 'கலை' என்பது மாயையின் கூற்றைக் குறிக்கும்.[53] மாயை மயக்கும் தன்மை உடையது. ஆதலின் 'சகலர்' என்பது 'மயக்கத்தை உடையவர்' என்னும் பொருளிலும் 'அகலர்' என்பது 'மயக்கம் இல்லாதவர்' என்னும் பொருளிலுமே வழங்கப்படுகின்றன என்பதையும் அறிக.

மாயை இருவகைக் கூறுபாடுகளையுடையது. ஒன்று: முக்குண வடிவாய் நின்று மயக்கத்தைச் செய்வது; மற்றொன்று: அவ்வாறின்றி அறிவை மயக்குதல் மாத்திரமே செய்வது. இவற்றுள் முக்குண வடிவாய மாயை 'அகலர்' என்பவர்கட்கு இல்லை. கன்மமும் அங்ஙனமே மயக்குவதும், மயக்காததும் என இருவகைப்படும். அவற்றுள் மயக்கும் கன்மம் விஞ்ஞானகலருக்கு இல்லை. 'விஞ்ஞானகலர்' என்பதற்கு விஞ்ஞானத்தால் கலை நீங்கப் பெற்றவர் என்றும், 'பிரளயாகலர்' என்பதற்கு பிரளயத்தில் கலை நீங்கப் பெற்றவர் என்றும் பொருள் கூறப்படுகின்றது. சொற்பொருள் அப்படியென்றாலும், செயற்கையாலன்றி இயற்கையிலும் விஞ்ஞானகலர், பிரளயாகலர் என்னும் நிலையினராய் இருத்தல் உண்டு. இங்ஙனம் வேறு வேறு வகையாகச் சொல்லப்பெறும் உயிர்கள் அனைத்திற்கும் எவ்வகையான பந்தத்தையும் விடுத்து வீடு பெறுதலே முடிந்த பயனாகும் என்பதை அறிந்து தெளிக.

அன்பன்,
**கார்த்திகேயன்.**

---

52. சி. ஞா. போ. சூத்-8. அதி-2. ஷ். வெ. 47
53. காலம், நியதி, கலை என்ற மூன்று தத்துவங்களும் மாயையிலிருந்து தோன்றும்.

ஏகமாய்த் தம்கால எல்லைகளின் மீளும்
எண்ணரிய சத்தியதாய் இருளொளிர இருண்ட
மோகமாய்ச் செம்பினுரு களிம்பேய்ந்து நித்த
மூலமல மாய்அறிவு முழுதினையும் மறைக்கும்
பாகமாம் வகைநின்று திரோதாயி சத்தி
பண்ணுதலான் மலமெனவும் பகர்வர்அது பரிந்து
நாகம்மா நதிமதியம் பொதிசடையான் அடிகள்
நணுகும்வகை கருணைமிக நயக்கும் தானே.[1]

1. சிவப்பிரகாசம்—20

# 24

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலம் பல விளைவதாகுக. இக்கடிதம் தொடங்கி பாசங்கள்பற்றி விளக்குவேன். பசுக்களைப் பிணித்துள்ளவை பாசங்கள் ஆகும். பாசம் என்பதற்குக் கட்டுவது என்பது பொருளாகும். பாசங்கள் மூன்று. அவை ஆணவம், கன்மம், மாயை என்பனவாகும். இதனை முன்பே சுட்டிக் காட்டியுள்ளேன். இவற்றுள் மாயை அனைவ ராலும் எளிதில் உணரப்படுவது. ஏனெனில், பல்வேறு பிறவிகளாகக் காணப்படும் உடம்புகளும், மற்றும் நிலம் நீர் முதலிய பெரும் பொருள்களும் அவற்றினால் ஆக்கப் படும் சிறு பொருள்களும் ஆகிய உலகத் தொகுதி முழுவதும் மாயையின் செயல்களேயாகும். கன்மமோ இவ்வளவு எளி தாகக் காட்சியில் உணர முடியாதது; ஆனால் சிறிது நுனித்து நோக்கினால் உணரக்கூடியது. இதற்குமேல் உள்ள 'ஆணவம்' என்பதை உணர்தல் மிகவும் அரிது. இது சைவசித்தாந்தத்தின் சிறப்பான பகுதியாகும். பிற சம யங்கள் இதனை ஒப்புக் கொள்வதே இல்லை. பருப் பொருள் (தூலப் பொருள்) எளிதில் உணரப்படும் என்பதை யும், நுண் பொருள் (சூக்குமப் பொருள்) எளிதில் உணர வாராது என்பதையும் நீ நன்கு அறிவாய். எனவே, மாயை பருப் பொருள். ஆணவம் நுண்பொருள்; கன்மம் இரண் டிற்கும் இடைப்பட்ட பொருள் என்பது விளங்கும். இந்த மூன்றும் மும்மலங்கள் எனப் பெயர் பெறும். மலம் என்பது அழுக்கு. உயிர்களின் தூய்மையைக் கெடுத்து நிற்றலால் இப் பெயர் பெற்றது.

முதலில் ஆணவத்தை விளக்குவேன். இஃது இல்லாத பொருளன்று; உள்ள பொருளே. அறிவுடைய பொரு ளாகிய உயிரை அறியாமையுடையதாகச் செய்வதே இதன்

இயல்பாகும். அறிவே உயிரின் இயற்கை என்பதையும் அறியாமை, அதற்கு ஆணவ மலத்தின் சேர்க்கையாலாகிய செயற்கையே என்பதையும் நீ அறிதல் வேண்டும். இந்த ஆணவ மலம், நெல்லிற்கு உமி போலவும் செம்பிற் களிம்பு போலவும் அநாதியே உயிர்கட்கு இயற்கைக் குற்றமாய் அமைந்துள்ளது. இதனைச் சிவஞான போதம்,

> நெல்லிற் குமியும் நிறைசெம்பி னிற்களிம்பும்
> சொல்லிற் புதிதன்று தொன்மையே.[2]

என்று குறிப்பிடும். இதனை விளக்குவேன். செம்பிற்கு அதன் கண் உள்ள களிம்பு குற்றமேயாகும். அக்குற்றம் இடையிலே ஏற்பட்ட குற்றம் அன்று. செம்பு என்று உண்டோ, அன்றே அந்தக் களிம்பும் உண்டு. அந்தக் களிம்பு செம்போடு என்றும் இராது நீங்கிவிடும் என்பது, அதனைப் புளி முதலியன இட்டுத் துலக்கும்பொழுது களிம்பு சிறிதளவு நீங்குதலும், துலக்கப்பட்ட செம்பில் பின்பும் களிம்பு மேலிடுதலும், புடமிட்டுப் பதமறிந்து இரச குளிகையைச் சேர்க்கும் பொழுது களிம்பு முற்றிலும் நீங்குதலும் உளவாதலை அறிகின்றோம். ஆகவே, களிம்பாகிய குற்றம் செம்பிற்குச் செயற்கையேயன்றி இயற்கை அன்று என்பது தேற்றமாகின்றது. இங்ஙனமே அரிசி தோன்றும்பொழுது உமியோடு கூடத் தோன்றுகின்றதேயன்றித் தனியாகத் தோன்றுவதில்லை என்பதை நீ அறிவாய். அரிசிக்கு உமி குற்றமேயன்றி குணம் அன்று. அதனால் உமி அரிசியை விட்டு நீங்கும்பொழுது, அரிசி தூய்மைபெற்று விளங்குகின்றது. ஆகவே, உமியாகிய குற்றம் அரிசிக்குச் செயற்கையேயன்றி இயற்கையன்று என்பது தெளிவாகின்றதன்றோ? இங்ஙனமே, உயிர் என்று உண்டோ அன்றே அதற்கு ஆணவ மலம் இருப்பினும், அஃது அதற்குக் குற்றமாய்ப் பின்பு விட்டு நீங்குதலின், அது 'செயற்கை' எனப்படுமன்றி, 'இயற்கை' எனப்படாது. இம் மலம் 'சகசமலம்'

2. சி ஞா. போ. சூத்-2; அதி-2; வெண்பா-8

என்றும், 'அநாதி செயற்கை' என்றும் வழங்கப்பெறும். 'சகசம்' என்பதற்குக் 'கூடப் பிறந்தது' என்பது பொருள்.

ஆணவ மலம் ஒன்றேயன்றிப் பல இல்லை. ஆயினும் எண்ணிறந்த சக்திகளையுடையது. அதனால் எண்ணில்லாத ஆன்மாக்களை மறைத்து நிற்றல் அதற்குக் கூடுவதாகின்றது. ஆணவ மலத்தின் இயல்பினை,

ஏகமாய்த் தங்கால எல்லைகளின்
மீளும் எண்ணரிய சத்தியதாய்.[3]

என்று சிவப்பிரகாசம் செப்பும்; சித்தியாரும்,

ஒன்றதாய் அநேக சக்தி
யுடையதாய் உடனாய் ஆதி
அன்றதாய் ஆன்மா வின்தன்
அறிவொடு தொழிலை ஆர்த்து
நின்றுபோத் திருத்து வத்தை
நிகழ்த்திசெம் பினிற்க ளிம்பேய்ந்
தென்றும்அஞ் ஞானம் காட்டும்
ஆணவம் இயைந்து நின்றே.[4]

என்று தெளிவுறுத்தும். இதனை விளக்குவேன். பகலவன் ஒரு பொருளேயாயினும் எண்ணற்ற கதிர்களைக் கொண்டு எண்ணற்ற பொருள்களை விளக்குகின்றான்; இது விளக்கும் சக்தி. இதுபோலவே இருளும் ஒன்றாய் இருந்தே எண்ணில்லாத சக்திகளைக் கொண்டு எண்ணில்லாத கண்களை மறைக்கின்றது என்றும், இது மறைக்கும் சக்தி என்றும் உணர்தல் வேண்டும். இங்ஙனமே, ஆணவ மலமும் எண்ணிறந்த மறைத்தற் சக்திகளையுடையதாய் எண்ணிறந்த ஆன்மாக்களை மறைக்கின்றது என்பதைத் தெளிக.

3. சிவப்பிரகாசம்—20
4. சித்தியார்—2·80

இனி ஒன்றாய், சடமாய், அளவற்ற சக்திகளையுடைய ஆணவ மலம் கேவலம், சகலம், சுத்தம் என்ற மூன்று நிலைகளிலும் எவ்வாறு செயற்படும் என்பதை விளக்குவேன். கேவல நிலையில் ஆணவ மலத்துடன் மாயை கன்மங்களின் செயற்பாடு இன்மையால் ஆணவ மலம் அங்குத் தனது மறைத்தல் செயலைத் தடையின்றி செய்யும். அதனால் ஆன்மா அந் நிலையில் தனது அறிவு, இச்சை, செயல் என்பவற்றில் ஒன்றும் ஒரு சிறிதும் நிகழப் பெறாது. முழு மூடமாய்ச் சடப் பொருள் போலவே தான் என்ற ஒரு பொருள் இருப்பதாகவே தோன்றாமல் ஆணவத்தில் அமிழ்ந்து கிடக்கும். அப்பொழுது ஆணவ மலத்தின் சக்தி அறியாமையைத் தரும்பொழுது 'ஆவாரகசக்தி' என்று பெயர்பெறும். ஆவாரகம்—மறைப்பது. இதுவே ஆணவத்தின் சொரூபம் அல்லது உண்மை இயல்பாகும்.[5]

சகல நிலையில் மாயை, கன்மங்கள் செயற்படும் என்பதை அறிவாய். இந் நிலையில் ஆணவத்தின் சக்தி சிறிது அடங்கப்பெறும். அதனால் அது பருப்பொருளைக் காணும் காட்சியைமறைப்பதில்லை. நுண் பொருள்களைக்காணும் காட்சியை மட்டிலும் மறைத்து நிற்கும். நுண் பொருள்களைக் காணும் ஆற்றல் இன்மையால் பருப் பொருள்களின் தன்மையும் உள்ளவாறு விளங்காது. ஒன்று பிறிதொன்றாகவே தோன்றும். அதாவது, நிலையாத பொருள் நிலைத்த பொருள் போலவும், இழிந்த பொருள் உயர்ந்த பொருள் போலவும், துன்பப் பொருள் இன்பப் பொருள் போலவும் மாறித்தோன்றும். இந்நிலை இருளில் இருக்கும் பொழுது ஒன்றையும் பார்க்க இயலாத ஒருவருக்கு விளக்கு வரும்பொழுது பருப் பொருள்கள் விளங்க, நுண் பொருள் விளங்காமலும், பொருள்களின் வண்ணமும் வடிவும் உள்ளவாறு விளங்காமல் மாறித் தோன்றுதலும் ஆகிய நிலையைப்போல்வதாகும். இவ்வாறு பொருள்கள் மாறுபட்டுத் தோன்றுவதால் அங்கும் இருளினால் விளைவதன்றி விளக்கினால் விளைவதன்று

5. ஷெ. 80

என்பதை நீ அறிவாய். விளக்கு பொருள்களை விளக்க வந்ததேயன்றி மறைக்க வந்ததன்று; மறைப்பது எப்பொழுதும் இருளேயன்றி விளக்கு அன்று. அது போலவே சகல நிலையில் மெய்யுணர்வு தோன்றாமல் விபரீத உணர்வு தோன்றுவதும் மாயை கன்மங்களால் விளைவதன்று; ஆணவத்தால் விளைவதேயாகும். ஆணவத்தின் சக்தி இவ்வாறு சகல நிலையில், விபரீத ஞானத்தை—மயக்க உணர்வை—உண்டாக்குதலால் அப்பொழுது அதன் சக்தி 'அதோ நியாமிகாசக்தி' என்ற பெயரில் வழங்கும். அதோ நியமிகை—கீழ்நோக்கிச் செலுத்துவது. மகத்தாகிய ஆன்மாக்களை அணுத்தன்மையாய்ச் செய்தல்பற்றி வந்த காரணப் பெயரே 'ஆணவம்' என்பதை முன்னர்க் கூறியதை ஈண்டு நினைவு கூர்க. இந்நிலை அதற்கு மாயை கன்மங்களின் சார்பினால் வருவதலின், இவ் வியல்பு ஆணவத்தின் தடத்த நிலை எனப்படும் ~~பொது~~ இயல்பாகும். இதனால் மாயை கன்மங்களின் சொரூபம் விளக்கும் தன்மை என்பது தெளிவாகும். மாயையின் தன்மை விளக்குவதாயினும், ஆணவத்தின் மயக்குதல் தன்மைக்கு ஏதுவாதல்பற்றி, மயக்கும் தன்மை யுடையதாகவும் கூறப்படும்.

> வைத்ததோர் மலமாய் மாயை
> மயக்கமும் செய்யு மன்றே.[6]

என்ற சித்தியாரின் கூற்று இதுபற்றியதேயாகும்.

சுத்த நிலையில் உயிர் இறைவன் திருவருளை நேரே பெற்று விளங்குகின்றது என்பதை நீ அறிவாய். இந்தப் பேரொளியின்முன் ஆணவத்தின் மறைத்தல் சக்தியும், மாயை கன்மங்களது சிறு விளங்கச் சக்திகளும் சிறிதும் முனைந்து நிற்கமாட்டாது அடங்கியே கிடக்கும். அதனால் அச் சக்திகள் அனைத்தும் அப்பொழுது அந்தர்ப்பாவித சக்தியாய்—அடங்கிக் கிடக்கும் சக்தியாய்—விடுவனவாகும்.

6. ஷை. 2.53

இதனையும் ஓர் எடுத்துக்காட்டு மூலம் தெளிவிப்பேன். பகலவன் ஒளியின்முன் விளக்கொளி அடங்கிக் கிடக்கின்றதேயன்றி அழிந்தொழியவில்லை என்பதை நீ அறிவாய். அதுபோலவே, இருளும் பகலவன் முன் அடங்கிக் கிடக்கின்றதேயன்றி அழிந்தொழியவில்லை என்பதையும் நீ அறிதல் வேண்டும். எப்படியெனின், அது கதிரவனின் ஒளி உள்ள பொழுதும் பிற பொருள்களின் நிழல் தோன்றுவதாலும் அவ்வொளி மறைந்த உடன் முன்போலவே இருள் வந்து சூழ்வதாலும் அறியப்படும். எனவே, ஆணவம் கன்மம் மாயை என்ற மும்மலங்களும் என்றும் உள்ள பொருள்களே; அவை ஒரு காலத்தில் உள்ளனவாய்ப் பின்னொரு காலத்து இல்லாது அழிந்தொழிவன அல்ல. ஆகவே, அவை பெத்தத்தில் உள்ள ஆன்மாக்களைப் பற்றுகின்றன என்பதும் முத்தியில் உள்ள ஆன்மாக்களைப் பற்றுவதில்லை என்பதுமாகிய வேறுபாட்டில் மட்டுமே உள்ளன என்று தெளிவாயாக. இதனை,

> முத்திதனின் மூன்றும் முதலும் மொழியக்கேள்
> சுத்தஅது போகத்தைத் துய்த்தல்அணு—மெத்தவே
> இன்பம் கொடுத்தல்இறை இத்தைவிளை வித்தல்மலம்
> அன்புடனே கண்டுகொள்அப் பா.[7]

என்ற உண்மை விளக்கத்தாலும் அறியலாம். 'பெத்தத்தில் இறைவனது இன்பம் உயிரிடத்து விளையவொட்டாது தடுத்து நின்ற ஆணவ மலம் முத்தியில் அவ்வாறு செய்ய மாட்டாது வாளா இருக்கும்' என்பது இதன் கருத்தாகும் என்பதை உளங் கொள்க. ஆகவே, சுத்த நிலையில் ஆணவ மலத்தின் சக்தி அந்தர்ப்பாவித சக்தியாய்விடும் என்று உணர்வாயாக.

ஆணவ மலம் ஏனைய மலங்கட்கு மூலமாதலின் 'மூல மலம்' என்றும், இயற்கைக் குற்றமாதலின் 'சகச மலம்'

---

7. உண்மை விளக்கம்—5

என்றும், அறியாமையே வடிவமாய் நிற்றலிதை 'இருள் மலம்' என்றும் மற்றும் பல பெயர்களையும் பெற்று நிற்கும். ஒருவிதத்தில் ஆணவம் இருளை ஒத்திருப்பினும், இன்னொருவிதத்தில் ஆணவம் இருளைவிடக் கொடியது. இருள் தன்னிடத்திலுள்ள பொருளை மறைக்கும்; தன்னை மறைக்காது. ஆனால் ஆணவம் தன் செயலை மறைப்பது மட்டுமன்றித் தன்னையும் மறைத்துக் கொள்ளும். இருளில் மறைந்து கிடக்கும் பொருள்கள் நம் கண்ணுக்குப் புலனாகா விடினும், அவற்றை மறைத்துக் கொண்டிருக்கும் இருளாவது நமக்குப் புலனாகும். ஆணவம் நம் அறிவை மறைக்கின்றது. அதே சமயம் தன்னையும் மறைத்துத் தன் செயலையும் மறைக்கின்றது. இருள் வெளிப்பட்டுத் தன்னைக் காட்டிக்கொண்டே தனது தொழிலைப் புரிகின்றது. ஆனால் ஆணவம் வெளிப்படாமல் தன்னை மறைத்துக் கொண்டே தனது தொழிலைச் செய்கின்றது.

ஒருபொருளும் காட்டாது
இருள்உருவம் காட்டும்;
இருபொருளும் காட்டாது
இது.[8]

என்றும்,

பலரைப் புணர்ந்தும்இருட்
பாவைக்குண் டென்றும்
கணவர்க்கும் தோன்றாத
கற்பு.[9]

என்றும் இதன் கொடுமையை விளக்குவர் உமாபதிசிவம்.

'அறிதோ றறியாமை கண்டற்றால்.[10] என்றார் வள்ளுவப் பெருந்தகை. ஒருவர் தமக்கு உள்ள அறியாமையை

8. திருவருட் பயன் இருள்மல நிலை—3
9. ஷை. ஷை—5
10. குறள்—1110

அறிவு வந்தபின் அறிவதன்றி அவ்வறியாமை உள்ள பொழுது அறிவதில்லை. அதனால் அறியாமையாகிய ஆணவ மலத்தை அது நீங்கியபின் அறிவதல்லது அஃது உள்ள பொழுது அறிய முடியாதன்றோ? அதனால்தான் ஆணவ மலம் ஒருவற்குப் புலனாகாத பொருளாய் உள்ளது. சைவசித்தாந்தம் தவிரப் பிற சமயங்களுள் ஒன்றேனும் ஆணவ மலத்தை உண்டெனக் கொள்ளாதிருத்தற்கும் இதுவே காரணமாகும். அறியாமை உடையவருக்கு அவ் வறியாமை அறிவாய்த் தோன்றுதலன்றி அறியாமையாய்த் தோன்றாது. ஆதலின் அவருக்கு அறிவு கொடுத்தலும் இயலாது. இதனை,

> காணாதாற் காட்டுவான்
> தான்காணான்; காணாதான்
> கண்டானாம் தான்கண்ட
> வாறு.[11]

என்று கூறுவார் வள்ளுவப் பெருந்தகை. "அறிவு போல் அடர்ந்தெழும் அறியாமையின் வலியால்" என்பர் மாதவச் சிவஞான யோகிகள். எனவே, அறியாமை நீங்குதல் அதற் குரிய காலம் வரின் அல்லது, அதற்கு முன்னே நீக்குதல் ஒருவராலும் இயலாது. ஆணவ மல சக்திகள் பலவும் பல் வேறு கால எல்லைகளையுடையன. அக்காலம் வரும்வரை அவை நீங்கா; அக்காலம் வந்த பின்னரே அது நீங்கும்.

இன்னோர் உண்மையையும் நீ உளங் கொள்ளல் வேண்டும். உயிர்கட்குள்ள அறியாமை அவற்றின் இயல் பன்று; அஃது ஆணவத்தின் காரியமாகும். இயற்கையாயின் அஃது என்றும் நீங்காது. அதனால், அவைகட்கு 'வீடு' என்பது இல்லையாய்ப் பந்தமே நிலைத்ததாகிவிடும். அதனால் அறியாமை உயிர்களின் இயற்கையன்று என்பதை அறிக. உலகிலும் அறியாமை படிப்படியாய் நீங்கி வரக்

11. குறள்—849 (புல்லறிவாண்மை)

காண்கின்றோமேயன்றி நீங்காது நின்றலைக் காண வில்லையாதலாலும் இதனைத் தெளியலாம்.

அறியாமை செயற்கையாயின் மாயை, கன்மம் என்ற மலங்கள் உயிர்கட்கு அறியாமையைத் தருவன எனக் கொள்ளலாமோ என்ற ஐயம் நின்பால் எழலாம். அந்த ஐயத்தையும் போக்குவேன். மாயையின் காரியங்கள் உடல், பொறி, கரணங்கள் ஆகும். இவை உயிர்களின் அறிவை விளங்கச் செய்வனவேயன்றி விளங்கவொட்டாது மறைப்பதில்லை. இதனை விழிப்பிலும் உறக்கத்திலும் நன்கு உணரலாம். விழிப்பில் உடல், பொறி, கரணங்கள் செயற்படுகின்றன. அப்பொழுது உயிர்களுக்கு அறியாமை நீங்கி அறிவு விளக்கம் பெறுகின்றது, உறக்கத்தில் அவை செயலற்றுக் கிடப்பதால் உயிர்கட்கு அறிவு நீங்கி அறியாமை மேலிடுகின்றது. இதனால், மாயை அறிவை விளக்குவதன்றி மயக்குவதன்று என்பது தெளிவாகும். 'மாயை இருளன்று; விளக்கு' என்கின்றார் மெய்கண்டார். இந்த ஞானச் செல்வர்,

> மாயா தனுவிளக்காம்
> மற்றுள்ளம் காணாதேல்
> ஆயாதாம் ஒன்றை.[12]

என்று கூறுவதைக் காண்க. 'ஆணவமும் மாயையும் இருளும் ஒளியும் போலப் பகைப் பொருள்' என்பர் உமாபதி சிவம்,

> இகலிவரும் இவைஉணரின் இருவெளியாம் தன்மை
> எய்தும்வகை தன்செய்தி இலங்கும்.[13]

என்று அவர் குறிப்பதைக் காண்க.

கன்மமும் (வினையும்) செயல் புரியத் தூண்டுவதன்றித் தடுப்பதன்று. அதனால், செம்பில் களிம்புபோல் இயற்கை

12. சி. ஞா. போ. சூத்-4. அதி-2. பா-27
13. சிவப்பிரகாசம்—37

யாகவே உயிர்களிடத்துப் பொருந்தியுள்ள ஆணவத்தை நீக்குவதற்கே இறைவன் மாயை கன்மங்களை உயிர்கட்குக் கூட்டினான் என்பது தெளிவாகும். எனவே, உடல் பொறி கரணங்களும் உலகமும் உயிர்களின் நன்மை கருதியே இறைவனால் அருளப் பெற்றனவாதல் அறிந்து தெளிக. இங்ஙனமாகவும் சிலர் உடம்பும் உலகமும் தமக்குத் தீங்கு தருவனவாகக் கருதி அவற்றைப் பகைப் பொருளாகக் கொண்டு வெறுப்பர். இது தவறு; பெருந் தவறு. உடம்பு முதலியவை எந்த நலம் கருதித் தரப்பெற்றனவோ அந்த நலத்தையறியாது அவற்றையே பெரியனவாக மதித்து அவற்றில் அழுந்துதல் குற்றமேயன்றி அவை அருளப் பெற்றதில் குற்றம் ஒன்றும் இல்லை என்பதை உளங் கொள்க. இவற்றால் அறியாமை, மாயை கன்மங்களின் காரியமன்று; வேறொன்றின் காரியமே என்பது புலனாவதால், வேறொன்று எனப்படும். அதுவே ஆணவ மலம் என்பதைந் தெளிக.

இன்னும், உயிர்களின் அறிவு இச்சை செயல் என்னும் ஆற்றல்களை அழித்தொழியாது மறைத்தே நிற்கும் என்பதையும் நீ அறிதல் வேண்டும். அதனால் அந்த ஆணவ இருளை நீக்கக்கூடிய மாயை கன்மங்கள் சேருமாயின், அவ்விருள் நீங்க, முன் மறைந்து நின்ற அறிவு இச்சை செயல்கள் வெளிப்படும். இதனை மூன்று எடுத்துக்காட்டுகளால் தெளிவிப்பேன். சுடும் தன்மையுடைய நெருப்பின் சக்தி தடை மந்திரத்தால் தடுக்கப்படும்போது சுடாது நிற்கும்; பின் விடை மந்திரம் செலுத்தப்பெறும்போது சுடுதல் தொழிலைச் செய்யும். விறகில் நெருப்பு மறைந்து கிடக்கின்றது. அதனைக் கடையும்பொழுது அந்நெருப்பு வெளிப்படுகின்றது. நீர் பாசியால் மறைக்கப்பெறுகின்றது. கல்லெறி முதலியவற்றால் அப்பாசி நீங்கி நீர் புலப்படுகின்றது. இங்ஙனமே அறிவை மறைக்கும் ஆணவ மலத்துடன் மாயை கன்மங்கள் சேரும்பொழுது மறைந்து நின்ற அறிவு முதலியவை வெளிப்படும் என்பதை அறிந்து தெளிக,

எல்லா உயிர்களையும் ஒருங்கே மறைத்துக் கொண்ட ஆணவ மலம் நீங்குங் காலத்து எல்லா உயிர்களினின்றும் ஒருங்கே நீங்காமல் சில சில உயிர்களாகவே நீங்குகின்றன. இதற்குக் காரணம் என்ன? எல்லா உயிர்களும் அறிவித்தால் ஒருங்கே அறிவதில்லை; அவை சிறிது சிறிதாகவே அறிகின்றன. இஃது உயிர்களின் பொதுத்தன்மையாகும். ஆயினும் சிறிது சிறிதாய் அறிவதிலும் பல்வேறு வகைப்பட முன்பின்னாய் அறிந்துவருதல் உயிர்தோறும் அமைந்துள்ள சிறப்பியல்பாகும். ஆகவே, 'அனாதியே ஆணவ மலம் மறைந்து நிற்றல்' எல்லா உயிர்களிடத்தும் பொதுவாக உளதாயினும் அம்மறைப்பு உயிர்தோறும் வேறு வேறு வகையாகவே இருக்கும். இவ்வாறு மறைத்து நிற்கும் வகை தூலம், சூக்குமம், அதிசூக்குமம் (பரம்) என்று மூன்றாய் அமையும்.

இவை உயிர்களைப் பிணிக்கும் வகையிலும் வேறுபடும். ஆணவ மலம் தூலமாய் வலிதாய்ப் பற்றிய உயிரை, பின் கன்மம் மாயை என்னும் இருமலங்களும் வந்து பற்றும். அதனால் இவை மும்மலம் உடைய உயிர்களாகும். ஆணவ மலம் சூக்குமமாய் மெலிதாய்ப் பற்றிய உயிரை, பின் கன்மம் மாத்திரமேவந்து பற்றும். இவை இருமலம் உடைய உயிர்களாகும். இவ்வாறன்றி ஆணவ மலம் அதிசூக்குமமாய் மிகவும் மெலிதாகப் பற்றிய உயிரை, பின்னர் எம்மலமும் வந்து சாராது; அதனால் அவை, ஆணவமலம் ஒன்றையே கொண்டு ஒருமலம் உடைய உயிர்களாகத் திகழும். ஒரு மலம் உடை உயிர்கள் விஞ்ஞான கலர் என்று வழங்கப் பெறும். 'விஞ்ஞானகலர்' என்பதற்கு 'விஞ்ஞானத்தால்— பேரறிவால் — கலை நீங்கப் பெற்றவர்' என்பது பொருள். 'கலை' என்றது மாயையை. எனவே, அஃது இல்லாத உயிர் கள் 'அகலர்—கலை இல்லாதவர்' என்று வழங்கப்பெறு கின்றனர். இருமலம் உடைய உயிர்கள் பிரளயாகலர் என்று வழங்கும் 'பிரளயத்தில் கலை நீங்கப் பெற்றவர்' என்று இதன் பொருள் ஆகும். மும்மலம் உடைய உயிர்கள்

'சகலர்' என்ற பெயரால் வழங்கப் பெறும். 'சகலர்' என்பதற்கு, 'கலையோடு கூடியவர்' என்பது பொருள் இதனை முன்னரும் குறிப்பிட்டுள்ளேன்.[14] விஞ்ஞானகலரும் பிரளயாகலருமாதல் இயற்கையாக முன்பே அமைதலும் உண்டு; செயற்கையாகப் பின்பு நிகழ்தலும் உண்டு.

இக்கூறியவற்றால் உயிர்தோறும் மூலமலமாகிய ஆணவமலப் பிணிப்பின் வேறுபாட்டிற்கு ஏற்ப, மற்றைய மாயை கன்மங்களும் அமையும் என்பது தெளிவாகும். உயிர்கள்தோறும் ஆணவத்தின் பிணிப்பு ஒருவகையாய் இருத்தலின், உயிர்கள் அப்பிணிப்பினின்றும் நீங்கி வீடு பெறுதலும் ஒருகாலத்தில் நிகழாமல் பல்வேறு காலங்களில் நிகழ்கின்றது என்பதை உணர்ந்து தெளிக. இவ்வாறு ஆணவ மலத்தின் தன்மையைப் பல வகையிலும் ஆய்ந்து அறிந்து கொள்க.

அன்பன்
கார்த்திகேயன்.

## 25

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு நலன். நலனே யாகுக.

இக்கடிதத்தில் கன்மத்தைப்பற்றிச் சிறிது விளக்குவேன். கன்மம் என்பதும் கருமம் என்பதும் ஒன்றே. நாம் வினை என்று சொல்லுகின்றோமே அதுவும் கன்மமே. நாம் செய்யும் செயல்கள் யாவும் கன்மங்களே யாகும். ஆனால் தத்துவஞான உலகில் கன்மம் என்ற சொல் சற்று விரிந்த கருத்து ஒவ்வொரு செயலுக்கும் ஒரு நோக்கமுண்டு; பலன் உண்டு. அப்பலனை அநுபவித்தலும் ஒரு செயலாகும். இவை அனைத்தையுமே கன்மம் என்ற சொல் குறிக்கும். செயல் மட்டுமின்றி எண்ணம் சொல் ஆகியவையும் கன்மத்

14. இயல்-3; கடிதம்-23; பக்கம் (168-170)

துள் அடங்கும். எல்லாச் செயல்கட்கும் பலன் உண்டு. அப்பலன்கள் யாவும் செய்தவனையே சென்று அடையும். சில செயல்களின் பலன்கள் உடனேயே சேரும். சில செயல் களின் பலன்கள் சிலகாலம் சென்று சேரும். இந்த உண்மை களைப் பொதுவாக எல்லோரும் ஒப்புக் கொள்வர். இந்தக் கன்மத்தைப்பற்றிச் சைவசித்தாந்தம் கூறுவதை இனி விளக்குவேன். பதி உண்மை, பசு உண்மை இவற்றைக் காட்டியதுபோல் வினை உண்மையையும் காட்டுவது இன்றியமையாததாகின்றது. கன்மம் என்பதும் வினை என்பதும் ஒன்றையே குறிக்கும்.

எல்லா உயிர்களும் இன்பத்தையே விரும்புகின்றன. எனினும் அவை துன்பதையும் நுகர நேரிடுகின்றது. சிலருக்குத் தாம் தொடங்கும் செயல் எதுவாயினும் அஃது இனிது முற்றுப் பெறுவதற்குரிய சூழ்நிலைகளே தொடர்ச்சியாக அமைந்து விடுகின்றன. எனினும், வேறு சிலருக்கு தொடங்கும் செயல்கள் அனைத்திலும் அவை தடைப்படுவதற்குரிய சூழ்நிலைகளே அமைகின்றன. அன்றியும், ஒருவருக்கே சிலகாலம் தொடர்ச்சியாக நல்ல சூழ்நிலைகளே அமைவதையும், பின்பு சிலகாலம் தீமை யான சூழ்நிலைகள் அமைவதையும் காண்கின்றோம். இவற்றால் இன்பதுன்பங்களுக்குச் சூழ்நிலைதான் காரண மாயினும் அச்சூழ்நிலைகளின் அமைப்பிற்குக் காரணம் வேறொன்று உள்ளது என்பது தெளிவாகின்றதன்றோ? அந்தக் காரணத்தைத்தான் 'வினை' அல்லது 'கன்மம்' என்று குறிப்பிடுவர் மெய்விளக்க அறிஞர்கள்.

'முயற்சியுடையவர் செல்வத்தையும் முயற்சி இல்லாத வர் வறுமையையும் அடைவர்' என்பது ஒரு பொது விதி. வள்ளுவர் பெருமானும்,

> முயற்சி திருவினை யாக்கும்; முயற்றின்மை
> இன்மை புகுத்தி விடும்.[15]

---

15—குறள் 616

என்று இதனை விளக்குவர்: ஆயினும், இப்பொது வுண்மை சில இடங்களில் மாறுபடுவதையும் காண்கின்றோம். இரவு பகலாக உழைப்பவர்கள் வறுமையால் வாடுவதையும், சிறிதும் உழைக்காதவர்கள் செல்வத்துடன் இன்புற்றுத் திகழ்வதையும் நாம் காணாமல் இல்லை. ஆகவே, முயற்சியும் அஃதின்மையும் செல்வத்திற்கும் நல்குரவிற்கும் காரணங்கள் அல்ல என்பது பெறப்படுகின்ற தன்றோ?

ஒரு சிலர்க்குப் பிறப்பிலேயே முன்னோர் ஈட்டிவைத்த செல்வம்கிடைத்துவிடுகின்றது; இங்கு முன்னோரின் முயற்சி இவர்கட்குப் பயனைத் தருன்றது. இஃது உணமையேயாயினும், ஒருவர் செல்வக் குடும்பத்தில் பிறந்து, முயற்சியின்றி பிறப்பிலேயே செல்வராய் விளங்க, மற்றோருவர்க்கு அந்த வாய்ப்பில்லாது போவதையும் காணத்தான் செய்கின்றோம். இதனால் ஒருவர் செல்வவீட்டு மகவாய்ப் பிறத்தலும் காரணம் இல்லாத நிகழ்ச்சியன்று என்பதையும் நீ உணர்தல் வேண்டும். செல்வமும் ஒருவரிடம் என்றும் நிலைத்திருப்பதில்லை; நீங்கவும் காண்கின்றோம்.

அகடுற யார்மாட்டு நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும்.[16]
[அகடு—நடுநிலைமை]

என்ற நாலடியாரையும் காண்க. 'நல்வினை' உள்ளவரை செல்வம் ஒருவரிடம் இருக்கும்; அது நீங்கியவுடன் அச் செல்வமும் நீங்கிவிடும். ஆகவே, உயிர்கள் அடையும் செல்வத்திற்கும் வறுமைக்கும் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் அவை முன் செய்த வினையே காரணமாகும்.

இவ்விடத்தில் ஓர் ஐயம் நின்பால் எழலாம். இன்ப துன்பங்களுக்கு முன் செய்த வினையே காரணமாயின் அவை முயற்சியின்றியே வருதல் வேண்டும்; அவ்வாறின்றி முயற்சிக்குத் தக்கபடியே அவை உண்டாவது ஏன்? என்று

16. நாலடி—2

வினவலாம். இந்த ஐயத்தைப் போக்குவேன். ஒருகாரியத்திற்குக் காரணம் ஒன்றே என்று கருதவேண்டா; பல காரணங்களும் இருக்கலாம். அவை அனைத்தும் உள்ள பொழுதே காரியம் நிகழும். எடுத்துக் காட்டு ஒன்று இதனைத் தெளிவிக்கும். ஒரு செடி உண்டாவதற்கு வித்து ஒன்று மட்டிலும் காரணம் அன்று; நிலம், நீர், கதிரவனது வெப்பம் முதலிய பலவும் காரணங்களாகும் என்பதை நீ உயர்நிலைப் பள்ளியில் அறிவியல் பாடத்தில் தெரிந்திருப்பாய். இவை அனைத்தும் ஒன்று கூடும்பொழுதுதான் செடி உண்டாகும்.

ஒரு காரியத்திற்குப் பல காரணங்கள் இருப்பினும், அவற்றுள் ஒன்றே முதன்மை உடையதாயிருக்கும்; மற்றவை அக்காரியம் முற்றுப் பெறத் துணையாக அமையும். மேற்குறிப்பிட்ட செடியின் தோற்றத்திற்கு வித்து முதற் காரணம்; முதன்மைவாய்ந்தது. மற்றவை யாவும் அவை முளைத்துப் பயன் தருதற்குத் துணையாய் அமைவனவே என்பதை நீ உணர்வாய். இங்ஙனமே உயிர்களின் இன்ப துன்பங்களுக்கு வினை முதற்காரணம்; முயற்சி துணைக் காரணம் என்பதை அறிந்து தெளிக. முதற் காரணம் துணைக் காரணங்கட்கு வேறுபாடு என்ன? ஒன்று இன்றிப் பிற காரணங்கள் யாவும் உள்ள வழியும் காரியம் தோன்றாதும், அஃது உள்ளபொழுது காரியம் தோன்றுதலும் நிகழுமாயின், அந்த ஒன்று எதுவோ அதுவே முதற்காரணம்; ஏனைய பலவும் துணைக் காரணங்கள். நிலத்தைப் பண்பட உழுது நீர்பாய்ச்சி எருவிட்டாலும் நிலத்தில் விதை இல்லையேல் பயிர் தோன்றாது; விதை இருப்பின் பயிர்தோன்றும். அதனால் விதை முதற் காரணம்; ஏனையவை துணைக் காரணங்கள். உழுதல் முதலிய முயற்சிகள் யாவும் விதையாகிய முதற் காரணம் செடியைத் தோற்றுவித்தற்குத் துணையாவனவாகும். இதுபோலவே இன்பத்தை எய்தற் பொருட்டு எவ்வளவு முயற்சி செய்தாலும் இன்பத்தைத் தருகின்ற வினை இல்லாதபொழுது இன்பத்தை அடைய

முடியாது. அஃதிருப்பின் அம்முயற்சியால் இன்பம் கிடைக்கும். அதனால் வினை முதற் காரணம்; முயற்சி துணைக் காரணம் என்பதை அறிந்து தெளிக.

இன்னும் ஓர் உண்மையையும் நீ ஈண்டு அறிதல் வேண்டும். சில சமயம் முதற் காரணம் உள்ளபொழுது, துணைக் காரணங்களில் சில குறையினும் காரியம் நிகழும், முதற் காரணம் இல்லாதபொழுது துணைக் காரணங்கள் எவ்வளவு அதிகமாக இருப்பினும் காரியம் நிகழாது. இந்த உண்மையை என் வாழ்க்கையிலேயே கண்டுள்ளேன். சில சமயங்களில் வயல்களில் உழுதல் முதலியன இன்றியும் விதை பயிரைத் தோற்றுவித்துப் பயன் தருதலைக் கண்டிருப்பாய். இதற்குக் காரணம் என்ன? முன்பு செய்த உழவு, இட்ட எரு, பாய்ச்சிய நீர் இவற்றில் எஞ்சியிருந்த சிறு பகுதிகளே துணைக் காரணங்களாய் அமைந்துவிடுகின்றன. விதை இல்லையேல், எவ்வளவு எரு இட்டு நீர் பாய்ச்சினும் என்ன பயனைத் தரமுடியும்? இது போலவே, நன்மையைத் தரும் வினை இருப்பின் சிறு முயற்சியே பெரிய பயனைத் தந்துவிடும் என்பது அறியத்தக்கது. எனவே, வினையின் பயனைத் தோற்றுவித்தற்கு முயற்சி ஒரு முன்னிலையாய் அமைகின்றதேயன்றி விளையும் பயன் அனைத்திற்கும் முயற்சியே முக்கிய காரணம் அன்று என்பதை அறிவாயாக. 'முயற்சி திருவினை யாக்கும்' என்ற வள்ளுவரின் வாக்கு வினை பயன் தரும் முறையைக் கூறியதேயன்றி 'வினை உண்டு' என்னும் கொள்கையை மறுத்ததற்கன்று என்பதைத் தெளிக.

இன்னும் வள்ளுவர் பெருமான் 'முயற்சி திருவினை யாக்கும்; முயற்றின்மை இன்மை புகுத்தி விடும்' என்று சொல்லிய தோடன்றி,

> தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
> மெய்வருத்தக் கூலி தரும்.[17]

என்றும்,

17. குறள்—619

இல்லை' என்னும் கருத்து இவற்றில் எவ்வாற்றானும் பெற வைக்கவில்லை என்பதையும் உணர்க.

'இன்பதுன்பங்களுக்கு வினையே முதற் காரணம்' என்று கூறியதோடன்றி, வள்ளுவர் பெருமான், அவற்றிற்குத் துணைக் காரணங்களாகிய முயற்சி, அறிவு என்பவற்றையும் வினையே தருவனவாகக் கூறியுள்ளதையும் ஈண்டு உனக்கு எடுத்துக் காட்டுவேன்.

> ஆகூழால் தோன்றும் அசைவின்மை; கைப்பொருள்
> போகூழால் தோன்றும் மடி.[20]
>
> [அசைவு—மடி.]
>
> பேதைப் படுக்கும் இழவூழ்: அறிவகற்றும்
> ஆகலூழ் உற்றக் கடை.[21]
>
> நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
> உண்மை அறிவே மிகும்.[22]

என்ற குறட்பாக்களில் இக்கருத்து விளங்கக் கூறியுள்ளதைக் காண்க.

இயற்கையில் சுறுசுறுப்புடையவராக இருக்கும் ஒருவர் ஒரு குறிப்பிட்ட சமயத்தில் சுறுசுறுப்பின்றிச் சோம்பல் கொண்டு இருந்து, அச்சோம்பலின் விளைவாகப் பெரியதோர் இழப்பினை அடைதல் உண்டு என்பதற்கு வாழ்க்கையைக் கூர்ந்து நோக்குவோர் நன்கு அறிவர். அவரைச் சோம்பல் கொள்ளச் செய்தது அவரது தீவினையேயாகும். இயற்கையில் நுண்ணறிவும் பெருங் கல்வியும், உலக அநுபவமும் உடையவராகிய ஒருவர் குறிப்பிட்ட ஒரு செயலில் அறிவு மயங்கித் தவறான வழியில் சென்று கேடுறுவதற்கும் அவர் தீவினைதான் காரணம் என்பதை உளங்கொள்க. இவர்கள் இருவருக்கும் எதிராக இயற்கையில் சோம்ப

20. குறள்—371
21. ௸—372
22. ௸—373

லுடையவரும், மந்த மதியுடையவரும், கல்வியும் பட்டறிவும் இல்லாதவரும் பெருநலம் பெறுவதற்கும் அவரது நல்வினையே காரணமாகும். எனவே, உலகில் ஒவ்வொருவருக்கும் அவ்வப்பொழுது வரும் நன்மை தீமைகட்கு எல்லாம் அவரவர்கள் முயற்சி செய்வதும் செய்யாமையும் அல்ல என்பது தெளிவாகின்ற தன்றோ? இதனால் 'வினைஅல்லது கன்ம மலம்' உண்டென்பது நன்கு புலனாகும்.

நாலடியாரில் பழவினை என்ற ஓர் அதிகாரமும், திருக்குறளில் ஊழ் என்ற ஓர் அதிகாரமும் இருப்பதை நீ அறிந்திருப்பாய். அந்த இரண்டையும் படித்தால் கன்ம மலம் பற்றி சில செய்திகளை அறிந்து கொள்வாய். 'ஊழ்' என்ற சொல்லுக்கு 'இருவினைப் பயனும் செய்தவனையே சென்றடைதற்கேதுவான நியதி' எனப் பொருளுரைப்பர் பரிமேலழகர்.[23] மேலும், அவர் ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி ஆகிய யாவும் ஒரே பொருளுடைய சொற்கள் எனவும் தெரிவிப்பர். தொல்காப்பியர் ஊழை 'பாலறி தெய்வம்' என்று குறிப்பிடுவர்.[24] நாலடியாரில் சமண முனிவர்,

பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையும் அன்னதகைத் தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு.[25]
[பழவினை—கன்மம்; கிழவன்—உரிமையுடையோன்.]

என்று வினையின் வலிமையை விளக்குவர். ஊழை நினைத்தால் சிலப்பதிகாரம் என்ற காவியம் நினைவிற்கு வராமல் போகாது. ஊழின் வலியை வற்புறுத்துவதற்கென்றே எழுந்த காப்பியம் அல்லவா? 'ஊழ்வினை உறுத்து வந்தூட்டுவதை'க் கோவலன் வாழ்க்கை தெளிவாகக் காட்டுகின்றது. இப்பிறப்பிலே யாதொரு தீங்கும் செய்யாத கோவலன்,

---

23. 'ஊழ்' என்னும் சொற்குப் பொருள் கூறும்போது.
24. தொல். பொருள். களவியல்—நூற்பா-2
25. நாலடி—101

கள்வன் எனக் கருதப்பெற்றுக் கொல்லப் பெறுகின்றான். முப்பிறப்பிலே அவன் களவு செய்யாத ஒருவனைக் கள்வன் எனக் கூறிக் கொல்வித்தவன். அத்தீவினையின் பலனையே இப்பிறப்பில் அவன் அநுபவிக்கின்றான். கன்மம் என்பதும் ஊழ் என்பதும் இதுவேயாகும்.

சோதிடத்தில் சில நிகழ்ச்சிகள் முன்னரே அறிந்து சொல்லப் பெறுவதை நீ அறிவாய். பெரும்பாலும் அவை அங்ஙனமே நிகழ்தல் பலரது அநுபவமாகும். என் வாழ்விலும் பெரும்பாலானவை அவ்வாறு நிகழ்தலைக் கண்டுள்ளேன். சிறுபான்மைச் செயல்கள் தவறி விடுதலும் உண்டு. அங்ஙனம் தவறுவதற்குச் சொல்லும் முறையில் உண்டாகும் தவறே காரணமாகும். ஆகவே, ஒவ்வொருவரது வாழ்விலும் நடைபெறும் இன்ப துன்ப அநுபவங்களாகிய நிகழ்ச்சிகள் யாவும் ஒரு மன்றத்தில் முன்னரே அமைக்கப்பெற்ற நிகழ்ச்சி நிரலின்படி நிகழ்வதுபோல நிகழ்ந்து வருதல் என்பது தெளிவு. கைகேயியின் கூடாத செயலுக்குச் சீற்றம் கொண்டு வெகுண்டு எழுந்த இலக்குவனை நோக்கி எல்லாம் 'விதியின் பிழை' என்று அமைதி கூறுவான் இராமன்.[26]

பேறிழ வின்ப மோடு
    பிணிமூப்புச் சாக்கா டென்னும்
ஆறும்முன் கருவுட் பட்டது;
    அவ்விதி அநுப வத்தால்
ஏறிடும்[27]

என்று கன்மத்தை விளக்குவார் அருணந்தி சிவாச்சாரியார். இக்கடிதத்தில் கூறிய பல செய்திகளைக் கொண்டு 'வினை என்னும் கன்ம மலம் உண்டு' என்பதை நினைவில் இருத்துக.

அன்பன்,
கார்த்திகேயன்.

---

26. கம்ப. அயோத்தி. நகர்நீங்கு—134
27. சித்தியார். 2.9

# 26

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைந்திடுக.

கன்ம மலத்தைச் சித்தாந்தத்தின் அடிப்படையில் விளக்குவேன். ஆணவ மலம் இயற்கை (சகச) மலமாயும் மூல மலமாயும் இருத்தலால், அதனை நீக்குதற் பொருட்டே கன்ம மலமும் மாயை என்ற மலமும் உயிர்கட்கு உள வாயின. இதனை முன்னொரு கடிதத்திலும் குறிப்பிட்டுள்ளேன்.[28] இதனால் கன்மமும் மாயையும் 'ஆகந்துக மலம்' என வழங்கப் பெறும். ஆகந்துகம்—பின்பு வருவது. எனவே, ஆணவ மலம் நீங்குங் காலத்து இவையும் ஒருங்கே நீங்குவனவாம் என்பதை உளங்கொள்க.

ஆணவ மலம் அறிவிற்கு மறுதலையாய் உயிர்களை நேரே தடை செய்து நிற்றலால் அது 'பிரதிபந்தம்' என்ற பெயரால் வழங்குகின்றது. கன்ம மலம் ஆணவ பந்தத்தின் பயனை உயிர்கட்கு உறுவித்து நிற்றலால் அஃது 'அநுபந்தம்' என்று பெயர் பெறுகின்றது. மாயா மலம் கன்மத்தால் தொடர்பு படுத்தப்பெற்று நிற்றலால் அது 'சம்பந்தம்' என்று கூறப்பெறுகின்றது. இவற்றையும் நீ அறிதல் வேண்டும்.

ஆணவம் கன்மம் மாயை என்ற மும்மலங்களும் அநாதியே என்பதையும் நீ அறிதல் வேண்டும். ஆணவ பந்தம் உயிர்களை மேல் நோக்கி எழாது கீழ் நோக்கி அழுத்துதலினால் உயிர்கள் தமக்கு மேலான இறைவனை அறியாது, கீழான கன்மத்தையே நோக்கும். அதனால் அவற்றிற்குப் பொது வகையாய் நிற்கும் மூல கன்மம் (முதல் வினை) உளதாகும். (இந்த மூலகன்மம்பற்றி அடுத்த கடிதத்தில் விளக்குவேன்) கன்மம் மாயையையே பற்றிக்

28. இந்த இயல்; கடிதம்—24;

கிடத்தலின் கன்மத்தின்வழி மாயை உயிர்களை வந்து பற்றும்; இம்மூன்றிற்கும் இடையீடு இன்மையால் மும்மலங் களும் ஆன்மாவிற்கு அநாதியே உள்ளனவாம் என்பதை அறிக. அதனால் கன்மம் முன்பு வந்ததோ? மாயை முன்பு வந்ததோ? என்னும் வினா ஒருவகையில் வேண்டாத தாகின்றது. ஏனெனில், உயிர்கள் இயற்கையில் தூய்மை யாக இருப்பின் அக்கேள்வி பொருந்தும். கன்மம் மாயை கட்கு ஏதுவான, ஆணவம் உயிர்கட்கு இயற்கையில் இருத்த லால் அஃது ஏதுவாக வரும் கன்மம் மாயைகளும் அன்றே உளவாம் என்பதை அறிந்து தெளிக.

இதனை,

நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்மம் அன்றுளவாம்.[29]

[வல்லி—மாயை]

என்று கூறுவர் மெய்கண்டதேவர். உமாபதிசிவமோ,

.........வினையோ அன்றிச்
சொலலிவரும் மாயையோ அணுவை முந்தச்
சூழ்ந்ததெனும் உரைமுதல்ஓர் தொடக்கி லாபால்
ஒல்லைவரும் எனின் உளதாம்; உயிர்உண் டாவே
உளதுமலம்; மலம்உளதா ஒழிந்த எலலாம்
நெல்லின்முளை தவிடுமிபோல் அநாதி யாக
நிறுத்திடுவர்; இதுசைவம் நிகழ்த்து மாறே.[30]

என்று மேலும் விளக்கமாக உரைப்பர்.

உமாபதி சிவத்தின் விளக்கத்தைத் தெளிவுறுத்த வேண்டியது இன்றியமையாததாகின்றது. ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களும் ஆன்மாவுடன்

29. சி. ஞா. போ. சூத். 2. அதி. 2. பா. 12.
30. சிவப்பிரகாசம்—25.

சேர்ந்திருப்பதை நெல்லிலே முளை, தவிடு, உமி சேர்ந்திருப்பதைக் காட்டி விளக்குவர் உமாபதிசிவம். முளையைப் போன்றது கன்மம். தவிட்டைப் போன்றது மாயை. உமியைப் போன்றது ஆணவம். எனவே, அரிசி ஆன்மாவிற்கு உவமையாகின்றது என்பது தெளிவு. இந்த மூன்று மலங்களும் எந்த விதத்தில் உமி, முளை, தவிடு ஆகிய மூன்றுடன் ஒற்றுமைப் படுகின்றன என்பதை விளக்குதல் வேண்டும். இதனை விளக்குவேன். நெல்லிலுள்ள முளைத்தல் ஆற்றல் முளையைத் தோற்றுவிப்பதுபோலக் கன்ம மலம் உயிரினிடத்துச் சுகதுக்கங்ளை முதற் காரணமாய் நின்று தோற்றுவிக்கும்; தவிடு முளைத்தற்கு அநுகூலம் செய்து உடன் நிற்குமாறுபோல, மாயா மலம் அச்சுகதுக்கங்கள் தோன்றுவதற்குத் துணைக்காரணமாய்த் தன் காரியமாகிய தனு கரணம் முதலியவற்றையும் உயிரையும் அசைவித்து நிற்கும். உமி அம்முளை தோன்றுவதற்கு நிமித்த காரணமாயிருப்பதுபோல ஆணவ மலம் அச்சுகதுக்கத் தோற்றத்திற்கு நிமித்த காரணமாய் நின்று அவற்றை முறுகுவித்து உயிர் நுகருமாறு நிலை பெறுத்தும். இங்கு ஆன்மாவின்சுகதுக்கங்களுக்கு ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலங்களும் நிமித்தம், முதல், துணை ஆகிய மூன்று காரணங்களாக அமைவது குறிப்பிடத்தக்கது. இங்ஙனமாயினும், ஆணவத்தைச் 'சகசம்' என்றும், ஏனைய இரண்டையும், 'ஆகந்துகம்' என்றும் கூறுதல் ஏதுவும் விளைவும் ஆகிய முறைமைபற்றியேயாகும் என்பதைச் சிந்தித்து ஓர்ந்து உணர்க.

இனி, ஆணவத்தோடொப்ப அநாதியாகச் சொல்லப்படும் கன்மம் மூல கன்மம் என்பதாகும். அது 'நன்மை, தீமை' என்று பாகுபாடு அடையாமல் பொதுவாய் நிற்கும். பின்னர் அது செயற்படும் காலத்தில் நல்வினையும் தீவினையும் என இரண்டு வகையாய்ச் சிறப்புற்றுச் செயல் பற்றிப் பலவாகித் திகழும். ஆணவ பந்தத்திற்கு ஏற்பவே மூல கன்ம பந்தமும், மாயா பந்தமும் உயிர்கட்கு உள்ளன

என்பதையும் நீ அறிதல் வேண்டும். இப்பந்தங்கட்கு ஏற்ப இறைவன் தனது சக்தியால் மாயையினின்றும் சூக்கும உடம்பைப் படைத்துத் தருவான். சூக்கும உடம்பை அடைந்த உயிர்கள் ஆணவ பந்தம் சிறிது நீங்கப் பெற்றுத் தம் மூல கன்மபந்தத்திற்கு ஏற்ப அறிவு, இச்சை, செயல்கள் விளங்கப்பெறும். அங்ஙனம் விளங்கப் பெற்றவழி அவைகட்கு உண்டாகும் விருப்பு வெறுப்பு இவற்றிற்கு நல்வினையும் தீவினையுமாக முடியும். அவ் வினைக்கேற்பவே இறைவன் உயிர்கட்குத் தூல உடம்பைப் படைத்துத் தருகின்றான். 'எழுவகைப் பிறப்பு' என்று நூல்களில் குறிப்பிடப்பெறுவதெல்லாம் இந்தத் தூல உடம்பில் அமைவதேயன்றிச் சூக்கும உடம்பில் அமைவ தன்று என்பதை நினைவிலிறுத்துக. உயிர்கள் சூக்கும உடம்பைக் கொண்டு நினைப்பவற்றைத் தூல உடம்பு கொண்டு செய்து நல்வினை தீவினைகளை ஈட்டும்; அவற்றின் பயனாகிய இன்பதுன்பங்களை—சுகதுக்கங் களை—அநுபவிக்கும். அவற்றால் உயிர்கள் மணிவாசகப் பெருமான்,

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்து[31]

என்று கூறியவாறு பல்வகைப் பிறப்புகளில் மறிமாறிப் பிறந்தும் இறந்தும் உழலும். 'அறம், மறம்' என்று தமிழிலும் 'புண்ணியம், பாவம்' என்று வடமொழி யிலும் சொல்லப்படுவன இச்சூக்கும வினைகளையே என்பதை நீ அறிதல் வேண்டும். நல்வினை இன் பத்தையும், தீவினை துன்பத்தையும் தரும் என்பதையும்

31. திருவா. சிவபு. அடி (26-31)

உணர்தல் வேண்டும். எனவே, கன்மமே—வினையே—பிறவிக்கும் அதன்கண் உளவாகும் இன்பதுன்பத்திற்கும் காரணமாதல் வெளிப்படை என்பதை உளங்கொள்க.

மேற்குறிப்பிட்ட நல்வினை மனம், வாக்கு, காயம் என்று தீவினைகள் மூன்றுவிதமாக நடைபெறும். அவற்றுள் மனத்தால் நினைக்கும் நினைப்பினால் தோன்றுவன 'மானத கன்மம்' என்ற பெயரால் வழங்கும். வாயினால் அவற்றைச் சொல்லும் சொற்களால் தோன்றுவன 'வாசிக கன்மம்' எனப்படும் உடலால் செய்யும் செயல்களால் தோன்றுவன 'காயிக கன்மம்' என்று சொல்லப்படும். எனவே, உயிர்கள் தம் மனம், மொழி, மெய்களால் நல்வினை, தீவினைகளைத் தேடிக் கொள்கின்றன என்பது தெளிவாதல் அறிக. இம்மூவகைக் கன்மங்களைப் பற்றியும் வள்ளுவம் குறிப்பிடுகின்றது.

> உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
> கள்ளத்தால் கள்வே மெனல்.[31]

என்பன போன்ற குறள்கள் மனத்தால் வினை உண்டதலைக் குறிக்கின்றன. இன்னும் அன்பும் அருளும் பொறுமையும் காரணமாகத் தோன்றும் நல்ல நினைவுகளும் அழுக்காறு அவா வெகுளி இவை காரணமாகத் தோன்றும் தீய நினைவுகளும் இவ்வகையில் அடங்கும்.

> நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன் சாராப்
> பண்பிற்சொல் பல்லா ரகத்து.[32]

என்றாற்போலும் வரும் குறட்பாக்கள் வாயால் வினை உண்டாதலைக் குறிப்பிடுகின்றன. இப்பகுதியில் வாய்மை, பாராட்டு, இன்சொல் உறுதிச்சொல் என்னும் நற்சொற்களும், பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என்னும் தீய சொற்களும் அடங்கும்.

31. குறள்—282
32. ஷை—194

பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தானே வரும் [33]

என்றாற்போல் வரும் குறட்பாக்கள் உடம்பில் வினை உண்டாதலைத் தெரிவிக்கும். நன்றி, ஈகை, இன்னா செய்யாமை, புலால் உண்ணாமை முதலிய நற்செயல்களும் களவு, கொலை, கள்ளுண்டல், புலால் உண்டல் முதலிய தீச் செயல்களும் காயத்தால் செய்யப்பெறும் வினைகளுள் அடங்கும்.

இன்னும் ஓர் உண்மையையும் ஈண்டு நீ அறிதல் வேண்டும். மனம் மொழி மெய்களால் நினைவு, சொல் செயல் என்பன தூலமாய் நிகழ்ந்த நிலையினின்றும் நீங்கிச் சூக்குமமாய் நிலைபெற்று நிற்கும்; பின் காலம் வரும்போது தம் பயனை உயிர்கட்குத் தரும். தூலமாய் நிகழ்வதே இருவினைகட்குத் தோற்றமாகும்; பின் அவை சூக்குமமாய் நிற்றல் நிலைபேறு ஆகும்; பின் காலம் வந்த பொழுது தம் பயனைக் கொடுத்து நீங்குதலே அவற்றின் அழிவு ஆகும். இவற்றையும் நீ அறிதல் வேண்டும். 'அழிதல்' என்பது, 'தூல நிலையை விட்டுச் சூக்கும நிலையை அடைதலாகும்' என்றும், 'எந்தப் பொருளும் எக்காலத்திலும் அடியோடு இல்லா தொழிதல் இல்லை' என்றும் இத்தொடர் கடிதங்களில் பல முறையும் கூறி வந்ததை ஈண்டு நினைவு கூர்தல் மேலும் விளக்கத்தைத் தரும்.

இன்னும் ஒரு தத்துவக் கருத்தையும் ஈண்டு உனக்கு விளக்குதல் பொருந்தமாகும்; அஃது இன்றியமையாததும் கூட. நல்லனவும் தீயனவுமாகச் செய்யப்படும் வினைகள் 'ஆகாமியம்' என்ற பெயரால் வழங்கும். பின் அவை சூக்கும மாய் மறைந்து நிலைபெற்று நிற்கும்பொழுது 'சஞ்சிதம்' என்ற பெயரைப் பெறும். இச்சூக்கும வினைகள் பின்னர் இன்பதுன்பங்களாய் வந்து பயன்தரும்பொழுது 'பிராரத்தம்'

---

33. ஷை—319

என்ற திருநாமம் பெறும்.[34] ஒருவர் செய்யும் வினைகள் 'நல்வினை, தீவினை' என இருவகைப்பட்டு, விரியாய், எண்ணிறந்தன வாய் நிற்றலின் சடமாயும் பலவாயும் உள்ள இவை 'காரியம்' என்பதும், அதனால் இவை, 'தோற்றமும் அழிவும் உடையன' என்பதும், அதனால் மூல கன்மமே 'காரண கன்மமாய்'த் தோற்றக் 'கேடின்றி' நிற்கும் என்பதும் ஈண்டு நீ நினைவில் இருத்தக் கூடியவை. இத்துடன் இக்கடிதத்தை நிறைவு செய்கிறேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 27

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு

நலன். நலம் பல விளைவதாகுக. சென்ற கடிதத்தில் குறிப்பிட்ட 'மூல கன்மம்' என்பதுபற்றி இக்கடிதத்தில் விளக்குவேன்.

ஒவ்வோர் உயிரும் தாம் அடைகின்ற இன்ப துன்பங்களுக்கு அவை முற்பிறப்பில் செய்த வினைதான் காரணம் என்பதைப் பல இடங்களில் விளக்கியுள்ளேன். அவற்றை ஈண்டு நினைவு கூர்க. 'இல்லது தோன்றாது' என்ற சற்காரிய முறைப்படி, தோற்றமும் அழிவுமுடைய பொருள்கள் முன் சூக்குமமாய் விளங்காது இருந்த 'காரண நிலையி னின்றும் நீங்கித் தூலமாய் விளங்கி நிற்கும் நிலையே தோற்றம்; பின் தூலமாய் விளங்கி நின்ற 'காரிய நிலை'யி

34. ஆகாமியம்—எதிர்வினை, வருவினை, மேல்வினை என்ற பெயர்களாலும்; சஞ்சிதம்—அபூர்வம், பழவினை, தொல்வினை, கிடைவினை என்ற பெயர்களாலும்; பிராரத்தம்-ஊழ்வினை, நுகர்வினை என்ற பெயர்களாலும் வழங்கப் பெறும்.

னின்றும் நீங்கி முன்போலச் சூக்குமமாய் விளங்காது 'காரண நிலையை' அடைவதே 'அழிவு' என்பதை முன்னரே விளக்கியுள்ளேன். இதையும் நினைவுகூர்க.

சற்காரியமுறை தூலப் பொருளில் தெளிவாகத் தெரிவதுபோல் சூக்குமப் பொருளில் தெளிவாகத் தெரிவதில்லை என்பதை நீ சிந்தித்து அறிதல் வேண்டும். எடுத்துக்காட்டாக மண் காரணம்; பானை காரியம். அதனால் பானை தான் தோன்றுவதற்கு முன்பும் மண்ணில் சூக்குமமாய் உள்ளது என்று கொள்கின்றோம். வினை அல்லது கன்மம் என்னும் காரியத்திற்கு, பானைக்கு மண் போல ஒரு காரணப் பொருளைச் சொல்லவில்லையே என்ற போக்கில் நின் சிந்தனை செயற்படக்கூடும். இதனையும் விளக்க வேண்டியது இன்றியமையாத தாகின்றது. 'பானை' என்னும் காரியம் தூலப் பொருளாதலின் அதற்குக் காரணம் மண் என்பது எளிதில் உணரவும், உணர்த்தவும் படுகின்றது. 'வினை' சூக்குமப் பொருளாதலின், அதன் காரணம் இன்னது என எளிதில் உணர முடிவதில்லை. 'இல்லது தோன்றாது; உள்ளதே தோன்றும்' என்பது உண்மையாதலின், வினை ஒருவனால் செய்யப்படுவதற்கு முன்னும் உள்ளதேயன்றி இல்லாதது அன்று. முன்பு இயற்கையாய் உள்ள வினையைத்தான் பின்பு ஒருவன் செயற்கையாகச் செய்கின்றான். இயற்கையாய் உள்ள வினை காரண கன்மமும், பின்பு அதனை ஒருவன் செயற்கையாகச் செய்யும் வினை காரிய கன்மமும் ஆகும். காரண கன்மந்தான் 'மூல கன்மம்' என்று அடைமொழி தந்து விளக்குவர் சைவ சித்தாந்திகள்.

மண்ணும் பானையும் என்ற எடுத்துக்காட்டில் காரணப் பொருளாகிய மண்ணும் காரியப்பொருளாகிய பானையும் வேறு வேறு பெயர்பெற்று நிற்பதால் அவை இரண்டும் காரணமும் காரியமும் ஆதல் பொருந்தும். கன்மத்தில் அவ்வாறு வேறு படுத்திக் காட்டும் சொற்கள் இன்மையால் குழப்பம் நேரிடுகின்றது. இதனையும் விளக்குவேன். தூலப்

பொருளாகிய காட்சிப் பொருள் உள்ளவாறே சூக்குமப் பொருளாகிய கருத்துப் பொருளும் இருத்தல் வேண்டும். வினை சூக்குமப் பொருள் அதன் காரண காரிய நிலைகளில் பெரிய வேற்றுமை இல்லை; அதனால் காரண நிலையைக் குறிக்க 'மூல கன்மம்' என்று அடைமொழி கொடுத்துக் கூறி அமைகின்றனர் என்பதை அறிந்து தெளிக.

இக்கருத்தை இரண்டு முறைகளால் விளக்குவேன். முதலில் கருதல் அளவையால் தெளிவிப்பேன். காட்சியளவை மட்டிலும் பிரமாணம் அன்று என்றும், கருதலளவையும் பிரமாணம்தான் என்றும் நீ நன்கு அறிவாய். தோன்றி நின்று அழிவன யாவும் காரியமே என்பதும் உனக்குத் தெரியும். 'வினையை ஒருவன் செய்யுங் காலத்து அது தோன்றுகின்றது; பின் காலம் வருந்துணையும் காத்திருக்கின்றது; காலம் வந்தவுடன் தன் பயனைத் தன்னைச் செய்தவனுக்கு தந்துவிட்டு ஒழிகின்றது'—இந்த உண்மை எல்லோருக்கும் உடன்பாடே. எனவே, தோற்றம், நிலைபேறு, இறுதி என்ற மூன்றையும் உடைமையால் இங்குக் குறிப்பிட்ட இவ்வினை 'காரியமே' என்பது தெளிவு; காரியங்கள் யாவும் தமக்குக் காரணங்களை உடையன என்பதும் தெளிவே. இதனால் 'இக்காரிய கன்மமும்' தனக்குக் காரணத்தை உடையது என்பதும், அக்காரண கன்மமே 'மூல கன்மம்' என்பதும் கருதலளவையால் இனிது உணர்ந்து கொள்ளலாம்.

அநுபவத்தாலும் இதனை விளக்குவேன். வினை என்பது, பொருள்களின் புடை பெயர்ச்சி;[35] அதாவது ஓர் இடம் விட்டு பிறிதோர் இடத்தை அடைதல். இதை இன்னும் தெளிவாகச் சொல்லவேண்டுமானால் 'பொருள்களின் அசைவு' எனலாம். இந்த அசைவு அந்தந்தப் பொருளிலும் அதனதனாலே இயற்றப்படுகின்றது என்பது உண்மையாகும். ஆயினும், அசைவுத்தன்மையை எந்தப்

35. Displacement.

பொருளும் தானே தன்னிடத்தில் அமைத்துக் கொள்ள வில்லை; அஃது இயற்கையாய் அதனிடத்தில் முன்பே அமைந்துள்ளது. இத்தன்மை, காலம், இடம் முதலிய சூழ் நிலைகளுக்கு ஏற்ப அதனினின்றும் வெளிப்படுகின்றது என்பது தெளிவாகும். அவற்றுள் அசைவுத்தன்மை அல்லது புடை பெயருந்தன்மை போன்றது காரண கன்மமாகிய மூல கன்மம். அசைவு அல்லது புடை பெயர்ச்சி போன்றது காரிய கன்மம்.

'இதனை மேலும் தெளிவாக்குவேன். 'குயவன் பானையை வனைந்தான்' என்று சொல்லும்போது பானையை வனைந்தவன் குயவன்தான் என்பதில் ஐயம் இல்லை. ஆயினும், 'வனைதல்' என்ற தொழிலை அவன் அன்று உண்டாக்கவில்லை; அது,முன்பே உள்ளது. அங்ஙனம் ஒரு தொழில் முன்பதாக இல்லை என்றால், இப்பொழுது அதனை அவன் செய்ய இயலாது. 'வனைதல்' என்ற தொழில் என்றும் இருப்பதால், அதனைக் குயவன் தான் விரும்பும்போது, விருப்பமான இடத்தில். விருப்பமான வகையில் செய்கின்றான். இப்படியேதான் உலகிலுள்ள மற்ற எல்லாத் தொழில்களின் நிகழ்ச்சிகளும் இக்காலப் புதிய அறிவியல் நுட்பத்தால் நடைபெறும் தொழில் நிகழ்ச்சிகளும் நிகழ்கின்றன என்பதனை உளங் கொள்க.

இன்னும் பண்டைய இலக்கணமாகிய தொல்காப்பி யத்திலுள் ஒரு நூற்பாவைக் கொண்டும் விளக்குவேன்.

> வினையே செய்வது செயப்படு பொருளே
> நிலனே காலம் கருவி என்றா
> இன்னதற் கிதுபய னாக வென்னும்
> அன்ன மரபின் இரண்டொடுந் தொகைஇ
> ஆயெட் டென்ப தொழில்முதல் நிலையே.[36]

இதில் தொல்காப்பியர் 'ஒரு தொழில் நிகழ்ச்சிக்கு முதல்நிலையாக எட்டுப் பொருள்கள் வேண்டப்படும்' என்ற

36. தொல். சொல். வேற்றுமையங்கியல்—29.

கருத்தைத் தெரிவிக்கின்றார். இங்கு முதனிலை—காரணம். தொழில் முதனிலை—தொழிலுக்குக் காரணம். 'தொழிலுக்கு உள்ள காரணங்களுள் தொழிலும் வினையும் ஒன்று' என்று அவர் கூறியிருப்பதுதான் நம் சிந்தனைக் குரியது. 'தொழிலுக்குக் காரணம்' என்று சொல்வதிலிருந்து 'தொழில் காரியம்' என்பது வெளிப்படையாகத் தெரிகின்ற தன்றோ? காரணங்களைக் குறிப்பிடும் இடத்திலும் 'வினை' என்ற ஒன்றைக் கூறுவார் எனவே, அவர் 'காரண வினை' (காரகவினை) 'காரியவினை' என வினையை இரண்டாகக் கொள்கின்றார் என்பது மிகத் தெளிவு. ''வினையும் தொழிலும் வேறு என்பது இச்சூத்திரந்தான் உணர்தற்கு 'வினை' என்று எடுத்துத் 'தொழில் முதல் நிலையே' என முடித்தார்'' என்ற கருத்து நினைவில் கொள்ளத்தக்கது. மேற்கூறிய காரண கன்மத்தைத்தான் இங்கு நாம் 'மூல கன்மம்' என்கின்றோம். இதனை மாதவச் சிவஞான யோகிகள் தமது மாபாடியத்திலும் விளக்கியிருத்தலைக் காணலாம்.

மேற்கூறிய எடுத்துக்காட்டைக் கொண்டு இதனை மேலும் தெளிவாக்குவேன். 'வனைந்தான்,' 'கொடுத்தான்' என்பவற்றிற்கு 'வனைதல்', 'கொடுத்தல்' என்பன முதனிலைகள். இங்ஙனமே பிறவற்றிற்கும் முதனிலைகள் உள்ளன. எனவே, பல்வேறு வகைப்பட்ட தொழில் கட்கும் முதனிலையாய்ப் பொதுப்பட நிற்கும் முதனிலை ஒன்று உண்டு; அதனையே நாம் 'மூல கன்மம்' என்று சிறப்பாகக் குறிப்பிடுகின்றோம். அது சிறப்பாக 'இன்ன செயல்' என்று சொல்ல ஒண்ணாதபடி நிற்கும். இதனையே மேலே 'புடை பெயரும் தன்மை—அசையும் தன்மை' என்று குறிப்பிட்டேன். இத்தன்மை காலம், இடம், கருவி முதலிய வற்றோடு கூடிச் சிறப்பு வகையில் நிகழும்பொழுதே, 'வனைந்தான், கொடுத்தான், உண்டான்' என்றாற்போல 'இஃது இன்ன செயல்' என்று சிறப்பு வகையில் குறிப் பிட்டுச் சொல்லும்படியாக அமையும். எனவே, காரண

கன்மமாகிய மூலகன்மம் பாகுபாடின்றி ஒன்றேயாய் நிற்கும் என்பதைக் கருத்தில் இருத்துக. காரிய கன்மம் 'நல்லது, தீயது' என்று இருபெரும் பிரிவினதாய் விரிந்து ஒவ்வொன்றும் பற்பல வகையாய் விரிய, எண்ணிறந்தன வாகும். இவற்றுள் உயிர்கட்கு இன்பமாயும் துன்பமாயும் வந்து எப்பொழுதும் பந்திப்பது காரிய கன்மமே யாகும். ஆதலின், அதுவே எங்கும் பெரும்பான்மையாக எடுத்துச் சொல்லப்படும். எனினும் மேலே குறிப்பிட்ட தொல் காப்பிய நூற்பா போலவே, சில இடங்களில் மூலகன்ம உண்மையும் குறிப்பிட்டுக் காட்டப்படும்.

இருவினைப் பாசம் மும்மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத தரசை இக்கடல்
ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ.[37]

என்ற திருப்பாடலில் சேக்கிழார் அடிகள் 'ஆன்மாக்கள் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று கற்களை நல்வினை தீவினை என்னும் இரண்டு கயிறுகளால் கட்டி பிறவியாகிய ஏழு கடல்களில் தள்ளப்பட்டுள்ளன' என்று குறிப்பிடுகின்றார். இங்கு மூல கன்மத்தைக் கல்லாகவும், அதன் காரியமாகிய புண்ணிய பாவங்களைக் கயிறு களாகவும் பிரித்து உருவகம் செய்திருத்தலைக் கூர்ந்து நோக்கி அறிக. மணிவாசகப் பெருமானும்,

...மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டி.[38]

என்று கூறுதல் காரிய கன்மத்தையே என்பது தெளிவாகும். இக்கூறியவற்றால் நீ அறிய வேண்டியவை: (1) மூலகன்மம் ஒன்றேயாய் இருக்கும் (2) காரிய கன்மம் இருவகையாய் விரியும் என்பவையாகும்.

37. பெரியபுரா. திருநாவு—129
38. திருவா. சிவபுரா. அடி (51-52)

மூலகன்மம் என்றும் இருத்தலால் 'வினை அனாதி' என்று சொல்லப்படுகின்றது. உயிர்களின் செய்கையால் அது தோன்றி நுகர்ச்சியால் அழிவதால் 'வினை ஆதி அந்தம் உடையது' என்றும் கூறப்பெறுகின்றது. 'அனாதி' என்பது காரண நிலையை நோக்கி; 'ஆதி அந்தம் உடையது என்பது காரிய நிலையை நோக்கி. ஆதலின் அவை இரண்டும் தம்முள் முரணுவன அல்ல என்பதைத் தெளிக' இன்னும், 'செய்யப்படுவது வினை என்பது காரியகன்மத்தையே' என்றும், 'காரண கன்மமாகிய மூலகன்மம் என்றும் இருப்பதால், சற்காரியவாத அடிப்படையில் காரிய கன்மம் அதனினின்றும் தோன்றும்' என்றும் அறிந்து தெளிவு பெறுவாயாக.

அன்பன்,
**கார்த்திகேயன்.**

## 28

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,
நலன், நலம் பல விளைவதாகுக.

முன்னொரு கடிதத்தில் ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என்று வினைகளின் மூவகை நிலைகளைக் குறிப்பிட்டேன் அல்லவா? அவற்றை ஈண்டு நினைவு கூர்க அவற்றை நினைவுகூரவே, இக் கடிதத்தில் விளக்கப் போகும் 'வினை பயன் தரும் முறை' ஒருவாறு தெளிவாகும்.

ஆகாமிய வினை பிராரத்தமாய்ப் பக்குவப்படும்வரை சஞ்சிதமாய்க் கிடக்கும். இவற்றுள் பக்குவப்பட்டவை பிராரத்தமாய் வரும். வினை தன் பயனைத் தான் தருவதற்குரிய எல்லாச் சூழ்நிலைகளும் வாய்க்கப்பெறுவதே 'பக்குவப்படுதல்'என்பதாகும். வினை அச் சூழ்நிலைகளைப்

பெற்றுத் தரும் பயன் சாதி, ஆயு, போகம் என மூன்றாக நடைபெறும். சாதி என்பது பிறக்கும் இனம். சாதியினை 'வருணாசிரம' முறையில் கொண்டாலும் கொள்க. இக் காலத்தில் கூறப்பெறும் முற்போக்கு அடைந்த இனம், தாழ்த்தப்பட்ட இனம் முதலாகச் சொல்லப்பெறுவன வற்றைக் கொண்டாலும் கொள்க. இன்றைய நிலையில் உலகளாவிய பார்வையைச் செலுத்தினால் எந்த நாட்டி லும், எந்த வகையிலேனும் எவையேனும், சில பிரிவுகள் இருந்தே வருதலைக் காணமுடிகின்றது. இந்நிலைக்குரிய அரசியல், சமூக இயல் காரணங்களை இவண் ஆய்வதில் பயன் இல்லை...ஆனால் யார் என்ன முயற்சி செய்தாலும் 'வினையின் பயனாக அவை இருந்தே தீரும்' என்பதை மட்டிலும் ஈண்டு நீ உளங்கொண்டால் போதுமானது. இங்ஙனமே அரசியல் போர்வையில்—நாடகத்தில்?—யார் எங்கே எந்த வகையான முயற்சிகள் செய்யினும் வினையின் பயனான 'சாதிப்பிரிவு' ஏதேனும் ஒரு வடிவத்தில் மக்களி டையே இருந்துதான் தீரும் என்பதை மட்டும் ஈண்டு நான் உணர்த்த விரும்புவது.

இன்னும் இங்குச் 'சாதி' என்பதை 'படைப்பு விசேட மாகக்' கொண்டாலும் கொள்ளலாம். படைப்பு ஒருவகை யாகக் காணப்படாது மணிவாசகப் பெருமான் கூறியது போல்

> ''புல்லாய் பூடாய்ப் புழுவாய்......தாவர
> சங்கமத்துள் எல்லாப் பிறப்பும் பிறந்து'[39]

என்று பல்வேறு வகையாகக் காணப்படுவதையே இறப் பாகக் குறிக்கின்றது. இந்த வகையில் ஒவ்வோர் இனத்தி லும் பல பிரிவுகள் காணப்படுகின்றன. இவையெல்லாம் வினையினால் ஆவனவே என்பதை ஈண்டு நீ உளங்கொள்க.

---

39. திருவா. சிவபுரா. அடி (26-31)

'ஆயு' என்பது ஆயுள்; வாழ்நாளைக் குறிப்பது. நீண்ட வாழ்நாள், குறுகிய வாழ்நாள் என்பனவும் வினையின் பயனேயாகும். 'போகம்' என்பது ஒவ்வோர் உயிரும் அநுபவிக்கும் இன்ப துன்பங்களாகும். வினை செயற்படுங்கால் இவையெல்லாம் நடைபெறும் என்பதை அறிக. வாழ்க்கையில் எத்தனையோ இன்ப துன்ப நிகழ்ச்சிகளைச் சந்திக்க நேரிடலாம். அவற்றையெல்லாம். சவாலாக ஏற்றுக் கொள்ளவேண்டும். "இடுக்கண் வருங்கால் நகுக"[40] என்ற வள்ளுவர் அறிவுரையும் ஒருவகையில் இதுபற்றி எழுந்ததே என்பதையும் உளங்கொள்க.

இன்னொரு குறிப்பையும், ஈண்டு நீ அறிதல் வேண்டும். பிராரத்த கன்மம் பயன் தருங்கால் தான் நேரே நின்று தாராது; எவையேனும் சிலவற்றை வாயிலாகக் கொண்டே தரும். அவ் வாயில்கள்பற்றிப் பிராரத்தம். 'ஆதியான்மிகம்', ஆதிபௌதிகம்', 'ஆதிதைவிகம், என மூன்றாகப் பேசப்படும் சித்தாந்த வித்தகர்களால். இவற்றுள் தன்னாலேனும் பிற உயிர்களாலேனும் வருவன ஆதியான்மிகம். (எ-டு) சைகிள், ஸ்கூட்டரிலிருந்து வீழ்தல், குளியலறையில் வழுக்கி வீழ்தல் போன்றவை தன்னால் வருவன; தேள் பாம்பு கடித்தல், மாடு முட்டுதல், நாய் கடித்தல் போன்றவை பிற உயிர்களால் வருவனவாகும். அடுத்து, நிலநடுக்கம், பெருமழை, பெருவெள்ளம், பெருவறட்சி, இடி வீழ்தல், தீ மிகுதல், சூறாவளி அடித்தல் முதலிய பூதச் செயல்களால் வருவன 'ஆதிபௌதிகம்.' பேய், பூதம், தீய தெய்வங்கள் இயமன் முதலிய தேவர் பகுதியால் வருவன 'ஆதிதைவிகம்.'[41] இவற்றையும் மனத்தில் இருத்துக.

வினையைப் பற்றி மேலும் சில கருத்துகளை அறிந்து கொள்ளல் இன்றியமையாதது. சஞ்சிதமாய்க் கிடக்கும் வினைகள் பிராரத்தமாய் வரும்பொழுது முன்செய்த

---

40. குறள்—621
41. சிவப்பிரகாசம்—29

முறையில்தான் வரும் என்பதில்லை; முன் செய்தது பின்னும், பின் செய்தது முன்னுமாக மாறி வருதலும் உண்டு. அதற்குக் காரணம் அவற்றின் வன்மை மென்மைகளே யாகும். மிகப் பெரிய புண்ணியமும், மிகப் பெரிய பாவமும் செய்த பிறவிலேயே பிராரத்தமாய் வந்து பயன்தரும்.

குற்றொ ருவரைக் கூறை கொண்டு
 கொலைகள் சூழ்ந்த களவெலாம்
செற்றொ ருவரைச் செய்த தீமைகள்
 இம்மை யேவரும் மெய்ம்மையே.[42]

என்ற சுந்தரர் திருமொழி இங்கு நினைக்கத்தக்கது. இக் கருத்தினையே திருவள்ளுவரும்,

பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்.[43]

என்ற குறளில் குறிப்பிட்டுள்ளமையை அறிக. பாபத்திற்கு இவ்வாறு கூறவே புண்ணியமும் அவ்வாறே செயற்படும் என்பதைக் கூற வேண்டுவதில்லை.

மற்றும், வினைகள் தாம் செய்யப்பட்ட முறையிலன்றி முன்பின்னாக, பின்முன்னாக வருவது அவ்வவ் வினையின் தன்மைக்கேற்ப நிகழ்வதேயாகும்.

தொடங்கடைவின் அடையாதே
 தோன்று மாறி.[44]

என்பது சிவப்பிரகாசம். எடுத்துக்காட்டொன்று இதனைத் தெளிவாக்கும். உழவன் ஒருவன் முன்னர் பனை விதையை இடுகின்றான்; பின்னர் வாழையை நடுகின்றான்; அதன் பின்னர் கரும்பை நடுகின்றான்; அதன் பின்னர் கீரையை விதைக்கின்றான். இங்கு அவன் விதைத்த முறைப்படியே

42. தேவாரம்—7.3:9
43. குறள்—319
44. சிவப்பிரகாசம்—29

பயன் தரும் என்று கருதுதல் தவறு என்பதை நீ அறிவாய். வினைகள் பின் முன்னாகப் பயனைத் தருதலுக்கு இந்த எடுத்துக்காட்டால் விளக்குவர் சிவப்பிரகாச ஆசிரியர்.

உயிர்களால் இயற்றப்படும் வினை அறிவுடையதன்று; அஃது அறிவில்லாத சடம் ஆதலின் அதனால் தன்னைச் செய்தவனைச் சென்று பற்ற இயலாது. அஃது எங்கோ ஓர் இடத்தில் என்றோ ஒரு காலத்தில் ஏதோ ஓர் உடம்பு கொண்டு செய்யப்படுகின்றது. செய்யப்பெற்ற செயல் அப்பொழுது நிகழ்ந்து அழிந்துவிடுகின்றது. ஆதலால் அது பின்னர் என்றாவது, எங்காவது, எந்த உடம்பிலாவது பயன் தர இயலாது. அதனால், இறைவனே அவரவர் செய்யும் வினையை நடுவனாய் நின்று அவ்வவ்வினைக் குரிய பயனை உரிய காலத்தில், உரிய இடத்தில், உரிய உடம்பில், கூட்டுவிப்பான். இதற்குக் காரணம் இறைவன் அவ்வினையைச் செய்யும் ஆருயிர்கள்மீதுள்ள அளவற்ற கருணையே யாகும் என்பதை அறிக.

இதனைச் சித்தாந்த முறையில் மேலும் தெளிவாக்கு வேன். இறைவன் உயிர்கட்கு வினைப்பயனை ஊட்டு வித்ததற்குக் காரணம் அவைகளைப் பிணித்துள்ள ஆணவ மலத்தைப் போக்குதல் வேண்டும் என்னும் திருவுள்ளக் கருத்தேயாகும் என்பதை அறிக. உயிர்கள் 'எல்லா வற்றிற்கும் இறைவனே முதல்வன்' என்பதை மறந்து 'எல்லாவற்றிற்கும் தாங்களே முதல்வர்' என்று எண்ணும் செருக்கினால் செய்யப்பெறும் செயல்களே 'வினை' எனப் படுவன என்பதையும், இம்மறதியும் செருக்கும் ஆணவமல மறைப்பினால் வருவன என்பதையும் இதுகாறும் எழுதி யுள்ள கடிதங்களில் ஆங்காங்கு விளக்கியுள்ளேன். வினையை உயிர்கள் தவறாது அநுபவிக்க அநுபவிக்க அவை தமது அறியாமை நீங்கி இறைவனை அறியும் அறிவைப் பெறும். இறைவன் வினைப் பயனை ஊட்டு வித்தல் மருத்துவர் நோயாளிக்கு மருந்து கொடுத்தல்

போன்றது. ஆணவமலம் உயிர்கட்கு உள்ள நோய் ஆகும். அதற்கு மருந்தாய் உள்ளவை வினைப் பயன்கள். மருந்துகளில் சில இனிக்கும்; சில கசக்கும். நல்வினைப் பயனாகிய இன்பம் இனிப்பான மருந்தை உண்பது போன்றது; தீவினைப் பயனாகிய துன்பம் கசப்பான மருந்தை உண்பது போன்றது. இன்னும் சில வேளைகளில் அறுத்துக் கீறிச்சுட்டுச் செய்யும் சிகிச்சைகளும் நிகழும் சந்தர்ப்பங்களும் ஏற்படுகின்றன அல்லவா? இங்ஙனமே மிகப் பெரிய துன்பங்களையும் மிகப் பெரிய பயனாக இறைவன் ஊட்டுவிப்பான். ஆருயிர்கள் இவற்றைத் தாங்கிக் கொள்ளத்தான் வேண்டும். இது கருதியே வள்ளுவர் பெருமானும் "இடுக்கண் வருங்கால் நகுக"[45] என்று கூறியபோந்தார் என்பதையும் நினைக்கத்தோன்று கின்றதல்லவா? சுருங்கக் கூறின, ஆருயிர்களின்மீது எல்லையற்ற கருணையையுடைய இறைவன் ஆணவத்தின் ஆற்றல் கெடுதற் பொருட்டே வினையின் பயனை ஊட்டு விப்பான் என்பதை உணர்க.

> நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
> அல்லற் படுவ தெவன்?[46]

என்ற குறள் உன் சிந்தனைக்கு விருந்தாக அமையட்டும்.

ஒரு பிறப்பில் செய்த வினை முழுவதையும் ஒருவர் அடுத்த பிறப்பில் அநுபவித்துவிடுதல் இல்லை. ஒவ் வொரு பிறவியிலும் பிராரத்தாய் அநுபவிக்கும் வினை குறைவு; ஆகாமியமாய்ச் செய்யப்பெறும் வினை மிகுதி. இங்ஙனம் பிறவிதோறும் அநுபவிக்கப் பெறாமல் சஞ்சித மாய்க் கிடக்கும் வினைத் தொகுதியை நினைத்துப் பார்க்க; அது பேரளவில் தேங்கிக் கிடப்பது புலனாகும். ஆகவே, பிராரத்தமாய்க் கழியும்பொழுது, அதன் அழி

45. குறள்—621
46. ஷை. 379

வில் ஆகாமியம் தோன்றிவிடும் என்பது தெளிவாகின்றது. அஃதாவது, ஒரு வினை நசிக்கும்பொழுதே பல வினை உற்பத்தியாகிவிடுகின்றது என்பது தெளிவு. இக் காரணத்தால் காரிய கன்மம் 'நாசோற்பத்தி' உடையது என்று கூறப்படும். 'நாசோற்பத்தி' என்பது, ஒருவினை நாசமாகும்பொழுது வேறு வினைகள் தோன்றுதல். இன்னும் காரிய கன்மம் நீரோட்டம்போல் இடையறாது வருதலின், அது 'பிரவாகாநித்தம்' என்றும் வழங்கப்பெறும்.

வினை நாசத்தில் உற்பத்தியாய்த் தொடர்ந்து வருதலை அருணந்தி சிவம்,

> வேலைக்கு வித்து மாகி
> விளைந்தவை பயனு மாகி
> ஞாலத்து வருமா போல
> நாம்செயும் வினைக ளெல்லாம்
> ஏலத்தான் பலமாச் செய்யும்
> இதம்அகி தங்கட் கெல்லாம்
> மூலத்த தாகி என்றும்
> வந்திடும் முறைமை யோடே.[47]

என்ற செய்யுளால் விளக்குவர். ஓர் உழவன் செய்த பயிர் தன் பயனைக் கொடுக்குங் காலத்தில் அஃது அவனுக்கு உணவாய்ப் பயன்படுதலேயன்றி அடுத்த ஆண்டிற்கு விதையாகவும் அமைகின்ற தல்லவா? இந்த உவமை கொண்டு 'நாசோற்பத்தி'க் கருத்தைத் தெளிக.

வினை இவ்வாறு நாசோற்பத்தி பண்ணி வருமாயின், உயிர் வினையினின்றும் நீங்குதற்கு வழியே இல்லையா? என்று வினவலாம். கூறுவேன்; ஆகாமியம் இல்லாமல் பிராரத்தத்தை அநுபவித்தல் இயலாது. இஃது உண்

47. சித்தியார் 2. 12

மையேயாயினும், அஃதின்றியும் பிராரத்தத்தை அநுபவித்தல் கூடும். அஃது எங்ஙனம் எனில், பிராரத் தத்தை அநுபவித்தற் பொருட்டு நிகழும் முயற்சி விருப்பு வெறுப்புகளோடு கூடி நிகழும் பொழுதே 'ஆகாமியம்' எனப் பெயர் பெற்று, அடுத்த பிறப்பிற்கு வித்தாய் அமையும். இல்லையேல் அவ்வாறு ஆகாமியமாதல் இல்லை.

இதனை மேலும் தெளிவாக்குவேன். பிராரத்தவினை நன்மையையோ தீமையையோ தரும்பொழுது 'தானே நேரில் வந்து தருவதில்லை. அது ஆதியான்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்னும் மூவகை வாயி லாகவே பயன் தரும்' என்று முன்னர்க் குறிப்பிட்டதை நினைவு கூர்க. அங்ஙனம் தரும்பொழுது அந்நன்மை தீமைகளை 'முற்பிறப்பில் நாம் செய்த வினையின் பயன்களே இவை என்று கருதுதல் வேண்டும். அவ் வினைகள் தம் பயனைத் தருதற்கு வாயிலாகக் கொண்ட வைகளே இம்முன்னிலைப் பொருள்கள்' என்றும் உணர்தல் வேண்டும். இங்ஙனம் உணராமல் அப்பயன்கள் அப் பொழுதுதான் புதியனவாய் வருதல்போல் கருதித் தம் மையும் பிறரையுமே அந்நன்மை தீமைகளுக்குக் காரணங் களாக வைத்து எண்ணுதல் தவறு; பெருந் தவறு. இம் முறையில் விருப்பு வெறுப்புகள் கொண்டு நட்பையோ பகைமையையோ கொள்ளும் முறையில் முயற்சிகள் நிகழுமாயின் அவை 'ஆகாமியம்' என்னும் வினையாய், மேலும் மேலும் வரும் பிறவிகட்கு வித்தாகும். இங்ஙனம் கருதாமல் 'இவை முன் செய்த வினைப் பயன்கள்; இவற்றிற்கு முன்னிலையாக நிற்பவர்கள் அவ்வினைப் பயன்கள் விளைதற்கு வாயில்களே; நாம் செய்த வினையை நாம் அநுபவிக்கின்றோம்; அநுபவித்தேயாக வேண்டும்; எய்தவனிருக்க அம்பை நோவதால் பயனென்ன?' என்று எந்தவித விருப்பு வெறுப்புமின்றி அமைவோமாயின், பிராரத்துவம் உயிரைத் தாக்காது உடலளவாய்க் கழியும். இந்நிலையில் வினை 'நாசோற்

பத்தி'யாதல் இல்லை. ஆகவே, உயிர்கட்கு இவ்வாற்றால் வினைத் தொடர்பு நீங்குதலும் உண்டு என்று தெளிக.

வினையின் பயனைக் கூட்டுவிப்பவன் இறைவன். இதனை மணிவாசகப் பெருமான்,

> முன்னை வினையிரண்டும்
> வேரறுத்து முன்னின்றான்
> பின்னைப் பிறப்பறுக்கும்
> பேராளன்—தென்னன்
> பெருந்துறையில் மேய
> பெருங்கருணை யாளன்
> வருந்துயரம் தீர்க்கும்
> மருந்து.

(முன்னைவினை இரண்டு—சஞ்சிதம், பிராரத்தம்; முன்னின்றான்—குருவாக நின்றான்; வருந்துயரம்—ஆகாமிய வினையாகிய துன்பம்)

என்று கூறியதனால் (திருவா. திருவெண்பா—4) தெளியலாம். ஒருவர் பிறரது தீவினைப் பயனைத் தாம் ஏற்றுக்கொள்ள விரும்பினும், தாம் செய்த நல்வினைப் பயனைப் பிறர்க்குத் தர விரும்பினும் இறைவனது ஆணை அவற்றை முற்றுவிக்கும் என்று அறிக.

இறுதியாக வினைப்பற்றி ஒரு முக்கியமான கருத்தினைக் கூறுவேன். 'உயிர்கட்கு வினைக்கீடான உடம்பே கொடுக்கப்படும்' என்பதில் 'உடம்பு' என்பது பரு உடம்பையே (தூலதேகம்) குறிக்கும். பரு உடம்பு கண்ணுக்குப் புலனாவது. இந்த உடம்பில்தான் மக்கள், விலங்கு, பறவை, தாவரம் முதலிய வேறுபாடுகள் உள்ளன. இந்தப் பருவுடம்பிற்கு வேறாய் நுண்ணுடம்பு (சூக்கும தேகம்) ஒன்று உண்டு; அது கண்ணுக்குப் புலனாகாது. இதன்கண் அவ்வேறுபாடுகள் இல்லை. ஆகவே, 'வினைக்கேற்ப உயர்ந்ததும் தாழ்ந்ததுமாகக் கொடுக்கப்படும் உடம்புகள்' என்பன பருவுடம்புகளேயாகும்

என்பதை அறிக. ஆணவமலத்தால் கட்டுண்டு கேவல நிலையில் கிடக்கும் ஆன்மாக்கட்கு இறைவன் முதற்கண் நுண்ணுடம்பையே கூட்டுவிப்பான். இதில் உயர்வு தாழ்வு இல்லை. நுண்ணுடம்பினால் சிறிது அறிவும், இச்சையும் செயலும் விளங்கப்பெற்ற ஆன்மாக்கள் தத்தம் தகுதி நிலைக்கேற்ப நல்லனவும் தீயனவுமான செயல்களை அறிந்தும், இச்சித்தும் செய்ய முயலும். இம் முயற்சியே அவற்றிற்கு வினையாய் அமையும். அவ்வினைக்கேற்ற பருவுடம்பை இறைவன் அவற்றிற்குக் கூட்டுவிப்பான். அதன் பின்னர் காரணகாரியத் தொடர்பாய் பிறப்புகள் தொடர்ந்து நிகழும். பருவுடம்பு, நுண்ணுடம்பு முதலியவற்றின் இயல்புகளை அடுத்து வரும் கடிதங்களில் தெளிவாக விளக்குவேன்.

முதற்கண் நுண்ணுடம்பு வரும்பொழுது ஒவ்வோர் ஆன்மாவும் தன் தன் தகுதிக்கு ஏற்ப ஒவ்வொன்றையும் இச்சிக்கும்—விரும்பும்—என்று கூறினேன் அல்லவா? இத் தகுதி இன்னதென்பதை விளக்குவேன். 'உயிர்கள் தூல அறிவை உடையன' என்பது அனைத்திற்கும் பொதுத் தன்மையாகும். ஆயினும் அத் தூல அறிவும் உயிர் தோறும் வேறு வேறாகவே அமைந்துள்ளது. இந்த வேறுபாடே அவற்றின் சிறப்பியல்பு ஆகும். இச்சிறப்பியல்பிற் கேற்ப ஆணவமலப் பிணிப்பும் உயிர்தோறும் வேறு வேறு வகையாகவே அமைந்துள்ளது. எல்லா உயிர்களும் ஒரு காலத்தில் வீடுபேறு அடையாமல் வேறு வேறு காலத்தில் அதனை அடைவதற்கும், விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் பிரிவுகட்கும் ஆணவமலப் பிணிப்பின் வேறுபாடேயாகும். விஞ்ஞானகலர் முதலிய ஒவ்வொன்றிலும் உள்ள உயிர்களிலும் உயிர்தோறும் ஆணவ மலப் பிணிப்பு வேறு வேறு வகையாகவே உள்ளது. இந்தப் 'பிணிப்பு வேறுபாடுதான்' தகுதி அல்லது பக்குவம் என்பதை அறிக. நுண்ணுடம்பு கிடைத்தவுடன் உயிர்கள் இத் தகுதிக் கேற்பவே அறிவு விளங்கப்பெறும். இவ் விளக்கத்

திற்கேடாகவே இச்சையும் முயற்சியும் நிகழும். இதனால் உயிர் தோறும் வினைகளும் வேறு வேறாய் அமையும். இவ் வினைக்கேற்பவே அவையும் வேறு வேறு பிறப்பினையும் அடையும் என்பதனை உணர்க. ஆக, கன்மத்தின் (வினையின்) இயல்புகளை ஒருவாறு விளக்கினேன். தெளிவு பெற்றிருப்பாய் என்று கருதுகின்றேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 29

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனேயாகுக.

ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களுள் முதலிரண்டைப்பற்றி விரித்து விளக்கினேன் முன்னர் எழுதிய கடிதங்களில், இக்கடிதம் தொடங்கி ஒரு சில கடிதங்களில் மாயையைப்பற்றி விளக்குவேன்.

'பானைக்கு மண்போல, உலகத்திற்கு முதற்காரணம் மாயை' என்று முன்னரே குறிப்பிட்டதை ஈண்டு நினைவு கூர்க. எனவே, உலகிற் காணப்படும் பொருள்கள் யாவும் இதன் காரியமேயாகும் என்பதை முதலில் உளங் கொள்க. இக் காரியங்கள் பலவற்றையும் சைவ சித்தாந்தம் தனு, கரணம், புவனம், போகம் என நான்காக வகுத்துப் பேசும். தனு என்பது, பருவுடம்பு. கரணம் என்பது, அந்தக் கரணம், மனம் முதலிய உட்கருவிகள். புவனம் என்பது, அவ்வுடம்புகள் இயங்குவதற்கு அமைந்த இடம். போகம் என்பது, உயிர்கள் தம் தனு கரணங்களைக் கொண்டு இன்ப துன்பங்களை நுகரும் நுகர்ச்சிப் பொருள்கள்.

மாயை அதிசூக்குமப் பொருள். ஆதலின், தனுகரண புவன போகங்களாகிய அதி தூலப்பொருள்கள் நேரே

அதன் காரணமாக வர மாட்டா, அதனால் தத்துவங்கள்[48] எனப்படும் முதல்களே (மூலப்பொருள்களே) முதற்கண் மாயையினின்று தோன்றும்; பின்பு, அத் தத்துவங்களினின் றும் அவற்றின் காரியமாக தனு கரண புவன போகங்கள் தோன்றும். அதாவது உலகம் தோன்றும். தத்துவங்களினின்றும் தோன்றுவனவற்றைத் 'தாத்து விகம்' என்று வழங்குவர். தத்துவங்களினின்றே உலகம் தோன்றுதலால் உலகத்திற்கு நேரே முதற்காரண மாக இருப்பவை தத்துவங்களேயாகும். தத்துவங்கள் மாயையின் காரியங்களாதலின், உலகிற்கு முடிவான முதற் காரணம் மாயையாகும் என்பதை உளங்கொள்க.

உயிர்களின் ஆணவப்பிணிப்பு மூன்று வகையாக இருக்கும் எனவும், அவ்வகையால் உயிர்கள் விஞ்ஞானகலர் பிரளயாகலர், சகலர் என்று மூன்று வகையினவாய் இருக் கும் எனவும் முன்னெழுதிய கடிதங்களில் குறிப்பிட்டேன் அன்றோ? அவற்றை ஈண்டு நினைவுகூர்க. உயிர்கள் மூன்று வகையினவாய் இருத்தலால் அவற்றின் பொருட்டு அமைந்த உலகமும் மூன்று வகையினவாக அமைந்துள்ளன. அவை தூய உலகம். கலப்புலகம், மாசுல கம் என்பனவாகும். இவை முறையே சுத்தப் பிரபஞ்சம், மிச்சிரப் பிரபஞ்சம், அசுத்தப் பிரபஞ்சம், என வழங்கப்பெறும். மயக்கத் தாரா தொழிதல், மயக்கத்தைத் தருதல் என்பது பற்றியே 'சுத்தம், அசுத்தம்' என்ற சொற்கள் கை யாளப்பெறுகின்றன. ஆகவே, சுத்தப் பிரபஞ்சம் மயக்கத் தைத்தாராது; மிச்சிரப்பிரபஞ்சம் சிறிதே மயக்கத்தைத் தரும்; அசுத்தப் பிரபஞ்சம் மயக்கத்தையே தரும், என்பது தெளிவாகப் புலனாகும். 'மூவுலகம்' என்று சித்தாந்தத் தில் கொள்ளப்படும் உண்மைப்பொருள் இங்ஙனம் கூறப்

---

48. தத்துவம்' என்பதற்குப் பிறமதங்களில் 'பொருள்' என் பதே கருத்து. சைவசித்தாந்தத்துள் 'தத்துவம்' என்பதற் குக் 'கருவி' என்பதுதான் பொருள்—இதனை உணர்க.

பெறும் மூவகை உலகங்களையேயாகும் என்பதைக் கருத்தில் இருத்துக.

காரியமாய் உள்ள உலகம் இவ்வாறு மூவகைப் பட்டிருத்தலால் இவற்றிற்குக் காரணமான மாயையும் மூவகைப் பட்டிருக்கும் என்பதைச் சொல்ல வேண்டா. இவ்வாறு மூன்றாகக் கூறுபட்டு நிற்கும் மாயை முறையே சுத்த மாயை, அசுத்த மாயை, பிரகிருதி மாயை என்று பெயர்களால் வழங்கப்பெறும். பிரகிருதி மாயையை மூலப் பிரகிருதி என்றும் வழங்குவர்.

'மாயை' என்றால் என்ன? உலகில் பலவகையாகக் காணப்படும் பொருள்களாய்ப் பரிணமிக்கக் கூடிய பல வகைச் சக்திகளின் தொகுதியே 'மாயை' எனப்படுவது,. இச்சக்திகள் உயிர்களைப் பற்றுமிடத்து அவ்வுயிர்களிடத்து இயற்கையாய் உள்ள ஆணவப்பிணிப்பினால் சுத்தமும், மிகச்சிரமும், அசுத்தமுமாகி விடும். எனவே, மாயை சுத்தமாய் இருந்து மயக்கத்தைத் தாராதொழிதற்கும் உயிர்களைப் பிணித்திருக்கும் ஆணவமலத்தின் மென்மை வன்மைகளே காரணம் என்பது தெளிவு. மாயைக்கு இயல்பாய் உள்ள தன்மை விளக்கத்தைத் தருவதாகும். ஆயினும், அது மயக்கத்தைத் தருவது ஆணவத்தின் சார்பினாலாகும் என்பது தெளிவு. இது வெய்யலில் வைக்கப் பட்டிருக்கும் கரும்புச்சாறு புளிப்பைஅடைவதுபோலாகும். இனிப்பதாகிய பால் புளிப்பையுடைய தயிராகி விடுதல் போல்வதாகும் என்றும் சொல்லலாம்.

'விஞ்ஞானகலர்' என்னும் ஒருமலம் உடையவர்களை ஆணவம் மென்மையாகப் பிணித்திருத்தலால் அவர்களை அடைகின்ற மாயை அசுத்தமாய் மயக்கத்தைச் செய்யாது; சுத்தமாகவே இருக்கும். 'பிரளயாகலர்'என்னும் இருமலம் உடையவர்களை ஆணவம் இடைநிலையாகப் பற்றியிருத்தலால் அவர்களை அடைகின்ற மாயை சிறிதளவு அசுத்தமாகி சிறிதளவு மயக்கத்தைச் செய்யும். எனவே, ஒன்றே

யாகிய மாயை ஆணவப்பிணிப்பின் வேறுபாட்டினால் சுத்தம், மிச்சிரம், அசுத்தம் என மூன்றாகி விடுகின்றது என்பதை உணரலாம். இக் கூறியவற்றால் சுத்தப் பிர பஞ்சம் விஞ்ஞானகலர்க்கு உரியது என்பதும், மிச்சிரப் பிரபஞ்சம் பிரளயாகலர்க்கு உரியது என்பதும் அசுத்தப் பிரபஞ்சம் சகலர்க்கு உரியது என்பதும் அறியத்தக்கது.

மேற்கூறியவற்றை இன்னும் சற்றுத் தெளிவாக்கு வேன். ஒருமலம் உடையவர், இருமலம் உடையவர், மும் மலம் உடையவர் என்றெல்லாம் சொல்வது மேற்குறிப் பிட்ட மயக்கம் இன்மையும் மயக்கம் உண்மையும்பற்றியே யாகும். அதாவது, விஞ்ஞானகலர்க்கு ஆணவப்பிணிப்பு மென்மையாயிருப்பதால் அவர்களுக்குள்ள கருவி கரணங் கள் மயக்கத்தை விளைவிப்பதில்லை. ஆகவே, அவற்றைக் கொண்டு ஈட்டியும் நுகர்ந்தும் வரும் வினைகளும் மயக்கத் தைச் செய்யா. இதுபற்றியே 'அவர்கட்கு மாயைக் கன் மங்கள் இல்லை' என ஆகமங்கள் கூறுகின்றனவேயன்றிச் சுத்தமாயையும் சுத்தகன்மமும் இல்லை என்னும் கருத்தி னால் அன்று. இன்னும் 'விஞ்ஞானகலர், பிரளயாகலர்' கட்கு மயக்கம் இல்லை என்பதற்கும் 'சகலர்க்கு உள்ள மயக்கம் போன்ற மயக்கம் இல்லை' என்பதே கருத்தாகும், ஆணவப்பிணிப்பு சிறிதேனும் உள்ளவரையில் மயக்கம் சிறிதாயினும் உளதாகுமேயன்றி அறவே நீங்காது நீங்கு மெனின் விஞ்ஞானகலராகும் நிலையே மூத்திநிலையாய் விடும். இது பொருந்தாமையால் விஞ்ஞான கலருக்கு 'மாயை கன்மங்கள் இல்லை' என்பதற்கும் பொருள் 'அசுத்த மாயையும் அசுத்த கன்மமும் இல்லை' என்ப தாகும். இஃது இனிது விளங்குதற் பொருட்டே சுத்த மாயையை 'மாயை' என்று குறியாது 'விந்து' என்றே குறித் தல் பெரும்பான்மை வழக்கமாய் உள்ளது. இங்ஙனமே அசுத்தமாயையையும் அடைமொழியின்றி 'மாயை' என்றே குறித்துச் சொல்லுதல் பெரும்பான்மை வழக்கமாய் உள்ளது. சுத்த மாயை, அசுத்த மாயை என்ற இரண்டை யும் இரண்டு தனிப் பொருள்போலக் கூறுதலும் இது

பற்றியே யாகும். 'பிரளயாகலர்க்கு மாயை இல்லை' என்பதற்கும் இவ்வாறு 'அசுத்த மாயை இல்லை' என்பதே பொருளாகும்.

இக்கூறியவற்றால் சகலர்க்கு உரியபிரகிருதி மாயையே உண்மையில் அசுத்த மாயை என்பதாகின்றது. ஆயினும் அஃது இயற்கையில் அவ்வாறு அமையாது மிச்சிரமாயையின் பரிணாமமாய் அமைவதால் அது தனித்த ஒருமாயையாகக் கூறப்பெறாமல் 'பிரகிருதி' என்னும் தத்துவமாகக் கூறப்பெறுகின்றது. ஆகவே, 'அசுத்த மாயை' எனக்குறியிட்டு வழங்கப்படும் மாயை உண்மையில் மிச்சிர மாயையே என்பதை அறிந்து, தெளிவாயாக. மும்மலத்தால் பிணிப்புடைய சகலர்க்கும் சுத்தமாயா தத்துவத்தோடு தொடர்பு இல்லை. ஆயினும், மிச்சிரமாயா தத்துவத்தோடு தொடர்பு உண்டு. இதுபற்றியும் மிச்சிர மாயை 'அசுத்த மாயை' எனவும் வழங்கப்பெறுகின்றது.

இன்னோர் உண்மையையும் ஈண்டு நீ நினைவில் இருத்துதல் வேண்டும். சுத்தமாய் உள்ள பொருள் அசுத்தமாகுமாயின் அது தனது வியாபகத்தை[49] இழக்கும். காரணம், அசுத்தமானது ஆணவத்தின் தொடர்பாகும். ஆணவத்தின் இயல்பு அணுத் தன்மையைச் செய்வது என்பதை நீ நன்கு அறிவாய். அதனால் ஆணவத்தைச் சார்ந்த பொருள் தனது வியாபகத்தை இழப்பதாகின்றது. இதனால் சுத்த மாயை வியாபகமும், அசுத்த மாயை வியாப்பியமும்[50] ஆகின்றன. இக்காரணத்தால் சுத்த மாயை 'ஊர்த்துவமாயை'[51] என்றும், அசுத்த மாயை 'அதோமாயை'[52] என்றும் வழங்கப்பெறுகின்றன. 'மேல், கீழ்' என்பன ஈண்டு வியாப்பியங்களைக் குறிக்கின்றன என்பதை நன்கு

---

49. வியாபகம்—விரிவு,
50. வியாப்பியம்—அடக்கம்
51. ஊர்த்துவம்—மேல்
52. அத:—கீழ்.

உணர்ந்து தெளிவாயாக. மற்றும், 'ஊர்த்துவமாயை' 'மகாமாயை, 'குடிலை', 'விந்து' என்பன சுத்தமாயையின் வேறு பெயர்கள் என்பதையும், 'அதோ மாயை' 'மாயை' 'மோகினி' என்பன அசுத்த மாயையின் வேறு பெயர்கள் என்பதையும்' 'மான்' 'அவ்யக்தம்' என்பன பிரகிருதிமாயை யின் வேறு பெயர்கள் என்பதையும் கருத்தில் இருத்துக. இவ்வாறு மும்மாயைகளையும் நன்கு உணர்ந்து தெளிவாயாக.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 30

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலம் பல விளைவதாகுக.

சென்ற கடிதத்தில் 'மாயையினின்றும் தத்துவங்களே முதலில் தோன்றும்' என்றும், 'அத் தத்துவங்களினின்றே உலகம்தோன்றும்' என்றும் குறிப்பிட்டேன் அல்லவா? இவற்றை இக்கடிதம் தொடங்கி ஒரு சில கடிதங்களில் விளக்குவேன். அதற்கு முன்னர் காரணங்களினின்றும் காரியங்கள் தோன்றும் முறை இவை என்பதை முதலில் தெளிவிப்பேன்.

பெரிய சர்க்கஸ் கம்பெனியார் ஓரிடத்திலிருந்து பிறிதோரிடத்திற்குச் சென்று வட்டரங்கு அமைக்க என்ன செய்கின்றனர்? மிகப் பெரிய துணியைக் கொண்டு கூடாரம் அமைக்கின்றனர். எனவே, கொட்டகைக்குத் துணி காரணமாகின்றது. துணியாகிய காரணம் எப்படி வீடாய்க்காரியப்பட்டது? முன்பு யானையின் மீதும், வண்டிகளின் மீதும் ஏற்றப்பட்டு மூட்டையாய் ஒடுங்கிக் கிடந்த துணிகள், பின்பு, விரிந்து பெரிய மாளிகை போன்ற கொட்டகையாய்க் காட்சி யளிக்கின்றன. இவ்வாறு சுருங்கியிருந்த காரணப் பொருள் விரிந்து நின்று காரியமாதலை 'விருத்தி' என்ற பெயரால்

வழங்குவர். இதற்கு 'படம் குடிலானாற்போல' என்று எடுத்துக்காட்டு தருவர். படம்-துணி; குடில்-குடிசை.

மண் பானையாதல், பொன் அணியாதல், பால் தயிராதல், நெல் பொரியாதல், மரங்கள் இருக்கையாதல் போன்று உருமாறுதல் பரிணாமம் என்ற பெயர் பெறும். இவ்வாறன்றி நூல் ஆடையாதல், மலர் மாலையாதல் போல்வன 'ஆரம்பம்' எனப்படும். ஏனெனில், நூல்களையோ மலர்களையோ ஒரு வழியாகக் குவித்துவிட்டால் ஆடையும் மாலையும் ஆகிவிட மாட்டா. ஒவ்வொன்றாக எடுத்து ஒன்றன்பின் ஒன்றாக முறையே வைத்து இணைத்தால் தான் ஆடை உருவாகும்; மாலையும் உண்டாகும். ஆகவே இங்கு 'ஒன்று, இரண்டு, மூன்று...என்று தொடங்கி முறையே தொடர்ந்து காரியப்படுதலால் இஃது 'ஆரம்பம்?' என்ற திருநாமம் பெறுகின்றது.

நெல் பொரியாதல், எள் குவியலாதல் போல்வன 'சமுதாயம்' என்ற பெயரால் வழங்கும். சமுதாயம்-கூட்டம். இவை மேற்குறிப்பிட்டவைபோல 'ஒன்று, இரண்டு, மூன்று' என்று ஒன்றன்பின் ஒன்று' என்ற முறையில் தொடராமல் பல ஒருங்கு திரண்டு காரியமாகின்றன. அதனால் இக் காரியப் பாடு 'ஆரம்பம்' அன்று. இங்ஙனம் 'ஆரம்பத்திற்கும்' 'சமுதாயத்திற்கும்' வேறுபாடு காண்க.

இப்பி வெள்ளியாதல், கயிறு பாம்பாதல் போல்வன உண்மையில் காரணம் காரியமாக மாறுவன அல்ல; காண்போனுக்கு உள்ள மயக்கம் காரணமாக அவை வெறும் தோற்ற மாத்திரத்தில் அவ்வாறு காட்சியளிக்கின்றன. இவை போல்வன 'விவர்த்தம்' எனப்படும். விவர்த்தனம்-வேற்று நிகழ்ச்சி.

மேற்கூறியவற்றுள் ஒரு சிலவற்றை மேற்கொண்டு பிற சமயங்கள் உலகத்தின் காரியப்பாட்டை ஒவ்வொரு விதமாக விளக்கும். அவற்றை ஈண்டு உனக்குக் காட்ட வில்லை. சைவசித்தாந்தம் சுத்த மாயையின் காரியம்

விருத்தி' என்றும், அசுத்த மாயையின் காரியம் 'பரிணாமம்' என்றும் கூறும். பால் தயிராதல் பூரண பரிணாமம்; வெண்ணெய்த்திரளுதல், சாணம் புழுவாதல் 'ஏகதேசப் பரிணாமம்.' சைவசித்தாந்தம் அசுத்த மாயைக்குக் கூறும் பரிணாமம் ஏகதேசப் பரிணாமம் என்று அறிக.

உலகம் சொல் உலகம், பொருள் உலகம் என இருவகையாய் உள்ளது. சொல் உலகத்தை 'சத்தப் பிரபஞ்சம்' என்றும், பொருள் உலகத்தை 'அர்த்தப் பிரபஞ்சம்' என்றும் கூறுவர். இவற்றுள் சொல் உலகம் எழுத்துக்களை உறுப்பாகக் கொண்ட சொற்களும், சொற்றொடர்களுமாகும். எழுத்துக்கள் 'வன்னம்' (வர்ணம்) என்றும், சொற்கள் 'பதம்' என்றும் வடமொழிப் பெயர்களைப் பெறும். சொற்றொடர்களில் சிறப்புடையன மந்திரங்களாகும். அதனால் மந்திரம், பதம், வன்னம் என்று சத்தப் பிரபஞ்சத்தை மூவகைப் படுத்திப் பேசுவர். வடமொழி மரபும் சைவ மரபும் பற்றி வன்னம் ஐம்பத்தொன்று என்றும், பதம் எண்பத்தொன்று என்றும், மந்திரம் பதினொன்று என்றும் சிவாகமங்கள் வரையறை செய்கின்றன. இவண் கூறப்பெற்ற எழுத்து, சொல், சொற்றொடர்களில் எல்லா மொழிகளிலுமுள்ள எழுத்துக்களும் சொற்களும் நூல்களும் அடங்கும் என்பது சிவாகமங்களின் கொள்கையாகும்.

சத்தப்பிரபஞ்சம் அறிவுக்குக் காரணமாய் நிற்றலின் அது சுத்த மாயையின் காரியமேயாகும். ஆகவே, சுத்த மாயையின் காரியமே சொற் பிரபஞ்சம், பொருட்பிரபஞ்சம் என்று இருவகையாகின்றது என்பதை அறிக. அசுத்தமாயையின் காரியங்களும் பிரகிருதி மாயையின் காரியங்களும் பொருட் பிரபஞ்சம் ஒன்றேயாதல் என்பதையும் அறிந்து தெளிக.

சொற்பிரபஞ்சமே, 'வாக்கு' எனப்படும். அது சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என நான்கு வகையாகும். இவை நான்கும் ஒன்றின் ஒன்று தூலமாய் வளர்ச்சியுற்று நிற்கும். எனவே, சூக்குமை முதலாகக் கூறுதல்

தோற்ற முறையாகும். ஒடுக்க முறையின் கூறின் வைகரி முதலாவதாக அமையும். இனி, இவ்வொன்றைப்பற்றியும் விளக்குவேன்.

சூக்குமை வாக்கு: சுத்தமாயையின் முதல் விருத்தியாய் முதற்கண் நிற்பது. இதற்கும் இதன் காரண நிலைக்கும் வேறுபாடு மிகுதியாக இல்லை. காரண நிலையிலுள்ள சுத்தமான ஏனை ~~ஒன்னை~~ மூவகைவாக்குகளாய் விருத்திப் படுதற்குத் தகுதி பெற்று நிற்கும் நிலையே சூக்குமை வாக்காகும். இது 'பரை'என்றும் 'நாதம்' என்றும் சொல்லப் படும். இதற்குப் பற்றுக் கோடாதல்பற்றியே சிவதத்துவத் திற்கு 'நாதம்' என்பது பெயராயிற்று. இது காரண நிலையிலேயே நிற்பதால் அழிவின்றி நிற்பதாகவும் சொல்லப்படும்.

பைசந்தி வாக்கு: மேற்குறிப்பிட்ட சூக்குமை வாக்கு மேலும் விருத்திப்பட்டு 'பைசந்தி' வாக்காகும். அதாவது, சொல்வடிவம் சிறப்பு வகையில் விளங்காது பொதுவகையில் விளங்கி நிற்கும் நிலையாகும் இது. பைசந்தி என்பது, 'பஸ்யந்தி' என்ற சொல் வடிவம் திரிந்த நிலை. இதற்கு 'விளங்குவது' என்பது பொருள். சூக்குமைவாக்கு போல் முற்றிலும் விளங்காது நிற்றல் இன்றி, ஒருவாறு விளங்கி நிற்பதால் இதற்கு 'பைசந்தி' என்று பெயர் வந்தது. இது விளங்கியும் விளங்காதும் நிற்பதற்கு மயில் முட்டையி லுள்ள நீரினை உவமை கூறுவர். மயில் முட்டையிலுள்ள நீரில் மயிலினிடத்துள்ள ஐவகை நிறங்களும் தோன்றியும் தோன்றாதும் நிற்கும். சூக்குமை பைசந்தி என்ற இருவகை வாக்கிலும் மொழி வேறுபாடு இல்லை.

மத்திமை வாக்கு: பைசந்தி என்னும் நிலையில் இருந்த ~~பொருளுணர்ச்சி~~. சொல் வடிவில் இனிது விளங்கித்தோன்ற அதன்பின் எழுத்து வடிவில் நன்கு விளங்கித் தோன்றி, அதனை அவ்வாறே சொல்ல எழும் முயற்சியைப் பெற்று 'உதானன்' என்னும் காற்றால் உந்தப்பட்டு மிடற்றளவில் (கண்டத்தளவில்) மெல்ல ஒலித்து நிற்பது மத்திமை

வாக்காகும். பைசந்திக்கும் வைகரிக்கும் இடை நிற்றல் பற்றி இது 'மத்திமை' என்ற பெயர் பெற்றது.

வைகரி வாக்கு: 'உதானன்' என்னும் காற்றால் உந்தப் பட்டு மிடற்றளவில் நின்ற சொற்கள் 'பிராணன்' என்னும் காற்றால் நன்கு வெளிப்படுத்தப்பட்டுச் சொல்லுவோன் செவிக்கும் கேட்போன் செவிக்கும் புலனாவது வைகரி வாக்காகும். இது சொல்வோர் செவிக்குமட்டும் புலனா கின்ற அளவில் நிற்பின் 'சூக்கும வைகரி' என்றும், கேட்போர் செவிக்கும் புலனாகின் தூல வைகரி என்றும் வழங்கப் பெறும். இது பல், இதழ், நா, அண்ணம், மூக்கு என்னும் உறுப்புகளில் பட்டுச் சிதறிப் போவதால் 'வைகரி' எனப்பட்டது. வைகரி-விகாரம் உடையது. விகாரம் என்பது எழுத்துகளின் தோற்றக் கேடுகள். 'மத்திமை, வைகரி' என்ற இருவகை வாக்குகளும் மொழி வேறுபாடுகளை உடையன. இங்ஙனம் சுத்த மாயை ஒன்றே நால்வகை வாக்கு களாய் விருத்திஷ் பற்றி நிற்கும் என்பதை அறிக.

இந்த நால்வகை வாக்குகளாலே யாதோர் உயிர்க் கும் சவிகற்ப ஞானம்[54] (சிறப்புணர்வும்) உண்டாகும். இவை இல்லையேல் நிருவிகற்ப ஞானம்[55] (பொது உணர்வு) உண்டாகுமேயன்றி சவிகற்பஞானம் உண்டாக மாட்டாது. இந்தவாக்குளின்றிப் பொருள்களை உணரும் ஆற்றல் எவர்க்கேனும் என்றாவது உளதாகுமாயின் அவர் அன்றே பாசத்தின் நீங்கிய முத்தராவார். இதனால் எல்லா உயிர் கட்கும் சவிகற்ப ஞானம் உண்டாதற்கு இவ்வாக்குகள் இன்றியமையாது வேண்டப்படும்என்பது தெளிவாகும். இங்ஙனம் தெளிவாகவே இவ்வாக்குகள் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப்பட்ட ஆன்ம

54. சவிகற்ப ஞானமாவது, ஒரு பொருளைப் பற்றி அதன் கூறுபாடுகள் பலவற்றையும் உணரும் உணர்வு.

55. நிருவிகற்ப ஞானமாவது, பொருளின் கூறு பாடுகளின்றி 'இஃது ஒரு பொருள்' என்ற அளவில் உணர்வது.

வர்க்கத்தினருக்கும் முறையே ஒருவரைவிட மற்றவர்க்குத் தூல நிலையைப் பெற்றுப் பயன்தருப் என்பது புலனாதலையும் அறிக.

> மூவகை அணுக்க ளுக்கும்
> முறைமையான் விந்து ஞானம்
> மேவின தில்லை யாகில்
> விளங்கிய ஞானம் இன்றாம்

என்றும்,

> ஒவிட விந்து ஞானம்
> உதிப்பதோர் ஞானம் உண்டேல்
> சேவுயர் கொடியி னான்றன்
> சேவடி சேரலாமே.[56]

என்றும் விளக்குவர் அருணந்தி சிவாச்சாரியார்,

இதுகாறும் கூறியவற்றால் உயிர்களைப் பிணித்திருக்கும் பலவகைப் பிணிப்புகளில் வாக்குகளே நீக்குதற்கரிய பெரும் பிணிப்பாகும் என்பதும், இப்பிணிப்பு அறின், ஏனைய பிணிப்புகள் பலவும் தாமே நீங்கி வீட்டு நிலை கைவரப் பெறும் என்பதும் ஈண்டு நீ உளங்கொள்ளத்தக்கவையாகும்.

இனி, சுத்தமாயையில் தோன்றும் பொருட் பிரபிஞ்சங்களில் தோன்றுவனவற்றை விளக்குவேன். சுத்த மாயையில் தோன்றும் பொருட் பிரபஞ்சங்கள் ஐந்து சிவதத்துவங்களாகும். அவை சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்த வித்தை என்பனவாகும். இவை ஐந்தும் தன் ஐந்தொழில்களால் உலகத்தை செயற்படுத்தக் கருதும் பிறவாயாக்கைப் பெரியோனுக்கு (இறைவனுக்கு) இடமாதல்பற்றி 'சிவதத்துவம்' என்று வழங்கப் பெறுகின்றன. ஆயினும், வினைவத்தாற்

---

56. சித்தியார், 1. 26,

பிறந்து இறக்கும் உயிர்களுக்குத் தனு கரண புவன போகங்களாய் வந்து பொருந்தா என்பதை உளங்கொள்க. இனி ஐந்து தத்துவங்களையும் ஒவ்வொன்றாய் விளக்குவேன்.

சிவம்: உலகத்தைத் தொழிற்படுத்தக் கருதுங்கால் எல்லாம் வல்ல இறைவனுக்கு அவனது இச்சை, ஞானம், கிரியை (விழைவு, அறிவு, செயல்) என்னும் மூன்று சத்திகளுள் இச்சை எஞ்ஞான்றும் ஒரு நிலையில் நிற்கும். ஏனை ஞானமும் கிரியையும் தனித்தும், ஒன்றின் ஒன்று மிகுந்தும், குறைந்தும், சமமாய் நின்றும் தொழிற்படும். அவ்விடத்து இறைவன் முதற்கண் ஞான சக்தி ஒன்றானே சுத்தமாயையைப் பொதுமையில் நோக்கி 'சிவன்' எனப் பெயர் பெற்று நிற்பன். அவனால் நோக்கப்பட்ட அந் நிலையில் சுத்தமாயை முதல் விருத்தியாய் அவனுக்கு இடமாகும். ஆகவே, சிவனுக்கு இடமாதல்பற்றி, அம் முதல் விருத்தியே 'சிவம்' என்னும் பெயருடைய தத்துவமாய் நிற்கும். மேலே குறிப்பிட்ட நால்வகை வாக்குகளில் சூக்குமை வாக்காகிய நாதத்திற்குப் பற்றுக் கோடாதல் பற்றி இத்தத்துவம் 'நாதம்' என்னும் திருப்பெயரையும் பெற்று நிற்கும் என்பதையும் உளங் கொள்க.

சத்தி: ஞானசத்தியால் முதற்கண் சுத்தமாயையைப் பொதுமையில் நோக்கிய இறைவன், கிரியா சத்தி ஒன்றாலேயே சுத்தமாயையைக் காரியப்படுத்தப் பொது வகையில் சங்கற்பித்து 'சத்தி' எனப் பெயர் பெற்று நிற்பன். இந்நிலையில் சுத்தமாயை இரண்டாம் விருத்திப்பட்டு அவனுக்கு இடமாகும். சத்திக்கு இடமாதல்பற்றி இவ் விரண்டாம் விருத்தியே 'சத்தி' என்னும் திருப்பெயருடைய தத்துவமாய் நிற்கும். பைசந்தி 'விந்து' எனவும் பெயர் பெறுமாதலின், அதற்குப் பற்றுக்கோடாகவுள்ள இத் தத்துவமும் 'விந்து' எனப் பெயர் பெற்று நிற்கும். இதனை அறிக.

சதாசிவம்: ஞான சக்தியால் பொதுமையில் நோக்கி, கிரியா சக்தியால் பொதுமையில் சங்கற்பித்த இறைவன்,

பின் அவ்விரண்டினாலும் சுத்த மாயையைச் சிறப்பு வகையில் நோக்கிச் சிறப்பு வகையால் சங்கற்பித்து ஞான சக்தியும் கிரியா சக்தியும் சமமாய்த் தொழிற்பட, 'சதாசிவன்' எனத் திருநாமம் பெற்று நிற்பன். இந்நிலையில் சுத்த மாயை மூன்றாம் விருத்திப்பட்டு அவனுக்கு இடமாகும். சதாசிவனுக்கு இடமாதல்பற்றி இம்மூன்றாம் விருத்தி 'சதாசிவம்' என்னும் பெயருடைய தத்துவமாய் நிற்கும். நால்வகை வாக்குகளில் இது மத்திமை வாக்கிற்குப் பற்றுக் கோடாக அமைகின்றது. ஆகவே, இறைவன் வேதாகமங்களைச் சொல் வடிவில் தோற்றுவிக்கும் நிலை இதுவேயாகும். இத்தத்துவம் 'சாதாக்கியம்' என்றும் வழங்கப் பெறும்.

ஈசுரம்: ஞான சக்தி, கிரியா சக்தி இரண்டையும் சமமாய்த் தொழிற்படுத்திச் சுத்த மாயையைச் சிறப்பு வகையில் நோக்கியும், சிறப்பு வகையால் சங்கற்பித்தும் நின்ற இறைவன், பின் ஞான சக்தியை மிகச் செலுத்தாது கிரியா சக்தியை மிகச் செலுத்திச் சுத்த மாயையைச் சூக்குமமாகக் காரியப்படுத்தி, 'ஈசுரன்' என்று பெயர் பெற்று நிற்பன். இந்நிலையில் சுத்த மாயை நான்காம் விருத்திப்பட்டு அவனுக்கு இடமாக அமையும். ஆகவே, ஈசுரனுக்கு இடமாதல்பற்றி இந்நான்காம் விருத்தியே 'ஈசுரம்' என்னும் திருப்பெயருடைய தத்துவமாய் நிற்கும். இந்நிலையில் நிற்கும் இறைவன் 'மகேசுரன்' என்றும், இத்தத்துவம் 'மகேசுர தத்துவம்' என்றும் வழங்கப் பெறுதலும் உண்டு என்பதையும் அறிந்து தெளிக.

சுத்த வித்தை: கிரியா சக்தியை மிகச் செலுத்திச் சுத்த மாயையைச் சூக்குமமாய்க் காரியப்படச் செய்த இறைவன், பின் ஞான சக்தியை மிகச் செலுத்தி அதனைத் தூலமாகக் காரியப்படச் செய்து 'வித்தியேசுரன்' எனப் பெயர் பெற்று நிற்பன். இந்நிலையில் சுத்த மாயை ஐந்தாம் விருத்திப் பட்டு அவனுக்கு இடமாகும். ஆகவே, 'வித்தியேசுரன்' என்னும் இறைவனுக்கு இடமாதல்பற்றி அவ்வைந்தாம்

விருத்தியே 'வித்தை' என்னும் பெயருடைய தத்துவமாய் நிற்கும். அசுத்த மாயையில் தோன்றும் 'வித்தை' என்பதும் உளதாதலின், அதனினின்றும் வேறுபடுத்திக் காட்டுதற்கு இது 'சுத்த வித்தை' என்றும் பெயரிட்டு வழங்கப்படுகின்றது.

மேற்குறிப்பிட்ட ஐந்து தத்துவங்களும் சிவனால் நேரே காரியப்படுத்தப்பட்டுச் சிவனுக்கே இடமாதல் பற்றி 'சிவ தத்துவம்' என்று பெயர் பெற்றது. சுத்த மாயையின் காரியமாய்ச் சுத்தமாய் இருத்தல்பற்றி 'சுத்த தத்துவம்' என்றும் வழங்கப்படுகின்றது. இந்நிலையில் உள்ள இறைவன் 'தடத்த சிவன்' எனப் பெயர் பெறுகின்றான். இவண் குறிப்பிட்ட ஐந்து நிலைகளில் 'சிவன், சக்தி' என்னும் இரு நிலைகளில் இறைவன் அருவமாய் இருப்பான். 'சதாசிவன்' என்னும் நிலையில் அருவுருவமாய் இருப்பான். 'மகேசுவரன்' 'வித்தியேசுரன்' என்னும் நிலைகளில் உருவமாய் அமைவான். இதனால்தான் உமா மகேசுவரர், சோமாஸ்கந்தர், கலியாண சுந்தரர், பிட்சாடணர் முதலிய உருவத் திருமேனிகள் எல்லாம் 'மகேசுர மூர்த்தங்கள்' என வழங்கப்படுகின்றன என்பதை உளங்கொள்க.

இன்னும் இவ்விடத்தில் அறிந்து கொள்ள வேண்டியவை: 'சிவம், சத்தி' என்னும் அருவ நிலை ஒடுக்க நிலை ஆதலின், அவை 'இலய நிலை' (லயம்—ஒடுக்கம்) எனப் படும். சதாசிவனாகிய அருவுருவ நிலை ஒன்றும் ஐந் தொழிலில் புகும் நிலையாதலின் அது 'போக நிலை' என வழங்கப்பெறும். 'மகேசுரன், வித்தியேசுரன்' என்னும் உருவ நிலை இரண்டும் ஐந்தொழிலை நடாத்தும் நிலையாதலின், அவை 'அதிகார நிலை' எனச் சொல்லப்படும். இதனால் 'இலய சிவன்', 'போக சிவன்', 'அதிகார சிவன்' எனத் தடத்த சிவனது நிலை மூன்றாகின்றது. இது காரணமாகவே சுத்த தத்துவங்களும் 'இலய தத்துவம்', 'போக தத்துவம்', 'அதிகார தத்துவம்' என மூவகையினவா

கின்றன. இங்ஙனம் தடத்த சிவனது நிலைகளை அறிந்து தெளிக.

இவண் கூறப்பெற்ற சுத்த தத்துவங்கள் தடத்த சிவனுக்கு இடமாதலோடு அத்தத்துவங்களில் நிற்கும் ஆன்மாக்களுக்குத் தனு கரண புவன போகங்களையும் தந்து நிற்கும். ஒரு மலம் உடைய விஞ்ஞானகலர் இத் தகுதியைப் பெறுகின்றனர். இரு மலம் உடைய பிரளயா கலரிலும், மும் மலம் உடைய சகலரிலும் இருவினையொப்பு, மலபரிபாகம், சத்தி நிபாதம் கைவரப்பெற்று, இறைவனால் முன்னின்றும் படர்க்கையில் நின்றும் சிவ ஞானத்தை அருளப் பெற்று மலம் நீங்கி மல வாசனை மட்டும் உடையராய் இருப்போரும் சுத்த தத்துவத்தை அடையும் தகுதி பெறுகின்றனர்; அங்குள்ள தனு கரண புவன போகங்களையும் நுகர்கின்றனர்.

மலம் நீங்கினோர் முத்தர் ஆவர். இவர்களுள் மல வாசனையுடையோர், அதிகார மல வாசனை, போக மல வாசனை, இலய மல வாசனை உடையராயிருப்பர். அதிகார மலம், போக மலம், இலய மலம் என்பவை ஒன்றைவிட மற்றொன்று சூக்குமமானது, ஆதலின் அவை நீங்கும் பொழுது அங்ஙனமே நீங்கும். இவருள் அதிகார மலத்துள் தூல அதிகார மல வாசனையுடையோர் இறைவன் வித்தியேசுரனாய் நிற்கும் சுத்த வித்தையை யடைந்து தாமும் வித்தியேசுரர் எனப் பெயர் பெற்றுச் சுத்த மாயையின்கீழ் உள்ள அசுத்த மாயையைத் தொழிற் படுத்துவர். அவ்வித்தியேசுரர் அனந்தர், சூட்சுமர், சிவோத் தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டி என எண்மராவர் என்பது சிவாகம நூல்களின் துணிபு. இவர்க்குப் பரிவாரமாய் நிற்பவர் பலர். இவர்க் கெல்லாம் இடமாக இருப்பது இச்சுத்த வித்தியா தத்துவம் என்பதை அறிக.

இனி, சூக்கும அதிகார மல வாசனையுடையோர் இறைவன் 'மகேசுரன்' எனப் பெயர் பெற்று நிற்கும் இட

மாகிய ஈசுர தத்துவத்தை அடைந்து, மந்திர மகேசுரர் எனப் பெயர் பெற்று நின்று மகேசுர மூர்த்தி ஆணையின் வழி மந்திரம் முதலியவற்றைத் தொழிற்படுத்தி நிற்பார். இவர்க்குப் பரிவாரமாவோரும் பலர் உளர். இவர்க்கெல்லாம் இடமாவது இந்த ஈசுர தத்துவமாகும் என்பதை உளங் கொள்க.

இன்னும், போக மல வாசனை உடையராய் சதாசிவ மூர்த்தியது சாலோக்கியம், சாமீப்பியம், சாரூப்பியம், என்பவைகளைப்[57] பெற்று அணுசதாசிவர் என்னும் பெயருடன் சுத்த போகத்தை அநுபவித்திருப்போர் பலர். இவர்கட்கெல்லாம் இடம் இச்சதாசிவ தத்துவமேயாகும். இவ்வாறே, தூல இயல் மல வாசனையுடைவர் சத்தி தத்துவத்தையும், சூக்கும இயல் வாசனையுடையவர் சிவ தத்துவத்தையும் அடைந்து அங்குள்ள போகத்தை அநுபவித்திருப்பர். இந்த இரு தத்துவங்களும் இவர்கட்கு இடங்களாக அமையும். ஆகவே, சிவ தத்துவம் முதலிய ஐந்து தத்துவங்களிலும் புவனங்கள் உள்ளன என்பது தெளிவாகும். இப்புவனங்கள் முறையே பத்து, ஐந்து, ஒன்று, எட்டு, ஒன்பது எனச் சிவாகமங்கள் வரையறுத்துப் பேசும்.

மேலும், இச்சுத்த தத்துவம் கால தத்துவத்தைக் கடந்து நிற்கும்[58]. இதனால் நித்தியம் (தோற்றக் கேடுகள் இல்லாதன) என்று கூறப்படும். எனினும், காரியங்கள் யாவும் அநித்தியமாதலால் இவ்வாறு கூறுவது உபசாரமே என்று அறிக. 'சுத்த தத்துவம் சிவன்றன் சுதந்திர வடிவமாகும்' என்னும் சிவஞான சித்தியார் கூறுவதை அடிப்படையாகக் கொண்டு சுத்த மாயையை இறைவனது திருமேனி

57. இவை இன்னவை என்பதுபற்றிய விவரங்களைப் 'பயனியலில்' காண்க.

58. சுத்த தத்துவத்தாலான பரமபதத்தை வைணவம் காலம் நடையாடாததேசம் என வருணிக்கும்.

யாகக் கொள்வர் சிலர். இக்கொள்கை அந்நூலுள் 'காயமோ மாயையன்று, காண்பது சக்திதன்னால்' என்பது போன்ற பலவற்றோடு முரணுமாதலால், இறைவனுக்கு அவனது சக்தியின்றிப் பிறிதொன்று வடிவமாகாது என்பதைக் கருத்தில் இருத்துக. 'அதிட்டானம்' என்பதே 'வடிவு' என்று உபசரித்துக் கூறப்பட்டதாகக் கொள்க. ஆகவே, இத்தத்துவங்கள் இறைவனுக்கு இடமாதலன்றி வடிவம் ஆகாமை உணர்க. சிவ தத்துவம் ஐந்தும் உனக்குத் தெளிவாகியிருக்கும் எனக் கருதுகின்றேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 31

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனேயாகுக.

இக்கடிதத்தில் அசுத்த மாயையில் தோன்றும் தத்துவங்கள் பற்றி விளக்குவேன். அசுத்த மாயையை இறைவன் தானே நேர் நின்று தொழிற்படுத்தாது சுத்த வித்தையில் நிற்கும் வித்தியேசுரர் எண்மருள் முதல்வராகிய அனந்த தேவர் வழியாகவே தொழிற்படுத்துவன். ஆகவே, அசுத்த மாயைக்கு அதிகார மூர்த்தி அனந்த தேவர் என்பதை அறிக.

இன்னொரு செய்தியையும் ஈண்டு நீ உளங்கொள்ளல் வேண்டும். ஆணவம், கன்மம் இவற்றோடு கலவாதது சுத்த மாயை. இவ்விரண்டனோடும் கலந்திருப்பது அசுத்த மாயை. கலப்பற்ற சுத்த மாயை நுண் பொருளாய் உள்ளது. கலப்புற்ற அசுத்த மாயை பருப் பொருளாயுள்ளது. இறைவன் நுண்ணியோன்; அவனது சக்தியும் நுண்ணிது. ஆகவே அவன் நுண் பொருளையே நேரே

தொழிற்படுத்துவான்; பருப்பொருளை பிறிதொரு வாயி லாகவே தொழிற்படுத்துவான்.

இறைவன் தவிர ஏனை யாவரும் உயிர் வகையினர். இறைவனை நோக்க உயிர்கள் யாவும் பருப்பொருள்கள் என்பதை நீ நன்கு அறிவாய். அனந்த தேவர் ஒரு மலம் உடைய விஞ்ஞானகலர் எனப்படும் வகையினருள் மலம் நீங்கி ஞானம் பெற்றுத் தூல அதிகார மல வாசனை மாத்திரம் உடையவர். 'அதிகார மலம்' என்பது, இறை வனைப் போலத் தாமும் உலகத்திற்கு முதல்வராய் நின்று அதனை இயக்குதல் வேண்டும் என்னும் விருப்பத்திற்குக் காரணமாகிய ஆணவத்தின் ஆற்றல். அனந்த தேவர் முதலியோருக்கு அவ்விருப்பம் இருப்பினும், அவர் இறை வனை மறந்து அதிகாரத்தில் மூழ்கிக் கிடவாமையால், அவர்க்கு இம்மலம் இன்றி இதன் வாசனை மாத்திரமே உள்ளது என்பதை அறிக. இங்ஙனம் இவர் உயிர் வருக்கத்தினராய் மல வாசனை நீங்காது நிற்றலின் அசுத்த மாயையாகிய தூலப் பொருளை இறைவன் இவர் வழியாகச் செயற்படுத்துகின்றான் என்பதையும் உளங் கொள்க.

இறைவன், அனந்த தேவர்வழியாக அசுத்த மாயை யைச் செயற்படுத்தத் திருவுளம் பற்றுதலால், இவருக்கு அதற்கேற்ற அறிவும் ஆற்றலும் உள்ளன என்பது சொல் லாமலே விளங்கும். இவற்றால் இவர் பிரளயாகலர், சகலர் என்னும் இருவகை உயிர்களின் வினை வகைகளை அறிந்து அவற்றிற்கேற்ப அசுத்த மாயையைக் காரியப் படுத்துவர் என்பதையும் தெளிக.

அசுத்த மாயையினுள் தோன்றும் தத்துவங்கள் ஏழு. அவை காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்பனவாகும். இந்த ஏழையும் அனந்தர் என்னும் வித்தி யேசுரர் வாயிலாகச் செயற்படுத்துதலால் இவை வித்தியா தத்துவம் எனப் பெயர் பெறுகின்றன. 'மாயை' என்பது ஒரு

காரணம் பற்றி இறுதிக்கண் வைத்துச் சொல்லப்படினும், இதுவே முதல் தத்துவமாகும். அசுத்த மாயையின் ஒரு பகுதி அனந்ததேவரால் ஏனைய தத்துவங்கள் தோன்று தற்குத் தகுதியாகச் செய்யப்பட்டது. இது மோகினி எனவும் வழங்கப்படும். மோகினி—மோகிக்க—மயங்கச் செய்வது. இதினின்றுதான் மேற்குறிப்பிட்ட ஏழு தத்துவங் களும் தோன்றுகின்றன.

இவை தோன்றும் முறையை முதலில் விளக்குவேன். சுத்த மாயையின் காரியங்கள் 'விருத்தி' என்றும், அசுத்த மாயையின் காரியங்கள் 'பரிணாமம்' எனவும், இந்தப் பரிணாமமும் ஒரு புடைப் பரிணாமமே எனவும் முன்னர் கூறினேனல்லவா? அவற்றை ஈண்டு நினைவுகூர்க. அசுத்த மாயையின் ஒருபுடைப் பரிணாமமாகிய மாயா தத்துவத்தி னின்றும் 'காலம்' என்னும் தத்துவம் தோன்றும். மாயா தத்துவத்தினின்றும் 'நியதி' என்ற தத்துவம் தோன்றும்; இதனை அடுத்து 'கலை' என்னும் தத்துவம் தோன்றும். மாயை என்னும் தத்துவம் அனந்த தேவரின் இச்சையின் வழி ஒருபகுதி காலமாயும், மற்றொரு பகுதி நியதியாகவும், வேறொரு பகுதி கலையாகவும் பரிணமித்து நிற்கும் என்பதை அறிக. இவை தோன்றிய பின்பும் மாயை என்னும் தத்துவமும் குறையாது நிற்கும். அதன் பின்னர் கலையினின்று 'வித்தை' என்னும் தத்துவமும், வித்தையி னின்று 'அராகம்' என்னும் தத்துவமும் தோன்றும். இத் தத்துவங்கள் அனைத்தும் உயிர்கட்கு உடம்பாய் நின்று பலவகையில் துணை புரியும். இனி, இத் தத்துவங்கள் ஒவ் வொன்றையும் தனித்தனியே விளக்குவேன்.

**காலம்:** இது இறப்பு, நிகழ்வு, எதிர்வு என மூன்றாக நிற்கும். இவற்றுள் இறந்த காலம் ஏனைக் காரணங்க ளோடு இயைந்து ஆன்மாவின் ஞானம், கிரியை, இச்சை என்பவற்றை வினை, வினைப் பயன்களினின்றும் பிரிக்கும். நிகழ்காலம் அவ்வாற்றான் இம் மூன்றனையும் அவ்விரண்ட னோடும் கூட்டும். எதிர்காலம் ஞானம் முதலிய மூன்றனை

யும் வினை, வினைப் பயன்களை எதிர்நோக்கச் செய்யும். இவண் குறிப்பிட்ட மூவகைக் காலங்களும் தோன்றி நின்று அழியும் ஒவ்வொரு பொருளிலும் வேறு வேறு உள்ளன. எல்லாக் காலங்களும் உயிர்களின் வினைக்கேற்பச் செலுத்தும் இறைவனது சக்தியின் வழியே தத்தம் காரியத்தைச் செய்யும். எல்லாச் செயல்கட்கும் காலமே பற்றுக்கோடாகும். காலம் இன்றேல் செயல் இல்லை. 'காலத்தின் கோலம்' என்ற பேச்சு வழக்கினையும் சிந்திக்க.

நியதி: அவரவர் செய்த வினையை அவரவரே நுகருமாறு வரம்பு செய்து நிறுத்துவது இத் தத்துவம். அஃதாவது, ஒருவர் தாம் செய்த வினையின் பயனையன்றிப் பிறர் செய்த வினையின் பயனை நுகர வொட்டாமலும், தாம் செய்த வினையைப் பிறர் நுகராது ஒழிய வொட்டாமலும், தம் வினைகளின் பயனைத் தாமே நுகருமாறு அவற்றில் நியமித்து நிறுத்தும். இத் தத்துவம் இல்லையாயின், ஒருவர் தாம் செய்த தீவினையின் பயனைத் தாம் நுகராது ஒழிதலும் பிறர் செய்த நல்வினையின் பயனைத் தாம் நுகர்தலும் கூடுவனவாக, அவரவர் செய்த வினையின் பயனை அவரவரே நுகர்தல் என்னும் நியதி இல்லையாய்விடும். இன்னும் விளங்கக் கூறினால், இறைவனது சத்தி கன்மத்தை வரையறுக்கும் செயலுக்கு இந் நியதி தத்துவம் கருவியாய் நிற்கும் என்பதாம்.

கலை: இஃது ஆன்மாவிற்கு உள்ள ஞான, இச்சா, கிரியா சக்திகளுள் கிரியா சக்தியை விளக்கி, அதனைத் தொழிற்படச் செய்யும். 'கலித்தல்' என்பதற்கு, 'நீக்குதல்' 'எழுப்புதல்' என்னும் பொருள்கள் உளவாதல் அறிக. 'ஆணவ மலத்தைச் சிறிதே நீக்குதல்' என்பதற்கு 'ஆன்மாவின் கன்ம நிலைக்கு ஏற்ப நீக்குதல்' என்பது பொருளாம். எனவே, ஆன்மா கிரியா சக்தி விளங்கப்பெற்ற பின்னரே யாதொரு செயலையும் 'செய்வோனாந்தன்மையை' (கர்த்திருத்துவம்) எய்தி நிற்கும் என்பது தெளிவுறுதல் காண்க.

வித்தை: இது மாயையினின்றும் தோன்றாமல், கலையி னின்றே தோன்றும் என்பதை நினைவுகூர்க. ஞானசக்தி கலையினால் எழுப்பப்பெறும் கிரியா சக்தியின் வேறாகாது அதன் ஒரு கூறேயாதலின்: அதனை எழுப்பும் தத்துவமும். கிரியா சக்தியை எழுப்பும் கலையின் ஒரு கூறாய் அதனி னின்றே தோன்றும் என்பதை அறிக. இஃது ஆணவ மலத்தைச் சிறிதே நீக்கி ஆன்மாவின் விஞ்ஞான சக்தியை எழுப்பும். இன்னொரு முக்கிய செய்தியையும் ஈண்டு நீ அறிதல் வேண்டும். கிரியா சக்தியும், ஞான சக்தியும் வேறல்லவாயினும் கிரியையாய் நிற்கும் கூறு, அப் பொழுதே ஞானமாய் நில்லாது; ஞானமாய் நிற்கும் கூறு அப்பொழுதே கிரியையாய் நில்லாது; இஃது இச்சைக்கும் பொருந்தும். ஆகவே, இம்மூன்று சத்திகளும் ஒருங்கே வேண்டப்படும்பொழுது, அவற்றை வேறு வேறு கூறுக ளாக எழுப்புவதற்கு, வேறு வேறு தத்துவம் வேண்டும் என்பதை உளங் கொள்க.

அராகம்: இது வித்தையினின்று தோன்றுவது. ஆன்மா வின் கிரியா சக்தியைக் கலை என்ற தத்துவமும், ஞான சக்தியை வித்தியாதத்துவமும் முறையே முன்னும் பின்னும் எழுப்ப, எஞ்சி நின்ற இச்சா சக்தியை இறுதிக்கண் நின்று எழுப்பும் தத்துவமாகும் இது.

காலதத்துவம் கன்மத்தை அளவுபடுத்தவும், நியதி தத்துவம் கன்மத்தை நியமித்து நிறுத்தவும் முற்பட்டு நிற்கும் என்றும்; கலைதத்துவம் ஆன்மாவினது கிரியா சக்தி யையும், வித்தியாதத்துவம் ஆன்மாவினது ஞான சக்தி யையும்' அராகதத்துவம் ஆன்மாவினது இச்சா சக்தியை யும் எழுப்பும் என்றும் மேலே கூறியவற்றை நினைவிற் கொள்க. இந் நிலையில் ஆன்மா கன்மத்தை நுகரவும் ஈட்டவும் தகுதி பெற்று நிற்கும். ஆகவே, ஆன்மா கன் மத்தை நுகர்தல், ஈட்டல்கட்குக் காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் ஐந்தும் இன்றியமையாதன வாய் ஆன்மாவோடு எப்பொழுதும் நீங்காது சட்டைபோல்

ஒன்றாய் ஒட்டியே கிடக்கும். இதனால் இவ்வைந்தும் 'பஞ்ச கஞ்சுகம்' என்று வழங்கப்பெறும். கஞ்சுகம்-சட்டை.

புருடன் : இங்ஙனம் பஞ்ச கஞ்சுகத்தை எய்திய உயிர் பின் இவற்றிற்குக்கீழ் உள்ள மூலப்பிரகிருதியைப் பற்றிய வழியன்றிப் போகம் நுகர்தல் கூடாமையின் இங்ஙனம் அதனைப் பற்றும் நிலை' 'புருடதத்துவம்' என ஒரு தத்துவ மாகக் கூறப்படுகின்றது. இஃது ஒரு தனித் தத்துவம் அன்று என்பதை நினைவில் கொள்க. இது பிரகிருதியின் தொடர்பால் உண்டாவதாயினும், பிரகிருதியின் காரியங் கள் தோன்றாத முன்னர் நிற்கும் நிலையாதலின், அசுத்த மாயா தத்துவங்களுள் வைத்துக் கூறப்பெறுகின்றது. போகத்தை நுகரும் தன்மை உடைமைபற்றி 'புருடன்' என்ற பெயர் ஏற்பட்டது என்பதை அறிக. போகத்தை நுகர் வோனாந்தன்மை 'போத்திருத்துவம்' என வழங்கப்பெறும். பிரகிருதியின் தொடர்பு சகலர்க்கன்றிப் பிரளயாகலர்க்கு இன்மையால், புருடதத்துவமாய் நிற்றல் சகலர்க்கன்றிப் பிரளயாகலர்க்கு இல்லை என்பதை அறிந்து தெளிக. காலம் முதலிய ஐந்துடன் 'புருடன்' என்பதைக் கூட்ட அசுத்தமாயா தத்துவம் ஆறாகும்.

மாயை: முதற்கண் குறிப்பிட்ட மாயை என்ற தத்துவம் ஏனையவை போல காரியப் படாமையால் அதனை இறுதிக் கண் வைத்துக் கூறுவது மரபு. இதனுடன் சேர்ந்து அசுத்தமாயா தத்துவங்கள் ஏழாகின்றன.

காலம் முதலிய வித்தியா தத்துவங்கள் ஏழும், மூலப் பிரகிருதியும் உயிர்கட்கு அதிசூக்கும் உடம்பாய் நின்று உதவும். 'அதிசூக்கும் சரீரம்', பரசரீரம்' ஒன்றையே குறிக் கும் சொற்களாகும். பரசரீரத்துள் மாயாதத்துவம் 'காரண சரீரம்' என்று வழங்கப்பெறும். காலம் முதலிய ஐந்தும் 'கஞ்சுக சரீரம்' என்றும், மூலப்பிரகிருதி 'குணசரீரம்' என்றும் பெயர் பெறுகின்றன. இவற்றுள் குணசரீரம் சகலர்க்கன்றிப் பிரளயாகலர்க்கு இல்லை. எனவே

பிரளயாகலர், காரணசரீரம், கஞ்சுகசரீரம் என்னும் இரண்டேயாகிய பரசரீரத்தானே அசுத்தமாயாதத்துவ புவனங்களில் உள்ள போகங்களை நுகர்வர். ஆகவே, அசுத்தமாயாதத்துவங்களாகிய வித்தியாதத்துவங்களே பிரளயாகலர்க்கு தனுகரண புவனபோகங்களைத் தருகின்றன என்பதை அறிக.

வித்தியா தத்துவம் ஏழனுள் காலதத்துவத்தில்இரண்டு புவனங்களும், நியதி தத்துவத்தில் ஐந்து புவனங்களும், கலாதத்துவத்தில் இரண்டு புவனங்களும், வித்தியாதத்துவத்தில் இரண்டு புவனங்களும், அராக தத்துவத்தில் ஐந்து புவனங்களும், புருடதத்துவத்தில் ஆறு புவனங்களும் மாயாதத்துவத்தில் ஐந்து புவனங்களும் உள்ளன என்று சைவாகமங்கள் கூறும். இங்குப் புருடதத்துவம் என்பது அதற்குக் காரணமான மூலப் பிரகிருதியை.

மேற்கூறிய வித்தியாதத்துவங்கள் ஏழனையும் தெளிவாக உணர்ந்திருப்பாய் என்று கருதுகிறேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

# 32

அன்புநிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலன் விளைவதாகுக.

இக்கடிதம் தொடங்கி ஒன்றிரண்டு கடிதங்களில் 'ஆன்மதத்துவம்' பற்றி விளக்குவேன். அராக தத்துவம் தோன்றியபின்னர், முன் கூறிய 'கலை' என்ற தத்துவத்தினின்றும் நேரே 'மூலப்பிரகிருதி' தோன்றும். இதுவே ஆன்மதத்துவங்கள் அனைத்திற்கும் மூலகாரணமாகும். இதனால் இதுவும் ஒரு மாயையாகச் சொல்லப்படுகின்றது. எனினும், இது காரணமாய் நில்லாது, 'கலை' என்னும்

தத்துவத்தின் காரியமாய் நிற்றலின், காரணமாயைகள் சுத்தமாயை அசுத்தமாயை என்னும் இரண்டுமேயாகும். மூலப்பிரகிருதி 'மான்'[59] என்ற பெயராலும் வழங்கப் பெறும்.

மூலப்பிரகிருதியை இறைவன் அனந்த தேவர் ஸ்ரீ கண்டருத்திரர் வாயிலாகத் தொழிற்படுத்துவன். ஸ்ரீகண்டருத்திரர் சகலவர்க்கத்தினராகிய ஆன்மாக்களுக்குத் தலைவர். இதனால் அவரால் தோற்றி ஒடுக்கப் படும் தத்துவங்கள் 'ஆன்மதத்துவம்' எனப்பெயர் பெற்றன என்பதை அறிக.

ஆன்மதத்துவம் இருபத்து நான்கு. அவை: அந்தக் கரகணம் நான்கு. ஞானேந்திரியங்கள் ஐந்து. கன்மேந்திரியங்கள் ஐந்து. தந்மாத்திரிரைகள் ஐந்து. பூதங்கள் ஐந்து. இவையனைத்திற்கும் மூலகாரணமாகிய மூலப்பிரகிருதி சாத்துவிகம் இராசதம் தாமதம் என்னும்முக்குணங்களையும் உள்ளடக்கி அவற்றிற்கு வித்தாய் நிற்பது. எனவே, முக்குணங்களும் வெளிப் படாது, சூக்குமமாய் நிற்கும் நிலையே 'மூலப் பிரகிருதி' எனப்படுகின்றது. முக்குணங்களும் வெளிப்படாது நிற்றல்பற்றி மூலப்பிரகிருதி 'அவ்வியக்தம்' என்றும் வழங்கப்படும். வியக்தம்—வெளிப்பாடு. அவ்வியக்தம்—வெளிப்பாடின்மை. இஃது இங்ஙனம் வெளிப்படாது காரண நிலையில் நிற்றலால் பெரும்பாலும் இதனை ஒரு தத்துவமாகக் கூறுதல் இல்லை என்பதை அறிக.

**சித்தம்** : மேற்கூறியவாறு அவ்வியக்தமாய் நின்ற மூல பிரகிருதியின் ஒரு பகுதியில் வெளிப்படாது சூக்குமமாய் நின்ற முக்குணங்கள் தூலமாய் வெளிப்பட்டுத் தம்முட் சமமாய் நிற்கும் நிலை ஒன்றுண்டு. இந்நிலையே 'குணதத்துவம்' என்று வழங்கப்படுகின்றது. இக்குணதத்துவமே, ஆன்மா ஒன்றைச் சிந்திப்பதற்குக் கருவியாய் 'சித்தம்'எனப்

59. இது 'மகத்' என்னும் வடசொல்லின் திரிபு.

படும் அந்தக் கரணமாய் நிற்கும். அந்தக்கரணம் அகக் கருவி. நன்கு தெரிந்த ஒன்றை மீளமீளச் சிந்திப்பதனா லேயே இன்பமும் துன்பமும் உண்டாகின்றன. எனவே, ஆன்மாவின் தன் வேதனைக் காட்சிக்கு இச்சித்தமே கருவி யாதல் தெளிவாகும்.

புத்தி: குணதத்துவத்தின் ஒரு கூற்றில் சாத்விக குணம் மிக உடையதாய்ப் புத்தி என்னும் அந்தக்கரணம் பரிண மித்துத் தோன்றும், இஃது ஆன்மா தான் ஐயுற்று நின்ற ஒன்றை இன்னதே எனத் திட்டமாகக் துணிதற்குக் கருவி யாய் நிற்கும். புத்திதத்துவம் இல்லையேல் ஒரு பொருளை 'இன்னது' எனத் திட்டமாக உணரும் உணர்வு உண்டாகாது. இந்த உணர்வு 'சவிகற்ப ஞானம்'[60] எனப் பெயர் பெறும். சவிகற்பமாக உணரும் சிறப்புணர்வு புத்தி தத்துவத்தால் உண்டாவதால், அதுவே பின், துணியப்பட்ட அந்தப் பொருள் வடிவாய்த் திரிந்து (பரிணமித்து) நிற்கும். இதனால் உயிர்—ஆன்மா—நேரேபற்றி அநுபவிப்பது புத்தி தத்துவத்தையே யன்றிப் புறப் பொருளையன்று. எனவே புறத்தில் உள்ள பொருள்கள் கண் முதலிய பொறிகள் வாயிலாகவும், பின் மனத்தின் வழியாகவும் புத்தியைத் திரிவுபடுத்தி நிற்பனவேயன்றி' உயிரால் நேரே அநுபவிக்கப் படுதல் இல்லை என்பதை உணர்க.

காரணத்தில் உள்ளது காரியத்திலும் உளதாகும் என்பதை நீ அறிவாய். எனவே, குணதத்துவத்தினின்றும் தோன்றிய புத்தி தத்துவத்திலும்முக்குணங்கள் உளவாகும். இதனால் அவற்றின் காரியமாகிய கொள்கைகள் பலவும் இப்புத்தியின்கண்ணே தோன்றும். அவை 'பாவகம்' எனப் படும். புத்தியில் தோன்றும் பாவகங்கள் அளவிறந்தன வாயினும அவற்றை எட்டாகத் தொகுத்துக் கூறுவர் சித்தாந்திகள். இவற்றுள் தன்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம் என்னும் நான்கும் நல்லவை யாகும். இவற்றின்

---

60 பெயர் முதலிய பாகுபாடுகளோடு கூடிய ஞானம்.

மறுதலையாகிய அதன்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அநைசுவரியம் என்னும் நான்கும் தீயவையாகும். தன்மம் முதலிய நல்லவை நான்கும் ஒன்றன்பின் ஒன்றாகக் காரண காரிய முறையில் தோன்றி ஐசுவரியம் வந்தவுடன், அதன்மம் முதலிய தீயவை நான்கும் ஒன்றன்பின் ஒன்றாக அவ்வாறு தோன்றி அநைசுவரியம் வந்து நிற்கும். அநைசுவரியம வந்தபின் முன்போலவே 'தன்மம்' என்னும் நல்லது தோன்றும். இப்படியே இப்புத்தி தத்துவம் ஒரு சக்கரம் போல் சுழல, இப்பாவகங்கள் அச்சக்கரத்திலுள்ள ஆரைக் கால்கள் போல் விரைவாக மாறி மாறி வருதலின் உயிர் இப்பாவகத்தில் அழுந்தி இன்பம், துன்பம், மயக்கம் (சுகம், துக்கம், மோகம்) என்பவற்றை அடையும்.

'அளவிலாப் பாவகத்தால் அழுக்குண்டு.'[61]

என்ற மணிவாசகப் பெருமாளின் வாக்கு ஈண்டு நினைக்கத் தக்கது. இப்பாவகங்களில் நல்லவை நான்கும் சாத்துவிக குணத்தால் உளவாவனவாகும். அவைராக்கியம் ஒன்றே இராசத குணத்தால் உளதாவது. ஏனைய மூன்றும் தாமத குணத்தால் உளவாவன. சாத்துவிகத்தால் இன்பமும், இராசதத்தால் துன்பமும் தாமதத்தால் அவ்விரண்டுமின்றியிருக்கும் மயக்கமும் உள்ளனவாம் என்பதை அறிக.

அகங்காரம்: புத்தி தத்துவத்தினின்றும் இராசதகுணம் மிக்குடைய அகங்காரம் என்னும் தத்துவம் தோன்றும். இஃது ஆன்மா 'யான் இதனைச் செய்வேன்' என்று அகங்கரித்து எழுச்சி யுறுதற்குக் கருவியாகும். எனவே, இக்கருவி இல்லையாயின், உயிர் எந்த ஒரு செயலிலும் செல்லுதற்கு எழுச்சியற்றதாகிவிடும். இது சாத்துவிக அகங்காரம், இராசத அகங்காரம், தாமத அகங்காரம் என மூன்றாகி நிற்கும். இவற்றுள் சாத்துவிக அகங்காரம் தைசதாகங்காரம் என்றும், இராசத அகங்காரம், வைகாரிகாகங்காரம் என்றும்,

61. திருவா. கண்டபத்து-8

தாமத அகங்காரம் பூதாதி அகங்காரம் என்றும் பெயர்களைப் பெறும்.

மனம்: இந்த அந்தக்கரணம் தைசதாகங்காரத்தின்று முதற்கண் தோன்றும். இது புறக் கருவிகளாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளால் கவரப் பெற்ற ஊறு, சுவை, உருவம், நாற்றம், ஓசை[62] என்னும் புலன்களை[63] ஆன்மா பற்றுதற்கும், பின் புத்தி தத்துவத்தால் அறுதியிடப்பெற்றவற்றை நினைவில் வைத்துக் கொள்ளுதற்கும் உரிய கருவியாகும். முன்பு புத்தி தத்துவத்தால் அறுதியிட்டு அறியப்பட்ட பொருளின் பெயர், சாதி, குணம், கன்மம், உடைமை என்பவற்றின் நினைவு மனத்தின்கண் தங்கிக் கிடப்பதால், அப் பொருளேயாயினும், அதனோடு ஒருங்கொத்த அவ்வினப் பொருளாயினும் மீளவும் புறக்கருவிகட்குப் புலனாகும்பொழுது 'இஃது இன்னபொருள் போலும்' எனப் பொதுவாக நினைத்தும், பின், 'இஃது இப்பொருள்தானோ, அன்றோ?' என ஐயுற்றும் நிற்கும். 'இஃது இன்ன பொருள்போலும்' எனப் பொதுவாக நினைத்தல் 'சங்கற்பம்' என்றும், 'அஃது ஆமோ, அன்றோ?' எனக் கவர்த்து நிற்றல் 'விற்கபம்' என்றும் வழங்கப்பெறும். இவற்றுள் பின்னதே 'ஐயம்' என்றாலும், முன்னதும் ஐயத்தின்பாற் பட்டதேயாகும். ஆகவே, சங்கற்ப விகற்பங்களால் ஐயுற்று நிற்கும் கருவி மனமே என்பதும், மனம் இங்ஙனம் பற்றி நின்று ஐயுற்ற பொருளைப் பின்னர் புத்தி இன்னதெனத் துணியும் என்றும் ஈண்டு நீ அறிந்து தெளிய வேண்டியவை.

இன்னோர் உண்மையையும் ஈண்டு நீ உளங் கொள்ளல் வேண்டும். முன்னர் அறியப்பட்ட பொருளே பின்னர்க்

62. வடமொழியில் பரிசம், ரசம், ரூபம், கந்தம், சத்தம் எனப் படும்.
63. புலன்களை வடமொழியில் 'விஷயங்கள்' என்று வழங்குவர்.

காண நேரிடுங்கால், முன்னர் ஐயம் தோன்றிப் பின்னர்த் துணிவு பிறக்கும். அவ்வாறன்றிப் புதியதாக ஒரு பொருளைக் காண நேரிடின், 'இஃது யாது?' என்ற அவாய் நிலையன்றி ஐயமும், துணிவும் தோன்றா என்பதை நீ அறிவாய். அப்பொழுது அப்பொருளை அறிந்தான் ஒருவன் 'இஃது இன்னது' என அறிவித்தவழி துணிவு பிறக்கும். சில சமயம் 'புத்தி தத்துவம்' ஒரு பொருளை மற்றொரு பொருளாக மாறித் துணிதலும் உண்டு. இது 'துணிவு' அன்று; திரிவு (விபரீதம்) என்பது அதன் பெயர். புத்தி நன்மை, தீமை என்ற இரண்டற்கும் பற்றுக்கோடாதலின் திரிபு அதன் கண் குற்றமாய் நின்று, பின்னர் மெய்ம்மையால் போக்கப்படும் என்பதை அறிக. அந்தக்கரணங்களை 'மனம், புத்தி, சித்தம் அகங்காரம்', என்று இவ்வாறு கூறினாலும், அவற்றின் தோற்றம் 'சித்தம், புத்தி, அகங்காரம், மனம்' என்னும் முறையில்தான் என்பதை மேற்கண்ட விளக்கத்தால் தெளியலாம்.

ஞானேந்திரியங்கள் ஐந்து: தைசதாகங்காரத்தினின்றும், மனம் முதற்கண் தோன்றும் என்றேன். இதனை அடுத்து ஞானேந்திரியங்கள் ஐந்தும் தோன்றும். இவை முறையே ஒன்றன்பின் ஒன்றாகச் செவி, தோல் (மெய்), கண், நாக்கு (வாய்), மூக்கு என்பவையாகும்.[64] இவை முறையே புறத்தே உள்ள ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் ஐம்புலன்களையும் பொதுவாக ஆன்மா அறிவதற்குக் கருவியாகும். ஒளி என்பதும் உரு என்பதும் ஒன்றே. உரு-நிறம். வல்லோசை, மெல்லோசை என்றும் வன்மை, மென்மை என்றும், செம்மை, கருமை, வெண்மை என்றும், கைப்பு, இனிப்பு என்றும், நறுமணம், தீ மணம் என்றும்—இவ்வாறு பகுத்தறியாமல், 'இஃது ஓர் ஓசை, இஃது ஓர் ஊறு, இஃது

64. இவை ஐந்தும் வடமொழியில் சுரோத்திரம், துவக்கு சட்சு, சிங்நுவை, ஆச்ராணம் என்று கூறப்பெறும்.

ஓர் ஒளி, இஃது ஒரு சுவை, இஃது ஒரு நாற்றம்' என்றாற் போலப் பொதுமையில் அறிவதே பொதுவாக அறிதலாகும். இவ்வாறு அறியும் அறிவு 'நிருவிகற்பம்' 'ஞானம்' என்று வழங்கப்பெறும். நிருவிகற்பம்—வேறுபாடு இன்மை. செவி முதலிய பொறிகள் புறப் பொருள்களைப் பொதுவாக அறியுமேயின்றிச் சிறப்பாக அறியமாட்டா. மனம் முதலிய அந்தக்கரணங்கள் செயற்பட்ட பின்னர்தான் சிறப்பாக அறிதல் நிகழும். ஓசை முதலிய ஐந்தும்[65] செவி முதலிய பொறிகட்குப் புலனாகுமிடத்து புலன் எனப் படும். புலன்களை 'விடயம்—விஷயம்' என்பர் வடநூலார். செவி முதலிய ஐந்தும் அறிதற் கருவியாதல்பற்றி ஞானேந் திரியம் என்று வழங்கப்பெறுகின்றன. இவை தமிழில் மெய், வாய், கண், செவி, மூக்கு என்னும் முறையிலும், இவற்றின் செயல்கள் 'கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து உற்று அறிதல்'[66] என்னும் முறையிலும் ஏற்றபெற்றியால் கூறப்பெறினும், இவற்றின் தோற்றமுறை மேற்கூறிய வாறேயாகும். செவி முதலியன தத்துவத்தின் பெயராய் நிற்குமிடத்தில் புறத்தில் காணப்பெறும் உறுப்பைக் குறி யாமல், அவ்விடங்களிலிருந்து கேட்டல் முதலியவற்றைச் செய்யும் ஆற்றல்களையே குறிக்கும் என்பதை உணர்ந்து கொள்க.

**கன்மேந்திரியங்கள் ஐந்து:** ஞானேந்திரியங்கள் தைசதா கங்காரத்தினின்று தோன்றியபின் வைகாரிகாகங்காரத்தி னின்றும் வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்னும் கன்மேந்திரியங்கள் ஐந்தும் தோன்றும். தமிழில் இவை மொழி, கால், கை, எருவாய், கருவாய் என்று வழங்கப்படும். இவையும் தத்துவங்களாகப் பேசப்படுமிடத்து நா முதலிய இடங்களில் நின்று பேசுதல் முதலிய செயல்களைச் செய்யும்

---

65. இவை முறையே வடமொழியில் சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என வழங்கப்பெறும்.

66. குறள்—1101

ஆற்றலையே குறிக்கும் என்பதை உளங்கொள்க. முறையே ஒவ்வொன்றாகத் தோன்றும் வாக்கு முதலிய ஐந்தும் மொழிதல், புடை பெயர்தல், இடுதல்-ஏற்றல், கழிப்பன கழிதல், இனப் பெருக்கம் செய்தல் என்னும் தொழில்களைச் செய்யும். இவ்வைந்தும் முறையே வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் என்று வடமொழியில் கூறப்பெறும். எனவே, வசனம் முதலிய ஐந்தும் கன்மேந்திரியங்களின் விடயம்-புலன் என்பது தெளிவாகும். வாக்கு முதலிய ஐந்தும் தொழில் செய்வதற்குக் கருவியாதலின், கன்மேந் திரியம் என வழங்கப்பெறுகின்றன என்பதை உளங் கொள்க.

தந் மாத்திரைகள் ஐந்து: தாமதாகங்காரமாகிய பூதாதி யகங்காரத்தினின்றும் சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் தந்மாத்திரைகள் ஐந்தும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றும். பூதங்கட்கு முதற் காரணமாய் நிற்றல் பற்றியே இவ்வகங்காரம் 'பூதாதியகங்காரம்' எனப் பெயர் பெற்றது என்பதை அறிக. பூதங்கள் ஐந்து என்பதும், அவை பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பதும், தமிழில் அவை நிலம், நீர், தீ,வளி, விசும்பு என்று வழங்கப் படும் என்பதும் நீ அறிந்தவையே. இங்குக் கூறிய முறை ஒடுக்க முறைபற்றியதாகும். தோற்றமுறையில் அவை ஆகாயம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி என்னும் முறையில் அமையும். பூதங்கள் ஐந்தும், அவற்றின் செயல்களும் ஒரு வாற்றாற் புலனாவன. ஆதலின் அவை 'தூலப்பொருள்கள்' என்பது தெளிவு. சூக்குமமாகிய காரணத்தினின்றும் தூல மாகிய காரியம் தோன்றுங்கால், நேரே தூலமாய்த் தோன்றாது. முதற்கண் ஒருவாற்றாற் சூக்குமமும், ஒரு வாற்றால் தூலமுமாய நிலையில் தோன்றி அதன் பின்னரே தூலமாய்த் தோன்றுவதாகும். தூலமாகிய ஆகாயம் முதலிய பூதங்கள் ஐந்தும் பூதாதியகங்காரத்தி னின்றும் நேரே அங்ஙனம் தோன்றாமல் முதற்கண் தந் மாத்திரை வடிவில் தோன்றிய பின்னரே பூதவடிவில்

தோன்றுவனவாகும். பூதங்களின் சூக்கும நிலையே தந் மாத்திரையாதல் பற்றி அவை 'சூக்கும பூதம்' எனவும் வழங்கும். அதனால் பூதங்களைத் தூல பூதம் எனவும், மகா பூதம் எனவும் வழங்குவர். எனினும் பூதம் என்பது தூல நிலைக்கே உரிய பெயராதல் அறிக. சூக்கும பூதங்கள் தந் மாத்திரை என்றே கூறப்பெறும்.

இவ்விடத்தில் ஒன்றை நீ நுணுகி உணர்தல் வேண்டும். பூதங்கட்கு முதற் காரணமாய்ச் சூக்கும நிலையில் நிற்கும் இத் தந்மாத்திரைகளின் பெயரே, பூதங்களின் குணமாய்ச் செவி முதலிய ஞானேந்திரியங்கட்குப் புலனாகும் ஐம் புலன்கள் (அல்லது விடயங்கட்குப்) பெயராய் நிற்கும். அதனால் இவ் விரண்டையுமே ஒன்றே என மயங்காது வேறு வேறு என்று உணர்ந்து தெளிக. சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆகிய தந் மாத்திரைகள் ஐந்தும் முறையே ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் எனத் தமிழில் வழங்கப் படும் என்பதையும் அறிக.

இனி, 'தந்மாத்திரை' என்பதன் பொருளையும் அறிந்து கொள்ளல் மிகவும் இன்றியமையாதது. இதன் பொருள் 'அதனளவாய் நிற்றல்' என்பது. அதாவது வேறொன் றோடும் கூடாது 'தனித்து நிற்றல்' என்பதாகும். ஒரு பொருள் வேறு எப்பொருளோடும், எவ்வாற்றானும் தொடர்பு படாது தனித்து நிற்றலைக் 'கேவலம்' என்றும். அவ்வாறின்றி எவ்வாற்றாலேனும் பிறவற்றோடு தொடர் புற்று நிற்றலை 'விசிட்டம்' என்றும் கூறுவர் வடநூலார். இவை முறையே 'தனி நிலை' 'தொகை நிலை' என்று தமிழில் வழங்கப்பெறும். இவற்றுள்ள 'தனி நிலை அல்லது கேவலம்' என்பதே 'தந் மாத்திரை' என்பதன் பொரு ளாகும். இக் காரணப் பெயர் வேறு சிலவற்றிற்கும் பொருந்துமாயினும், காரண இடுகுறிப் பெயராய் சூக்குமப் பூதங்களையே குறிக்கின்றது என்பதையும் அறிக. தூல பூதங்கள்' 'விசிட்டமாய்' நிற்றலின், சூக்கும பூதங்கள் 'கேவலமாய்' நிற்கும் என்பதையும் உணர்ந்து தெளிக.

இறுதியில் கூறிய கருத்தை மேலும் தெளிவாக்குவேன். ஆகாயம் 'சத்தம்' என்னும் ஒரு குணமே உடையது. வாயு சத்தத்தோடு 'பரிசம்' என்னும் குணத்தையும் உடையது. தேயு அவ்விரண்டனோடு 'உருவம்' என்பதுடன் மூன்று குணத்தையுடையது. அப்பு இம் மூன்றனோடு 'இரதம்' என்ற குணமும் சேர்ந்து நான்கு குணத்தை யுடையது. பிருதிவி 'சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம்' என்னும் ஐந்து குணங்களையும் உடையது. இவற்றுள் ஒன்றின் ஒன்று ஏற்றமாக உடைய குணம், அவ் வப்பூதங்கட்குச் சிறப்புக் குணமாகும். இதை விளக்கமாகக் கூறினால், வாயுவுக்குப் பரிசமும், தேயுவுக்கு உருவமும், அப்புவுக்கு இரதமும், பிருதிவிக்குக் கந்தமும் சிறப்புக் குணங்களாகும். இச் சிறப்புக் குணங்கள் தூல பூதங்களின் பலவகை வேறு பாட்டுடன் காணப்படும். அவ் வேறுபாடுகளை யுடையதாய் இருத்தலே 'விசிட்டம்' என்றும், அவ்வாறின்றிப் பொதுமை யில் நிற்பதே 'கேவலம்' என்றும் அறிக. இதனை மேலும் தெளிவாக்குவேன். ஆகாயத்தின் குணமாகிய சத்தம் வல்லோசை, மெல்லோசை, இடையோசை எனப் பலவாறு காணப்படும். ஆகவே, தனது சத்த குணம் வன்மை, மென்மை, இடைமை என்பவற்றோடு கூடிப் புலனாகி நிற்றலே விசிட்டமாய் நிற்றலாகும். அதனால் அவ் வேறுபாடின்றி 'ஓசை' எனப் பொதுமையில் நிற்பதே கேவலம். இந் நிலையே 'சத்த தந் மாத்திரை' என்பது என்று தெளிக.

இவ்வாறே வாயுவின் சிறப்புக் குணமாகிய பரிசம் வாயுவினிடத்தில் தட்பம், வெப்பம் முதலாகப் பல்வேறு வகையாயும் தேயுவின் குணமாகிய உருவம் தேயுவினிடத் தில் செம்மை, கருமை, வெண்மை, பசுமை, பொன்மை முதலாகப் பல்வேறு வகையாயும், அப்புவின் சிறப்புக் குணமாகிய இரதம் அப்புவினிடத்தில் இனிப்பு, கசப்பு, புளிப்பு முதலாகப் பல்வேறு வகையாயும், பிருதிவியின் சிறப்புக் குணமாகிய கந்தம் பிருதிவியினிடத்தில் சுகந்தம்,

தூரக்கந்தம் என இருவேறு வகைப்பட்டுப் பலவாயும் காணப்படும். இவை இங்ஙனம் வேறுபட்டு வெளிப்பட நிற்கும் நிலையே அவ்வப் பூதங்கள் விசிட்டமாய் நிற்கும் நிலையாகும். அவ்வாறின்றிப் பொதுமையில் பரிசம், உருவம், இரதம், கந்தம் என்னும் அளவாய் நிற்றலே 'தந்மாத்திரை' என உணர்ந்து தெளிக.

இன்னோர் உண்மையையும் ஈண்டு நீ அறிதல் வேண்டும். 'சத்த தந்மாத்திரை. பரிச தந்மாத்திரை' உருவ தந்மாத்திரை' எனவழங்குதலபற்றி அத்தந்மாத்திரை ஒவ்வொன்றும் சத்தம் முதலிய ஒவ்வொன்றாகவே நிற்கும் போலும் எனமயங்குதல் கூடாது. ஏனெனில் சத்தம் ஒழிந்த ஏனைய நான்கு தந்மாத்திரைகளும் பூதங்களில் சொல்லியதுபோல அமைந்து, அதனதன் சிறப்புக் குணம்பற்றிப் பரிச தந்மாத்திரை, உருவ தந்மாத்திரை, இரததந்மாத்திரை, கந்ததந்மாத்திரை எனவழங்கப் படுகின்றனவாதலின். எனவே, பூதாதியகங்காரத்தினின்று தந்மாத்திரைகள் தோன்றுங்கால் முதற்கண் சத்தம் ஒன்றேயாய்ச் சத்த தந்மாத்திரை தோன்றும். அதன்பின், சத்தத்தோடு கூடப் பரிச தந்மாத்திரை தோன்றும். அடுத்து, உருவ தந்மாத்திரையும், அதனையடுத்து இரததந்மத்திரையும், அதன்பின் கந்ததந்மாத்திரையும் முன்பின் தோன்றிய குணங்களோடு கூடியே தோன்றும். ஆகவே, இம்முறையில் நோக்கும்பொழுது சத்த தந்மாத்திரை ஒன்றே 'கேவலம்' என்றும் ஏனைய நான்கும் 'விசிட்டம்' என்றும் தெளிவாகின்றதன்றோ?

இறுதியாகப் பிறிதோர் உண்மையையும் கூறி இக்கடிதத்தை நிறைவு செய்கின்றேன். 'காரியத்தில் உள்ளது காரணத்திலும் உளதாகும்' என்பதை நீ நன்கு அறிவாய் எனவே, பூதங்களில் பல வகை வேறுபாட்டோடு தூலமாய்க் காணப்படும் குணங்கள் அப்பூதங்கட்குக் காரணமாகிய தந்மாத்திரையிலும் வேறுபாடின்றிச் சூக்குமாய்க் கிடத்தல் வேண்டும். அவ்வாறில்லையேல் ஒரேவொரு

குணமேயுடையவற்றினின்று இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்னும் குணங்களையுடையவை தோன்றுதல் இல்லாது, இவற்றிற்குத் 'தந்மாத்திரை' என்னும் பெயர் பொருந்துமாற்றை முன்னரே விளக்கியுள்ளேன், ஆகவே, 'சத்தம் ஒழிந்த ஏனைய தந்மாத்திரைகள் நான்கும் கேவலமாகாது, விசிட்டமேயாம்' என்பதை உணர்ந்து தெளிக. ஆகாயம் சத்த குணம் ஒன்றே யுடைமையின், அது கேவலமாய் நிற்கும் சத்த தந்மாத்திரையி னின்றும் தோன்றுதல் கூடும் என்பதையும் அறிக.

இக் கூறியவற்றால் தந்மாத்திரைக்கும் பூதங்கட்கும் வேற்றுமை முளையும் மரமும் போலச் சூக்குமத் தூலமும் ஆம் அவ்வளவே; வேறில்லை. எனவே, பூதாதியகங்காரத் தினின்றும் தந்மாத்திரைகள் மேற்கூறியவாறு தோன்றிய பின், முதற்கண் சத்ததந்மாத்திரையினின்றும் ஆகாயமும், பின்னர்ப் பரிச தந்மாத்திரையினின்றும் வாயுவும் அதன்பின் உருவ தந்மாத்திரையினின்றும் தேயுவும், அதன்பின் இரததந்மாத்திரையினின்றும் அப்புவும், அதன் பின் கந்த தந்மாத்திரையினின்றும் பிருதிவியும் தோன்றும் என்பதைத் தெரிந்து கொள்க.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 33

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன், நலனுடன் வாழ்க.

இக்கடிதத்தில் பூதங்கள்பற்றிய செய்திகளனைத்தையும் தொகுத்து விளக்குவேன்:

பூதங்கள் ஐந்து : தந்மாத்திரை ஐந்தனுள் ஒவ்வொன்றினின்றும் ஒவ்வொரு பூதம் தோன்றும். அதாவது சத்ததந்

மாத்திரையினின்றும் ஆகாயமும். பரிச தந்மாத்திரையினின்றும் வாயுவும், ரூப தந்மாத்திரையினின்றும் தேயுவும் (நெருப்பும்), இரத தந்மாத்திரையினின்றும் அப்புவும் (நீரும்), கந்ததன் மாத்திரையினின்றும் பிருதிவியும் (நிலமும்) முறையே தோன்றும். இவை தூலமாதலின், தூல பூதங்கள், மகா பூதங்கள் என்று வழங்கப்பெறும். இப்பூதங்கள் தம் தம் முதற்காரணமாகிய தந்மாத்திரைகளின் சத்தம் முதலிய குணங்களைப் பெற்றிருத்தலின், அவற்றை அறியும் செவி முதலிய ஞானேந்திரியங்கட்கு நிலைக்களமாய் நின்று அவற்றிற்கு வலிமையைத் தந்து நிற்கும். அதுவன்றி வாக்கு முதலிய கன்மேந்திரியங்கட்கும் நிலைக்களமாய்ப் பேசுதல் முதலியவற்றிற்குத் துணை புரிந்து நிற்கும். ஆகாயம் முதலிய பூதங்கள் ஐந்தும் சத்தம் முதலிய குணங்கள் ஐந்தனையும் ஒன்று முதல் ஐந்து ஈறாக ஒவ்வொரு குணத்தை ஏற்றமாகப் பெற்று நிற்கும். இதனை,

> பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
> நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி[67].

என்பன முதலாக வரும் திருமொழிகளாலும் உணர்ந்து கொள்ளலாம்.

காரியத்தின் தன்மையே காரணத்திலும் இருக்குமாதலால் இவற்றிற்கு முதற்காரணமாகிய தந்மாத்திரைகளும் இத்தன்மையனவேயாகும். அதாவது சத்த தந்மாத்திரையொன்றே தனிப் பொருளாய் நிற்க, ஏனைய தந்மாத்திரைகள் நான்கும் முன்முன் சொல்லியவற்றோடு தாம் சிறப்பாகக் கூடி இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்னும் குணங்களையுடையனவாய் பரிச தந்மாத்திரை, ரூப தந்மாத்திரை முதலாகப் பெயர் பெற்று நிற்கும் என்பதை உணர்ந்து தெளிக.

---

67. திருவா. போற்றித் திருவகவல்-அடி (137-138)

தத்துவங்கள் முப்பத்றாறும் தோன்றுங்காலத்து இம் முறையே தோன்றுதலின், ஒடுங்குங் காலத்திலும் இம் முறையே ஒடுங்குவனவாகும் என்பதை அறிக. இத்தோற்ற ஒடுக்கங்களை இறைவன் நேரேயும், பிறர்வாயிலாகவும் நின்று செய்விக்க நிகழ்வனவன்றித் தாமே நிகழமாட்டா என்பதை நினைவில் இருத்துக. 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்று பொதுமக்கள் வாக்கில் நிலவும் பழமொழியின் உண்மையும் இத்தத்துவத்தை உணர்த்துவதை ஓர்ந்து உளங்கொள்க.

தத்துவம் முப்பத்தாறனுள் சுத்தமாயையின் காரியமாகிய சிவ தத்துவம் ஐந்தும் இறைவனுக்கு இடமாகி நின்று தமக்குக் கீழ்உள்ள தத்துவங்களை இயக்கி நிற்பதால் அவை 'பிரேரக காண்டம்' எனப்படும். அசுத்த மாயா காரியங்கள் ஏழும் ஆன்மாவைப் போகம் நுகர்தற்குத் தகுதி செய்தலின் இவை 'போசயித்திரு காண்டம்' என வழங்கப்பெறும். பிரகிருதியின் காரியங்களாகிய ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும் முக்குண வடிவாய் ஆன்மாவிற்கு நுகர்ச்சியைத் தருதலின் இவை 'போக்கிய காண்டம்' என்று நுவலப்பெறும்.

பிரேரக காண்டமாகிய சிவ தத்துவங்கள் ஐந்தும் ஆணவத்தோடும் கன்மத்தோடும் கலவாது நிற்றலால் சுத்தம். போசயித்திரு காண்டமாகிய வித்தியா தத்துவங்கள் ஆணவத்தோடும், கன்மத்தோடும் கலந்திருப்பினும், குணரூபமாய் நில்லாமையால் ஓரளவு தூயதேயாதலின், 'மிச்சிரம்' எனப்படும். போக்கிய காண்டமாகிய ஆன்ம தத்துவங்கள் ஆணவத்தோடும் கன்மத்தோடும் கலந்து முக்குண ரூபமாய் நிற்றலின் 'அசுத்தம்' என்று சொல்லப்படும்.

மூவகை உயிர்களுள் 'விஞ்ஞான கலர்' எனப்படும் ஒரு மலம் உடைய உயிர்கட்கு வரும் தனு, கரண, புவன போகங்கள் சுத்தமாதலால் அவையெல்லாம், சுத்ததத்துவங்களினின்றும் தோன்றுவனவே; அதனால் விஞ்ஞான

கலரது சரீரங்கள் வைந்தவ சரீரமாகும். வைந்தவம், விந்துவின் காரியம். 'பிரளயாகலர்' எனப்படும் இருமலம் உடைய உயிர்கட்கு வரும் தனு, கரண, புவன, போகங்கள் மிச்சிரமாதலால் அவையெல்லாம் வித்தியா தத்துவகளி னுன்றும் தோன்றுவனவாகும். அதனால் பிரளயாகலரது சரீரங்கள் மாயேயம் சரீரம் ஆகும். மாயேயம்—மாயை யின் காரியம். 'சகலர்' எனப்படும் மும்மலம் உடைய உயிர் கட்கு வரும் சரீரம் அசுத்தமாதலால் அவையெல்லாம் ஆன்ம தத்துவத்தினின்றும் தோன்றுவனவாகும். அதனால் சகலரது சரீரங்கள் பிராகிருத சரீரமாகும். பிராகிருதம்— பூமியின் காரியம். சகலரை ஒழிந்த ஏனை இருதிறத்தாரின் சரீரங்களும் பிரகிருதியோடு தொடர்பின்மையால் அவை யிரண்டும் 'அப்பிராகிருதம்—பிருதிவியுடன் தொடர்பில்லா தவை' என்பதை அறிந்து தெளிக.

பிரகிருதியின் காரியங்களே முக்குணவடிவாய் நின்று மயக்கத்தைச் செய்தலின் அவை இல்லாதவர்கட்கு மயக்கம் இல்லை. மயக்கம் என்றால் என்ன? எல்லாம் முதல்வன் செயலேயாய் இருக்க அதை உணராது, எல்லாச் செயல்கட்கும் தம்மையும் பிறரையுமே தலைவராக நினைந்து, செருக்கும் பகையும் கொள்ளுதலாகும். இது 'யான் எனது என்னும் செருக்கு' என்று வழங்கப்படும். இது நிலவுலகில் உள்ள மக்கட்கே யன்றி வானுலகில் உள்ள தேவர்கட்கும், அவர்கட்குத் தலைவராகிய இந்திரன் அயன்மால் என்பவர்கட்கும் உள்ளது. எனவே, அவர்களும் பிராகிருதமேயன்றிச் சகலரேயாவர். எனவே மக்களே யன்றித் தேவரையுள்ளிட்ட ஏனை அறுவகைப் பிறப்புக் களும் பிராகிருதமேயன்றி, ஒன்றேனும் அப்பிராகிருத மன்று என்பதையறிக. இதனால் அயன்மால் உள்ளிட்ட தேவர் முதலிய பலரும் முக்குண வயத்தராய் யான் எனது என்னும் செருக்குற்று, இன்பம் துன்பம் மயக்கம் என்ப வற்றுள் அழுந்தி, மகிழ்ச்சி, வாட்டம், மடி என்பவற்றை யும், பொறுமை, பொறாமை, புறக்கணிப்பு முதலியவற் றையும் உடையவர்களாவர் என்பதையும் தெளிக.

யான்என தென்னும் செறுக்கறுப்பான் வானோர்க் (கு)
உயர்ந்த உலகம் புகும்[68]

என ஞானம் பெற்றோரைத் தேவரினும் மேம்பட்டவர் எனக் கூறியதன் நுட்பத்தையும் உணர்ந்து தெளிக.

இன்னோர் உண்மையையும் ஈண்டு நீ அறிந்து கொள்ளல் மிகவும் இன்றியமையாதது. தேவர்களேயன்றி, பிரமன், மால், உருத்திரன் என்னும் முக்குணம் உடைய சகலரேயெனினும், அவருள் உருத்திரன் பக்குவம் எய்தினவன். இவன் சிவபெருமானை வழிபட்டு இப் பெருமானது உருவத்தையும் தொழிலையும் பெற்று நிற்பவன். அதனால் இவன் ஏனைய இருவரினும் மேம் பட்டு மயக்கமின்றி இருப்பான். இங்ஙனம் மூவரும், தேவரும் முதலாக உள்ள சகலவர்க்கமாகிய ஆன்மாக்கட் கெல்லாம் சீகண்ட உருத்திரரே தலைவர். இவர் மூவருள் ஒருவனாகிய குணிருத்திரனைப் போலச் சகலராகாதவர். பிரளராகலருள் பக்குவம் எய்திப் பரமசிவனை யுணரும் ஞானத்தைப் பெற்று அப்பெருமானது திருவுளக்குறிப்பின் வழி நான்கு தோள்கள், முக்கண், கறைமிடறு, மான், மழு இவற்றையுடையவர். இவர் பிரகிருதி புவனங்கட்கெல் லாம் தலைமை எய்தி, மூவரும் தேவரும் முதலிய சகல வர்க்கத்தினர் அனைவரையும் ஆளும் தகைமையுடையவர். அதனால் இவர்வழி நிகழும் செயல்களெல்லாம் பரம சிவனது செயல்களாய் நிற்கும் என்பதை உளங்கொள்க. இது பற்றியே இவர் அவ்வவ் அவதாரங்களில் கொண்ட மூர்த்தங்கள் பலவும் 'மாகேசுர மூர்த்தங்கள்' எனவழங்கப் பெறுகின்றன என்பதையும் அறிக. இவருக்குத்தோற்றமும் ஒடுக்கமும் ஆகிய இடம் மாயாதத்துவ மேயாயினும், புருட தத்துவத்தில் நின்று பிரகிருதி புவனங்களையெல் லாம் ஆளுவர். இவர் புருட தத்துவத்தை இதயம் போலவும், அவ்யக்தமாகிய பிரகிருதியை இடப்பாதி

68. குறள்—346

போலவும். வியக்தமாகிய குணதத்துவத்தை வலப்பாதி போலவும் அதிட்டித்து நின்று அவற்றில் முறையே உருத்திரன், மால், அயன் என்னும் குணமூர்த்திகளைத் தோற்றுவிப்பர். அதனால் இம் மூவர்கட்கும் இத் தத்துவங்களே தோற்றமும் ஒடுக்கமுமாகிய இடமாகும். சிவபெருமானது வலப்பாகத்தில் பிரமனும் இடப்பாகத்தில் மாயோனும், இதயத்தில் உருத்திரனும் தோன்றினர் என்று புராணங்களிலும் கூறப் பெறுவதற்கு இதுவே கருத்தென்பதை அறிக. குண வேறுபாடு தோற்றாமையின் அவ்யக்தமே மாயோன் பள்ளி கொள்கின்ற 'பாற்கடல்' என வழங்கப் பெறுகின்றது என்பதையும், அவனது 'உறங்குதல்' என்பது அவ்யக்கத்தில் நிற்றலையே குறிக்கும் எனபதையும் அறிந்து தெளிக. குணதத்துவம் பிரகிருதியின் தத்துவங்கள் அனைத்தையும் தோற்றுவிக்கும் நிலையில் வியக்தமாய் நிற்றலால், அதன் கண் தோன்றி நிற்கும் பிரமன் நாற்றத்தையுடைய மலரின்கண் தோன்றி அதன்கண்ணே வீற்றிருப்பவனாகச் சொல்லப்படுகின்றான். பிரமன் தோன்றி வாழும் தாமரை மலர் மாயோனது உந்திக் கமலம் எனப்படுவதும், குணத் தத்துவம் பிரகிருதியினின்றும் நேரே தோன்றும் காரியமாதல் பற்றியே யாகும் என்பதையும் அறிக.

மூலப்பிரகிருதி மிகவும் தூலம் என்பதையும், அசுத்த மாயை தூலம் என்பதையும், சுத்தமாயை சூக்குமம் என்பதையும் இப்போது நீ நன்கு அறிந்திருத்தல்வேண்டும். சூக்குமத்தில் தூலம் வியாப்பியம் (உள்ளடக்கம்). ஆதலின், சுத்தமாயை வியாபகமும் அசுத்தமாயை அதில் வியாப்பியமும் ஆகும். பிரகிருதி மாயை அசுத்த மாயையின் காரியமேயாதலின், அஃது அசுத்தமாயையில் வியாப்பியம் என்பது தானே போதரும். சூக்குமமும் வியாபகமுமாகிய பொருள் 'மேலே உள்ளது' என்றும், தூலமும் வியாப்பியமுமாய பொருள் 'கீழே உள்ளது' என்றும் சித்தாந்தம் கூறும். காரணம், சூக்குமமாதலின் அது மேலே உள்ளதும் காரியம்

தூலமாதலின் அது கீழே உள்ளதும் ஆகும் என்பதை அறிக. எனவே, தத்துவங்களில் முன்னர்த் தோன்றியது மேலே உள்ளதும், பின்னர்த் தோன்றுவது கீழே உள்ளதும் ஆதல் தெளிக. இம்முறையில் பிருதிவி என்னும் தத்துவமே எல்லாவற்றிலும் கீழ் உள்ளது என்பதும், 'சிவம்' என்னும் தத்துவம் எல்லாவற்றிலும் மேல் உள்ளது என்பதும் அறிந்து தெளியத் தக்கது. சிவ தத்துவம் 'நாதம்' என்றும் சொல்லப் படுதலின், 'நாதாந்தம்' என்பது முப்பத்தாறு தத்துவங்களும் கடந்த நிலை என்பது விளங்கும்.

இன்னோர் உண்மையையும் ஈண்டு நீ அறிந்து கொள்ளல் வேண்டும். தத்துவங்களின் முறை தோற்ற முறை (உற்பத்திக் கிரமம்), ஒடுக்க முறை (சங்காரக் கிரமம்) என இருவகையாகப் பேசப்பெறும், தோற்ற முறையில் சிவ தத்துவத்தை முதலாக வைத்து எண்ணுதலும், ஒடுக்க முறையில் பிருதிவியை முதலாக வைத்து எண்ணுதலும் முறைகளாகி இருந்து வருதலை அறிந்து கொள்க.

மற்றும், ஓர் உண்மையையும் ஈண்டு நீ அறிந்து கொள்ளல் மிகவும் இன்றியமையாதது. தத்துவங்கள் முப்பத்தாறும் ஆன்மாக்கட்கு தூல சரீரம், சூக்கும சரீரம், பரசரீரம் (பரம்—அதிசூக்குமம்) என மூவகை உடம்பு களாகப் பொருந்தி நிற்கும். பூதங்கள் ஐந்து, கன்மேந்திரி யம் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து ஆகப் பதினைந்து தத்துவங்களும் தூல சரீரமாய் நிற்கும். தந் மாத்திரைகள் ஐந்து, அந்தக்கரணங்களுள் மனம், அகங்காரம், புத்தி என மூன்று ஆகஎட்டும் சூக்கும சரீரமாய் நிற்கும். எட்டுத் தத்துவங்களால் ஆயினமைபற்றிச் சூக்கும சரீரத்தை 'புரியட்டக சரீரம்' என்று வழங்குதலும் உண்டு. அந்தக் கரணங்களுள் சித்தமாய் நிற்கும் குணதத்துவம் ஒன்று, வித்தியா தத்துவங்கள் ஏழு ஆக எட்டு தத்துவங்களும் பர சரீரமாகும். மூலப்பிரகிருதி குண தத்துவத்தின் வேறாகாமை அறிக.

பர சரீரத்துள் குணதத்துவம் முக்குணமயமாய் நிற்றலின் 'குணசரீரம்' என்றும், காலம், நியதி முதலிய ஐந்தும் உயிர்களுக்குச் சட்டைபோல அமைதலின் 'கஞ்சுக சரீரம்' என்றும், மாயாதத்துவமே ஏனைய தத்துவங் கட்குக் காரணமாதலின் அது 'காரண சரீரம்' என்றும் வழங்கப்படும். சிவ தத்துவம் ஐந்தும் சகலர் பிரளயா கலர்க்கு உடம்பாய் வருதல் இல்லை. பர சரீரத்தை இங்ஙனம் மூன்றாக்கி, இவற்றுடன் சூக்கும் தூல சரீரங் களையும் கூட்டி, 'தூலசரீரம், சூக்கும சரீரம், குணசரீரம், கஞ்சுக சரீரம், காரண சரீரம்' எனச் சரீரத்தை ஐந்தாகக் கூறுதலும் உண்டு. ஐந்து சரீரங்களும் 'ஐங்கோசங்கள்' என்றும் வழங்கப்படும்.

இனி, ஐங்கோசங்கள் இன்னவை என்பதையும் தெரிவிப்பேன். தூலசரீரம் சோறும் நீரும் முதலிய உணவினால் நிலை பெறுதலின் அஃது 'அன்னமய கோசம்' எனப்படும். சூக்கும் சரீரம் பிராண வாயுவின் இயக்கத் தால் செயற்படுதலின் அது 'பிராணமய கோசம்' என வழங்கப் பெறும், குணசரீரம் அந்தக்கரணம் ஒன்றாகிய சித்தமாய் நிற்றலின் அது 'மனோமய கோசம்' எனப்படும். கஞ்சுக சரீரம் ஆன்மாவின் அறிவு இச்சை செயல்களை விளக்கி நிற்றலின் அது 'விஞ்ஞானமய கோசம்' எனப்படும். காரணசரீரம் கேவலத்தில் மூடமாய்க் கிடந்த ஆன்மா விற்குச் சிறிது விழிப்புத் தந்து மயக்கி ஒருவகைக் களிப்பை நல்குதலின் அஃது 'ஆனந்த மயகோசம்' என்றும் நவிலப்படும். இங்ஙனம் ஐங்கோசங்களையும் அறிந்து கொள்க.

இனி, தத்துவங்களின் கூறுகளும் காரியங்களும் 'தாத்து விகம்' எனப்படும். இவற்றின் தொகை அறுபதாகும். இவற்றையும் தத்துவங்களுடன் சேர்த்துப் பொதுவாக "தொண்ணூற்றாறு தத்துவங்கள்" என்று கூறுவர். இத்தாத்து விகங்கள் இன்னவை என்பதையும் தெளிவாக்குவேன்: பிருதிவியின் கூறு எலும்பு, தசை, மயிர், தோல், நரம்பு என்னும் ஐந்து; அப்புவின் கூறு சிறுநீர், இரத்தம், சிலேத்

துமம், வியர்வை, சுக்கிலம் (அல்லது சோணிதம்) என்னும் ஐந்து; தேயுவின் கூறு இதயத்தில் வெப்பம், பசித்தீ, கண்ணில் வெப்பம், உடம்பில் வெப்பம், பைத்தியம் என்னும் ஐந்து; வாயுவின் கூறு உதானன், பிராணன், அபானன், சமானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன் தனஞ்செயனன் என்னும் வாயுக்கள் பத்து; ஆகாயத்தின்கூறு அத்தி, அலம்புடை, இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, குகுதை, சங்கினி சிகுவை, புருடன் என்னும் நாடிகள் பத்து; ஞானேந்திரியங்களின் விடயங்கள் சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐந்து; கன்மேந்திரியங்களின் விடயங்கள் வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் என்னும் ஐந்து; அகங்காரத்தின் கூறு தைசதம், வைகாரிகம், பூதாதி என்னும் மூன்று; காமம், குரோதம், உலோபம், மோகம், மதம் எனக் குற்றம் ஐந்து; (மாற்சரியம் குரோதத்துள் அடங்கும்) ; குணத்தின் கூறு சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் மூன்று; சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் வாக்கு நான்கு; இவை அனைத்தையும் கூட்ட தாத்துவிகங்கள் அறுபது ஆதலை அறிக.

மேலே கூறப் பெற்றவை தத்துவங்களின் கூறுகளாகும். இன்னும் தத்துவங்களின் கூறுகளே தனு, கரணம், புவனம், போகம் என்னும் நான்குமாகும். இவற்றுள் புவனம், என்பது எல்லாத் தத்துவங்களிலும் பலவாக உள்ளது. அவை அண்டங்களையும் தன்னுள் அடக்கியுள்ளது. இத்துடன் இக்கடிதத்தை நிறைவுசெய்கின்றேன்.

அன்பன்,

கார்த்திகேயன்

சிவாகமங்கள் கூறுகின்றன. இந்த அண்டங்களைப்பற்றி மகாகவி பாரதியார்,

> நக்கபிரான் அருளால்-இங்கு
> நடைபெறும் உலகங்கள் கணக்கிலவாம்!
> தொக்கன அண்டங்கள்—வளர்
> தொகைபல கோடிபல் கோடிகளாம்!
> இக்கணக் கெவரறிவார்—புவி
> எத்தனை யுளதென்ப தியாரறிவார்.[70]

என்றும்,

> விண்டு ரைக்க அறிய அரிதாய்
> விரிந்த வான வெளியென நின்றனை
> அண்ட கோடிகள் வானில் அமைத்தனை
> அவற்றில் எண்ணற்ற வேகம் சமைத்தனை
> மண்டலத்தை அணுவணு வாக்கினால்
> வருவ தெத்தனை யத்தனை யோசனை
> கொண்ட தூரம் அவற்றிடை வைத்த
> கோல மேநினைக் காளியென் றேத்துவேன்[71]

என்றும் கூறியுள்ள கருத்து ஈண்டு நினைத்தல் தகும். இவ் வண்டங்களுக்குப் 'பிரமாண்டம்' என்பது பெயர். நாம் வாழும் பிரமாண்டம் நூறுகோடி யோசனை உயரமுள்ளது. நடுப்பகுதியே பூமியின் பரப்பாகும். இதுவே 'பூலோகம்' எனப்படுவது. இதன் கீழே அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதலம் என்கின்ற ஏழு உலகங்கள் உள்ளன. இவற்றின் கீழே பாவிகள் சென்றடையும் இருபத்தெட்டு கோடி நரகங்கள் உள்ளன. இவற்றின் கீழ் காலாக்கினி உருத்திரர், ஆடகேசுரர், கூர்மாண்டர் என்னும் உருத்திரர்கள் தம்தம் புவனங்களில் வசிப்பர்.

70. பா. க: கோமதி மகிமை-செய்-5
71. ஷை: மகாசக்தி வாழ்த்து-1

பூமியும் மேற்பரப்பே மக்கள் வாழும் பூலோகம். இஃது ஒன்றை ஒன்று சூழ ஏழு தீவுகளையுடையது. இவை சம்புத் தீவு, சாகத்தீவு, குசத்தீவு, கிரௌஞ்சத்தீவு, சான்மலித் தீவு, கோமேதகத் தீவு, புடகரத்தீவு என்பவையாகும். சம்புத்தீவைச் சுற்றி உப்புக்கடல் உள்ளது. இவ்வாறே மற்றைய தீவுகளை முறையே பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், மதுக்கடல், சுத்தநீர்க் கடல் என்னும் கடல்கள் சூழ்ந்துள்ளன. சுத்த நீர்க்கடலைச் சூழ்ந்து பொன்னிலமும் அதனைச் சூழ்ந்து இருள் நிலமும் அதனைச் சூழ்ந்து பெரும் புறக்கடலும் உள்ளன.

பூலோகத்தை நிலைபெறுவித்தற்கு அதன் நடுவே உருவாணியாய் அமைந்துள்ளது மகாமேரு மலை. இதில் மேல் உலகத்தில் உள்ள இந்திரன் முதலிய திசைக் காவலர் கட்கும் அயன்மால் சீகண்ட உருத்திரர் என்பவர்கட்கும் உரிய இடங்கள் ஒன்றன்மேல் ஒன்றாக உள்ளன. இந்திரன் தவிர ஏனைய திக்குப்பாலகர்களுக்கும் அவரவர் திக்கில் இடங்கள் அமைந்துள்ளன. இவர்கள் தம்தம் இடங்களில் அமர்ந்து தம்தம் அளவிற்கேற்ற அதிகாரங்களை இப் பூவுலகில் செலுத்தி வாழ்வர். சீகண்ட உருத்திரர் வரமும் இடமே எல்லா இடத்திற்கும் மேற்பட்ட இடமாகும். இக் கொடுமுடியே 'சோதிகட்கம்' எனப்படும் 'கைலாயம்' ஆகும். எனவே, பிரகிருதிக்குமேல் உள்ள சீகண்ட உருத்திர புவனம் மகா கைலாயம் ஆகும். சுத்த மாயா உலகங்கள் 'சிவலோகம்' எனப்படுதலால் சிலபொழுது இவ்வுருத்திர லோகமும் 'சிவலோகம்' என்று வழங்கப்பெறும் என்று அறிக.

மேற்குறிப்பிட்ட மகாமேரு மலையின் தென்பால் நிடதம், ஏமகூடம், இமயம் என்ற மூன்று மலைகள் உள்ளன. வடபால நீலம், சுவேதம், சிருங்கவான், என்ற மூன்று மலை கள் உள்ளன. கிழக்கில் 'மாலியவான்' என்னும் மலையும், மேற்கில் 'கந்தமாதனம்' என்னும் மலையும் உள்ளன. இந்த

மலைகளால் நாவலந்தீவு ஒன்பது கண்டங்களாகப் பகுக்கப் படுகின்றது. அவை இளாவிருத்தவருடம், பத்திராசுவருடம், கேதுமாலவருடம், அரிவருடம், கிம்புருடவருடம், பாரதவருடம், இரம்மிய வருடம், இரணியவருடம், குருவருடம் என்பனவாகும். இவற்றுள் நாம் வாழும் 'பாரத வருடம்' என்னும் பரதகண்டம் உட்பட ஒன்பது கண்டங்களையும் 'மனு' என்னும் அரசன் மக்கள் ஒன்பதின்மர்க்கு உரியவாய் அவர்கள் பெயரால் வழங்கப் பெற்றன.

நாம் வாழும் பரதகண்டமும் ஒன்பது கண்டங்களை யுடையது. இவற்றுள் தென்கடலைச் சார்ந்த பகுதி 'குமரிக்கண்டம்' என்று வழங்கப்பெறுகின்றது. பூலோகத்தில் 'பரதகண்டமே சிறந்தது' என்றும், பரதகண்டத்திலும் 'குமரிக்கண்டமே சிறந்த தெய்வ பூமி' என்றும் சிவாகமங்கள் கூறுகின்றன.

மேற்குறிப்பிட்ட பூலோகத்தின்மேல் புவலோகம், சுவலோகம், மகலோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம் என்னும் ஆறு உலகங்கள் உள்ளன. புவலோகம் சந்திராதித்தர் முதலியோர் வாழ்வது. சுவலோகம் இந்திரன் முதலிய தேவர்கள் வதிவது. மகலோகம் மரீசி முதலிய முனிவர்கள் இருப்பது. சனலோகம் பிதிரர்கள் முதலியோர் தங்கி வாழ்வது. தவலோகம் சனகர் முதலிய பெருந்தவத்தோர் வாழ்வது. சத்தியலோகம் நான்முகனுக்குரியது. இதற்குமேல் திருமாலினது வைகுந்தமும், இதற்குமேல் குணருத்திரருக்கு உரிய உருத்திரலோகமும் உள்ளன. பிருதிவி தத்துவத்தில் உள்ள எல்லாக்கண்டங்களிலும் இவ்வாறே உலகங்கள் உள்ளன, இவ்வண்டங்களில் திசைக்குப் பத்தாகப் பத்துத் திசையிலும் நூறு உருத்திரபுவனமும், அண்டத்தின் உள்ளே கீழ் மூன்றும், மேல் மூன்றும், அண்டத்தின்மேலே இரண்டும் ஆகப்புவனங்கள் நூற்றெட்டு ஒவ்வோர் அண்டத்திலும் அமைந்துள்ளன. பிருதிவிக்கு மேலே உள்ள தத்துவங்களிலும் இவ்வாறே புவனங்கள் உள்ளன. தத்துவங்கள் புவனங்கள் என்பவற்றுடன் வேறு உள்ள

மாயாகாரியங்களைக் கூட்டி அனைத்தும் 'அத்துவாக்கள்' என்று வழங்கப்பெறும்.

இனி, அத்துவாக்களை விளக்குவேன். இதற்கு முன்னர் இதுகாறும் குறிப்பிட்ட சில செய்திகளை நினைவு கூர்தல் வேண்டும். மாயையின் காரியங்களாகிய உலகம் சொற் பிரபஞ்சம், பொருட் பிரபஞ்சம் என இருவகைப்படும் என்பதையும், சொற்பிரபஞ்சத்தில் சூக்குமை வாக்கு, பைசந்தி வாக்கு, மத்திமை வாக்கு, வைகரி வாக்கு என்ற நால்வகை வாக்குகள் அடங்கியுள்ளன என்பதையும் முன்னர்க் குறிப்பிட்டதை ஈண்டு நினைவுகூர்க. நால் வகை வாக்குகள் மந்திரம், பதம், வன்னம் என மூன்றாகச் சொல்லப்படும். மந்திரம் என்பது சொற்றொடர். பதம் என்பது சொல். வன்னம் என்பது எழுத்து. இவையனைத் தும் சுத்தமாயையின் காரியங்களே. இனி, இவண் சொல் லப்பெற்ற தத்துவங்களும் புவனங்களும் பொருளுலகம். இவை சுத்தமாயை, அசுத்தமாயை என்னும் இருமாயையி லும் உண்டு.

சுத்தமாயையின் 'கலை' என்ற பொருட் பிரபஞ்சத்தின் ஒரு பகுதி விருத்தியாய்த் தோன்றும். இவை பிரகிருதி யில் உள்ள பஞ்சபூதங்கள் போலச் சுத்தமாயையில் நின்று எல்லாப் பொருள்களையும் அடக்கி நிற்கும். பஞ்ச பூதங் கட்குச் சொல்லப்பட்ட வடிவு, நிறம், குறி, எழுத்து, அதி தேவர் என்பன இதற்கும் பொருந்தும். பஞ்ச கலைகள் நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்பன வாகும். இஃது ஒடுக்க முறை. இவை எல்லாவற்றிலும் மேல் நிற்பது சாந்தியதீதை என்பதும், எல்லாவற்றிலும் கீழ் நிற்பது நிவிர்த்தி என்பதும் தெளிவு. எனவே, இவை முறையே பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பன போன்றனவாகும். நிவிர்த்தி முதலிய பெயர்களைப் பெற்று நிற்பது சிவனது சக்தியே, அதற்கு இடமாதல் பற்றிக் கலைகளும் அப்பெயர் பெற்றன. மந்திரம், பதம் வன்னம், புவனம், தத்துவம், கலை என்னும் ஆறுமே 'அத்து,

வாக்கள்' எனப்படும். அத்துவா என்பதற்குப் 'படிவழி' என்பது பொருள். இவை ஆறும் ஆன்மா மேலேறுதற்குப் படிவழிபோல் இருத்தலின் 'அத்துவா' எனப்பெயர் பெற்றன என்பதை அறிக.

சைவாகம முறைப்படி மந்திரம் பதினொன்று. அவை பஞ்ச பிரமமந்திரங்களும், ஷடங்க மந்திரங்களுமாகும். பதம் எண்பத்தொன்று என்று சொல்லப்படுகின்றன. வன்னம் (எழுத்து) வடமொழியில் உள்ள ஐம்பத்தொன்றாகும். புவனம் இருநூற்றிருபத்து நான்கு. தத்துவம் முப்பத்தாறு. கலை ஐந்து. இவற்றுள் கலைகளில் மற்றவை அடங்கி நிற்கும். இவ்விவரங்களையும் நீ அறிதல் வேண்டும்.

மேற்குறிப்பிட்ட ஆறனுள் மந்திரம், பதம், வன்னம் என்ற மூன்றும் சொற் பிரபஞ்சங்கள், ஏனைய புவனம். தத்துவம், கலை என்ற மூன்றும் பொருட் பிரபஞ்சங்கள், இந்த ஆறனையும் முறையே நன்கு உணர்ந்து ஒவ்வொன்றாகக் கடந்து சென்றால் இறைவனை அடையலாம். ஆறு அத்துவாக்களுள் மந்திரம் முதலியவை ஒன்றில் ஒன்று அடங்க, இறுதியில் எல்லாம் பஞ்ச கலைகளுள் அடங்கி நிற்றலைத் தெளியலாம். இதனால் நிருவாண தீக்கையில் ஆன்மாவைத் தூய்மை செய்யும் ஆசாரியர் செய்யும் அத்துவா சோதனையை 'கலாசோதனை' என்று வழங்குவர்.

இனி, மற்றை அத்துவாக்கள் கலைகளில் அடங்கி நிற்கும் முறையை விளக்குவேன். இந்நிலையில் தத்துவங்களும் அவற்றின் காரியங்களாகிய தனு, கரண, புவன, போகங்களும் பொருட் பிரபஞ்சம் என்றும், மந்திரம், பதம் வன்னம் என்பன சொற்பிரபஞ்சம் என்றும் முன்னர்க் கூறியதை ஈண்டு நினைவுகூர்தல் வேண்டும்.

நிவிர்த்தி கலை: ஆன்மதத்துவம் இருபத்து நான்கில் பிருதிவி தத்துவம் ஒன்று மட்டும் இதில் அடங்கும். பதங்

களில் இறுதியிலுள்ள இருபத்தெட்டு எழுத்துகளில் (வன்னம்) இறுதி யெழுத்தாகிய க்ஷகாரம் ஒன்றும் மந்திரங்களில் இருதயம், சத்தியோ சாதம் என்னும் இரண்டும், புவனங்களில் நூற்றெட்டும் இக்கலையில் அடங்கி நிற்கும். இக்கலைக் குரிய வாக்கு தூலவைகரி. இது பிறர் செவிக்குக் கேட்ப தாகும்.

பிரதிட்டாகலை : பிருதிவிக்கு மேல்உள்ள இருபத்து, மூன்று தத்துவங்கள் இதில் அடங்கும். பதங்களுள் மேற் கூறியவற்றிற்கு மேலுள்ள இருபத்தொரு பதங்களும், எழுத்துகளில் முன் நுதலியதற்கு மேலுள்ள (ஒடுக்க முறை யில் ளகார முதல் டகாரம் ஈறாக) இருபத்து நான்கும் சிரம், வாமதேவம் என்ற மந்திரங்களும், புவனம் ஐம்பத்தாறும் இதில் அடங்கி நிற்கும். இக்கலைக்குரிய வாக்கு சூக்குமவைகரி. இது தன் செவிகட்கு மட்டிலும் கேட்கும்.

வித்தியாகலை: வித்தியா தத்துவம் ஏழும் இக் கலை யுள் அடங்கும். மேற்கூறியவற்றிற்கு மேலுள்ள இருபது பதங்களும் ஏகாரம் முதல் கவ்வருக்கத்தின் நான்காவது எழுத்து ஈறாகவுள்ள ஏழு எழுத்துகளும் சிகை, அகோரம், என்ற இரண்டு மந்திரங்களும், புவனம் இருபத்தேழும் இதில் அடங்கி நிற்கும். இக்கலைக்குரிய வாக்கு மத்திமை ஆகும்.

சாந்திகலை : சிவ தத்துவம் ஐந்தில் சுத்தவித்தை. ஈசுரம், சாதாக்கியம் என்ற மூன்றும் இதில் அடங்கி நிற்கும். மேற்கூறியவற்றிற்கு மேலுள்ள பதினொரு பதங்களும், சவ்வருக்கத்தில் நான்காவது, தவிர ஏனைய மூன்று வன்னங்களும், தத்புருடம், கவசம் என்ற இரண்டு மந்திரங் களும் இதில அடங்கும். இக்கலைக்குரிய வாக்கு பைசந்தி.

சாந்தியதீதகலை : சிவதத்துவத்தில் எஞ்சிய சக்தி சிவம் என்ற இரண்டு தத்துவங்கள் இதில் அடங்கும். மேற் சொல்லிய பதங்கள் போக எஞ்சிய 'ஓம்' என்னும் ஒரு பதமும், ஐம்பத்தொரு வன்னங்களில் மேற்சொல்லியவை போக எஞ்சிய உயிரெழுத்து பதினாறும், ஈசானம், அத்திரம்

மூலம் ஆகிய மூன்று மந்திரங்களும் இக்கலையில் அடங்கி நிற்கும், இக்கலைக்குரிய வாக்கு சூக்குமை. (நேத்திரத் திற்கு ஈடாக மூலம் உள்ளது). எனவே, சுத்தம், மிச்சிரம், அசுத்தம் என்னும் முத்திறப்பட்ட எல்லாப் பொருள் களும் இந்த ஐந்து கலைகளுள் அடங்குதலை அறிந்து தெளிக.

தத்துவங்கள் பலவற்றில் யாவர்க்கும் எளிதில் விளங்கு வன பஞ்ச பூதங்கள். இதனால்தான்,

> நிலம்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
> கலந்த மயக்கம் உலகம்[72]

எனக் கூறினார் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர். வள்ளுவப் பெருந்தகையும்,

> சுவையொளி ஊறோசை நாற்றம் என்றைந்தின்
> வகைதேரிவான் கட்டே உலகு[73]

என்று கூறிப் போந்தார். எனினும்,

> காலம் உலகம் உடம்பே உயிரே
> பால்வரை தெய்வம் வினையே பூதம்
> நிலனே காலம் கருவி என்றா[74]

என்றற்றொடக்கத்தனவாகத் தொல்காப்பியரும், வலியறி தல், இடனறிதல் என்பவற்றோடு கால மறிதல் என்பதை யும்) விதித்தமை முதலியவற்றாலும்,

> வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
> தொகுத்தாற்கும் துய்த்தல் அரிது.[75]

என்பது முதலியவற்றாலும் திருவள்ளுவப் பெருமானும் காலத்தையும் இடத்தையும் உடன்பட்டுக் கூறினார்

72. தொல். பொருள்-மரபு-91
73. குறள்-27
74. தொல்-சொல்-கிளவியாக்கம்-58
75. குறள்-377

என்று அறிக. (ஆதலின் மூலப்பிரகிருதிக்கு மேலும் தத்துவங்கள் உள்ளன என்பது அவர் கட்கும் உடன்பாடென்பது இனிது பெறப்படுகின்றது. இதனால், எல்லோர்க்கும் எளிதில் விளங்குதல்பற்றி ஐம்பூதங்களே எங்கும் வருவன வாயின என்பது தெளிவாகும். இதனால் பஞ்ச கலைகட்குச் சொல்லப்பட்ட வடிவு, நிறம், அதி தெய்வம் என்பவற்றாலே ஐம்பூதங்களையும் வழிபடுதல் விதிக்கப் பெற்றது. இதன் விவரங்களையெல்லாம் மெய் கண்ட நூல் களிலும் சைவாகமங்களிலும் கண்டு தெளியலாம். பஞ்ச கலைகளைத் தியானித்தல் முதலிய வழிபாட்டில் நிவிர்த்தி முதலிய ஐந்திற்கும் அதிதேவர்கள் வருமாறு:

| | | |
|---|---|---|
| நிவிர்த்தி | ... | பிரமன் |
| பிரதிட்டை | ... | விட்டுணு |
| வித்தை | ... | உருத்திரன் |
| சாந்தி | ... | மகேசுரன் |
| சாந்திய தீதை | ... | சதாசிவன் |

நிலம் முதலிய ஐம்பூதங்கட்கும் இம்முறையே இவர்கள் அதிதேவராவர். இவர்கட்குத் தொழில் முறையே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பனவாகும்.

நிவிர்த்தி, பிரதிட்டை என்னும் கலைகளுட்பட்ட புவனங்களில் உள்ள கடவுளர்கள் 'தேவர்' என்ற பெயரைப் பெறுகின்றனர். இவரது சரீரம் பிராகிருத சரீரமாகும். வித்தியா கலையுட்பட்ட புவனங்களில் உள்ளோர் 'உருத் திரர்' எனப்படுவர். இவர்தம் சரீரம் மாயேயம். ஏனைய இரு கலைகளில் உள்ளோர் 'சிவர்' எனப்படுவர். இவரது சரீரம் வைந்தவம் ஆகும். நிவிர்த்தி, பிரதிட்டா கலைகளில் படைத்தலையும் காத்தலையும் உடைய பிரமனும் விட்டுணு வும் புண்ணியம் மிகவுடையவர். அழித்தலைச் செய்யும் குணிருத்திரன் சிவபுண்ணியம் மிகவுடையவன். இம்

மூவரும் 'காரணக் கடவுளர்' எனப்படுவர். இம்மூவருக்கும் முதல்வராகிய சீகண்ட உருத்திரரே இவ் இருகலைகளிலும் உள்ளோர்க்கு மகேசுரனும் சதாசிவனுமாய் நின்று மறைத்தல், அருளல்களைச் செய்வார். வித்தியா கலையில் உள்ளவர்கட்கு உருத்திரருட் சிறந்தோர் படைத்தல் முதலிய முத்தொழில்களைச் செய்ய, அனந்ததேவரே மகேசுரனும், சதாசிவனுமாய் நின்று மறைத்தல், அருளல் களைச் செய்வார். சீகண்டரும், அனந்ததேவரும் அருளுதல் அபரஞானமாகிய வேதாகமங்களை உணர்த்தல் ஆகியவற்றைச் செய்வர். சாந்தி, சாந்தியதீய கலைகளில் உள்ளோர்க்குப் பரமசிவனே தடத்த சிவனாய் நின்று எல்லாவற்றையும் நேரே செய்வான்.

இத்துடன் இக்கடிதத்தை நிறைவு செய்கின்றேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

# 35

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விழைகின்றேன்.

இச்கடிதத்தில் பாசங்களைப்பற்றி மேலும் சில கருத்துகளைத் தெரிவிப்பேன். முதலில் 'பிரணவ கலைகள்' இன்னவை என்பதையும் அவற்றின் செயற்பாடு களையும் கூறுவேன்.

**பிரணவ கலைகள் :** படைத்தல் முதலிய தொழில் களுக்குக் கூறப்பெற்ற முறையே அக்கரங்களைச் செலுத்துதற்கும் பொருந்தும். அதாவது சொற்பிரபஞ்சம் முழுவதையும் பிரணவத்துள்—அதாவது 'ஓம்' என்பத னுள்—அடக்கிக் கூறுதல் சித்தாந்த மரபாகும். பிரணவம் 'ஓம்' எனக் கூறப் பெறுவதைச் 'சமட்டிப் பிரணவம்' என்று

வைத்துச் கொண்டு, அதனை அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம் என்று ஐந்து கூறுகளாக்கி அக்கூறுகளை 'வியட்டிப் பிரணவம்' எனக் கூறும் மரபும் உண்டு. இக் கூறுகள்தாம் 'பிரணவ கலைகள்' என்று வழங்கப்பெறு கின்றன. இந்த ஐங்கூறுகளும் 'ஐந்து அக்கரம்' (அக்கரம்— அட்சரம்—எழுத்து) என வழங்கப்பெறும். இந்த அக் கரங்கள் காரணமாகவே உள்ளத்தில் உணர்வுகள் உண்டா கின்றன. இதனைத் தெளிவாக்குவேன். அகாரம் அகங் காரத்தை இயக்கும். உகாரம் புத்தியை இயக்கும். விந்து சித்தத்தை இயக்கும். நாதம் புருடனை இயக்கும். இவற்றால் இங்ஙனம் அந்தக்கரணங்கள் செயற்படுத லாலே உணர்வுகள் தோன்றியும் மறைந்தும் வரும் என்பதைத் தெளிக. இவற்றுள் அகாரத்தை நான்முகனும், உகாரத்தைத் திருமாலும், மகாரத்தை உருத்திரனும், விந்துவை மகேசுரனும், நாதத்தைச் சதாசிவனும் செயற் படுத்தி நிற்பர் என்பதையும் அறிவாயாக.

இன்னும் ஒரு கருத்தையும் ஈண்டுத் தெரிந்து கொள்ளல் வேண்டும். பிரணவ கலைகளாகக் கூறப் பெறும் அகாரம் முதலியன தூல-சூக்குமங்களது குறியீடா கும். இதனையும் விளக்குவேன். அஃதாவது, அகாரமும், உகாரமும் மிகவும் தூலம். எனவே, அவை வைகரி வாக்கைக் குறிப்பனவாகும். மகாரம், தூலம். ஆகவே அது மத்திமை வாக்கைக் குறிக்கும். விந்து, சூக்குமம். எனவே, அது பைசந்தி வாக்கைக் குறிக்கும். நாதம், அதி சூக்குமம். எனவே, அது சூக்குமை வாக்கைக் குறிக்கும். 'அக்கரங் களை இயக்குதல்' என்பது இவ்வாக்குகளை இயக்குவதே யாகும். வைகரி வாக்கும் மத்திமை வாக்கும் பிராணன், உதானன் என்னும் காற்றுகளின் சார்புடையனவாதலின், அவற்றைக் குணமூர்த்திகள் செலுத்துதல் கூடும் என் பதனையும் அறிந்து தெளிக.

உயிர் சாக்கிரம் முதலிய கீழாலவத்தை ஐந்தனையும் அடையும் பொழுது, சொப்பனத்தில் வைகரி வாக்கு

இல்லை. சுழுத்தியில் வைகரி, மத்திமை என்ற இரண்டு வாக்குகளும் இல்லை. துரியத்தில் சூக்குமை வாக்கே உள்ளது. துரியா தீதத்தில் அஃது அதி சூக்குமமாய் நிற்கும். இப்பிரணவகலைகள் இன்னும் பன்னிரண்டாகவும், பதினாறாகவும் பகுத்து 'பிராசாதம்' என வைத்து யோக முறையில் தியானிக்கப்படும். எனவே, இவ்வாக்குகளின் வழியே கன்மத்துக்கீடான எண்ணங்கள் அந்தக்கரணங் களில் தோன்றி வினைகளை நுகர்தலும் ஈட்டுதலும் உண்டாக்கும். பின்னர் அவ்வினைகளுக்கேற்றவாறு நிவிர்த்தி பிரதிட்டா கலைகளில் உள்ள புவனங்களில் மேலும் கீழுமாக மாறி மாறிப் பிறந்து இறந்து வரும் நிலை உண்டாகும்.

பிறப்பு இறப்புகள் : முன்னொரு கடிதத்தில்[76] ஐங்கோச சங்களைப்பற்றிக் குறிப்பிட்டேனல்லவா? ஐங்கோசங் களில் அன்னமய கோசமாகிய தூல சரீரம் நீங்குவதே 'இறத்தல்' என்பதாகும். ஏனைய நாற்கோசங்களாகிய சூக்கும சரீரமும் பர சரீரமும், முத்தியெய்துங்காறும் நீங்காது நின்று முத்திக் காலத்தே நீங்குவனவாகும். ஆகவே, ஒரு தூல சரீரம் நீங்கிய பின்னர்ச் சூக்கும சரீரத் தில் நின்று அடுத்த பிறப்பாகிய தூல சரீரம் தோன்றும். அங்ஙனம் தோன்றுமிடத்துப் பூலோக சரீரம் பௌதிக சரீர மாகும். பூலோகத்திற்கு மேல் உள்ள உலக சரீரங்கள் எல்லாம் பூதசார சரீரமாகும். அவ்வுடம்பும் உலகங்களும் புண்ணியம் உடையார்க்கு உரியனவாகும். நரகலோகத் திற்கு உள்ள சரீரம் யாதனா சரீரமாகும். பூலோகத்து உயிர்களைத் தூல சரீரத்தினின்றும் பிரித்துச் சுவர்க்கம், நரகம், பூமி என்பவற்றிற் செலுத்துபவனே தென்றிசைக் கடவுளாகிய கூற்றுவன் ஆவான் என்பதையும் அறிக.

புண்ணிய பாவங்கள் அநுபவித்துத் தொலைந்தால் அத்தூல சரீரங்கள் நீங்கும். நீங்கவே, அடுத்த வினைக்

76. இந்த இயல்; கடிதம்—31; பக். 254

குரிய தூல சரீரம் பின் சூக்கும சரீரத்தினின்றும் தோன் றும். உயிர்கட்கு இங்ஙனம் பிறப்பும் இறப்பும் மாறி மாறி வரும் என்பதை நாள்தோறும் நிகழும் கனவு முதலிய அவத்தைகளிலிருந்து நன்குணரலாம். இதற்காகவே திருவள்ளுவர் பெருமானும்,

> உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
> விழிப்பது போலும் பிறப்பு.[77]

என்ற அரியதொரு மணிமொழியை அருளிச் செய்தார்.

சுத்த மாயையும் அசுத்த மாயையும் ஆணவத்தோடும் கன்மத்தோடும் விரவாத நிலையும் விரவிய நிலையும் என்பனவன்றிப் பொருளால் வேறல்ல. ஆகவே, அவ்விரு மலங்களும் நீங்கிய காலத்தில் சகலர்க்கு உள்ள சூக்கும சரீரங்களும் பர சரீரங்களும் தூய சரீரங்களாய் மாயே யமும் வைந்தவங்களுமாகிய தூய சரீரங்களைத் தோற்று விக்கும். இதனால் அவர்கட்கு உருத்திரராயும் சிலராயும் வாழும் நிலையும் கைக்கூடும் என்பதை அறிக. மும்மலங் களும் வாசனையும் இன்றிப் பற்றறக் கழிந்தவுடன், பரம சிவனுடன் இரண்டறக் கலத்தலாகிய பெருமுத்திப் பயன் உண்டாவதாகும் என்பதையும் அறிந்து தெளிக.

பாசங்களில் ஆணவமும், கன்மமும் நுண்பொருள் களாய்ப் புலப்படாது நிற்றலின், அவற்றின் நிலைகளை மாயையாகிய பருப்பொருளில் வைத்தே உணர்தல் வேண்டும். அதுபற்றியே தத்துவங்களின் இயல்பு இவ்வாறு விரித்துக் கூறப்பெறுகின்றது. விரிந்த நூல்களில் இதனை இன்னும் மிக விரிவாகக் காணலாம்.

பாச இயலைப்பற்றி விரிவாக, அறியும் நீ இன்னொரு முக்கிய குறிப்பையும் ஈண்டு நினைவிற் கொள்ளல் வேண்டும். 'மும்மலங்கள்' பற்றிய கருத்தினை நன்கு

---

77. குறள்—339

அறிந்திருப்பாய். 'ஐந்து மலங்கள்' என்றதொரு கருத்தும் உண்டு. இதனையும் ஈண்டு தெளிவாக்குவேன்.

ஐந்து மலங்கள்; ஆணவம், கன்மம் மாயை என மலங்கள் மூன்றேயாயினும், உலகிற்கு முதற்காரணமாகிய மாயை காரணநிலை, காரிய நிலை என இரு நிலைகளையுடையது. மாயை என்பதைக் காரண மாயையையே குறிப்பதாகக் கொண்டு அதன் காரியங்களை 'மாயேயம்' என்று வேறொரு பெயராற் குறிப்பர். இப்பெயர் அசுத்த மாயையின் காரியத்திற்கே பொருந்தும். ஐந்தாவது இறைவன் சக்தியாகிய திரோதான சக்தியும் ஒரு மலமாகக் கொள்ளப்படுகின்றது. இஃது உண்மையில் மலமோ அல்லது பாசமோ அன்று; இறைவனது அருளார் சக்தியே. எனினும், இதுவே மேற்கூறிய பாசங்கள் தம் செயலைப் புரியுமாறு அவற்றின் வழிநின்று அவற்றது சக்திகளைத் தூண்டுகின்றது. இதனாலேயே இம்மலங்களின் காரியங்களாகிய மறைப்புகள் நடை பெறுகின்றன. இஃது இல்லையேல் பாசங்களின் செயல்களாகிய மறைத்தல் தொழில்கள் நிகழமாட்டா. இதனால் இதுவே ஒரு மலமாக அல்லது பாசமாகச் சொல்லப்பெறுகின்றது. இறைவன் செய்யும் தொழில்கள் ஐந்தில் 'மறைத்தல்' என்பது இவ்வாறு 'இத்திரோதான சக்தி'யைக் கொண்டு மறைத்தலைச் செய்வதேயாகும்.

இதனை மேலும் தெளிவாக்குவேன். ஆணவம், கன்மம், மாயை என்பவற்றின் சக்திகளை இறைவன் தன் ஆற்றலைக் கொண்டு தூண்டாது விடின், அவற்றால் பந்தம் உயிர்கட்கு என்றும் இருந்தே தீரும். ஆகையால் அச்சக்திகளைத் தூண்டிச் செயற் படுத்தினால் அவை செயற்படுத் தமது சக்தி மெலிவடைந் தொழியும். அங்ஙனம் ஒழியவே, அவற்றால் உண்டாகும் மறைப்பு நீங்கி விளக்கம் பெற்று உயிர்கள் உயர் நிலையை அடையும். ஆதலால் அங்ஙனம் செய்தல் நற் செயலேயாகும் என்பதை

அறிக. எனவே, திரோதான சத்தியும் அருளேயாயினும், அது மறக்கருணையாய்க் கொடுமை போலத் தோன்றுதலின், அதனை 'அருட்சத்தி' என வழங்காது. 'திரோதான சத்தி' என்றும், 'திரோதான மலம்' என்றும் வழங்குவர். மலங்களின் சத்தி மெலிந்து, உயிர்கள் பக்குவநிலையை அடையும்பொழுது இத் திரோதான சத்தியே தனது மறுதலைச் செயலினின்றும் நீங்கி அருட் சக்தியாக மாறி, ஆன்மாவில் பதியும். இதுவே 'சத்தி நிபாதம்' என வழங்கும், திரோதான மலத்தின் இயல்புகளை,

> பாகமாம் வகைநின்று திரோதான சக்தி
> பண்ணுதலால் மலம்எனவும் பகவர்; இதுபரித்து
> நாகமா நதிமதியம் பொதிசடையான் அடிகள்
> நணுகும்வகை கருணைமிக நயக்குந் தானே.[78]

எனவும்.

> முற்—சினமருவு திரோதாயி கருணை யாகித்
> திருந்தியசத் தினிபாதம் திகழு மன்றே[79]

எனவும் விளக்குவர் கொன்றவன் குடி உமாபதி தேவ நாயனார்.

மலங்களுள் ஆணவமலமே முதலாவது என்பதை அறிவாய். அஃது உயிர்க்குச் செம்பிற்குக் களிம்பு போல இயற்கைக் குற்றமாய், உயிர் என்று உண்டோ அதனோடு உளதாயிற்று என்பதும் உனக்குத் தெரியும். நோய் போல உள்ள ஆணவமலம் உயிர்கட்கு இயற்கையாய் இருப்பதால் அதற்கு மருந்துபோல் உள்ள கன்மமாயைகளும் அவ்வாணவ மலங் காரணமாக உயிர்கட்கு அன்றே உளவாயின. இஃது, அரிசி என்று உண்டோ அன்றே அதற்கு உமியும், தவிடும், முளையும் இருத்தல்போன்றது என்று விளக்குவர் சித்தாந்த ஆசிரியர்கள்.

---

78. சிவப்பிரகாசம்—20
79. ஷை—48

மும்மலம் நெல்லி னுக்கு
முளையொடு தவிடு மிப்போல்
மம்மர்செய் தணுவின் உண்மை
வடிவினை மறைத்து நின்று
பொய்மைசெய் போக பந்த
போத்திருத் துவங்கள் பண்ணும்
இம்மலம் மூன்றி னோடும்
இருமலம் இசைப்பன் இன்னும் [80]

மாயையின் காரி யத்தை
மாயேய மலம தென்றும்
ஏயும்மும் மலங்கள் தத்தம்
தொழிலினைச் செய்ய ஏவும்
தூயவன் றனதோர் சத்தி
திரோதான கரிய தென்றும்
ஆய்வர்; இம் மலங்கள் ஐந்தும்
அணுக்களை அணைந்து நிற்கும் [81]

*என்ற சித்தியாரின் செய்யுட்களையும் காண்க. இதில் நெல் என்றது அரிசியை என்று அறிக.*

மோகம்மிக உயிர்கள்தொறும் உடனாய் நிற்கும்
மூலஆ ணவம் ஒன்று; முயங்கி நின்று
பாகம்மிக உதவு திரோதாயி ஒன்று;
பகர்மாயை ஒன்று: படர்கன்மம் ஒன்று;
தேகமுறு கரணமொடு புவன போகச்
செயலாரும் மாயேயத் திரட்சி ஒன்று
ஆகமலம் ஐந்தென்பர்; ஐந்தும் மாறாது
அருள் என்ப தரிதென்பர் அறிந்துளோரே [82]

*என்ற சிவப்பிரகாசம் ஐந்து மலங்களையும் தொகுத்துக் கூறுவதைக் காண்க.*

---

*80. சித்தியார் 2, 86*
*81. ஷை 2. 87*
*82. சிவப் பிரகாசம்—32*

மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன்றன்.[83]

என்று மூன்று மலங்களைக் காட்டிய மணிவாசகப் பெருமானே,

மலங்களைந் தாற்கழல் வன்றயி
ரிற்பொரு மத்துறவே [84]

என்று ஐந்து மலங்களையும் காட்டிச் செல்வதையும் காண லாம். திருமூலரும்.

சிவமாகி ஐவகைத் திண்மலஞ் செற்றோர்
அவமாகார்; சித்தர்; முத் தாந்தத்து வர்ழ்வார்.[85]

என்று கூறுவதையும் காணலாம்.

மேற்காட்டிய சித்தியாரில் (2.86) முளை. தவிடு, உமி என்ற உவமைகள் முறையே கன்மம், மாயை, ஆணவம் என்பவற்றிற்கு உரியனவாகும். இங்ஙனமே போகம், பந்தம், போத்திருத்துவம் என்றவற்றையும் அவ்வாறே நிரல் நிரையாக கன்மம் போகத்தையும், மாயை பந்தத்தை யும்,ஆணவம் யோதத் திருத்துவத்தையும் பண்ணும் என்றே கொள்ளவேண்டும் என்பதையும் கண்டு தெளிக. இனி, ஈண்டுக் காட்டிய உவமைகளையும் பொருத்திக் காட்டி விளக்குவேன்.

முளை என்றது, முளைத்தல் சத்தியைக் கூறியவாறாம். கன்மம் முளைத்தல் சத்திபோல் நின்று போகத்தைப் பண்ணுதலாவது, முளைத்தல் சத்தி முளைக்கு முதற் காரணமாய் நின்று அதனைத் தோற்றுவித்தல் போல, கன்ம மலம் இன்பமும் துன்பமுமாகிய போகத்திற்கு-

83. திருவா. அச்சோபதிகம்—9

84. ஷெ. நீத்தல் விண்ணப்பம்—29

85. திருமந்திரம்—இரண்டாம் தந்திரம்—மூவகைச் சீவ வர்க்கம்—6

நுகர்ச்சிக்கு—முதற்காரணமாய் நின்று அவற்றை ஆன்ம அறிவின்கண் தோற்றுவிக்கும் என்பதை அறிக. மாயா மலம் தவிடுபோல் நின்று பந்தத்தைச் செய்தலாவது, தவிடு(முளைத்தற் சத்தி) முளையைத் தோற்றுவித்தற்குத் துணை புரிந்து நிற்பது போல, உயிர் இன்பதுன்பங் களாகிய போகங்களை நுகருமாறு அவற்றுக்குச் சார்பாய் உள்ள தனு, கரண, புவனபோகங்களைத் தந்து உயிரை அவற்றோடு பிணிப்புண்டு நிற்கச் செய்து துணைபுரித லாகும் என்பதை உணர்க. ஆணவமலம் உமிபோல் நின்று போத்திருத்துவத்தைப் பண்ணுதலாவது, உமி (முளைத்தற் சக்தி) முளையைத் தோற்றுவித்தற்கு அச்சத்தியைக் கெடாது காத்து நின்று நிமித்தமாதல் போல, இன்பதுன்பங்களைத் தோற்றுவிக்கின்ற கன்ம மலம் உயிரை விட்டு நீங்காதவாறு விருப்பு வெறுப்பு களால் உயிருக்கு நுகர்வோனாந் தன்மையைக் கொடுத்து அக்கன்மத்தை நிலைநிறுத்தி நிமித்தமாதலாகும். போத் திருத்துவம் என்பது, புசிப்போனாந் தன்மை. இவற்றை முன்னரும் விளக்கியுள்ளேன்.[86]

ஆகவே, 'முளைத்தல்' என்னும் செயலுக்கு முளைத்தற் சத்தி முதற் காரணமும், தவிடு துணைக் காரணமும், உமி நிமித்தகாரணமுமாதல் போல இன்ப துன்ப அநுபவமாகிய காரியத்திற்குக் கன்ம மலம் முதற் காரணமும், மாயா மலம் துணைக்காரணமும், ஆணவ மலம் நிமித்த காரணமு மாதல் தெளிவாகும். இன்னும், நிமித்த காரணம் இல்லாது முதற்காரணமும், துணைக் காரணமும் செயற்படாவாதலின் நிமித்தகாரணமாகிய ஆணவமலம் உள்ள வரையில் பலவகை உலகங்களில், பல வகைப் பிறப்புகளில் பிறந்தும் இறந்தும் இன்பதுன் பங்களை அநுபவிக்கின்ற பந்த நிலை நீங்காது என்பதும், ஆணவமலம் நீங்கும்பொழுது ஏனைய மலங்களும் நீங்க.

86. இயல்—4. கடிதம்—26, பக்கம்—(—194-95)

பிறப்பிறப்பாகிய பந்தமும் நீங்கி வீடுபேறு உண்டாகும் என்பதும் நன்கு புலனாவதை உணர்ந்து தெளிக.

இங்குக் குறிப்பிட்ட ஐந்து மலங்களும் நீங்காமல் இறைவன் திருவடிப் பேற்றை அடைதல் இயலாது. எனவே, இவை நீங்குவதற்கு வேண்டும் முயற்சியை மேற் கொள்ளலே உயிர்களின் கடமையாதல் தெளிக. இது காறும் எழுதிய பன்னிரண்டு கடிதங்களால் பாசங்களின் இயல்புகள் ஒருவாறு நன்கு விளக்கம் பெற்றிருக்கும் என்று கருதுகின்றேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திர மார்க்கம்
தாதமார்க் கம்என்றும் சங்கரனை யடையும்
நன்மார்க்கம் நால்அவைதாம் ஞான யோக
நற்கிரியா சரியையென நவிற்றுவதும் செய்வர்
சன்மார்க்க முத்திகள்சா லோச்சியசா மீப்பிய
சாரூப்பிய சாயுச்சியம் என்றுசதுர் விதமாம்
முன்மார்க்க ஞானத்தில் எய்து முத்தி
முடிவென்பர் மூன்றினுக்கும் முத்திபதம் என்பர்.[1]

சைவ சமய மேசமயம்;
சமயா தீதப் பழம்பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளிக்
காட்டும்; இந்தக் கருத்தைவிட்டுப்
பொய்வந் துழலும் சமயநெறி
புகுத வேண்டா; முத்திதரும்
தெய்வ சபையைக் காண்பதற்குச்
சேர வாரும்! செகத்தீரே![2]

---

1. சித்தியார் 8.18
2. தா. பா.-ஓடுங்கரையும்-2

36

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைந்திடுக.

ஆருயிர்கள் பாசத்தினின்றும் நீங்கிப் பதியினை அடைதற்குரிய சாதனத்தின் (வழியின்) இயல்பை விளக்குமாறு கேட்டிருந்தாய். அதுபற்றிய கருத்துகளை இக்கடிதத்திலும் இதனைத் தொடர்ந்து எழுதும் சில கடிதங்களிலும் விளக்குவேன்.

மும்மலங்கட்கு உட்பட்ட உயிர்கள் அம்மலங்களின் சார்பால் பலவகைப் பிறப்புகளை எய்தி பல நுகர்ச்சிப் பொருள்களை அடையும்; இதனால் பல இன்பதுன்பங்களை நுகர நேரிடும். மேலும், அந்நுகர்ச்சிக்கு ஏதுவான செயல்களைப் புரியுங்கால் துன்பங்கள் மிகுதியாயும் இன்பம் சிறிதாயும் இருத்தலைப் பலகாலும் உணரும். இந்த உணர்ச்சியின் காரணமாக துன்பம் நீங்குவதற்கும் துன்பங்கலவாத பெரிய இன்பத்தை அடைவதற்கும் வழி இல்லையோ என அவாவி நிற்கும். இங்ஙனம் அவாவும் நிலையை உயிர்க்குயிராய் நின்று அறியும் இறைவன் உணர்ந்து, அவ்வுயிர்களின் உணர்வு நிலைக்கேற்பச் சிற்சில நெறிகளை 'இதுவே நன்னெறி, இதுவே நன்னெறி' என உணருமாறு உள்நின்று—அந்தர்யாமியாக நின்று—உணர்த்துவன். இங்ஙனம் சிலருக்கு உணர்த்தியும் அவர்மூலம் அவரோடு ஒத்த பலருக்கு உணர்த்தவும் செய்வன். இவ்வழியில் தோன்றி நிலவி வருவனவே முதலும் வழியுமாய் மரபுநிலை திரியா மாட்சியினையுடைய மெய்ந்நூல்கள். இம்மெய்ந் நூல்களே வேதங்களும் சிவாகமங்களும் ஆகும். இவற்றுள் வேதங்கள் பொது நூல்கள்; ஆகவே அவை நன்னெறியைப் பொதுவகையாக உணர்த்தி, மெய்ந்நெறியிற்கொண்டு உய்க்கத்தக்க உலகியலில் நிறுத்தும். சிவாகமங்கள் சிறப்பு நூல்கள் ஆதலின், அவை நன்

னெறியைச் சிறப்புவகையான் உணர்த்தி, மெய்ந்நெறியிலே கொண்டு செலுத்தும்.

சிவாகமத்தால் பெறப்படுவதாய நெறி சைவம் எனப் படும். இந்நெறியில் சிவாகமத்தின் வழியமைந்த நெறி நான்கு. இவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று வழங்கப்பெறும்.

> சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கந்
> தாதமார்க் கம்என்றுஞ் சங்கரனை யடையும்
> நன்மார்க்கம் நால்அவைதாம் ஞான யோக
> நற்கிரியா சரியையென நவிற்றுவதுஞ் செய்வர்.[3]

என்ற சித்தியார் பாடலால் இதனை அறியலாம். சன் மார்க்கத்தை நன்னெறி என்றும், சகமார்க்கத்தைத் தோழமைநெறி யென்றும், சற்புத்திர மார்க்கத்தைப் புத்திரநெறி (மகன்மைநெறி) என்றும், தாதமார்க்கத்தைத் தொண்டு நெறி என்றும் கூறுவர்.[4] சரியை முதலிய மூன்றும் ஞானத்தை அடைவிக்கும்.[5] முத்தியாகிய பெரும் பயனுக்கு ஞானம் ஒன்றே வாயிலாகும். ஏனைய பலவும் ஞானத்தை அடைவதற்கு வழியேயன்றி நேரேவாயி லாவன அல்ல என்பதை அறிவாயாக. வேள்வி, தானம், பிற கருமங்கள், செபம், தீக்கை முதலிய எவையாயினும் அவையெல்லாம் ஞானத்தைத் தந்து, பின்னர் அதன்மூலம் முத்தியை நல்குமன்றி, அவை நேராக முத்தியைத் தருவ

---

3. சித்தியார்-8-18
4. சன்மார்க்கத்திற்கு மணிவாசகப் பெருமானையும், சக மார்க்கத்திற்கு சுந்தர மூர்த்தி அடிகளையும், சற்புத்திர மார்க்கத்திற்கு ஞானசம்பந்தரையும், தாதமார்க்கத்திற்கு திருநாவுக்கரசரையும் எடுத்துக்காட்டுகளாகக் கொள்வர் சைவநெறி யொழுகும் பெரியார்கள்.
5. வைணவத்தில் கருமயோகம் ஞானயோகம் என்பவை பக்தியோகத்தை விளைவிப்பது போல.

இல்லை. ஞானம் மும்மலங்களையும் அகற்றி உயிரைத் தூய்மைப்படுத்தும்; பின்னர் இயல்பாகவே தூயவனும், இன்பவடிவினனுமாய இறைவனை அடைவிக்கும்; துன்ப மற்ற—எல்லையில்லாத—அவனது பேரின்பத்தில் திளைத் திருக்கச் செய்யும்.

மேற்கூறியவற்றால், படிமுறையாகச் சென்று சைவத்தை அடைந்து அதன்கண் உள்ள நால்வகை நெறி களில் நிற்றலே உயிர் மும்மலங்களினின்றும் நீங்கி இன்புறு வதற்கு வழியாகும் என்பதைக் கருத்தில் இருத்துக. இதனை,

புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புகுந்தும்
புகல்மிருதி வழியுழன்றும் புகலும் ஆச்சிரம
அறத்துறைகள் அவையடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும்
அருங்கலைகள் பலதெரிந்தும் ஆரணங்கள் படித்தும்
சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்தும் சென்றால் சைவத்
திறத்தடைவர்; இதிற்சரியை கிரியா யோகம்
செலுத்தியபின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்.[6]

என்ற சித்தியாரின் திருவிருத்தத்தால் இனிதுஉணரலாகும். மேலும், 'சரியை முதலிய மூன்றும் ஞானத்தின் வளர்ச்சி நிலைகளே' என்ற பேருண்மையை,

விரும்பும் சரியைமுதல்
மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல்
அன்றோ பராபரமே.[7]

என்ற தாயுமான அடிகளின் திருவாக்காலும் ஒருவாறு உணர்ந்து தெளியலாம்.

---

6. சித்தி-8.11
7. தா. பா. பராபரக்கண்ணி-157

இவ்விடத்தில் இன்னொரு செய்தியையும் நீ அறிந்து தெளிதல் வேண்டும். முத்தி, மோட்சம், வீடு இச்சொற்கள் ஒரே பொருளைத்தான் குறிக்கும். இந்த நிலைக்கு மறு தலையான நிலை பந்தம் அல்லது கட்டு அல்லது தளை ஆகும். பந்தம் என்பது யாது? அஞ்ஞானத்தால் உயிர்கள் தமது அறிவு விழைவு செயல்கள் (ஞானேச்சாக்கிரியைகள்) முற்றிலும் செயற்படாமல் அல்லது நன்கு செயற்படாமல் கட்டுண்டு நிற்பதே பந்தம் என்பது. அந்தக் கட்டினின்றும் விடுபடுதலே வீடு அல்லது மோட்சம்—முத்தி. ஞானம் வாராதவரையில் அஞ்ஞானம் நீங்காது; அதனால் கட்டும் நீங்காது. எனவே, ஞானம் ஏற்படாதவரையில் முத்தியும் கிடைக்கமாட்டாது என்பது தெளிவு, இதனை மேலும் விளக்குவது இன்றியமையாததாகின்றது.

அஞ்ஞானம் இருள் போன்றது; ஞானம் ஒளிபோன்றது. ஒளி வந்தாலன்றி இருள் நீங்காதன்றோ? அதுபோல ஞானம் வந்தாலன்றி அஞ்ஞானம் நீங்காது. ஒளி வருங்கால் இருள் தானே நீங்கிவிடுதல் போல, ஞானம் வருங்கால் அஞ்ஞானம் தானே நீங்கும்; முத்தியும் எளிதில் கைகூடும். ஆகவே, ஞானம் தவிர வேறெதனாலும் முத்தியை அடைதல் இயலாது என்பதை உணர்ந்து தெளிக. இதனை,

'ஞானத்தால் வீடு' என்றே நான்மறைகள் புராணம்
நல்லஆ கமம்சொல்ல 'அல்லவாம்' என்னும்
ஊனத்தார் என்கடவர்? அஞ்ஞா னத்தால்
உறுவதுதான் பந்தம்; உயர்மெய்ஞ் ஞானத்தான்
ஆனத்தால் அதுபோவது; அலர்கதிர்முன் இருள்போல
அஞ்ஞானம்விட பந்தம்அறும்; முத்தி ஆகும் [8]

என்ற சித்தியாரின் செய்யுட்பகுதியாலும் தெளிவு பெறலாம். இங்ஙனமே தாயுமான அடிகளும்,

---

8. சித்தி .8-27.

மூர்த்திதலம் தீர்த்தம்
முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தைச்சொலச் சற்குருவும்
வாய்க்கும் பராபரமே.[9]

என்று விளக்குவர். சற்குருமூலம்தான் ஞானம் பெறல் முடியும் என்பது அடிகளாரின் உள்ளக் கிடக்கையாகும் என்பதை நீ உணர்தல் வேண்டும்.

தானேயும் இவ்வுலகம் ஒருமுதலு மாகாத்
தன்மையினால் படைத்தளிக்கும் தலைமையது வான
கோனாக ஒருமுதல்இங் குண்டெனவும் யூகங்
கூட்டியதும் சகமுடிவில் குலவுறுமெய்ஞ் ஞான
வானாக அம்முதலே நிற்கும்நிலை நம்மால்
மதிப்பரிதாம் எனமோனம் வைத்ததும்உன் மனமே
ஆனாலும் மனச்சடம்என் றழுங்காதே உண்மை
அறிவித்த இடம்குருவாம் அருள்அலதொன் றிலதே.[10]

என்றபாடலால் 'உண்மையை அறிவித்தது குருநாதரே என்று கூறுதல் காண்க. குருவருளால்தான் தமக்கு நிட்டை நிலை கைவரப்பெற்றது என்பதை.

சித்த மவுனி; வடபால்
மவுனி நம்தீப குண்ட
சுத்த மவுனி, எனுமூவ
ருக்குத் தொழும்புசெய்து
சுத்த மவுன முதல்மூன்று
மவுனமுந் தான்படைத்தேன்
நித்த மவுனமல் லால்அறி
யேன்மற்ற நிட்டைகளே.[11]

என்ற பாடலால் தெரிவிப்பதைக் கண்டு தெளிக. இதனையே,

9. தா. பா. பராபரக்கண்ணி-156
10. ஷை நினைவொன்று-9
11. ஷை பாயப்புலி-26

தானம் தவம்தருமஞ்
சந்ததமும் செய்வர், சிவ
ஞானந் தனை அணைய
நல்லோர் பராபரமே.[12]

என்ற மற்றோர் கண்ணியாலும் அரண் செய்வதைக் கண்டு தெளிக. மேற்கூறியவை யாவும் ஞானத்திற்கு வாயிலாய் அமைந்து ஞானத்தைத் தோற்றுவித்து, அதன் பின்னர் முத்தியை நல்கும் என்பதே கருத்தாதல் அறிக.

அன்பன்,
கார்த்திகேயன்.

# 37

அன்பு நிறைந்த கண்ணுதல்ப்பனுக்கு,

நலன். நலனே விளைந்திடுக.

நீ எழுதிய சென்ற கடிதத்தில் ஞானம் வருவதற்குரிய வழியை விளக்குமாறு கேட்டிருந்தாய். அதனை ஈண்டு விளக்குவேன்.

ஞானம் வருவதற்கு முதற்கண் அந்த ஞானத்தைப் பெறுதலில் வேட்கை—அவா—உண்டாதல் வேண்டும். பசி யற்றவனுக்கு உணவு பயன் தராது; நீர் வேட்கை இல்லாத வனுக்கு நீர் பயன் தருவதாகாது. இங்ஙனமே ஞான வேட்கை இல்லாதவனுக்கு—ஞானத்தை அவாவி நிற்காத வனுக்கு—ஞானம் பயன் படாது. ஆகவே, ஞானம் வரு வதற்கு முதற்கண் அதனைப் பெறுவோனிடத்தில் அது பற்றிய வேட்கை உண்டாதல் வேண்டும்.

12. ஷ. பராபரக்கண்ணி-158

ஆணவமலத்தைப்பற்றி முன்னர் ஓரிடத்தில் குறிப்பிட்டேனன்றோ? அதனை ஈண்டு நினைவுகூர்க. செம்பினிற் களிம்புபோல உயிருடன் அநாதியே கலந்திருக்கும் இம் மலம் ஞானத்தில் வேட்கை யுண்டாகாதபடி உயிர்களின் அறிவைத் தடுத்து வைத்திருக்கும். இந்த ஆணவ மலம் என்றும் அழிவதில்லை என்பதையும் அறிவாய். ஆயினும், அது சடமாதலால், உயிர்களின் அறிவைப் பிணித்துவைத்திருக்கும் அதனது ஆற்றல் அதனது மறுதலைப் பொருளின் ஆற்றலால் நாளடைவில் மெலிவடைந்து, பிணிக்கும் நிலையினின்று நீங்குவதாகும். இந்நிலையே 'மலபரி பாகம்' என்று வழங்கப்பெறுவது. சித்துப் பொருளின் ஆற்றல் மெலிவடையாதிருத்தலையும் சடப்பொருளின் ஆற்றல் மெலிவடைவதையும் நீ அறிவாய்.

ஆணவமலம் இங்ஙனம் பரிபாகமாதற் பொருட்டே இறைவன் அதற்கு மறுதலைப் பொருள்களாகிய கன்மம், மாயை என்பவற்றை உயிர்களுக்குக் கூட்டி பிறப்பிறப்புகளில் சென்று கன்மங்களை ஈட்டி அவற்றின் பயனாக இன்பதுன்பங்களை நுகரச் செய்கின்றான். இதனால்மறைக்கும் தன்மையுடைய ஆணவமலத்தின் ஆற்றல் சிறிது சிறிதாகத் தேய்கின்றது; உயிர்களின் அறிவும் சிறிது சிறிதாக விளக்கமும் பெற்று வருகின்றது. ஆணவமலத்தின் ஆற்றல் மெலிவடைதலாகிய மலபரிபாகம் வந்தால், 'இருவினையொப்புத்' தோன்றும்.

இந்த 'இருவினை யொப்பு' என்பது என்ன? என்பதை ஈண்டு விளக்குவது இன்றியமையாததாகின்றது. ஒருவன் தான் செய்த நல்வினைப் பயனாகிய இன்பத்திலும் தீவினைப் பயனாகிய துன்பத்திலும் உள்ளம் வேறுபடாதிருப்பதே இது. அஃதாவது, இன்பத்தில் விருப்பமும் துன்பத்தில் வெறுப்பும் கொள்ளாது இரண்டையும் சமமாக நுகரும் நிலை என்று விளக்கலாம். சேக்கிழார் பெருமான் சிவனடியார் மன நிலையை.

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்[13]

என்று விளக்குவார். தாயுமான அடிகளும்,

"ஓடும் இருநிதியும் ஒன்றாகக் கண்டவர்கள்"[14]

என்று சுட்டிக் காட்டுவர்.

இந்த இருவினையொப்பு வாய்த்தபிறகு சத்தி நிபாதம் உண்டாகும். இந்த சத்தி நிபாதம் என்பது என்ன? கூறு வேன்; திரோதானமாய் நின்று மறைப்பைச் செய்து வந்த இறைவனது சக்தி மலபரிபாகம் உற்ற நிலையில் அருட் சக்தியாக மாறி ஆன்மாவிடத்துப் பதிதலே 'சத்தி நிபாதம்' என்பது. நிபாதம், வீழ்ச்சி 'சித்தி, பதிதல்' என்று சொல்லாமல் 'சக்தி வீழ்தல்' எனக் கூறியதன் கருத்துதான் யாது? ஓர் அவையிடை திடீரென்று ஒரு கல் விழுமாயின், அங்குள்ளாருக்கு ஓர் அதிர்ச்சியை உண்டாக் குமன்றோ? அங்ஙனமே, திரோதன சக்தி அருட் சக்தி யாகப் பதியும்பொழுது அப்பதிவு ஆன்மாவிற்கு உலகி யலில் ஓர் அதிர்ச்சியை உண்டாக்கும். இதுபற்றியே இந் நிலை 'சத்தி நிபாதம்' என வழங்கப்பெற்றது என்பதை அறிக. உலகியலில் உயிர்கள் தீயன செய்யாது நல்லன செய்யக் கருதுதல் சத்தி நிபாதம்வழி நிகழ்வதேயாகும் என்பதையும் தெளிக.

அரசன் ஆணைக்கு அஞ்சியேனும், தம் சொந்த நலன் கருதியேனும் செய்யும் நல்வினைகள் மனத்தொடு பொருந்தாமையின் அது மல சக்தியின் காரியம் ஆவதே யன்றிச் சத்தி நிபாதத்தால் ஆவதன்று. அன்பும் அருளும் பற்றிச் செய்யும் நல்வினைகள் யாவும் சத்தி நிபாதத்தால் ஆவனவாகும். ஆயினும், கடவுட் கொள்கையின்றிச் செய்யப்படுமாயின், அவை பிறவி நீங்கும் வழியாகா.

13. பெரி. புரா. திருக்கூட்டச் சிறப்பு—8
14. தா. பா. பராபரக்கண்ணி—16

ஆகவே, அவையும் மல சக்தியின் காரியமாகவே முடியும் என்பதையும் உளங் கொள்வாயாக.

மேற் கூறப் பெற்ற 'மல பரிபாகம்' பல்வேறு வகைப்பட நிகழுமாதலின் அவற்றிற்கேற்பச் சத்தி நிபாதமும் பல்வேறு வகைப் பட நிகழும் என்று சித்தாந்த நூல்கள் பகரும் அவை மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிர தரம் எனப் பெரும்பான்மையாக நான்கு வகைப்படுத்திக் கூறப் பெறும். ஏனைய பலவற்றையும் மந்ததரத்தில் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம்; மந்தத்தில் மந்ததரம்,மந்தம், தீவிரம், தீவிர தரம் என்றாற்போல ஒவ்வொன்றிலும் நந்நான்காகவும், பின் அவற்றுள்ளும் ஒவ்வொன்றும் நந் நான்காகவும் பலபட விரித்துக் கூறுவர். மந்ததரம் முதலிய நால்வகைச் சத்தி நிபாதத்தால் முறையே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன நிகழும்! அவையும் சத்தி நிபாதம் போலவே சரியையிற் சரியை, சரியையிற் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் என்றாற் போல ஒவ்வொன்றும் நந்நான்கு வகையாய், மேலும் அவை நந்நான்கு வகையாய் இங்ஙனம் அளவின்றி விரிந்து நிற்கும். இங்ஙனம் பலபட விரிந்து நிற்கும் சரியை முதலிய வற்றால் ஆன்மாவின் அறிவு விரிந்து விளங்கி உண்மையை உணருந் தன்மையை அடையும். இறுதியாக அது இறைவனது முற்றும் உணர்தல் முதலிய எண் குணங்களும் தன்னிடத்து விளங்கி நிற்க, தான் சிவமேயாகின்ற பெரு முத்தி நிலையை எய்தும் என்பதை அறிந்து தெளிக.

சத்தி நிபாதத்தின் பயனாக நிகழ்வதே தவம். சிவ பெருமானை நோக்கிச் செய்யும் செயல்களே தவமாகும் என்பதை உலங்கொள்க. 'சிவத்தைப் பேணின் தவத்திற்கு அழகு'[15] என்ற ஔவைப் பாட்டியின் வாக்கையும் சிந்திக்க. 'தவத்தோர்' எனப்படும் துறவிகளது செயலாகிய கடவுள் வழிபாடே 'தவம்' என்பதாகும் என்பதைத்

15. கொன்றை வேந்தன்—28

தெளிக. தவம் செய்வது எற்றுக்கு? துன்பத்தை நீக்கிக் கொள்வதற்கும் இன்பத்தைப் பெறுவதற்குமே தவம் செய்கின்றனர். துன்பங்கள் எல்லாவற்றிலும் மிகப் பெரிய துன்பம் பிறவித் துன்பம். இதனைப் வள்ளுவப் பெருந்தகை 'பிறவிப் பெருங் கடல்'[16] என்று பேசுவார். இன்பங்கள் எல்லாவற்றிலும் மிகப் பெரிய இன்பம் வீடு பேறு எய்துதல்; முத்தி, இன்பம், இந்தப் பிறவித் துன்பத்தைக் கெட்டொழிப்பவனும், முத்தியின்பத்தை நல்குபவனும், 'பிறவாயாக்கைப் பெரியோனாகிய' சிவபெருமான் ஒருவனே யாவான். துன்பத்தை ஓட்டுகின்ற காரணத்தால் 'உருத்திரன்' என்றும், இன்பத்தைத் தருகின்ற காரணம் பற்றியே 'சங்கரன்' 'சம்பு' என்றும் பெயர்களைப் பெறுகின்றான் சிவபெருமான் என்பதை மனத்தில் பதித்திடுக. சிவபெருமானை நோக்கிச் செய்யும் தவம் வேறு பயன்களையும் தரும்; முத்திக்கு ஏதுவாயும் நிற்கும். இது பற்றியே மெய்கண்டார் இத்தவத்தை 'இறப்பில் தவம்' என்று கூறுவர்.

இன்னொரு முக்கிய கருத்தையும் இவ்விடத்தில் விளக்கவேண்டியது இன்றியமையாததாகின்றது. 'சிவபெருமான் ஒருவனே பதி; ஏனை யாவரும் பசுக்கள்' என்பதை நீ நன்கு அறிவாய். அதனால் சிவபெருமானை நோக்கிச் செய்யப்பெறும் நற்செயல்கள் 'பதிபுண்ணியங்கள்' எனப்படும். இவை 'சிவபுண்ணியங்கள்' எனவழங்குதலும் இயல்பேயாகும். சிவபெருமானைத் தவிர, பிற கடவுளரை நோக்கிச் செய்யப்பெறும் புண்ணியங்கள் 'பசுபுண்ணியங்கள்' என்று வழங்கப் பெறும். சிவபுண்ணியங்களே அழிவின்றி நின்று நிலைத்து முத்தியைத் தருவனவாகும். பசுபுண்ணியங்கள் அவ்வாறின்றித் தமக்குரிய சில பயன்களைத் தந்து அழிந்துபடும். அவை அழியவே, அவற்றின் பயன்களும் அழிந்தொழியும். அதனால் அவற்றைச் செய்தாரைத் துன்பங்கள் மீளவும் வந்து பற்றும்.

---

16. குறள்—10

ஆகவே, பசு புண்ணியங்களைச் செய்தல் இவ்வுலக உணவை உண்டு பசி தணிதல் போல்வதாகும். 'பசித்துண்டு பின்னும் பசிப்பானை பொக்கும்-இசைத்து வருவினையில் இன்பம்'[17] என்பர் மெய் கண்டார். இதனைச் சிந்தித்து உணர்க: மகிழ்க.

சிவபுண்ணியங்களோ அங்ஙனம் அன்று. உம்பர் உலக உணவாகிய அமுதத்தை உண்டது போல்வன அவை. அமுதத்தை உண்டால் அஃது அழிவதில்லை. உண்டார்க்கு அது பசியைப் போக்குதலே யன்றி, நரை திரை மூப்பு சாக்காடு என்பவற்றையும் நீக்கி நீடிய வாழ்வையும் அளிக்கும். இது போன்றனவே சிவ புண்ணியங்கள். அதனால் இவை தம்மைச் செய்தார்க்கு வேண்டுவன வற்றையெல்லாம் நல்கி 'பின் அந்தமில் இன்பத்து அழி வில் வீட்டையும்' தரும். எனவே இவையே மேற் கொள்ளற் பாலன என்பதை அறிந்து தெளிவாயாக.

மக்களும் பிற உயிர்களுமாகிய பசுக்களிடத்தில் அன்பும் அருளுங் கொண்டு அவற்றிற்கு நலம் செய்யும் போது அவற்றையே நினைந்து செய்யுங்கால் அவை பசு புண்ணியங்களாகும். இவற்றைச் சிவபிரானை மறந்து செய்யாமல் நினைந்து செய்யுங்கால் இவை சிவ புண்ணியங் களாகும் என்று சைவ சித்தாந்தம் கூறுகின்றது. இதனை யும் நீ உளங்கொள்ளுதல் வேண்டும். எல்லாச் சமயங் களும் உயிர்களின் அறிவு நிலைக்கேற்ற படிகளாக இறைவன் திருவுள்ளத்தில் அமைந்தன என்பதே சைவ சமயத்தின் உட்கிடையாகும்.

துணைநன்மல தூய்த்தொழுந் தொண்டர் சொல்லீா
பணை மென்முலைப் பார்ப்பதி யோடுடனாகி
இணையில்இரும் பூளை யிடங்கொண்ட ஈசன்

17. சி. ஞா. போ. சூத். 8. அதி. 1.

அணைவில் சமண் சாக்கியம் ஆக்கிய வாறே.[18]

போதியாரும் பிண்டியாரும் புகழல சொன்னாலும்
நீதியாகக் கொண்டங்கருளும் நிமலன்.[19]

என்ற ஞான சம்பந்தப் பெருமானின் திருவாக்குகளாலும்,

விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்து
எரிவினாற் சொன்னா ரேனும் எம்பிராற் கேற்றதாகும்.[20]

என்ற நாவுக்கரசரின் திருமொழியாலும் இதனை அறியலாம்.[21]

பிறிதோர் இடத்தில் அப்பர் பெருமான்,

இரப்பவர்க் கீய வைத்தார்;
ஈபவர்க் கருளும் வைத்தார்;
கரப்பவர் தங்கட் கெல்லாம்
கடுநர கங்கள் வைத்தார்.[22]

என்ற தம் திருப்பாடற் பகுதியால் 'புண்ணிய பாவங்கள் அனைத்தும் சிவபெருமானின் ஆணையே என உணர்தல் வேண்டும்' என்று அறிவுறுத்தலையும் காணலாம். தாயுமான அடிகளும்,

---

18. தேவா. 2.36:10
19. ஷை .1.66:10
20. ஷை 4.60:9
21. இத்தகைய ஒரு கருத்து வைணவ சமயத்திலும் உண்டு.

நும்இன் கவிகொண்டு நும்இட்
டாத்தெய்வம் ஏத்தினால்
செம்மின் சுடர்முடி என்திரு
மாலுக்குச் சேருமே,

என்ற நம்மாழ்வாரின் (3.9:6)திருவாய் மொழியில் இதனைக் காணலாம்.

22. தேவா -4.38:10

அன்பர்பணி செய்யஎனை
ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந்து
எய்தும் பராபரமே.[23]

என்று கூறியிருப்பது மேற்கூறிய கருத்திற்கு அரணாக அமைகின்றது.

அருணகிரி நாதரும்,

வெயிற் கதிர்வடி வேலோனை
வாழ்த்தி வறிஞர்க் கென்று
நொய்யிற பிளவள வேனும்
பகிர்மின்கள்.[24]

என்றும்,

கெடுவாய் மனனே கதிகேள்; கரவாது
இடுவாய்; வடிவே லிறைதாள் நினைவாய்.[25]

என்றும் கூறியுள்ளமை இக் கருத்துபற்றியே என்பதை உணர்வாயாக. இவையெல்லாம் 'பதி புண்ணியங்களே செயற்பாலன' என்பதன் கருத்தை தவறுபட உணராமல், நன்கு உணர்ந்து கொள்ளத் துணை புரிகின்றனவன்றோ?

எனவே, நீ ஈண்டு அறிய வேண்டியவை: ''சிவ பெருமானை நினையாது செய்யும் எச்செயல்களும் 'வினை' எனப் பட்டு பிறவிக்கு வித்தாகும். இவற்றையே சிவபெருமானை நினைந்து செய்யின் இவை 'தவம்' எனப்பட்டு முத்திக்கு வித்தாக அமையும். இதுபற்றியே 'பதி

23. தா. பா:பராபரக்கண்ணி-155
24. கந். அலங்.18
25. கந். அநு.7

புண்ணியங்களே செயற்பாலன' என்கின்றன சிவநெறி நூல்கள்." இவற்றை நீ நன்கு உளத்தில் பதிவித்துக் கொள்வாயாக.

அன்பன்,
கார்த்திகேயன்.

# 38

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலம். நலம்பல விளைவதாகுக.

இக்கடிதத்தில் சிவ புண்ணியத்தின் வகைகளை விளக்குவேன். மனம் மொழி மெய்களால் சிவ பெருமானை நோக்கிச் செய்யப்பெறும் செயல் யாவும் சிவ புண்ணியங்களே என்பதை நீ நன்கு அறிவாய். ஆயினும் அவை அனைத்தும் சரியை, கிரியை, யோகம் என மூன்றாக வகுக்கப்பெற்றுள்ளன. இவற்றை விளக்குவது இன்றியமையாததாகின்றது.

சரியை : இறைவன் 'ஆண்டான்' என்பதையும் 'உயிர்கள் அவனுக்கு அடிமை' என்பதையும் நீ நன்கு அறிவாய். இந்த ஆண்டான்—அடிமை நிலை எக்காலத்திலும் (பெத்தம்[26] முத்தி என்ற இரு நிலையிலும்) உள்ளதாகும் என்பதும் உனக்குத் தெரியும். அதனால், உயிர்கள் இறைவனை உணர்ந்து அவனுக்குப் பணி செய்து மகிழ நினைக்கும் காலமே அவற்றிற்கு உய்தி கூடும் காலமாகும் என்பதை உணர்வாயாக. ஆகவே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்குமே இறைவனுக்கு உயிர்கள் செய்யும் பணிகளாகும் என்பதைத் தெளிவாயாக.

26. பெத்தம்—கட்டுண்ட நிலை

'பணிகள்' என்றவுடன் உலகத் தலைவர்கட்கு ஏவலாளர்கள் புரியும் பணிகளை ஒத்ததன்று இப்பணிகள். காரணம், இறைவன் உலகத் தலைவர்கள்போல் குறையுடையவன் அல்லன்; அவன் வரம்பில் இன்பம் உடையவன்; வேண்டுதல் வேண்டாமை அற்றவன். ஆதலால் அவனுக்குப் பணியாளர் சிலரோ பலரோ அவன்முன் நின்று பணி புரிந்து குறை நிரப்ப வேண்டிய இன்றியமையாமை சிறிதும் இல்லை. ஆயினும், அவன் உலகத் தலைவர்கள்போல் சில பணிகளை ஏற்படுத்தி வைத்திருப்பதும், அவற்றை உயிர்கள் புரியுமாறு வலியுறுத்துதலும் அவ்வுயிர்களின் நலங்கருதியேயன்றித் தன்னலம் கருதியன்று என்பதை நன்கு உளங்கொள்வாயாக.

செங்கோல் நடத்தும் அரசன் (மக்களாட்சியில் முதல் அமைச்சன்) ஒருவன் நாட்டில் பலவகைப் பணித்துறைகளை அமைத்து அவற்றை ஏற்றபெற்றியால் இயற்றுவித்துப் பலரையும் செவ்வனே பணி புரியுமாறு வலியுறுத்துதல் குடி மக்களின் நன்மை கருதியதேயன்றி தன் நலம் கருதியன்று என்பது உண்மை. அவ்வாறே எல்லாம் வல்ல இறைவன் வலியுறுத்தும் பணியையும் ஒப்பு நோக்கி உணர்ந்து கொள்க. எனினும், அரசன் (முதல் அமைச்சன்) குறையுடையவன்: ஆகவே தன் நலத்திற்காகவும் ஆட்சிப் பொறியைப் பயன்படுத்திக் கொள்வான். குடியாட்சி நடைபெறும் நாடுகளில் காணும் அக்கிரமங்கட்கெல்லாம் காரணம் இவனுடைய தன்னலச் செயல்களின் பரிணாமமேயாகும் என்பதை இன்று பாமரனும் அறிந்து கொள்ளுகின்றான். எனவே, அரசன் (முதல் அமைச்சன்) பணியாகிய எடுத்துக்காட்டினைத் தன் நலம் கருதாது இயற்றுவிக்கும் அளவில் கொண்டு இறைவன் பணியை உளங்கொள்க.

உயிர்கள் இயல்பாகவே ஆணவ மலத்தால் மறைக்கப்பட்டுத் தம் அறிவை இழந்து கிடக்கும் என்பதை நீ நன்கு அறிவாய். இந்நிலையில் உயிர்கள் அந்த ஆணவ மலம் பரிபாகமான நிலையை அடைந்தாலும் இறைவனது

நுண்ணிய நிலையை அறியும் ஆற்றலை உடையன ஆக மாட்டா. அதனால், முதற்கண் அவனைப் பரு நிலையில் (தூல நிலையில்) பொதுவாக உணர்ந்து, பிறகு நுண்ணிலையில் சிறப்பாக உணரும். பரு நிலையில் பொதுவாக உணருங்கால் செய்யும் பணிகளே சரியை முதலிய மூன்றும். நான்காவது படியான ஞானம் இறைவனை நுண்ணிலையில் உண்மையாக உணர்ந்து நிற்கும் பணியாகும் என்பதை உணர்க.

முதற்கண் தமது இறைவன் நுண்ணிலையை உணர மாட்டாத உயிர்கள் தன்னைப் பருநிலையாக உணர்தற் பொருட்டே, வடிவம் அற்ற தனது உண்மை நிலையினின்றும் இறங்கி வடிவம் உடையவனாய்ப் பொதுநிலையில் நிற்கின்றான். அந்த வடிவம் உருவம், அருவுருவம், அருவம் என்ற மூன்று வகையினையுடையது என்பதை முன்னரே விளக்கியுள்ளேன்.[27] இறைவனது வடிவம் 'திருமேனி' என்று போற்றப்படும். மூவகைத் திருமேனிகளுள் உருவத் திருமேனிகளைத் தீண்டி வழிபடுதலும் திருமேனிகளின் வழிபாட்டிற்குத் தேவையானவற்றை அகல நின்று செய்தலும் சரியை எனப்படும். உமாமகேசர், சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், நடராசர் முதலிய வடிவங்களேயன்றி ஆசான் மூர்த்தியும், அடியார்களும் கூட இறைவனது உருவத் திருமேனிகளேயாகும் என்பதை நீ அறிதல் வேண்டும். இத்திருமேனிகள் அனைத்தும் 'மாகேசுவர மூர்த்தம்' என வழங்கப்படும். ஆதலின் மாகேசுவர பூசை அனைத்தும் சரியைத் தொண்டுகளில் அடங்குகின்றன.

திருக்கோயிலில் இலிங்க மூர்த்தி முதலிய அனைத்து மூர்த்திகளையும் வழிபடும் முறைகளும் சரியையில் அடங்கும். திருக்கோயில்களில் மூர்த்திகளை அகல நின்று வழிபடுதல், அங்கு நிகழும் வழிபாட்டிற்கு ஆகுமாறு நந்தவனம் வைத்தல், பூக்கொய்து கொடுத்தல், பூமாலை

27. இயல்—2; கடிதம்—11; பக். (80—82)

பூச்சரம் இவற்றைத் தொடுத்துத் தருதல், திருக்கோயில் திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், உழவாரப் பணி செய்தல், பழங்கோயில்களை வேண்டிய அளவிற்குப் புதுக்கித் திருப்பணி செய்தல்,[28] நித்திய நைமித்திக வழிபாடுகளைச் செய்வித்தல், அவற்றிற்குத் தேவைப்படும் குடம், கவசம், தீபக் கால்கள், விசிறி, கண்ணாடி முதலியன ஆக்கித் தருதல், சிவ புராணங்களையும் அடியவரது வரலாறுகளையும் கேட்டல், தீர்த்த யாத்திரை, திருத்தலப் பயணம் முதலியவற்றையே மேற்கொள்ளல் முதலிய இன்னோரன்ன பலவும் சரியையைச் சார்ந்த திருத்தொண்டுகளாகும். இதனை,

தாதமார்க் கம்சாற்றில் சங்கரன்தன் கோயில்
 தலம்அலகிட் டிலகுதிரு மெழுக்கும் சாத்திப்
போதுகளும் கொய்துபூந் தார்மாலை கண்ணி
 புனிதர்க்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதில்கிரு விளக்கிட்டுத் திருநந்த வனமும்
 செய்துதிரு வேடய்கண் டாங்அடியேன் செய்வது
யாதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியும்
 இயற்றுவதில் சரியைசெய்வோர் ஈசனுல கிருப்பர்.[29]

என்று சித்தியார் விளக்கிக் கூறும். அப்பர் பெருமான் இம்முறைக்கு எடுத்துக் காட்டாகின்றார். சுருங்கக் கூறின், "புறத்தொழில் அளவில் இறைவனது உருவத் திருமேனியை நோக்கிச் செய்யப்படுவன பலவும் சரியை" யில் அடங்குகின்றன என்று கூறலாம். திருக்கோயிலிலுள்ள இலிங்கம் அருவுருவத் திருமேனியையும் புறத்தொழிலளவில் வழிபடுவதால் அவ்வழிபாடும் சரியையில் அடங்கி விடுகின்றது என்பதையும் உளங்கொள்க.

28. நாட்டுக் கோட்டைத் தனவணிகர்கள் இப்பணியில் முன்னணியில் நிற்கின்றனர் என்பது உலகறிந்த உண்மை.

29. சித்தியார்—8,19

இவ்வழிபாட்டுள் திருக்கோயிலில் திருவலகிடுதல் முதலாயின சரியையில் சரியை எனவும், ஒரு மூர்த்தியை வழி படுதல் சரியையிற் கிரியை எனவும், வழிபடு கடவுளையும் சிவபெருமானையும் தியானித்தல் சரியையில் யோகம் என வும் கொள்ளப்படுகின்றன. இச் செயல்களால் ஓர் அநுபவம் வாய்க்கப் பெறுதல் சரியையில் ஞானம் ஆகும் என்பதையும் அறிக.

கிரியை: இதனை விளக்குவேன். சிவபெருமானின் அறிவுருவத் திருமேனியாகிய இலிங்க மூர்த்தத்தை அணுகி யிருந்து அதன்கண் அப் பெருமானை 'மந்திரம், கிரியை, பாவனை' என்ற மூன்றினாலும் அகத்திலும் புறத்திலும் பலவகை உபசாரங்களையும் முறைப்படி செய்து வழிபடு தலே கிரியை என்பது. திருமுழுக்கு (அபிடேகம்), ஆடை, அணிகலன், சந்தனம், மலர் முதலியவற்றால் செய்யும் ஒப்பனை (அலங்காரம்), படையல் (நிவேதனம்), புகை, ஒளி (தூபம், தீபம்), குடை, கொடி, கண்ணாடி, கவரி முதலிய மங்கலப் பொருள்கள் இவற்றை ஏற்பித்து, வலம் (பிரதட்சிணம்) செய்தல், அடிபணிதல் (நமஸ்காரம்), புகழ்ச்சி (தோத்திரம்) என்பவற்றைச் செய்து வேண்டி (பிரார்த்தித்து) நிற்றல் என்னும் இவ்வகை அணுக்கத் தொண்டுகள் கிரியையுள் அடங்கும். சரியை நிலையிலும் திருமுழுக்கு முதலியவற்றைச் செய்யினும் அவை மேற் குறிப்பிட்ட மந்திரம் மூன்றானும் அகத்தும் புறத்தும் நிகழாது, செயலளவில் புறத்து மட்டிலும் நிகழ்தலின் அவை 'கிரியை' எனப்படுதல் இல்லை.

இதனை மேலும் சற்றுத் தெளிவாக்குவேன். உபாசனை முதலாக வரும் காரியங்களின் தொகுப்பை யுடையது கிரியை என்று கூறலாம். பக்தன் தன்னைப் பரமபதத் தந்தையின் தொண்டுக்காகப் பயபக்தியுடன் கட்டுப்பாடு கடமை உணர்வுள்ள மகனாகக் கருதிப் பணிந்து ஒழுகு கின்றான். ஆகவே, அவன் தன் நேரம் முழுவதையும், இறை வனுக்குப் பணி செய்வதிலேயே கழிக்கின்றான்.

நம்கடம்பனைப் பெற்றவன் பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன் அடி யேனையும் தாங்குதல்
என்கடன்பணி செய்துகி டப்பதே.[30]

என்று தனது கடமை இறைபணி செய்வதே என வாழ்தல் முதல் மார்க்கத்தை விட மிகவும் நெருங்கிய அன்புடன் பணிவிடை செய்வதாகும். இம் மார்க்கத்தின் பயனாகக் கடவுளருகில் செல்லலாம். அகந்தையையும் மமகாரத்தை யும் தகர்த்தெறிய வல்லது கிரியா மார்க்கமாகும். அருணந்திதேவ நாயனாரும் இதனை,

புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப் போது
புகையொளிமஞ் சனமுமது முதல்கொண் டைந்து
சுத்திசெய் தாசனமூர்த்தி மூர்த்தி மானாஞ்
சோதியையும் பாவத்தா வாகித்துச் சுத்த
பத்தியினா லருச்சித்துப் பரவிப் போற்றிப்
பரிவினொடு மெரியில்வரு காரியமும் பண்ணி
நித்தலுமிக் கிரியையினை யியற்று வோர்கள்
நின்மலன்ற னருகிருப்பர் நினையுங் காலே.[31]

என்று விளக்குவர். ஞானசம்பந்தரை இம் முறைக்கு எடுத்துக் காட்டாகக் கொள்வர் சைவப் பெருமக்கள்.

திருக்கோயில்களில் விளங்கும் இலிங்கத் திருமேனிகள் ஊரும் நாடும் ஆகிய உலகனைத்தின் பொருட்டாகும். ஆகவே, அங்கு பிறர் பொருட்டாகச் (பரார்த்தமாகச்) செய்யப்படும் வழிபாடு நடைபெறும். எனவே, அவரவரும் தம் பொருட்டாக (ஆன்மார்த்தமாக)ச் செய்யவேண்டிய வழிபாட்டினை இல்லத்தில் நிகழ்த்தலாம். இம் முறையில் வழிபாடு இயற்றுவோர் ஆசாரியர்வழியே இலிங்கத் திருமேனியைப் பெற்று, அவர்பால் வழிபடும் முறைகளைச்

30. தேவாரம். 5-19 : 9
31. சித்தியார்—20

செவ்வனே அறிந்துகொண்டு, அதன்படியே செய்தல் வேண்டும் என்பது அறியத்தக்கது.

மேற்குறிப்பிட்ட இரண்டிடத்தும் பூசைக்குரிய மங்கலப் பொருள்களைத் திரட்டுதல் கிரியையில் சரியை, புறத்தில் பூசித்தல் கிரியையில் கிரியை, அகத்தில் பூசித்தல் கிரியையில் யோகம் என்பவற்றை உளங் கொள்க. இவற்றால் வழி பாட்டாளர் அநுபவம் வாய்க்கப்பெறுதல் கிரியையில் ஞானம் என்பதையும் அறிக.

யோகம்: இதனைப்பற்றியும் நீ தெரிந்து தெளிதல் இன்றியமையாதது. 'யோகம்' என்பது, வடசொல். 'கூடுதல்' அல்லது 'ஒன்றுதல்' என்பது இதன் பொருளாகும். ஆன்மா இறைவனோடு ஒன்றுதல் அறிவால் அல்லது உடலால் அன்று என்பதை அறிவாயாக. ஆயினும் மனம் முதலிய அந்தக் கரணங்கள் கண், கை, கால் முதலிய புறக் கரணங்கள்போல் ஆன்மாவிற்குப் பெரிதும் தொலை வாகாது, அதனோடு ஒன்றித்து நிற்றலின், அவற்றால் இறைவனைக் கூடுதலும் 'யோகம்' என்று உபசரித்துக் கூறப்பெறும். புறத்தே பரந்து சென்று திரிந்து உலகப் பொருள்களோடு ஒன்றியே பழகிவிட்ட இம் மனம் முதலிய அந்தக்கரணங்களை அவற்றின்மேல் செல்லாதவாறு அடக்கி அகத்தே நிறுத்தி இறைவனோடு ஒன்றச் செய்தல் என்பது எளிதான செயலன்று. அதனால் அவ்வாறு செய்வ தற்குப் பல செயல்கள் முதற்கண் வேண்டப்பெறுகின்றன. ஆகவே, 'யோகம்' என்பது எட்டுத் கூறுகளாகப் பகுத்துக் கூறப் பெறுகின்றது.[32] அவை: இயமம் நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்று வழங்கப்பெறும். இவற்றைச் சுருக்கமாக விளக்குவேன்.

இயமம் என்பது, நூல்களில் விலக்கப்பட்ட தீயொழுக் கங்களை அறவே விலக்குதல். இந் நிலையில் இருப்போர்க்கு

32. சிவ. 8.21

இல்லக் கிழத்தியோடு இருத்தலும் ஏதமாகும். மனைவி யோடும் மக்களோடும் இருந்தவர்களாகக் குறிப்பிடப் பெறும் முனிவர்கள் வானப்பிரத்தம் என்ற மூன்றாம் நிலை யில் நின்றவர்களேயன்றி முற்றுந் துறந்த சந்நியாசம் என்ற நான்காம் நிலையில் நின்றவர்கள் அல்லர். இவர்கள் யாவரும் தவத்தவர் எனப் பெயர் பெறுபவரேயன்றி 'யோகியர்' எனப் பெயர்பெறார் என்பதைப் பிரித்து அறிக.

நியமம் என்பது, நூல்களில் விதித்தவற்றை இயன்ற அளவில் கடைப் பிடித்தல் ஆகும்.

நீர்பலகால் மூழ்கி
நிலத்தசைஇத் தோலுடைஇச்
சோர்தடை தாழச்
சுடரோம்பி—ஊரடையார்
கானகத்த கொண்டு
கடவுள் விருந்தோம்பல்
வானகத் துய்க்கும்
வழி.[33]

என்ற வெண்பாவில் குறிப்பிட்டுள்ளவை இந்நியமத்துள் சேர்வனவாகும். இனி, ஆசனம் என்பது, தாமரை (பதுமம்), யாமை (கூர்மம்) முதலிய பெயர்களைப் பெற் றுள்ள இருக்கை வகைகளில் உடலைப் பயிற்றி அவற்றின் படி அமர்தல். பிராணாயாமம் என்பது, இயற்கையாக இயங் கும் மூச்சுக் காற்றினைத் தன் வசப்படுத்தி ஒரு நெறியில் இயங்கச் செய்தல் ஆகும். பிரத்தியாகாரம் என்பது, தான் நினைத்த பொருளின் வடிவாதல்.

தாரணை என்பது, மனத்தை அடக்கி ஒருவழியில் நிறுத்துதல்; இறைவனுடைய திருமேனியை மனத்தில் கொள்ளுதலுமாம். தியானம் என்பது, இறைவனை அவனது

33. புறம். வெண். மாலை—வாகைப். 14
34. இயல்—6; கழிதம்—44; பக்

அருவுருவத் திருமேனியாகிய ஒளி வடிவினனாக எண்ணுதல். சமாதி என்பது, அந்த எண்ணத்தில் தன்னை மறந்து அவனோடு ஒன்றி விடுதலாகும். மனம் தாரணைக்கண் நின்ற பின்னர்ச் சிவபெருமானைத் தியானித்தலும், அவனிடத்து அழுந்துதலுமே சிவயோகமாம். இந்நிலைகளை அட்டாங்கயோகம் என்று யோக நூல்கள் விரித்துப் பேசும்.

மேற்கூறியவற்றால் யோகம் என்பது அகத்தொழில் ஒன்றால் மட்டிலும் சிவபெருமானது அருவத்திருமேனியை நோக்கிச் செல்லும் வழி பாடாதல் தெளிவாகும் இந்த எட்டு உறுப்புகளுள் முதல் நான்கும் யோகத்தில் சரியை; ஐந்தாவதும் ஆறாவதும் யோகத்தில் கிரியை; தியானம் யோகத்தில் யோகம்; சமாதி யோகத்தில் ஞானம்என்றும் இன்னும் பலவாறாகவும் விரித்து விளக்கப்பெறும். சரியை, கிரியை, யோகம் என்பவற்றை மேற்கொண்டு ஒழுகும் முறைகள் பலவும் சிவாகமங்களில் சரியாபாதம், கிரியா பாதம், யோகபாதம் என்னும் பகுதிகளிலும் அவைபற்றி எழுந்த பிற நூல்களிலும் வகுத்துக் கூறப்பெற்றுள்ளன. யோகம்பற்றிய செய்திகளை யோக நூல்களில் விரிவாகக் கூறப்பெற்றுள்ளன. விரிவை வேண்டுவோர் அந்நூல்களை நாடி அறிதல் வேண்டும். இவையெல்லாம் தற்சமயம் உனக்குத் தேவையில்லை.

சுருங்க கூறின், யோகத்தில் பக்தன் தன்னைக் கடவுளின் பிரிய நண்பனாகக் கருதுகின்றான். புலன் பொருள்களின் தடுமாற்றத்தினின்றும் மனத்தை வெளிப் படுத்தி மிக உயர்ந்த தியானத்தில் ஈடுபட்டுக் கடவுளை வேண்டுவது ஆன்மா. இம்மார்க்கத்தின் பயனாகச் சாரூபத்தை அடையலாம், அதாவது தெய்விகத் தன்மையை அடையலாம்.

சரியை கிரியை யோகம் ஆகிய மூன்றும் மூத்தியின் முதற்படிகட்டுக்குக் கொண்டு செல்லும். இதுவே பத

முத்தியாகும்; இது பின்னர் விளக்கப்பெறும்.[34] ஆனால் இதன்மூலம் ஆன்மா முழு விடுதலை பெறாது. ஏனெனில், மாயையானது மாயையால் ஏற்பட்ட உலகிற்கு மேலே ஆன்மாவைக் கொண்டு செல்ல முடிவதில்லை. ஆகவே, இம் மூன்று மார்க்கங்களும் இறுதி மார்க்கமான ஞானமார்க்கத்திற்கான ஏற்பாடுகளேயாகும். இதனை அடுத்து வரும் கடிதமொன்றில் விளக்குவேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 39

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைந்திடுக.

சிவ புண்ணிய வகைகளை வேறு விதமாகவும் பகுத்துப் பேசுவர். அவற்றையும் நீ அறிந்து கொள்ளுதல் இன்றியமையாதது. முன் கடிதத்தில் குறிப்பிட்ட இறப்பில் தவங்களாகிய சரியை முதலியன அபுத்தி பூர்வமாகவும், பொதுவாகவும், உண்மையன்றியும் நிகழ்தல் உண்டு.

ஒருவன் தான் சிவபுண்ணியத்தைச் செய்கின்றேன் என்ற உணர்வில்லாமல் செய்யும் சிவபுண்ணியம் 'அபுத்தி பூர்வ சிவபுண்ணியம்' எனப்படும். இதற்கு எடுத்துக்காட்டு ஒன்று தருவேன். சிவன் கோயில் ஒன்றில் எரிந்து கொண்டிருந்த திருவிளக்கு அணையும் நிலையில் இருந்தது. எலி ஒன்று விளக்கில் உள்ள நெய்யை உண்ணச் சென்றது. விளக்கில் வாய்வைக்கும்போது அது சுட்டது. உடனே வாயை எடுத்தபொழுது விளக்கும் தானாகத் தூண்டப் பட்டு நன்கு எரிந்தது. இதுவே அவ்வெலிக்கு விளக்கிட்ட சிவபுண்ணியமாக அமைந்தது. இதன் பயனாக அதுவே

34. இயல்-6; கடிதம்-44.

மாவலிச் சக்கரவர்த்தியாகப் பிறந்தது என்பது வரலாறு. அபுத்திபூர்வ சிவபுண்ணியமும் பலன் தருகின்றது என்ற உண்மை இதனால் பெறப்படுகின்றது. மக்களிடையேயும் இதுபோன்ற செயல்களைச் செய்பவரும் உளர். அங் காடித் தெருவில் மலர் முதலியன விற்பவர்கட்கு இத்த கைய அபுத்தி பூர்வசிவபுண்ணியம் நிகழ்தல் உண்டு. மலர் விற்றுப் பிழைப்பவர் அதன்பொருட்டு பூந்தோட் டங்களை வைத்துப் பாதுகாத்துப் பூப்பறித்துத் தொடுத்து விற்கின்றனர். இதனைச் சிலர் வாங்கிச் சென்று சிவ பெருமானுக்குச் சாத்தியும், சாத்துவித்தும் வழிபடு கின்றனர். இதனால் பூவிற்றவர்க்கு அவரறியாமலேயே அபுத்தி பூர்வ சிவபுண்ணியம் அவரை வந்தடைகின்றது. விலை கொடுத்து வாங்கப்படும் பூவும் பிறவும் கொண்டு வழிபடுவோர் பொதுச் சிவபுண்ணியம் செய்பவராவர். பூவன்றி தேங்காய், பழம், ஊதுவத்தி, கர்ப்பூரம் முதலிய பிற பொருள்களையும் சிவாலயங்களில் நடை பெறும் பூசனைக்கு உரிய பொருள்களையும் விற்பவர்கட்கும், கூலி. பெற்றுத் திருப்பணி செய்பவர்கட்கும் இவர் போல்வார் பிறர்க்கும் அபுத்தி பூர்வ சிவபுண்ணியங்கள் உண்டாகும் என்பதையும் அறிந்து தெளிக.

மேற்கூறியவாறு போலன்றி அன்பு காரணமாகவே சிவப்பணிக்கு மேற்குறிப்பிட்டவாறு உதவினாலும் அன்றிச் சிவபெருமானைத் 'தாமே' வழிபடினும், அப் பெருமானின் முழுமுதல் தன்மையை உணராமல் அவனை யும் பிற தேவர்களோடு ஒப்பவைத்து வழிபடினும் அதனால் வரும் சிவ புண்ணியமும் அபுத்தி பூர்வ சிவ புண்ணியமேயாகும். காரணம், 'பதி புண்ணியம்' என்பது பசுக்களது தன்மையினையும், பதியினது தன்மையினை யும் வேறுபடுத்தி நன்கு உணர்ந்து அவ்வுணர்வு காரண மாகப் பசுக்கள்மாட்டு அன்பு நிகழாது பதியினிடத்து அன்பு நிகழப் பெறுதலேயன்றி உண்மையாக நிகழாமையே என்க. எனினும், இவை முன்னர்க் குறிப்பிட்டவை போலன்றி சிறிது உணர்வு பெற்றுச் செய்யப்படுவதால்

அவற்றினும் இவை சிறப்புடையனவாகின்றன. எனவே, 'சிவபெருமானது முழுமுதல் தன்மையை உணர்ந்து அவனுக்குத் தொண்டு புரியவேண்டும் எனக் கருதி மேற் குறிப்பிட்ட சரியை, கிரியை யோகங்களைச் செய்தல் 'புத்தி பூர்வ சிவபுண்ணியம்' என்பது தெளிவாகின்றது. இதனை நன்கு மனத்தில் இருத்துவாயாக.

புத்தி பூர்வமாகச் செய்யப்படும் சிவ புண்ணியங் களும் பொது, சிறப்பு என்று இருவகையாகின்றன. ஒருவர் நல்லாசிரியரது தீக்கை பெற்று அதனால் சிவபுண்ணியங் களைச் செய்யும் தகுதியையும் அடைந்து, செய்யும் முறை யறிந்து அம் முறைப்படி செய்பவை சிறப்புச் சிவபுண்ணியங் களாகும். அங்ஙனமின்றித் தாமே தமக்குத் தோன்றிய வாறு செய்யின் அவை பொதுச் சிவபுண்ணியங்கள் ஆகின்றன.

சிவபுண்ணியங்கள் இன்னொருவிதமாகவும் வகைப் படுத்தப்பெறுகின்றன. தீக்கை பெற்றேனும் பெறா மலேனும் சரியை கிரியை யோகங்களாகிய சிவபுண்ணியங் களைச் செய்வோர் அனைவரும் அப்பெருமானிடம் கொண்ட அன்பு காரணமாகப் பயன் கருதாது செய் கின்றனர் என்று சொல்ல முடியாது. பலர் தம் செயலுக்குப் பயனாகக் கல்வி, செல்வம், வெற்றி, புகழ், மனை, மக்கள் முதலிய உலகியல் பயன்களுள் ஒன்றையோ பலவற்றையோ விரும்பிச் செய்பவர்கள். இவர்கள் சிவபெருமானிடம் செலுத்தும் அன்பு நேரே செல்லும் மெய்யன்பு ஆகாது; இது தாம் கருதும் பயன்வழியாகச் செல்லும் சார்பு பற்றிய அன்பாகும். இச்சார்புபற்றிய அன்பினால் வரும் சிவபுண்ணியம் பின்னர் மெய்யன்பையே விளைவிக்கு மாதலால் அஃது 'உபாயச் சிவ புண்ணியம்' என்று கருத முடி கின்றது. தீக்கை பெற்றேனும் பெறாமலேனும் சிவ பெருமானிடத்துக் கொண்ட அன்பே காரணமாக, யாதொரு பயனையும் கருதாது 'செய்யும் சரியை முதலிய வைகளே உண்மைச் சிவ புண்ணியங்கள்' என்று கருதப் பெறுகின்றன.

இக்கடிதத்தில் சிவ புண்ணியங்கள் வேறு வகையாகப் பிரித்து வழங்கப்பெறுதலையும் ஒருவாறு அறிந்து கொண்டாய். ஞானம்பற்றிய விளக்கத்தை அடுத்தகடிதத்தில் தெரிவிப்பேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

# 40

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைக. உன் கடிதம் பெற்றேன். நீ சித்தாந்தத்தில் தெளிவுபெற்று வருகின்றதாகக் குறிப்பிட்டிருந்தாய். மகிழ்கின்றேன். சைவசித்தாந்தம் ஒரு பெருங் கடல்; அது 'அறிதோறும் அறியாமை கண்டற்றால்' போன்றது. என் கடிதங்கள் உன்னிடம் இறையுணர்வும் பக்தி யுணர்வும் எழுப்பி விட்டுள்ளன என்பதை அறிந்து மகிழ்கின்றேன்.

முன்னொரு கடிதத்தில்[35] சரியை முதலிய மூன்றும் ஞானத்தின் வளர்ச்சி நிலைகளே எனக் கூறி,

> விரும்பும் சரியைமுதல்
> மெய்ஞ்ஞானம் நான்கும்
> அரும்புமலர் காய்கனிபோல்
> அன்றோ பராபரமே.[36]

என்ற தாயுமானவர் வாக்கையும் அரணாக அமைத்துக் காட்டினேன். அதனை ஈண்டு நினைவுகூர்க. 'அறிதல்' என்ற அளவில் சரியை முதலிய தவங்களும் ஞானமே என்

35. இந்த இயல் கடிதம்-36; பக் 280
36. தா. பா: பராபரக் கண்ணி-157.

றாலும் தத்துவ ஆராய்ச்சி வழியாக இறைவனை அறியும் அறிவே 'ஞானம்' என்று சிறப்பித்துக் கூறப்படுகின்றது.[37]

எல்லா வேதங்களும் பண்டைச் சாத்திரங்களும் ஞானத்தையே முத்திக்கு நேரான மார்க்கமாக ஒரே மாதிரியாகக் கருதுகின்றன.

ஞானத்தால வீடென்றே நான்மறைகள் புராணம்
 நல்லஆ கமஞ்சொல்ல அல்லவாம் என்னும்
ஊனத்தார் என்கடவர் அஞ்ஞா னத்தால்
 உறுவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞா னந்தான்
ஆனத்தா லதுபோவ தலர்கதிர்முன் இருள்போல்
 அஞ்ஞானம் விடப்பந்தம் அறும்முத்தி யாகும்
ஈனத்தார் ஞானங்கள் அல்லா ஞானம்
 இறைவனடி ஞானமே ஞானம் என்பர்.[38]

என்று சித்தியார் பேசுவதைக் காண்க. நான்கு வேதங்களும் புராணங்களும் புனித ஆகமங்களும் ஞானமே முத்திக்கு வழி என்று உறுதி கூறுகின்றன. பந்தம் அஞ்ஞானத்தில் கொண்டு விடுகின்றது. உண்மையான மெய்யறிவு, மெய்ஞ்ஞானம் எழுந்தவுடன் பகலவனைக் கண்ட இருள் போல அஞ்ஞானம் அகன்று மறைகின்றது. அறியாமை அழிந்தவுடன்—பந்தம் போனவுடன்—விளைவது முத்தியாகும். உண்மையான இந் நிலையை அடைய உதவும் அறிவு பதிஞானம் ஆகும். இதனை இன்னதென்பதை முன்னரே விளக்கியுள்ளேன்.[39]. இந்த அறிவு இறைவனறிவு அன்றி வேறு யாதாக இருக்க முடியும்?

அறிவு யாவும் ஞானமேயாயினும். மெய்ப்பொருளாகிய இறைவனை அறியும் அறிவே 'ஞானம்' எனப்படுதல்

37. சித்தியார்-8.22.
38. ஷை-27.
39. இயல்-2. கடிதம்—15; பக் (116-117)

போன்றது இது. இறைவனை அறநூல்கள் 'மெய்ப் பொருள்' என்றும், 'செம்பொருள்' என்றும் சிறப்பித்துப் பேசும். அதனால் அறநூல்களில் ஞானம் 'மெய்யுணர்வு' என்று கூறப்படும். சைவ சமயம் இறைவனைச் 'சிவம்' என்று கூறுவதால் இச் சமயநூல்கள் இறையுணர்வை 'சிவஞானம்' என்று பகரும். இவையெல்லாம் தத்துவ ஆராய்ச்சி வழியாக மெய்ப்பொருளை உணர்வதையே குறிக்கும் என்பதை உளங் கொள்வாயாக.

ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே.[40]

என்ற திருமூலரின் திருவாக்கையும் காண்க. ஞானத்தை விட மேலான மார்க்கம் இல்லை. வேறு எதுவும் முத்திக்குக் கொண்டு செல்லாது. உண்மையான அறிவாகிய ஞானத்தில் திளைத்தவர்கள், உண்மையிலேயே சிறந்தவர்கள் என்பது தெளிவு.

சன்மார்க்க சகலகலை புராண வேத
சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவும் உணர்ந்து
பன்மார்க்கப் பொருள்பலவும் கீழாக மேலாம்
பதிபசுபா சம்தெரித்துப் பரசிவனைக் காட்டும்
நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
ஞேயமொடு ஞாதிருவும் நாடா வண்ணம்
பன்மார்க்கச் சிவனுடனாம் பெற்றி ஞானப்
பெருமையுடை யோர்சிவனைப் பெறுவார் காணே.[41]

என்று சித்தியார் கூறுவதும் இதற்கு அரணாக அமைவதையும் கண்டு கொள்க. சன்மார்க்கத்திற்கு மணிவாசகப் பெருமானை எடுத்துக் காட்டாகக் கொள்வர்.

---

40. திருமந்திரம்-ஐந். தந். ஞானம்-1.
41. சித்தியார்-8.22.

'தத்துவம்' என்ற வடசொல் தமிழில் 'உண்மை' எனப் பொருள்படும் 'தத்துவ ஆராய்ச்சி' என்பது பொருள்களின் உண்மை நிலையை அளவை முறையால் ஆராய்ந்துணர்தலாகும். ஒவ்வொரு சமயமும் தன் தன் கொள்கையே உண்மை என்பதை தத்துவ நூல் வழியாகவே விளக்குகின்றது. சைவ சமயம் தனது கொள்கையை அவ்வாறு விளக்கும் பகுதியை சைவாகமங்கள் 'ஞானபாதம்' என்று பிரித்துக் காட்டும். இங்ஙனம் பற்பல நூல்களில் சித்தாந்த உண்மைகள் விளக்கப்பட்டிருந்தும் பலர் இவ் வுண்மையை உணராது உள்ளனர். இதற்குக் காரணம் என்ன? கூறுவேன்! 'பரிபாகம்' இன்மையே காரணம் என்று கருதலாம். 'பரிபாகம்' என்பது ஆணவ மலம் தனது ஆற்றல் கெட்டு நீங்கும் நிலையை அடைதலாகும். அஃது ஏற்படுங் காலத்தில் சத்தி நிபாதமும், அதுவழியாகச் சரியை முதலிய தவங்களும் நிகழும். அத்தவ முயற்சியால் இருவினையொப்பு உளதாகி உலக மயக்கம் நீங்கும். நீங்கவே, சிவஞானம் கைகூடும்.

'மலபரியாகம், சத்தி நிபாதம், இருவினை யொப்பு என்பன தாமே இயற்கையாய் நிகழ்தல் போலத் தவமும் ஞானமும் ஒருவர்க்குத் தாமே நிகழ்வதில்லை என்பதையும் அவை குருவருளால்தான் நிகழும் என்பதையும் நீ அறிதல் வேண்டும். பரிகள் வாங்கச் சென்ற திருவாதவூரரை இறைவனே குருவாக வந்து, திருப்பெருந்துறையில் ஆட்கொண்ட நிகழ்ச்சியையும், திரிசிரபுரத்தில் தாயுமான அடிகளை மூலன் மரபில் வந்த மௌன குரு தம் அடியராக ஏற்ற நிகழ்ச்சியையும் ஈண்டு நீ நினைவு கூர்வாயாக.

மலபரியாகமும், சத்தி நிபாதமும் வந்த காலத்தில் தவத்தைச் செய்யத்தக்க நிலையும், ஞானத்தை உணரத் தக்க நிலையும் வாய்க்குமேயன்றித் தவமும் ஞானமும் தாமே வந்து விட மாட்ட என்பதை நீ அறிதல் வேண்டும். இதனைச் சில உவமைகளால் விளக்குவேன். நோய் உள்ள போது நோயாளி பசியின்மையால் உணவை உட்

கொள்ளும் தன்மையற்றவனாக உள்ளான். மருந்து களால் நோய் நீங்கின் பிறகு பசி உண்டாகின்றது. உணவை ஒருவர் ஆக்கி அளித்த பிறகு அவ்வுணவை உண்டே பசி தணிய வேண்டியவனாகின்றான் அந் நோயாளி. இளங்குழவிகட்குக் குழவிப்பருவம் காரணமாகக் கல்வி கற்கும் நிலை ஏற்படுவதில்லை. குழவி வளர வளர அதன் விடுப்பூக்கத்தால் (Instimct of curiosity) கல்வி கற்கும் நிலை வாய்க்கின்றது. கல்வி தானாக இப் பருவத் தில் வந்து விடாது. ஆசிரியர் ஒருவர் பயிற்றுவித்தலால் தான அக்குழவியிடம் கல்வி வருகின்றது.

பிறவியிலேயே ஒருவனுக்குக் கண்ணில்லை. மணி மந்திர ஔடதங்களால் அவனுக்குக் கண் கிடைக்கின்றது; பொருள்களைக் காணும் நிலை அவனுக்கு வந்து விடு கின்றது. ஆனால் அவனுக்கு காணும் பொருள்களை இன் னவை என்று உணர்ந்து கொள்ளும் ஆற்றல் இல்லை. பிறவியிலேயே கண் உடையான் ஒருவன் பொருள்களை அவனுக்கு 'இஃது இன்னது, இஃது இன்னது' என்று அறி வித்தால்தான் அவனால் பொருள்களை இன்னவை என்று பாகுபாடு செய்து அறிய முடிகின்றது. இவை போலவே, ஆணவ மலம் பரிபாகமாகிச் சத்தி நிபாதம் வருமாயின். தவம்புரியும் நிலையும் வாய்க்குமேயன்றித் தவமும் ஞான மும் கிடைத்துவிட வாய்ப்பு இல்லை. குருவருளால்தான் அவை கிடைக்க வேண்டும். அதற்கு இறைவன் திருவருளும் வேண்டும்.

பொதுவாக தவம் 'கிரியை' என்று சொல்லப்படும் என்பதை நீ அறிவாய். சரியை முதலிய மூன்றையும் தரு வோர் 'கிரியாகுரு' என்றும், ஞானத்தை உணர்த்துவோர் 'ஞான குரு' என்றும் வழங்கப்பெறுவர். மேன்மேல் நிலையில் உள்ளவர் கீழ் கீழ் நிலையைப் பிறருக்குத் தர வல்லவர் என்பதையும் கீழ் கீழ் நிலையிலுள்ளவர் மேல் மேல் நிலையைத் தரவல்லவராகார் என்பதையும் நீ உணர வேண்டும். இக்காரணத்தால் ஞானகுரு, 'ஞானம்,

யோகம், கிரியை, சரியை' என்ற நான்கினையும் தரவல்ல வர்; யோககுரு 'யோகம், கிரியை, சரியை' என்ற மூன்றை யும் தரவல்லவராவர்; கிரியாகுரு 'கிரியை, சரியை' என்ற இரண்டை மட்டிலும் தருவார். சரியைக் குரு 'சரியை' ஒன்றைமட்டுமே தர உரியவர். இங்ஙனம் குருமார்களின் தார தம்மியம் உள்ளது என்பதையும் அறிந்து தெளிக.

ஞானயோ கக்கிரியா சரியை நான்கும்
நாதன்றன் பணி;ஞானி நாலினுக்கும் உரியன்;
ஊனமிலா யோகமுதல் மூன்றினுக்கும் உரியன்
யோகி ; கிரியா வான்தான் ஒண் கிரியை யாதி
ஆன இரண்டினுக்குரியன; சரியையினில் நின்றேன்
அச்சரியைக் கேஉரியன்; ஆகலினால் யார்க்கும்
ஈனமில ஞானகுருவே குருவும்; இவனே
ஈசனவன் றான்என்றும் இறைஞ்சி ஏத்தே[42]

என்ற சிவஞான சித்தியாரின் செய்யுளும் ஈண்டு அறிதற் பாலது. இனி, தவமும் ஞானமும் குருவருளால் கிடைக்கும் முறைகளை அடுத்த கடிதத்தில் விளக்குவேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 41

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலம்பல விளைவதாகுக.

குருமூர்த்திகளாய் இருப்பவர்கள் தம் சீடர்கட்குத் தவத்தையும் ஞானத்தையும் அளிக்கும் முறையைச் சைவ சித்தாந்தம் 'தீக்கை' (தீட்சை) என்று வழங்கும், 'தீக்கை' என்பது, அஞ் ஞானத்தினைப் போக்கி மெய்ஞ் ஞானத்தைத்

42. சித்தியார் 12.5.

தருவது' என்று பொருள்படும். 'தீக்ஷா' என்ற வடமொழிப் பதம் 'க்ஷா-நீக்குதல்; தீ-தருதல்' என்று பொருள்படுவதை அறிக. இந்தத் தீக்கை சமய தீக்கை, விசேட தீக்கை, நிருவாண தீக்கை என மூவகைப்படும்.[43] சமய தீக்கையால் சரியையும், விசேட தீக்கையால் 'கிரியை, யோகம்' என்பவையும், நிருவாண தீக்கையால் ஞானமும் கிடைக்கும் என்பதை அறிக. இவற்றை விளக்குவது இன்றியமையாத தாகின்றது.

சத்தி நிபாதத்தின் தன்மைக்கு ஏற்பவே உலகியலில் பற்று நீங்குதலும், மெய்ந்நெறியில் (சிவநெறியில்) மனம் பற்றுதலும் படிமுறையில் நிகழும் என்பதை ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளேன். அதனை ஈண்டு நினைவு கூர்க. இந்த அடிப்படையில்தான் மூன்று தீக்கைகளும் விளக்கம் அடைகின்றன.

சமய தீக்கை: சத்தி நிபாதத்தின் முதல் நிலை மந்ததரம் என்பதை நீ அறிவாய். இதில் சிவபெருமானது முதன்மையை ஒருவாறு உணரும் நிலை கூடும். இதனால், சிவபெருமானது பிறப்பு மூல மந்திரமாகிய திருவைந்தெழுத்தைத் (சிவாயநம: என்ற பஞ்சாக்கரத்தை) தூலமாக உணர்ந்து கணிக்கும் உரிமையும், சிவாகமங்களை ஓதி உணரும் உரிமையும், அவ் வாகமங்களில் சரியாபாதத்தில் நிற்கும் உரிமையும். மந்த தர சத்தி நிபாதர்க்குச் சமய தீக்கையின்வழி அடைய முடியும். வேதத்தை ஓதுவதற்கும் வைதிக ஒழுக்கத்தை மேற்கொள்ளுவதற்கும் உபநயனம் இன்றியமையாதது என்பதை அறிவாய். அதுபோல சிவாகமங்களை ஓதுவதற்கும் சைவ ஒழுக்கத்தை மேற்கொள்வதற்கும் சமய தீக்கை மிகவும் இன்றியமையாதது. உபநயனம் பெறாதவன் வேதியன் ஆகான். அதுபோலவே சமய தீக்கைப் பெறாதவன் சைவன் ஆகான். சைவ சமயியாகும் உரிமையைத் தருதகால் இத் தீக்கை 'சமய தீக்கை'

43. சிவப்பிரகாசம்-9. (உரை)

என்ற திருப்பெயர் பெற்றது. சமய தீக்கை பெற்றவன் 'சமயி' எனப் பெயர் பெறுகின்றான்.

விசேட தீக்கை: சமய தீக்கை பெற்று அதன் வழி நிற்கும் போது ஆணவ மலம் மேலும் பரிபாகம் உற்றுச் சக்தி நிபாதம் மந்தமாய் நிகழும். அப்பொழுது சிவபெருமானை இலிங்க வடிவில் கண்டு வழிபடுதலாகிய கிரியைத் தொண்டில் இச்சை உண்டாகும். அங்ஙனம் இச்சை யுண் டாகும்போது முன்னர் சமய தீக்கையைப் பெற்றவரிடத் தாதல் வேறோர் ஆசிரியரிடத்தாதல் விசேட தீக்கை பெற்றுத் தம் பொருட்டான (ஆன்மார்த்தமான) சிவலிங்க மூர்த்தியை எழுந்தருள்வித்துக் கொடுக்கப் பெற்றுக் கிரியாபாத முறைப்படி அம் மூர்த்தியை நாடோறும் நியம மாக வழிபடுதலாகிய கிரியைத் தொண்டில் நிற்பர். சிவலிங்க மூர்த்தியை எழுந்தருள்வித்துக் கொடுக்கும் பொழுதே அகப்பூசை புறப்பூசை முறைகளோடு யோக முறையும் உணர்த்தப்பெறும்.

கிரியைத் தொண்டினால் ஆணவ மலம் மேலும் பரிபாக முற்றவழிச் சத்தி நிபாதம் தீவிரமாய் நிகழும். இங்ஙனம் நிகழப் பெற்றோர் யோகநிலைக்கண் நிற்பர். இந் நிலை யில் விசேட தீக்கை மந்த சத்தி நிபாதர்க்கு உரியதாய்க் கிரியையைத் தந்து பின்னர் அதுவழியாகத் தீவிர சத்தி நிபாதத்தை உண்டாக்கும். இந் நிலையில் யோகத்தைத் தரும். யோகத்திற்கு விசேடத்தில் விசேடமாக வேறு தீக்கை செய்யும் முறையும் சில இடங்களில் உண்டு. விசேட தீக்கை பெற்றுக் கிரியா பாதத்தில் நிற்போர் 'புத்திரர்' என்று வழங்கப்பெறுவர். யோகத்தில் நிற்போர் 'யோகியர்' என்னும் பெயரை அடைவர்.

நிருவாண தீக்கை: மேற்குறிப்பிட்ட இரண்டு தீக்கை களால் சரியை, கிரியை, யோகம் என்னும் தவம் முழுவதும் கைவரப்பெறுவதால் இத் தீக்கை ஞானத்திற்கே உரிய

தாகின்றது. சரியை முதலிய மூவகைத் தவங்களின் முதிர்ச்சியால் மல பரிபாகம் முற்றியவழி சத்தி நிபாதம் அதிதீவிரமாய் நிகழும். அப்பொழுது பதி பசு பாசம் என்னும் தத்துவங்களின் இயல்பை உள்ளவாறு அறிய வேண்டும் என்ற பெரு விருப்பு எழும். அதாவது "நான் யார்? என் உள்ளம் யார்? ஞானங்கள் ஆர்? நான் வந்த வழி எப்படி? போவது எப்படி? எனக்கு வரும் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் காரணம் யாது? துன்ப நீக்கப்பெற்று இடையறாத இன்பத்தில் வாழும் நிலை இல்லையா? அப்படி உண்டாயின் அதற்கு வழி யாது?" என்று இங்ஙனம் பொருள் இயல்புகள் பலவற்றையும் உள்ளவாறு உணர்வதில் பேரவா நிகழும். நிகழவே, வேண்டுவார் வேண்டுவதே ஈவானாகிய சிவபெருமான் ஞானச் செய்தியால் சிவோகம் பாவனையைத் தலைப்பட்டுச் சிவமேயால் நிற்கும் ஞான குருவின் சுத்தான்ம சைதன்னியத்தில் ஆவேசித்து நின்று நிருவாண தீக்கையைச் செய்தருள்வான். தாயுமானவர் இரண்டாம் முறை தம் குருவிடம் பெற்றது இந்தத் தீக்கையையே. அத்துடன் துறவு நிலையையும் ஞானோபதேசத்தையும் பெற்றார் என்பதை அறிவாயாக.

சமய விசேட தீக்கைகளில் புறவுடம்பு அகவுடம்புகள் மந்திரங்களால் ஓரளவே தூய்மை அடைந்தன. நிருவாண தீக்கையில் அத்துவாக்கள் ஆறனையும் முறைப்படி ஒன்றில் ஒன்றை அடக்கி எல்லாவற்றையும் அடக்கி நிற்கும் கலையைச் சோதிக்கும். இதனால் ஆறத்துவாக்களையும் பற்றி நிற்கும் சஞ்சித கன்மங்களை முற்றத் துடைத்துவிடும். ஆன்மாவையும் வினைக்கட்டினின்றும் விடுவிக்கும். திருவைந்தெழுத்து முத்தி பஞ்சாக்கரமாக உபதேசிக்கப்பெறும். சிவாகமங்களில் ஞான பரிசுத்தை உணர்த்தும் முகத்தால் பதிபசுபாசம் என்ற முப்பொருளின் இயல்புகளை நன்குணரும் நிலைமை உண்டாகும். முப்பொருள்களின் இயல்புகளை உள்ளவாறு உணர்வதற்குத் தடையாக இருந்த வினைக்கட்டு ஆணவ மலபரிபாகம்

காரணமாக மெலிவடைந்து ஞானாசிரியன் செய்யும் நிருவாண தீக்கையால் அடியோடு அழிந்தமையால், பொருளியல்பு முற்றும் தெளிவாக உள்ளவாறு விளங்கு தலே ஞானமாகும். இந்நிலையில் பொய்யைப் பொய் யென்று கண்டு கழித்து மெய்யை மெய்யென்று உணர்ந்து பற்றும் நிலை தானே உள்தாகும். ஆகவே நிருவாண தீக்கை தீவிரதர சத்தி நிபாதம் உடையார்க்கு உரியதாய் ஞானத்தைத் தருவதாய் அமைகின்றது என்பதை உணர்ந்து கொள்க. இந்த நிருவாண தீக்கை அதிதீவிரத்தி லும் தீவிரமாய் நிற்போர்க்கு அப்போழுதே முத்தியை அளிக்கும் வகையிலும், ஏனையோர்க்கு உடம்பு நீங்குங் காலத்து முத்தியைக் கொடுக்கும் வகையிலும் செய்யப் படும். இவற்றுள் முன்னது 'சத்தியோ நிர்வாணதை' என்றும் பின்னது 'அசத்தியோ நிர்வாணதை' என்றும் வழங்கப்படும்.

இந்தத் தீக்கை வகைகளைச் செய்வதில் ஒரு நியதியும் உண்டு. தீக்கை பெறுவோர் தகுதிக்குத் தக்கபடி வேறு வேறு வகையாக தீக்கை செய்யப்படும். இதனால் தீக்கை வகை இரண்டாகின்றன. முதலாவது, அக்கினிகாரியத்தால் செய்வது; இஃது அங்கி தீக்கை என்று பெயர் பெறும். இரண்டாவது, அக்கினி இல்லாது செய்வது; இஃது அங்க தீக்கை என்று வழங்கப்பெறும். ~~இவற்றை அடுத்த கடிதத்தில் விளக்குவேன்.~~

தீக்கை பெற்றவர்கள் சிவநெறி ஒழுக்கத்தை மேற் கொள்ளுதல் இன்றியமையாதது என்பதை உளங்கொள் வாயாக.

அன்பன்,

கார்த்திகேயன்.

அன்புநிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைந்திடுக.

தீக்கை பெற்றவர்கள் சிவநெறி ஒழுக்கத்தை மேற்கொள்ள வேண்டும் என்பதைச் சென்ற கடிதத்தின் இறுதியில் குறிப்பிட்டேன் அல்லவா? இவர்கள் ஒழுக வேண்டிய ஒழுக்கம் நித்தியம், நைமித்திகம், காமியம் என்ற மூவகைப்பட்டு நடைபெற வேண்டியவை.

நித்தியம் : நாடோறும் காலை, நண்பகல், மாலை மூன்று பொழுதும் நீராடல், திருநீறு கண்டிகை அணிதல், மந்திர நீரைத் தெளித்துக் கொள்ளுதல், மந்திர ஆற்றல்களை நெஞ்சு, முகம், தலை, சிகை, கை, கால் என்னும் உறுப்புகளில் பதிவித்தல், காற்றினை உள்ளிழுத்து வெளியேற்றி, வெளியிலிருந்து உள்வாங்கி நிரப்புதல் முதலியவற்றால் உடலைத் தூய்மை செய்து கொள்ளல் போன்றவை நித்திய கருமங்களாகும். மேலுந் திருவைந்தெழுத்தைக் கணித்தல், ஆலயவழிபாடு, அடியார் வழிபாடு இவற்றை மேற்கொள்ளல், அகப்பூசை, புறப் பூசைகளை இயற்றல், தியான சமாதியில் நிற்றல், உபதேச மொழியைச் சிந்தித்தல், தெளிதல், நிட்டையில் அழுந்தல் முதலியவையும் இக் கருமங்களுள் அடங்கும்.

நைமித்திகம் : வாரம், திதி, நட்சத்திரம், யோகம், கரணம் என்பவற்றுள் ஒன்றினானாதல் பலவற்றானாதல் சிறப்பெய்தும் நாள் அல்லது பொழுதுகளிலும், மற்றும் அம்பிகை, முருகன், தேவர், முனிவர், அடியார், மக்கள், அரசர், அசுரர் முதலியோரும், அஃறிணை உயிர்களும் சிவபெருமானது திருவருளைப் பெற்றுச் சிறப்பெய்திய நாள், பொழுது என்பவற்றிலும் சிவபெருமானைச் சிறப்பாகப் பூசித்தலும், விழா எடுத்தலும் ஆகியனவை நைமித்திக கருமங்களில் அடங்கும்.

காமியம் : நாம் கோரும் பயன் கருதிச் செய்யும் வழிபாடுகள் காமிய கருமங்களாகும். நோய் நீக்கம், வாழ்நாள் நீட்டம், மணப்பேறு, மக்கட்பேறு, வெற்றி முதலிய பயன்கருதி அவ்வப்பயனுக்கு ஏற்றவாறு சிவபெருமானுக்குச் செய்யப்பெறும் சிறப்பு வழிபாடுகளையும் விழாக்களையும் சில பல நாட்கள் செய்தல இவ்வகைக் கருமங்களுள் அடங்கும்.

மேற்கூறியவற்றுள் நித்தியத்தைத் தவிர ஏனைய இரண்டும் வசதிகள் படைத்தவர்களேயன்றி எல்லோராலும் இயற்றுதல் முடியாது. ஆகவே, தீக்கை செய்யும் பொழுதே ஏனைய இரண்டும் அவர்கட்குக் கடனாகாத வாறு நிரப்பியொழித்தல் இன்றியமையாதது. இங்ஙனம் நிரப்பியொழிக்கும் தீக்கை 'நிரதிகார தீக்கை' என வழங்கப் பெறும். நிரப்பாது மூன்றையும் கடனாகவே வைக்கும் தீக்கை 'சாதிகார தீக்கை' எனப்படும். இம்மூன்று வகைக் கருமங்களும் தம் பொருட்டாகவும் பிறர் பொருட்டாகவும் செய்யப்படும். இவற்றுள் நித்திய கருமம் நோயாலும் பிற வற்றாலும் அதனைச் செய்யமாட்டாது இடர்ப்படுவார் பொருட்டுப் பிறரால் செய்யப்படும். ஏனைய இரண்டும் பிறர்பொருட்டுச் செய்யப் பெறுங்கால் அவற்றை விரும்பிய ஒருவர் பொருட்டும், பொதுவாக உலகததின் பொருட்டும் செய்யப்பெறும். ஆசாரிய சுவாமிகள் அனைவராலும் செய்யப்பெறும் கருமங்கள் யாவும் உலக நன்மை பொருட்டேயாகும் என்பதை அறிவாயாக.

ஒன்றை ஈண்டு நீ நினைவில் கொள்ளவேண்டும். நைமித்திக, காமிய கருமங்களைப் பிறர் பொருட்டுச் செய்வோர் ஆசாரியர் என்று வழங்கப்படுவர். சிவாச்சாரியார்கள் அனைவரும் இவ்வகையினரே. ஒன்றையும் பிறர் பொருட்டுச் செய்யும் உரிமையின்றித் தம் பொருட்டுச் 'சித்தி, புத்தி, முத்தி' என்றவற்றை அடைய முயல்பவர் 'சாதகர்' என்ற பெயரைப் பெறுகின்றார். இவ்விரு திறத்

தாருக்கும் அந்த அதிகாரத்தைக் கொடுத்தற்குச் செய்யப் பெறும் தீக்கை 'அபிடேக தீக்கை' என்ற பெயரைப் பெறும்.

இக்கூறிய மூன்றுவகைக் கருமங்களையும் இயற்று வோரும் அவரவர் ஆற்றலுக்கு ஏற்றவாறு பாகுபாடு செய்யப் பெறுகின்றனர்.

நித்திய கருமத்தோடு நைமித்திக காமிய கருமங்களை யும் கடமையாக இயற்றும் ஆற்றலுடையவர் மக்களுள் 'உத்தமர்' என்று வழங்கப்பெறுவர். அவ்வாற்றலின்றி நித்திய கருமம் மாத்திரமே செய்ய வல்லவர் 'மத்திமர்' எனப்படுவர்; அதுவும் செய்யமாட்டாதார் 'அதமர்' என்று கூறப்பெறுவர். இதில் முதல் இருவருமே அங்கிதீக்கைக்கு உரியவர்கள். அதமர் எவ்வகையிலும், அங்கி தீக்கைக்கும் உரியவராகார். அங்க தீக்கையே இவர்கட்கு உரியது. இங்ஙனம், ஆற்றலும் ஆற்றலற்ற நிலைமகளுமே வருணங்கள் ஏற்படும் சூழ்நிலைகள் என்று கருதலாம்.

மேற்குறிப்பிட்ட உத்தமருள் வேத சிவாகமங்களை நன்றாக ஓதி உணர்ந்து அவற்றில் நுவலப்பெற்ற ஒழுக்கங் களை முற்றக் கடைப்பிடித்து ஒழுகவல்லவர்கள் 'உத்த மருள் உத்தமர்' ஆவர். வேத சிவாகமங்களை ஓதி உணர்ந்தும் அவற்றில் கூறப்பெற்ற ஒழுக்கங்களைக் கடைப்பிடிக்கமாட்டாதவர் 'உத்தமருள் மத்திமர்' ஆவர். வேத சிவாகமங்களை ஓதி உணரவும், அவற்றிற் சொல்லப் பெற்ற ஒழுக்கங்களைக் கடைப்பிடிக்கவும் மாட்டாமல் நித்திய, நைமித்திக, காமிய கருமங்களை மட்டிலும் செய் வோர் 'உத்தமருள் அதமர்' என்று வழங்கப்பெறுவர். இம் மூவரும் சாதிகார தீக்கைக்கு உரியவர்களாவர். இவர் அபிடேகதீட்சை பெற்றவராயின் ஆசாரியரும் சாதகரு மான நிலையினை அடைவர்.

தீக்கையில் உபதேசிக்கப்படும் மந்திரங்கள் பல வற்றுள் 'பஞ்சாக்கரம்' (சிவாயநம: என்பது) எனப்படும் திருவைந்தெழுத்தே முதன்மையானது. அதனால் அது 'மூல மந்திரம்' என வழங்கப்பெறும். அதற்கு அடுத்த

நிலையில் உள்ளவை 'சம்மிதா மந்திரங்கள்'; இவற்றுள் பதினொரு மந்திரங்கள் அடங்கும். இவற்றுள் ஐந்து 'பஞ்ச பிரம்ம மந்திரம்' என்றும் ஆறு 'ஷடங்க மந்திரம்' என்றும் வழங்கப்பெறும். மற்றும், கலா மந்திரங்கள் காயத்திரிகள் முதலாகப் பல மந்திரங்களும் அவற்றுக்குரிய பீஜாக்கரங்களும் உள்ளன. பஞ்சாக்கரம் தூல பாஞ்சக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், முத்தி பஞ்சாக்கரம் முதலியனவாகப் பிரித்துப் பேசப்பெறும். அவையும் அவ்வப் படிமுறைக் கேற்றவாறு உபதேசிக்கப் பெறும். அவற்றையும் ஞானத்திற்குச் சாதனமாய் உள்ள யோகம் முதலிய மூன்றின் இயல்புகளையும் குருமுகமாக அறிந்தும், சைவாகமங்கள் பத்ததிகள் முதலியவை ஓதியும் உணர்ந்து கொள்ள வேண்டியவை. இங்ஙனம் இவற்றையெல்லாம் உணர்தற்கு முதற்படியாக நிற்பது சமயதீக்கை செய்யப்பெற்று மந்திராதிகாரத்தைப் பெறுதலாகும். இதன் பின்னரே மற்றவை யாவும் உண்டாகும்.

தீக்கை பெறுங்கால் மந்திரங்களை உபதேசிப்பதிலும் முறைகள் உள்ளன. அவற்றையும் ஈண்டுக் குறிப்பிடல் பொருத்தமானது. மந்திரங்களைப் பீஜாக்கரத்தைக் கூட்டி உபதேசித்தலும், கூட்டாது உபதேசித்தலும் என இருவகை உண்டு. பீஜாக்கரம் இன்றி உபதேசிக்கும் தீக்கை 'நிர்ப்பீஜ தீக்கை' ஆகும்; பீஜாக்கரத்தோடு உபதேசிக்கும் தீக்கை 'சபீஜ தீக்கை' என்று வழங்கப்பெறும். அபிடேக தீக்கையில் சபீஜமேயன்றி, நிர்ப்பீஜம் இல்லை. ஏனைய சமய, விசேட, நிருவாண தீக்கைகளே சபீஜம்என்றும், நிர்ப்பீஜம் என்றும் பிரிவுபடும் என்பதையும் அறிக. சாதிகார தீக்கை சபீஜமாகவும் நிரதிகார தீக்கை நிர்ப்பீஜமாகவும் செய்யவேண்டும் என்றே சிவாகமங்கள் கூறுகின்றன. ஆயினும் நிரதிகார தீக்கையும் சபீஜமாகச் செய்தல் நடைமுறையில் உள்ளது. இதனையும் அறிந்து தெளிக,

மேலே குறிப்பிடப்பெற்ற முறைகளையெல்லாம் பின்பற்றிச் செய்யப்பெறுவதே அங்கி தீக்கை ஆகும். அஃது

அழல் ஓம்பிச் செய்வதாகிப் அக்கினி காரியத்துடன் நிறை வேற்றப் பெறுவதால் ஔத்திரி தீக்கை என்றும் வழங்கப் பெறும். இந்தத் தீக்கை ஞானவதி, கிரியாவதி என்ற இரு வகைகளுள் ஒருவகையாற் செய்யப்பெறும். இதனையும் நீ அறிந்து கொள்ள வேண்டும். குண்டம், மண்டலம், வேதிகை, நெய், சுருக்கு, சுருவம் முதலிய அனைத்தையும் மனத்தாற் கருதிக்கொண்டு அவற்றைக் கொண்டு செய்யப் பெறும் கிரியைகளையும் மனத்தினாலேயே செய்வது ஞானாவதி ஆகும். இது சத்தி தீக்கை என்றும் கூறப் பெறும். மேற் சொல்லிய அனைத்தையும் புறத்தே அமைத்துக் கொண்டு கிரியைகளையும் வெளிப்படையாகப் புறத்தே செய்வது கிரியாவதி ஆகும். இது மாந்திரி தீக்கை என்றும் வழங்கப்பெறும்.

இனி, அங்கதீக்கைகளையும் விளக்க வேண்டியது இன்றி யமையாததாகின்றது. அங்கியாகிய ஔத்தரி தீக்கைக்கு அங்கமாகச் சிறந்தெடுத்துக் கூறப்பெறுவன ஆறு. அவை: நயனம், பரிசம், வாசகம், மானதம், சாத்திரம், யோகம் என்பன வாகும். இவற்றையும் தனித் தனியே விளக்குவேன்.

நயன தீக்கை : ஆசாரியன் அங்க நியாச, கரநியாசங் களால் தன்னைச் சிவமாகப் பாவித்துக்கொண்டு அப்பா வனையோடு மாணாக்கனைக் கண்ணால் நோக்கி, அந் நோக்கினாலே அவன் செய்த கருமங்களை அழித்தொழிப்ப தாகும். இது 'சட்சு தீக்கை' (சட்சு-கண்) என்றும் வழங்கப் பெறும். வேள்விக்குத் துணையாக இருப்பதற்கு இராம— லக்குமணர்களை விசுவாமித்திரர் கானகத்திற்கு இட்டுச் செல்லும்போது அவர்கள் ஒரு பாலைவனத்தின் வழியாகச் செல்ல நேரிடுகின்றது. அளவில்லாத ஆற்றலுடையவர் களாயினும் 'பூவினும் மெல்லியர் வருந்துவர்' என்று கருதி அவர்களை நோக்கினார் முனிவர். அவர்கள் முனிவரை அடிபணிய, அவர் 'பலை, அதிபலை' என்ற இரண்டு விஞ்சை களை உபதேசிக்க, சிறுவர்கள் அவற்றை மனத்தில் சிந்திக்கவே, அவர்கள் பயணம் குளிர்ந்த நீரிலே செல்லு

தலை ஒக்கின்றது.[44] இஃது, நயன தீட்சையை ஒரு புடை பொக்கும் என்பதாகக் கருதலாம்.

பரிச தீக்கை : ஆசாரியன் தனது வலக்கையைச் சிவன் கையாகப் பாவித்து மாணாக்கனது சென்னிமேல் வைத்து அவனைச் சிவமாகச் செய்தல்.

வாசக தீக்கை : மந்திரங்களைக் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறும் பொருந்துமாறும் மாணாக்கனுக்கு உபதேசிப்பது இது.

மானத தீக்கை : ஆசாரியன் தன்னைச் சிவமாகப் பாவித்து அந்தப் பாவனையுடன் மாணாக்கனது ஆன்மாவை உடலினின்றும் பாவனையால் கொணர்ந்து தனது ஆன்மாவிற் சேர்த்துச் சிவமானதாகப் பாவித்து, மீள அவ்வான்மாவை அவனது உடலில் சேர்த்தல் இத் தீக்கையாகும்.

சாத்திர தீககை ; ஆசாரியன் மாணாக்கனைச் சிவாகமங்களையும் திருமுறைகளையும் ஓதுவித்தல் சாத்திர தீக்கையாகும்.

யோக தீக்கை ; ஆசாரியன் மாணாக்கனைச் சிவ யோகம் பயிலச் செய்தலாகும் இது.

இந்த அங்க தீக்கைகள் ஔத்திரி தீக்கைக்கு உரியவர்க்கு அங்கமாகவும், அத்தீக்கைக்கு உரியரல்லாதார்க்குத் தனியாகவும் செய்யப்படும். இப்பொழுது இவை சாம்பவ தீக்கை, விஞ்ஞான தீக்கை என்ற திருநாமங்களைப் பெறும். ஔரிதீக்கையு பெறாது அங்கதீக்கைமட்டுமே பெற்றவர் மந்திரங்களைச் சிவாகமும் திருமுறைகளும் ஆகிய நூல் வழியாகவே ஓதுதற்கு உரியவர்; தனியாகக் கணித்தற்கு உரியரல்லர். கள், புலால் உண்டல்களைச் செய்வோர் சிவாகமம் திருமுறைகளைத் தவிர ஏனைய நூல்

44. கம்ப. பால. தாடகைவதை. 17. 18. 19.

களையே ஓதுதற்கு உரியர். அவற்றில் வரும் திருவைந்தெழுத்து முதலியன ஏனைய எழுத்துகளோடும் சொற்களோடும் ஒப்பனவேயன்றி மந்திரங்களாகச் சிறந்து நில்லா என்பதை உளங்கொள்க.

இவண் குறிப்பிட்ட நயனம் முதலிய ஆறாகிய சாம்பவ தீக்கை, மற்றும் ஔத்திரி தீக்கை ஆகிய அனைத்து தீக்கைகளும் நல்லாசிரியர் ஒருவரால் நன் மாணாக்கர்கட்குச் செய்யப்பெறுதல் வேண்டும். அப்பொழுதுதான் நற்பயன் விளையும். பிறர் செய்தாலும் பெற்றாலும் அவை சடங்கு மாத்திரையாய்ப் போய்விடும். உண்மையான தீக்கைகள் ஆகா. இவற்றுள்ளும் சமய தீக்கையும் விசேட தீக்கையும் ஒருவாறு சடங்கு மாத்திரையால் செய்தலும் பெறுதலும் உண்டு. நிர்வாண தீக்கையும் அபிடேக தீக்கையும் உண்மையால் தான் செய்யப் பெறுதல் வேண்டும்; வெறும் சடங்குகட்கு இவண் இடமே இல்லை என்பதை அறிக.

இன்னொரு குறிப்பையும் ஈண்டு அறிந்து கொள்ளல் வேண்டும். ஆசிரியத் தன்மையை வழங்கும் அபிடேக தீக்கை பெறுவதற்கு உரியவர் இல்லறத்தவரே என்று சிவாகமங்கள் கூறும்; துறவிகளாயின் இல்லறத்துக்குச் செல்லாமலே துறந்த விரதியரே உரியர் என்றும் அந்நூல்களில் விதிக்கப்பெற்றுள்ளது. முதலாமவர் மாணாக்கரை உடையராயின் அவர் தரும் பொருள் முதலியவற்றால் மீளவும் சுற்றத் தொடர்பு உடையவராகி விடுவர். இரண்டாமவர் அந்நிலையில் தாழாது நிற்றல் அரிது எனக் கருதலாம். இத்தகைய உறுதி அவரிடம் இல்லையாயின் அவரை உலகம் ஏற்றுக்கொள்ளாது; மாணாக்கர்களும் அத்தகையோரை நாடிச் செல்லார். அபிடேக தீக்கை பெறுபவர் இல்லறத்தவராயின் ஆதிசைவ அந்தணராக இருத்தல் வேண்டும் என்ற ஒரு விதியும் காணப்படுகின்றது.

ஆசாரியன் மூலமாகத்தான் நிர்வாண தீக்கையின்றி ஞானம் உண்டாகமாட்டதா? என்று வினவியிருந்தாய். கூறுவேன்; ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங் களுள் ஆணவத்தை மட்டும் உடையவர் விஞ்ஞான கலர் என்றும், ஆணவம் கன்மம் என்ற இருமலத்தையுடையவர் பிரளயாகலர் என்றும் ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்களையும் உடையவர் சகலர் என்றும் உயிர்கள் மூவகைப்படும் என்பதை முன்னர்[45] குறிப்பிட்டேன் அன்றோ? அதனை ஈண்டு நினைவுகூர்க.

மும்மலம் உடைய சகலர்க்கு ஆசாரியன் அருள் இன்றி (நிர்வாண தீக்கையில்லாமல்) ஞானம் உண்டாகமாட்டாது என்பது சிவாகமங்களின் தீர்ப்பு ஆகும். இவர்கட்கு ஆணவமல மறைப்பு மிகவும் வன்மையாக இருக்கும். அதனால் இறைவன் ஆசாரியன் வாயிலாகச் செய்யும் பல வகைக் கிரியைகளால் அகற்றுவான். இம்மலம் நீங்கிய பின்பு ஞானத்தைச் சில சொற்களால் முதற்கண் அறி வுறுத்துவான். இங்ஙனம் அறிவுறுத்தப் பெற்ற பொருளை நூல்களோடு வைத்து சிந்திக்கச் செய்வான். இங்ஙனம் சிந்திக்கும்போது எழும் ஐயங்களை உடன்கண் இருந்து அவ்வப்பொழுது தெளிவிப்பான். தெளிவித்தபின்பும் அந் நிலையில் நிற்கும் நிலையில் முறைமை எல்லாம் காட்டி நிற்பிப்பான். இப்பொழுது இவர்கட்கு ஞானம் தோன்றும். ஆசாரியன் செயலெல்லாம் அவரிடம் ஆவேசித்து நின்று செய்யும் இறைவனது செயலாகும். இதனால் தீக்கை என்பது, சிவபெருமானின் கிரியாசக்தியின்தொழிபாடாகும் என்று கருதவேண்டும். சகலர் பொருட்டு ஆசாரியன்மூலம் இறைவன் நின்று செய்யும் இத் தீக்கை 'சாதார தீக்கை' எனப்படும். சாதாரம்—ஆதாரத்தோடு கூடியது என்பது பொருள். இக் கூறியவற்றால் சகலர்க்கு ஆசாரியன் செய் யும் நிர்வாண தீக்கையினால்தான் ஞானம் உண்டா

45. இயல் —3; கடிதம் -23, பக்(168-170)

கின்றது என்பதை உளங் கொள்க. சிவாகமங்களும் இதனைத்தான் அறுதியிடுகின்றன.

கண்ணன் உபமன்யு முனிவரிடம் நிர்வாண தீக்கை பெற்ற வரலாற்றையும், அங்ஙனமே இராமன் அகத்திய முனிவரிடத்து பெற்ற செய்தியையும் அரிவம்சம், பாரதம் பாத்ம புராணம் முதலிய நூல்களால் அறிய முடிகின்றது. கண்ணன் உபமன்னிய முனிவரிடம் பெற்றதை,

> யாதவன் துவரைக்கிறை யாகிய
> மாதவன் முடிமேல் அடிவைத்தவன்[46]

என்று சேக்கிழார் பெருமானும் குறிப்பிடுவர். இவை யாவும் சகலர்க்கு ஆசாரியன் செய்யும் நிர்வாண தீக்கை யன்றி ஞானம் உண்டாக மாட்டாது என்பதற்குச் சான்றுகளாக அமைகின்றன.

ஆயினும், திருத்தொண்டர் புராணம் நுவலும் நாயன் மார்கள் யாவரும் ஆசாரியன்மூலம் நிர்வாண தீக்கை பெறாமலே ஞானம் உண்டானதாகத் தெரிகின்றதே இஃது எவ்வாறு? என்று நீ வினவலாம். கூறுவேன்; இவர்கள் யாவரும் முன்னைய பிறப்பிலேயே உபதேசம் பெற்று நிட்டையிற் செல்லாது தடையுற்று நின்றவர்கள். அதனால் அடுத்தப் பிறப்பில் அந்த ஞானம் 'காரணமாகச் சிவபெருமானிடத்து என்றும் மாறாத இயல்பான மெய்யன்பு பெற்று வீடுபேற்றை யெய்தினர் என்பது சிவாகம நூல்களின் துணிபாகும்.

பிரளயாகலரும் விஞ்ஞான கலரும் ஞானத்தைப் பெறும் முறைகளையும் விளக்குவது இன்றியமையாததாகின்றது. ஒரு மலம் உடைய விஞ்ஞானகலர்க்கு ஆணவமல மறைப்பு மிக மென்மையாய் உள்ளது. பக்குவ காலத்தில் இறைவன் அவர்க்கு உயிர்க்குயிராய் உள் நின்றவாறே

46. பெரியபு. திருமலைச் சிறப்பு—41

அருளுவான். இவ்வாறு அவர்கள் பயனை அடைவர். இருமலம் உடைய பிரளயாகலர்க்கு ஆணவமலம் சிறிது வன்மையுடையதாக இருக்கும். ஆதலால் இவர்க்கு இறைவன் ஒரு முறை இவர்முன் தனது உண்மை வடிவத்துடன் தோன்றி அருள் புரிந்து நீங்குவான். இவ்வாறு தோன்றும் வடிவம் 'சதாசிவ மூர்த்தம்' என்றும் 'மகேசுவர மூர்த்தம்' என்றும் இருவேறு கருத்துகள் உள்ளன. உள் நின்று உளர்த்தலும் முன்னின்று உணர்த்தலும் ஆகிய இவை இரண்டும் 'நிராதார தீக்கை' என்று வழங்கப்பெறும். நிராதாரம்—ஆதாரத்தோடு கூடாதது என்பது பொருள். இங்ஙனம் மூவகை உயிர்களும் ஞானம் பெறுகின்றன என்பதை அறிந்து தெளிக.

அன்பன்,
கார்த்திகேயன்.

உள்ள மலம்நீங்கி
 ஓங்கி சிவானந்த
வெள்ளந் திளைத்ததுவாய்
 மேவுதலே—கள்ளவிழ்பூங்
கொத்தார் விரிசடையார்
 கூறு சிவாகமத்திற்
சித்தாந்த முத்தியெனத்
 தேறு.[1]

அப்பொருளும் ஆன்மாவும்
 ஆரணநூல் சொன்னபடி
தப்பில்லாச் சித்தொன்றாம்;
 சாதியினால்—எப்படியும்
தேரின் துவிதம்; சிவாகமமே
 சொல்லும் நிட்டை
ஆருமிடத் தத்துவித
 மாம்.[2]

---

*1. முத்தி நிச்சயம்—50*
*2. தா. பா: உடல் பொய்யுறவு—16*

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைந்திடுக.

சென்ற கடிதங்களில் முத்தியை விரும்புபவர்கள் மேற்கொள்ள வேண்டிய சாதனங்களை விரிவாக விளக்கினேன். அவற்றையெல்லாம் ஈண்டு நினைவுகூர்வாயாக.

சாதனங்களால் அடையும் பயன்கள் இரண்டு; ஒன்று, பாச நீக்கம்; மற்றொன்று, சிவப்பேறு; அதாவது, சித்தாந்த சைவமுத்தியை அடைதல். உயிர்கள் அடைய வேண்டிய முடிந்த பயன் வீடுபேறு; இதுவே சிவப்பேறு; 'முத்தி' என்றும் வழங்கப்பெறுவதும் இதுவேயாகும். வீடுபேற்றிற்கு நேரே சாதனமாயிருப்பது ஞானம் என்பதை நீ நன்கு தெளிந்திருப்பாய். இந்த ஞானத்திற்குச் சாதனங்களாக உள்ளவை சரியை, கிரியை, யோகம் என்பவை என்பதும் உனக்குத் தெரியும். சாதனங்களால் அடையப்படும் பயன் 'சாத்தியம்' எனப்படும். எனவே, வீடுபேறு சாத்தியமும், ஞானம் சாதனமும், சரியை கிரியை யோகம் ஆகிய மூன்றும் சாதனத்திற்குச் சாதனமும் ஆம் என்பது வெளிவாகின்றதன்றோ? இவற்றையெல்லாம் 'அவனருளால் அவன்தாள் வணங்கி' என்பதனால், அவன் அருளின்றி ஒன்றும் நடவாது என்பது உணரப்படும். இதனால் ஒரு வகையில் இறைவனே சாதனமும் ஆகின்றான் என்பதனையும் தெளிக.[3] முன்னொரு கடிதத்தில்[4] சிவபுண்ணியங்களைப்பற்றி விளக்கினேன் அல்லவா? அதனையும் ஈண்டு நினைவுகூர்க. சரியை முதலிய மூன்றும் ஞானத்தின் கூறுகளே என்பதையும், அவை,

---

3. வைணவத்தில் சித்தோபாயம் என்பது இதுவே; சாத்தியோபாயம், பக்தி பிரபக்தி நெறிகள்.

4. இந்த இயல். கடிதம் — 37: பக்.

விரும்பும் சரியைமுதல்
மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்பு,மலர் காய்,கனிபோல்
அன்றோ பராபரமே.[5]

என்று தாயுமான அடிகளின் திருவாக்காலும் எடுத்துக் காட்டினேன். அதாவது, சரியை—அரும்பு; கிரியை—மலர்; யோகம்—காய்; ஞானம்—கனி என்று அடிகளால் படிகளை விளக்கும் பாங்கு அற்புதமாய் விளக்கம் பெறுகின்றதன்றோ?

உயிர் வகைகள் வாழ்வு என்னும் பெரும் பயணம் போய்க் கொண்டிருக்கின்றன. அப்பயன் இறைவனை அடையும்பொழுது பூர்த்தியாகின்றது. இறைவனை அடைதலும் முத்தியடைதலும் உயிர்கட்கும் இயற்கைக்கும் முதற் காரணமாய் இருப்பவன் இறைவன். இவை யாவுக்கும் பிறப்பிடமும் அவனே. இவை யாவற்றிற்கும் புகலிடமும் அவனேயாகின்றான். எனவே, இவை யாவற்றிற்கும் அவர் முதல் ஆகின்றார். இவற்றையெல்லாம் நன்கு உணர்ந்து அநுபூதி நிலையிலுள்ள தாயுமான அடிகள்,

சித்தாந்த முத்தி முதலே[6]

என்று பகர்வது இரத்தினச் சுருக்கமாக அமைந்திருப்பதைக் கண்டு மகிழலாம். "சித்தாந்த முத்தியே" சைவ நூல்கள் கூறும் 'சித்தாந்த சைவமுத்தி' யாகும்.

வாழ்வின் மேலான நோக்கம் வீடுபேறு பெறுவது. அலையும் மனம் அங்குமிங்கும் உழன்று உலகின் சுகதுக்கங்களையெல்லாம் துய்த்து, மயக்கம் நீங்கி, தான் செய்த தவறுகளுக்கும் குற்றங்களுக்கும் மனம் நொந்து வருந்தி, தான் செய்தவற்றை நிவர்த்திக்க முயன்று இறுதியில்

5. தா. பா: பராபரக் கண்ணி—157
6. ஷை சின்மயாநந்த குரு—1.

சாந்தம் அல்லது அமைதி பெற 'உண்மையான வீடு' நோக்கி வருகின்றது. நாம் காலையில் அலுவல்கள் நிமித்தப் வெளியில் சென்று மாலையில் களைத்துப்போய் வீடு நோக்கித் திரும்புகின்றோம் அல்லவா? அதுபோலவே ஆன்மா இவ்வுடலை ஊர்தியாகக் கொண்டு வாழ்க்கைப் பயணத்தை முடித்துக்கொண்டு 'சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகிய அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டை' அடைய முயல்கின்றது. இந்த வீடு அமைதி யானது; எல்லையில்லாத பேரின்பம் அளிப்பது. ஆகவே எதிர் மறையான மலம் நீங்குதலை நோக்கமாகக் கருதாது பேரின்பமடைந்து எப்பொழுதும் அந்நிலையில் நீடிப்ப தையே நோக்கமாகக் கொள்ளுகின்றது சித்தாந்தம். அதன் பின்னர் அந்நிலையினின்றும் மாறுவதே இல்லை. சிவலோகத்தை அடைதலையே குறிக்கோளாகக் கருது கின்றான் சித்தாந்தி.

> உள்ள மலநீக்கி யோங்கு சிவானந்த
> வெள்ளந் திளைத்ததுவாய் மேவுதலே—கள்ளவிழ்பூங்
> கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்தில்
> சித்தாந்த முத்தியெனத் தேறு.[7]

என்கின்றார் தருமையாதீனத்தை நிறுவிய குருஞான சம்பந்தர். இம் முத்திப் பேற்றினைப் பெறுவதே சித்தாந்த ஞானத்தின் பயன் என்பதேயாகும். அதாவது, சித்தாந்த முத்தி சிவத்தோடு அத்துவிதமாய்க் கலந்து, ஆன்மா சிவனது இன்பத்தில் திளைத்திருத்தலே யாகும் என்பதை உணர்ந்து தெளிக. தாயுமானவரும் இந்த முத்திநிலையைச் சுத்தாத்துவித முத்தி நிலை என்பர்.

> 'அறிவிற் கறிவு தாரகம்'என்
> றறிந்தே அறிவோ டறியாமை
> நெறியிற் புகுதா தோர்படித்தாய்
> நின்ற நிலையும் தெரியாது

7. முத்தி நிச்சயம்—25

குறியற் றகண்டா தீதமயக்
கோதில் அமுதே! நினைக்குறுகிப்
பிறிவற் றிருக்க வேண்டாவோ?
பேயேற் கினிநீ பேசாயே [8]

என்ற பாடலால் இதனை யறியலாம்.

இக் கருத்தை மேலும் தெளிவாக்குவேன். மலங்கள் நிலையாய் நிற்கின்றன. ஆனால் அவற்றின் தீங்கு செய்யும் தன்மை போய்விடுகின்றது. அப்பொழுது பேரின்பத்தை அநுபவிக்கும் தனிச்சிறப்பினை உணர அவை உதவுகின்றன. அதற்கு முன்னர் ஆணவத்தால் ஏற்பட்ட இன்னல்களும் இத் தெய்விகக் கூட்டுடன் சேர்ந்த அநுபவத்தை மிகவும் வரவேற்கத் தக்கதாகச் செய்து விடுகின்றன.

முத்திதனின் மூன்று முதலு மொழியக்கேள்
சுத்தவநு போகத்தைத் துய்த்தலணு—மெத்தவே
இன்பங் கொடுத்தலிறை யித்தை விளைவித்தன்மலம்
அன்புடனே கண்டுகொ ளப்பா.[9]

என்று இந்நிலையை விளக்குவர் திருவதிகை மனவாசகங் கடந்தார். இந்த அநுபவத்தில் ஆன்மா அநுபவப் பொருளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு அப்பொழுது சிவத்துடன் அத்துவிதக் கூட்டு அடைவதாகச் சொல்வர். அத்துவிதக் கூட்டு என்பது ஆன்மாவின் நாசத்தைக் குறிப்பிடவில்லை. ஆனால் மாறுபாடும் வரம்பும் உள்ள சீவான்மா தனது சுட்டுணர்வில் நீங்கி முற்றறிவுடைய பரம் பொருளின் வியாபகத்தில் ஒடுங்கி யொன்றாக நிற்கும் நிலையை அது குறிக்கும். ஆன்மா ஒரே மாதிரி அழிவற்ற தன்மையிலேயே நிற்கும். ஆனால் குறையுடனோ மாசுடனோ அஃது இருப்பதில்லை. தனது எண்ணம் அனைத்தையும் அஃது இறைவனுடன் செலுத்தியுள்ளது.

8. தா. பா. சொல்லரிய—2.

9. உண்மை விளக்கம்—51

சூரிய ஒளியில் விண்மீன்களின் ஒளி தெரிவதில்லை. அதனால் விண்மீன்கள் இல்லை என்று சொல்ல முடியா தல்லவா? அதைப் போலவே இறையநுபவத்தில் ஆன்மா வின் பிரித்தறிய முடியாத இயல்பு அஃது அழிந்துவிட்ட தாகி விடாது. இந்த நிலையில் ஆன்மாவிற்கு இழப்பில்லை; ஆனால் அப்போது தெய்விக அமைப்பில் அஃது ஆழ்ந்துவிடு கின்றது என்று சொல்லி வைக்கலாம்.

இவ்வுலக வாழ்வில் ஆன்மா ஆணவத்துடன் கூடி யுள்ளது என்பதை நீ அறிவாய். ஆனால், அந்த உறவால் உறவு கொண்டவற்றுள் ஒன்றும் அழிவதில்லை. அதைப் போன்றே முத்தியிலும் ஆன்மாவும் இறைவனும் நெருங்கிக் கூடியுள்ளனர். ஆனால் அவர்களில் ஒருவருக்கும் இழப்பில்லை. அவர் தம் தனி இயல்புமிகு மதிப்பும் மாறாமல் அப்படியே உள்ளன. இதைச் சித்தாந்திகள் 'பசு பாசத்தில் அழுந்தி நிற்கும் நிலை பெத்தம்; அது பதியில் அழுத்தி நிற்கும் நிலையே முத்தி' என்று விளக்குவர். இந்த அத்துவிதக் கலப்புக்குத் தமிழில் தாள் தலை என்ற இரு சொற்களின் புணர்ச்சியை எடுத்துக்காட்டாகக் கொள்வது மரபு.

தலை ஆன்மாவையும் தாள் இறைவனையும் குறிப்பனவாகக் கொள்ளல் வேண்டும். அதாவது இறைவனது திருவடிகளில் ஆன்மாவின் தலை பொருந்து கின்றது என்பதே இதன் கருத்தாகும். தாளும் தலையும் தமிழ் இலக்கணவிதிப்படிப் புணரும்போது 'தாடலை' ஆகும். 'தாள்' என்பதில் உள்ள 'ள' மறைய, 'தலை'யிலுள்ள 'த', 'ட' ஆக மாறித் 'தாடலை' ஆகின்றது. இதனை இரு சொற்கள் எனக் கொள்ளவும் முடியாது; ஒரு சொல்லெனக் கொள்ளவும் முடியாது. ஒரு விதத்தில் இஃது ஒரு சொல்; இன்னொரு விதத்தில் இரு சொல். இதைப் போன்றதே இறைவனோடு ஆன்மா ஐக்கியப்படும் விதமும் என்பதே சித்தாந்தத்தின் முடிவாகும்.

தாடலைபோல் கூடியவை தானிழா வேற்றின்பக்
கூடநீ யோகமெனக் கொள்.[10]

என்ற உமாபதி சிவத்தின் அருள்வாக்கையும் காண்க. இறைவனும் ஆன்மாவும் இரண்டறக் கலக்கும் கலப்புக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக ஆன்ம போதமும் கண்ணொளியும் ஒன்று சேர்ந்து செயற்படுவதைக் குறிப்பிடுவதும் வழக்கமாகும்.

இதனை மேலும் தெளிவாக்க முயல்வேன். பதி, 'மெய், அறிவு, இன்பம்—சச்சிதானந்தம்' என்பவற்றையே இயல்பாகவுடைய பெரும்பொருள் என்பதை நீ அறிவாய், பசு இதனை அறியுந்தோறும் அதற்கு இன்பம் புதிது புதிதாய் விளையும். விளையவே, அஃது அப் பதியையே மேலும் மேலும் அறிந்து எல்லையின்றி இன்பக் கடலில் திளைத்து நிற்கும். பெத்தகாலத்தில் பதி இருந்தும் அதனது உதவி பாசமேயாய உயிர்க்கு விளங்காமையால், அது இல்லாததே யானதுபோல, முத்தி காலத்தில் பாசம் இருந்தும் அதனது மறைப்பு பதியேயான உயிரிடத்துச் செல்லமாட்டாமையால் அக்கினித் தம்பனத்தால் தடையுண்ட நெருப்புப்போல அது தன் சக்தி மடங்கி இல்லாததேயாகும். அதனால் முத்தியிலும் மும்முதலும் உள்ளன என்பது சித்தாந்தத்தின் துணிபு. ஆதலால் "உயிர்க்கும் இறைவனுக்கும் உள்ள கலப்பினால் ஒன்றாய், பொருள் தன்மையால் வேறாய், ஒரு செயலினிடத்து இருபொருளும் ஒருங்கு செல்லுதலால் உடனாய் நிற்கின்ற, அபேதம். பேதம், பேதாபேதம் என்னும் மூன்றனுள் ஒன்றாகச் சொல்ல வராது, அம் மூன்றும் ஒருங்கு தோன்ற நிற்கும் அத்துவிதத் தொடர்பு ஒரு காலத்தில் புதுவதாய் உண்டாகாது என்றும் உள்ளதேயாதலின், அத் தொடர்புபற்றிப் பெத்தத்தில் பதியிடத்திற் செல்லாது. பாசமேதானாய்

10. திருவருட்பயன்—8.4.

நின்ற உயிர், முத்தியில் பாசத்தில் செல்லாது, பதியே தானாய் நிற்கும்'' என்பதே சைவசித்தாந்தம் கூறும் முத்தி என்பதை அறிந்து தெளிக.

இம் முத்தியின் இயல்பைச் சித்தாந்த நூல்கள் நுவல் வதைச் சிறிது காட்டுவேன். மெய்கண்டார்,

வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது
வெய்யோனை ஆகாத மீன்போல.[11]

என்று விளக்குவர். இவர்தம் மாணாக்கராகிய அருணந்தி சிவாச்சாரியார் பல பாடல்களால் இதனைத் தெளிவாக்கு வார். அவற்றுள்,

அறியாமை அறிவகற்றி அறிவி னுள்ளே
அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து
குறியாதே குறித்து, அந்தக் கரணங்க ளோடும்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயின்
பிறியாத சிவன்றானே பிறிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெலாம் தானாய்த் தோன்றி,
நெறியாலே இவையெல்லாம் அல்ல வாகி
நின்றென்றும் தோன்றிடுவன் நிராதார னாயே.[12]

இரும்பைக்காந் தம்வலித்தாற் போலியைந்தங் குயிரை
எரிஇரும்பைச் செய்வதுபோல் இவனைத் தானாக்கி,
அரும்பித்திந் தனத்தைஅனல் அழிப்பதுபோல் மலத்தை
அறுத்து, அமலன் அப்பணைந்த உப்பதுபோல் அணைந்து
விரும்பிப்பொன் னினைக்குளிகை ஒளிப்பதுபோல் அடக்கி
மேளித்துத் தான்எல்லாம் வேதிப்பா னாகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியைஒத் திருப்பன்அந்த முத்தியினிற் கலந்தே.[13]

---

11. சி. ஞா. போ. சூத். 5. ஆதி. 2.
12. சித்தியார். 8-30
13. ஷெ - 11. 12

என்ற திருப்பாடல்களால் முத்தியின் இயல்பைத் தெளியலாம்.

மெய்கண்டாரின் மாணாக்கருள் மற்றொருவராகிய திருவதிகை மனவாசகங் கடந்தார்,

முத்தி தனைஅடைந்தோர் முந்துபழம் போதங்கி
வித்தகமாம் வீணை இவையிற்றின்—ஒத்த
இரதம்மனம் வெம்மை எழில்நாதம் போல
விரவுவர்என் றோதும் விதி.

தத்துவங்க ளெல்லாம் சகசமாய் ஆன்மாவில்
பெத்தத்தில் நிற்கின்ற பெற்றிபோல்—முத்திதனில்
சித்தமலம் அற்றார் செறிந்திடுவர் என்றுமறை
சத்தியமா ஓதியிடுந் தான்.

[சகசம்—கூடப் பிறந்தது.]

ஆதவன்றன் சந்நிதியில் அம்புலியின் ஆர்சோதி
பேதமற நிற்கின்ற பெற்றிபோல்—நாதாந்தத்து
அண்ணல் திருவடியில் ஆன்மா அணைந்தின்பக்
கண்ணில் அழுந்தியிடுங் காண்.

சென்றிவன்றான் ஒன்றின் சிவபூ ரணம்சிதையும்
அன்றவன்றான் ஒன்றும்எனில் அன்னியமாம்
—இன்றுஇரண்டும்
அற்றநிலை ஏதென்னின் ஆதித்தன் அந்தன்விழிக்
குற்றம்அற நின்றதுபோல் கொள்.[14]

என்று விளக்கியுள்ளார். இப்பாடல்களுள் இறுதிபாடலின் கருத்து சிறப்புடையது. 'அந்தகன் (குருடன்) கண் பெற்ற பின் சூரிய ஒளியைக் காணுதல் அவனுக்குப் புதிது போலத் தோன்றினும், உண்மையில் அவ்வொளி அவன்முன் முன்னரே இருந்ததாதல்போல, பாசப்பற்றினால் பாசமாய்

14. உண்மை விளக்கம்—50, 46, 47

நின்ற உயிர் அப்பசுத்துவம் நீங்கப்பெற்றபொழுது பதியை அடைந்து நிற்றல் அதற்குப் புதிதுபோலத் தோன்றுமாயினும், அவ்வடைவு அதற்கு முன்பே இருந்ததன்றிப் புதிதாய் வந்ததன்று' என்ற கருத்து சிறப்புடையதாய்த் தோன்றுகின்றதன்றோ?

மேலும், உமாபதி சிவம் முத்தி நிலைக்குப் பிறர் கூறும் உரைகளையெல்லாம் மறுத்து, "உயிர் பெத்தத்தில் ஆணவ மலத்தோடு எவ்வாறு, தான் என வேறு தோன்றாது, அதில் அழுந்தி நிற்கின்றதோ அதுபோலவே முத்தியில் சிவத்தோடு தான் என வேறு தோன்றாது. அதனில் அழுந்தி நிற்கும் என்பதே சித்தாந்த முத்தியாம்"[15] என அறுதியிட்டு உரைப்பர். இக் கருத்தினையே தாயுமான அடிகள்,

> ஆணவத்தோ டத்துவித
> மானபடி மெய்ஞ்ஞானத்
> தாணுவினோ டத்துவிதம்
> சாரும்நாள் எந்நாளோ?[16]

என்று பாடினார். இன்னும் உமாபதி சிவம்,

> ஒன்றாலும் ஒன்றாது; இரண்டாலும் ஓசையெழா
> தென்றால்,ஒன் றன்றிரண்டு மில்.[17]

என்று மொழிந்தார். மற்றும் அவர்,

> காண்பானும் காட்டுவதும் காண்பதுவும் நீத்துண்மை
> காண்பார்கள் நன்முத்தி காணார்கள்;—காண்பானும்
> காட்டுவதும் காண்பதுவும் தன்கடந்தைச் சம்பந்தன்
> வாட்டுநெறி வாரா தவர்.[18]

என்று நயம்பட அருளியிருப்பது அறிந்து உணரத்தக்கது. இதனை விளக்குவேன்.

15. சிவப் பிரகாசம்—87
16. தா. பா. எந்நாட்கண்ணி-28
17. திருவருட்பயன்—8-4.
18. வினா வெண்பா-11

'முத்தியில் காண்பான், காட்சி, காட்சிப் பொருள் எனப் பொருள் மூன்றில்லை; காட்சிப் பொருளாகிய சிவம் ஒன்றேயுளது' என்பாரும் முத்தி நிலையை உணர்ந்தவர் அல்லர்; 'முத்தியில் இம்மூன்றும் உள என்பாரும் முத்தி நிலையை உணராதவர்களே யாவர்' என்பது ஈண்டுக் காட்டிய வெண்பாவின் பொருளாகும். 'இரண்டுமே பிழையாய்விடின், உண்மைதான் யாது?' என்னும் வினா எழுதல் இயல்பே. காண்பான் முதலிய மூன்றில் காண்பவனாகிய ஆன்மாவும், காட்சியாகிய அதனது அறிவும் முத்தியில் இல்லாதொழியுமாயின், முத்தி என்பது ஒருவருக்குப் பெறுதற்கரிய பேறாய் முடியாது பயனற்றதாய் ஒழியும். அதுயற்றி முத்தியிலும் அம் மூன்றும் உள; அவற்றை ஆன்மா அறியுமெனின், ஆன்மா ஒன்றை அறியுங்கால் மற்றொன்றை அறியமாட்டா தாகலின், தன்னையும் தனது அறிவையும் அறியும்பொழுது சிவத்தை அறியாது மறக்கும்; அவ்வாறு மறக்குமாயின் அதற்குச் சிவானந்தம் இல்லையாம். சிவானந்தம் இல்லை யாகவே முத்தி நிலையும் இல்லாமையாய்விடும். இதனால் ஆன்மா தன்னையும் தனது அறிவையும் அறியாது சிவம் ஒன்றையே அறிந்து நிற்கும் நிலையே முத்தி நிலையாம். ஆகவே, 'முத்தி நிலையில் மூன்றில்லை; ஒரு பொருளே உண்டு' என்பதற்கு, 'முத்தி நிலையில் மூன்றும் உளவாயி னும், ஆன்மா ஏனை இரண்டை அறியாது சிவம் ஒன்றையே அறிந்து நிற்கும்' என்பதே கருத்தாகும் என்று அறிந்து கொள்க.

'காண்பான்; காட்சி, காட்சிப்பொருள்' என்பவை முறையே 'ஞாதுரு, ஞானம், ஞேயம்' என வடமொழியில் கூறப்பெறும். அவற்றை இங்ஙனமே தமிழில் மொழி பெயர்த்துக் கூறினால் அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள் என்று சொல்லலாம். ஞேயப் பொருளாகிய சிவத்தை உணரும் நிலையை விடுத்து, 'யான் இதனை அறி கின்றேன்' என்று ஆன்மா தன்னையும், தனது ஞானத்தை

யும் உணரும்படி செய்து ஆணவ மலத்தின் வாசனையே என்பதை நீ நன்கு அறிவாய். பெத்த காலத்தில் பிறவாது 'யான், எனது' என்னும் செருக்கினைக் கொடுத்து நின்ற ஆணவ மலம், முத்திக் காலத்தில் வாசனை மாத்திரமாய் நின்று இவ்வாறு சிவத்தை மறந்து 'யான்' என்று தன்னையும், 'எனது' என்று தனது ஞானத்தையும் உணரச் செய்யும். அதனால் அதுவும் அற்ற நிலையே முத்தி நிலையாகும். இந் நிலையை உடம்பு உள்ள காலத்தில் அடைவதே 'நிட்டை' என்று வழங்கப் பெறுகின்றது. இந்நிட்டை கைவரப் பெற்றோரே 'சீவன் முத்தர்' என்றும், (சிவத்தை) அணைந் தோர் என்றும் கூறப்பெறுவர்.

இவண் கூறியவாறு ஆன்மா ஞாதுருவையும் ஞானத் தையும் அறியாது, ஞேயமாகிய சிவம் ஒன்றையே அறிந்து அதில் அழுந்துவதாகிய நிட்டை நிலையையே 'மறவாநிலை' என்று திருமுறைகள் கூறும்.

> மறக்கு மாறிலாத என்னை
> மையல் செய்து இம்மண்ணின்மேல்
> பிறக்குமாறு காட்டினாய்.[19]

என்ற ஞானசம்பந்தப் பெருமானின் திருவாக்கில் 'மறக்கு மாறிலாத' என்றது இந்நிலையையயாகும் என்பதை அறிக. இம் மறவாநிலை கைகூடுவதாயின் எவ்வுடம்பில் இருப்பி னும் உயிர்க்குக் குறை இல்லை. இதுபற்றியே அப்பர் பெருமான்,

> புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா
> உன் அடி என்மனத்தே
> வழுவா திருக்க வரந்தர
> வேண்டும்.[20]

19. தேவாரம்-2 98 :5
20. ஷி-4.94, 8— 5-94:6

என்று வேண்டினார். பிறவாமை வேண்டிய காரைக் காலம்மையார்,

> ...மீண்டும் பிறப்புண்டேல்
> உன்னை என்றும்
> மறவாமை வேண்டும்'[21]

என்று வேண்டியதும், சாக்கிய நாயனார்,

> எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும்
> மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள்...[22]

எனக் கருதியதும் இதுபற்றியே யாகும் என்பதை அறிந்து தெளிக.

சங்கரன்தாள் மறவாத நிலைமை கூடுவதாயின் பிறப்பைப்பற்றிக் கவலை கொள்ளவேண்டியதில்லை. ஆயின், பிறப்பு உள்ளபொழுது சங்கரன்தாள் மறவாத நிலை கை கூடுதல் இயலாது. இதுபற்றியே ஞானச் செல்வர்கள் பிறவிக்கு அஞ்சுகின்றனர். பிறவியை ஒரு பெரும் பிணியாகவே கருதுகின்றனர்.

> துறக்கப் படாத உடலைத்
> துறந்துவெந் தூதுவரோ(டு)
> இறப்பன்; இறந்தால் இருவிசு
> பேறுவன்; ஏறிவந்து
> பிறப்பன; பிறந்தால் பிறையணி
> வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
> மறப்பன் கொலோஎன்றென் உள்ளங்
> கிடந்து மறுகிடுமே.[23]

என்ற அப்பர் பெருமானின் திருமொழியால் இஃது அறியப்படுகின்றது.

---

21. பெ. பு: காரை. புரா. 60
22. ஷை, சாக். புரா, 6
23. தேவாரம்- 4.113:8.

இங்ஙனம் ஞேயத்தை மறவாத நிலையாகிய நிட்டை நிலை வியாபகமாகிய சிவத்துள் வியாப்பியமாகிய ஆன்மா அடங்கித் அழுத்தி நிற்கும் நிலையாகலின் இச்சித் தாந்த முத்தி 'அடிசேர் முத்தி' என்று வழங்கப்பெறு கின்றது. 'இச்சித்தாந்த முத்தியே உண்மை முத்தி: ஏனைய முத்தியெல்லாம்(பிறர் மதம் கூறுவன) முத்தியல்ல என்ற உண்மை சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் முதலிய சித்தாந்த நூல்களில் விளக்கப்பெறுகின்றன். இவற்றை யான் ஈண்டு எடுத்துக் காட்டவில்லை. இந்த அடி சேர் முத்தியில் உயிர் பிறவி வெப்பம் நீங்கித் தண்மை யாகிய இன்பம் பெற்று மகிழ்தலால் இஃது இறைவனது 'திருவடி நிழல்' என்றும் பேசப்பெறுகின்றது. இந்த அடி நிழலின் இன்பத்தை,

> மாசில் வீணையும் மாலை மதியமும்
> வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
> மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
> ஈசன் எந்தை இணையடி நிழலே. [24]

என்று நாவுக்கரசர் அருளிச் செய்துள்ளமையைக் கண்டு மகிழ்க. இங்கு இவ்வாறெல்லாம் விரித்துரைக்கப்பெற்ற முத்தி சித்தாந்தத்திற் கூறப்பெறும் 'பரமுத்தி—முடிந்த முத்தியாகும்' என்பதை உணர்ந்து தெளிக. இத்துடன் இக்கடிதத்தை நிறைவு செய்கின்றேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 44

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு

நலன். நலமே விளைந்திடுக.

சென்ற கடிதத்தில் சித்தாந்தத்தில் சொல்லப்படும் 'பரமுத்தி' முடிந்த முத்தி என்று சொன்னேனல்லவா?

24. ஷை 5.92:1

இதற்கு முன்னரும் சில சித்தாந்த முத்திகள் உளவோ? என்ற ஐயம் நின்பால் எழுந்திருக்கவேண்டும். அந்த ஐயத்தை ஈண்டுப் போக்குவேன்.

வேறு முத்திகளும் உள்ளன. அவை அபரமுத்தி, பத முத்தி, சீவன்முத்தி என்பனவாகும். இவற்றுடன் பரமுத்தி யையும் சேர்த்து சித்தாந்த முத்தி நான்கு வகைப்படும் எனத் தெளிக. இனி, இவை ஒவ்வொன்றையும் தெளி வாக்குவேன்.

அபரமுத்தி : தத்துவங்கள் அனைத்திலும் கீழ்ப்பட்ட பிருதிவி தத்துவமும், பூவுலகிற்கு மேல் உள்ள புவர்லோகம் சுவர்லோகம் முதலிய உலகங்கள் யாவும் புண்ணிய உலகங்கள் என்பதை நீ அறிவாய். இதனால் அவை அனைத்தும் 'பதவிகள்' என்னும் பெயருக்கு உரியவை யாகும். ஆயினும் பிரகிருதித் தத்துவத்தைக் கடவாத வரையில் முக்குணமாகிய மயக்கம் நீங்காமையால் சைவ சமயம் அவற்றைப்'பந்த உலகம்'என்பதன்றி'முத்தி உலகம்' எனக் கொள்ளுதல் இல்லை. ஆகவே, மால் அயன் இந்திரன் உள்ளிட்ட தேவர் பதங்களைச் சைவ சமயம் 'முத்தியுலகம்' எனக் குறிப்பிடுதல் இல்லை என்பதை அறிக. இவண் குறிப்பிட்டவர்கள் மும்மலம் உடைய சகலவர்க்கத்தினர்; வினைவழிப் பிறக்கும் பிறப்பினுள் புண்ணிய மிகுதியால் தேவராய்ப் பிறந்தோர். இப் புண்ணியம் தீர்ந்தவுடன் தாம் செய்யும் வினைக்கு ஈடாகப் பிறவிகளிலும செலலுதற்குரியர். முன்னைய பிறவிகளிலும் இத் தெய்வப்பிறவியிலும் செய்த சிவ புண்ணிய மிகுதி யால் இவர்கள் இருவினை யொப்பும், சத்தி நிபாதமும் உடையவராயின் இப்பிறவியிலேயே ஞானாசிரியரால் ஞானம் பெற்று வீடுபேறு அடைவர்; அல்லது அடுத்த பிறவியில் சிறந்த மக்களாய்ப் பிறந்து அவ்வாறு வீடு பேறடைவர். இவவகையில் மாயோன் கண்ணனாய்ப் பிறந்திருந்த காலத்தில் உபமன்னிய முனிவரால் ஞானம் பெற்ற வரலாறு கூறப்பெறுகின்றது. இதனால்

மாயோன் முதலிய சகல வருக்கத்தினர் வாழும் பதங்கள் எல்லாம் முத்தியுலகங்கள் அல்ல. எனினும், சகலருக்கு மேற்பட்ட பிரளயாகலர், விஞ்ஞான கலர் என்பவர் வாழும் உலகங்களே முத்தியுலகங்களாகும் என்பதை அறிந்து தெளிக. ஏனெனில், பிரளயாகலர் முக்குணங்களின் நீங்கினவராதலாலும், விஞ்ஞான கலர் விருப்பு வெறுப்புக்கள் நீங்கினவராதலாலும் அவர்கள் வாழும் உலகங்களில் அவை இல்லாமையால் என்க. இனி, குணிருத்திரர் சகல வருக்கத்தினராயினும் சிவ புண்ணியத்தால் சிவனை உணர்ந்து அவனது உருவும், பெயரும், தொழிலும் பெற்றமையால் அவரது உலகமும் முத்தியுலகம் எனப்படும் என்பதையும் அறிந்து தெளிக.

பிரகிருதிவரையில் உள்ள தத்துவங்களில் உள்ள பதவிகட்கு மால், அயன், இந்திரன் முதலியோர் புண்ணிய மிகுதியால் தலைவர்களாய் இருப்பர். பிரகிருதிக்கு மேற்பட்ட தத்துவத்தில் உள்ள பதவிகட்குச் சிவ புண்ணிய மேலீட்டால் பக்குவமுற்றுச் சிவஞானத்தைப் பெற்ற சீகண்ட உருத்திரர், அனந்ததேவர், மந்திர மகேசுரர், அணுசதாசிவர் என்போர் தலைவர்களாய்த் திகழ்வர். இவர்களுள் சீகண்ட உருத்திரர் ஒருவர் மாத்திரம் பிரளயாகலருள் பக்குவம் பெற்றுச் சிவஞானம் கைவரப்பெற்றவர். ஏனையோர் விஞ்ஞானகலருள் பக்குவம் பெற்றுச் சிவஞானம் பெற்றவர்கள். இவர்கள் சிவஞானத்தால் மலம் நீங்கப் பெற்றாலும், மலவாசனை நீங்கப்பெறாமையால் அதிகாரத்திலும் போகத்திலும் சிறிதே இச்சையுடையராயிருப்பர். இதனால் இவர்கள் மேற்கூறிய தலைமையைப் பெற்று புவன பதிகளாய் விளங்குவர். ஞானத்தால் பெற்ற உரிமை காரணமாக இவரெல்லாம் நடத்த சிவனோடொத்து உருவும் பெயரும், தொழிலும் உடையராயினும், ஆன்ம வருக்கத்துட் பட்டவர்களே யாவர் என்பதை அறிக. ஆன்ம வருக்கத்துட்பட்டவராய் இந்நிலைகளைப் பெற்றவர்களே 'அணுபட்சதி

தினர்' என்று வழங்கப்படுதலையும், பரமசிவன் கடந்த நிலையில் கொள்ளும் சதாசிவன், மகேசுவரன், வித்தியேசுரன், உருத்திரன், மால், அயன் என்னும் நிலைகள் 'சம்புபட்சம்' என்று வழங்கப்பெறுதலையும் நீ நன்கு அறிவாய், அணுபட்சத்தினர் தம்தம் அதிகார எல்லைக்கு உட்பட்டு வாழும் ஆன்மகோடிகட்குப் படைத்தல் முதலிய ஐந்தொழில்களையும் செய்வர். இவற்றுள் அருளலை ஆசான் மூர்த்தியாய் உடனிருந்தே செய்வர். விரையத் தோன்றி மறையும் அருட்டிரு மேனியாலும், உயிர்க் குயிராய் உள் நின்று உணர்த்துதலாலும் குறைவின்றி நிரம்பிய ஞானத்தை அருளுபவன் பரமசிவன் ஒருவனே என்பதை அறிந்து தெளிக. இப் பரமசிவனோடு இரண்டறக் கலக்கும் நிலையாக மேற் கூறப்பெற்ற முத்தியே பரமுத்தி என்பதை முன் கடிதத்தில் விளக்கியதை ஈண்டு நினைவுகூர்க. அஃதல்லாது அணுசதாசிவர், மந்திர மகேசுவர அனந்ததேவர் என்பவரது உலகங்களை அடைந்து நிற்றல் அபர முத்தியாம் என்பதை அறிந்து தெளிக. 'இவரெல்லாம் சுத்தமாயையில் தோன்றிய சுத்த தத்துவ புவனங்களில் வாழ்பவர்' என்பதை ஏற்கெனவே விளக்கியுள்ளதை ஈண்டு நினைவுகூர்க. ஆகவே, சுத்த தத்துவ புவனங்களே அபரமுத்தி தானங்கள் என்பது தெளிவாகும்.

பதமுத்தி : இனி, பத முத்தி இன்னதென்பதை விளக்குவேன். வித்தியா தத்துவங்கள் ஏழிலும் உள்ள சீகண்ட புவனம் முதலிய உருத்திர உலகங்களை அடைதல் பதமுத்தியாம். குணருத்திரர் உலகத்தை அடைதலும் ஒரு வகைப் பதமுத்தியேயாகும் என்பதையும் அறிக. இவ்வுருத்திர உலகமும் ஒரோவழி 'சிவலோகம்' என்று வழங்கப்படும் என்பதை முன்னரே விளக்கியுள்ளதை ஈண்டு நினைவுகூர்க.

அபரமுத்தி பதமுத்திகள் முடிந்த முத்தியல்லது, அபரமுத்தித்தானங்களும் பதமுத்தித் தானங்களும் பல

வாதலின் அத்தானங்களின் அடையும் முத்தி நிலைகளும் பலவாக அமைகின்றன. இவை சாலோகம், சாமீபம், சாரூபம் என்று மூன்று வகைப்பட்டிருக்கும். இவற்றை ஒவ்வொன்றாக விளக்குவேன்.

சாலோகம் : சாலோகம் என்பது இறைவனது உலகம் இருப்பிடம். இதனைத் திருமூலர்.

சாலோக மாதி சரியாதி யிற்பெறுஞ்
சாலோகஞ் சாமீபந் தங்குஞ் சரியையால்
மாலோகஞ் சேரில் வழியாகும் சாரூபம்
பாலோகம் இல்லாப் பரனுரு வாமே.[25]

என்று விளக்குவர். ஒருவர் இல்லத்தில் பணி புரியும் அகம் படிமைத் தொண்டர் அவ்வில்லம் முழுவதும் தடையறச் செல்லும் உரிமையைப் போன்ற உரிமையைத் தருவது சரியைத் தொண்டு. இஃது ஆணவத்தைக் குறைக்கும் என்பதை நீ நன்கு அறிவாய். சரியைத் தொண்டே 'தாச மார்க்கம்—அடிமைநெறி' என்று வழங்கப்பெறுகின்றது. தாசமார்க்கத்தைத் திருமூலர்,

எளியனல் தீப மிடல்மலர் கொய்தல்
அளிதின் மெழுகல் அதுதூர்த்தல் வாழ்த்தல்
பளிமணி பற்றல் பன்பஞ் சனமாதீ
தளிதொழில் செய்வது தான்தாச மார்க்கமே.[26]

என்று விளக்குவர். அடிமை நெறிக்கு திருநாவுக்கரசரை எடுத்துக் காட்டாகக் கொள்வர்.

சாமீபம் : மேற்குறிப்பிட்ட உலகங்களில் பணியாளர் போல அகல நில்லாது, மைந்தர்போல அப்புவன பதிகளை அருகணைந்து நிற்கும் உரிமையைப் பெற்றிருத்தலே

25. திருமந்திரம்-ஐந், தந். சாலோகம்—1
26. ஷெ. ஷெ.தாச மார்க்கம்-1

'சாமீபம்' என்னும் முத்தி நிலையாகும். திருமூலர் இதனை,

> பாசம் பசுவான தாகும்இச் சாலோகம்
> பாசம் அருளான தாகும்இச் சாமீபம்
> பாசஞ் சிரமான தாகும்இச் சாமீபம்
> பாசங் கரைபதி சாயுச் சியமே.[27]

என்று விளக்கிக் காட்டுவர். இஃதுபற்றிய இப்பயனைத் தரும் கிரியை வழிபாடு சற்புத்திரமார்க்கம்—மகன்மை நெறி என வழங்கப்பெறுகின்றது. இந்த நெறியைத் திருமூலர்,

> பூசித்தல் வாசித்தல் போற்றல் செபித்திடல்
> ஆசற்ற நற்றவம் வாய்மை அழுக்கின்மை
> நேசித்திட் டன்னமும் நீர்சுத்தி செய்தலும்
> மாசற்ற சற்புத் திரமார்க்க மாகுமே.[28]

என்று காட்டுவர். மகன்மை நெறிக்கு ஞானசம்பந்தப் பெருமானை எடுத்துக்காட்டாகக் கொள்வர்.

சாரூபம் : இக்கூறிய புவன பதிகளை அருகணைந்து நிற்றலோடு அமையாது அம்மைந்தரினும் சிறந்த தோழர் போல, அப்புவன பதிகளோடு ஒத்த உருவம். பெயர் முதலியவற்றை உடையராய் நெருங்கி அளவளாவி நிற்கும் உரிமையைப் பெற்றிருத்தலே 'சாரூபம்' என்னும் முத்தி நிலையாகும். இதனைத் திருமூலர்,

> சயிலலோ கத்தினைச் சார்ந்த பொழுதே
> சயிலம தாகுஞ் சராசரம் போலப்
> பயிலும் குருவின் பதிபுக்க போதே
> கயிலை இறைவன் கதிர்வடி வாமே.[29]

என்று கூறுவர். இதுபற்றிய இப்பயனைத் தரும் யோக

27. ஷெ. ஷெ. சாமீபம் -1
28. ஷெ. ஷெ. சற்புத்திர மார்க்கம்.2.
29. ஷெ. ஷெ. சாரூபம்-2

வழிபாடு 'சக மார்க்கம்—தோழமை நெறி' என்று பேசப் பெறுகின்றது. திருமூலர் இந்நெறியை,

சன்மார்க்கந் தானே சமார்க்க மானது
மன்மார்க்க மாமுத்தி சித்திக்குள வைப்பதாம்
பின்மார்க்க மானது பேராப் பிறந்திறந்
துன்மார்க்க ஞானத் துறுதியு மாமே.[30]

என்று கூறுவர். தோழமை நெறிக்கு சுந்தரமூர்த்தி அடிகளை எடுத்துக் காட்டாகக் கொள்வர்.

சாயுச்சயம் : இறைவனோடு இரண்டறக் கலக்கும் நிலையை அடைதல் இது. சாயுச்சத்தைத் தருவது ஞானமே. இதனைத் திருமூலர்,

சைவம் சிவனுடன் சம்பந்த மாகுதல்
சைவந் தனையறிந் தேசிவஞ் சாருதல்
சைவம் சிவந்தன்னைச் சாராமல் நீங்குதல்
சைவம் சிவானந்தம் சாயுச் சியமே.[31]

என்று விளக்குவர். இதுவே பெரும் பேறாகலின் இதனைத் தரும் ஞானம் 'சன்மார்க்கம்—நன்னெறி' என்று வழங்கப் பெறுகின்றது. இந்நெறியைத் திருமூலர்,

தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப்
பரிசிக்கக் கீர்த்திக்கப் பாதுகஞ் சூடக்
குருபத்தி செய்யும் குவலயத் தோர்க்குத்
தருமுத்தி சார்பூட்டும் சன்மார்க்கந் தானே.[32]

என்று விளக்குவர். இந்நெறிக்கு மணிவாசகப்பெருமானை எடுத்துக்காட்டாகக் கொள்வர்.

அபரமுத்தியிலும் பதமுத்தியிலும் சாயுச்ச நிலைகள் உண்டு. இங்கு அப்புவன பதிகளோடு ஒத்த உருவம்

30. ஷை. ஷை. சக மார்க்கம்-1488

31. ஷை. ஷை. சாயுச்சியம்-1

32. ஷை. ஷை. சன்மார்க்கம்-3.

முதலியவற்றைப் பெற்றிருத்தலோடு அமையாது அவர்கள் ஆணைவழி அவர்கள் போலவே அவரது அதிகாரங்களைப் பெற்றிருத்தலே அபர சாயுச்ச பதசாயுச்சங்களாம் என்பதை அறிக.

இனி, சாலோகம் முதலியவற்றின் பயன்களை விளக்குவேன். சிறப்பு உண்மைச் சரியையில் சரியை முதலிய நான்கிலும் நின்றோர் நிவிர்த்திகலையுட்பட்ட உருத்திர உலகங்களில் சாலோகம் முதலியவற்றைப் பெறுவர்; கிரியையிற் சரியை முதலிய நான்கிலும் நின்றோர் பிரதிட்டாகலை யுட்பட்ட உருத்திர உலகங்களில் சாலோகம் முதலியவற்றைப் பெறுவர். இவ்விரு உலகங்கட்கும் புவன பதிகட்கும் சீகண்ட உருத்திர முதல்வராதலை ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளேன். அதனை ஈண்டு நினைவுகூர்க.

யோகத்தில் சரியை முதலிய நான்கிலும் நின்றோர் வித்தியா கலையுட்பட்ட உருத்திர உலகங்களில் சாலோகம் முதலியவற்றைப் பெறுவர். இவ்வுலகங்கட்கும் புவனங்கட்கும் முதல்வர் அனந்ததேவர் என்பதை நீ நன்கு அறிவாய்.

இனி, ஞானத்துள் கேட்டலின் விரியாகிய ஞானச் சரியையிற் சரியை முதலியவற்றில் நின்றோர் நிவிர்த்தியும் பிரதிட்டையுமாகிய கலைகளுட்பட்ட அபரமுத்தித்தானமாகிய சிவலோகங்களில் சாலோகம் முதலியவற்றைப் பெறுவர். சிந்தித்தல், தெளிதல் இவற்றின் விரியாகிய சரியை முதலியவற்றில் நின்றோர் முறையே வித்தை சாந்தி என்னும் கலைகளுட்பட்ட அபரமுத்தித் தானமாகிய சிவலோகங்களில் சாலோகம் முதலியவற்றைப் பெறுவர்.

நிட்டையில் மீளாது நிற்கமாட்டாதோர் ஞானத்துள் ஞானமாகிய அதனிற் சரியை முதல் யோகம் ஈறாகிய நிலையுடையராய் நிற்பராகலின். அவர் சாந்தியதீத

கலையுட்பட்ட புவனங்களில் சாலோகம் முதலியவற்றைப் பெறுவர். இவ்வுலகங்கள் அனைத்திற்கும் தடத்த சிவனாகிய சிவபெருமானே முதல்வனாதலை ஏற்கெனவே விளக்கியுள்ளேன். அதனை ஈண்டு நினைவுகூர்க.

நிட்டையில் மீளாது நிற்கும் நிலையுடையோரே ஞானத்துள் ஞானமாகிய அதனுள்ளும் முடிவாகிய ஞானத்தைப்பெற்றோராவர். இவரே சொரூப சிவனாகிய பரம சிவனோடு இரண்டறக் கலக்கும் பரமுத்தியை ஆடைவர் என்பதை அறிந்து தெளிக.

மேற்கூறிய பல்வேறு முத்தி நிலைகளை அடைந்தோரின் தன்மைகளையும் தெளிவிப்பேன். ஞானத்துள் ஞானமாகிய நிட்டை நிலையை எய்தினோர் அதனுள் நிற்க மாட்டாதவராயவழியும் மேற்கூறிய அபரமுத்தியைப் பெற்று அங்கு நின்றே பரமுத்தியைப் பெறுவர் இவர்க்கு மீட்சி இல்லை. ஏனைய கேட்டல் முதலிய மூன்றினும் நின்று அபரமுத்தியைப் பெற்றோர் மீளுதல் சிறுபான்மை. இவர் மீண்டவழி தீவிரபத்தி அதிதீவிர பத்திகளை உடையவர்களாய் நின்று ஆசான் மூர்த்தியை வேண்டாது இப்பிறவியிலேயே பரமசிவன் நேர்படப் பெற்றும் பெறாதும் அவனோடு இரண்டறக் கலத்தலாகிய பரமுத்தியைப் பெறுவர். இங்ஙனம் பெறும்வழித் தாம் செய்த தீவிரபத்தி அதிதீவிரபத்திச் செயலின் பயனை மேற்கூறிய அபரமுத்தி உலகங்களிற் சென்று நுகர்ந்து ஏற்றபெற்றியான் மெல்லவும் விரையவும் பரமுத்தியை அடைவர். அறுபான்மும்மை நாயன்மார் இத்திறத்ினரே என்பது அவர்தம் வரலாறுகள் நோக்கி அறிந்து கொள்க. இவர்கள் ஞானத்தைப்பெற்று மீண்ட அபரமுத்தர் என்பது ஆசான் மூர்த்தியின்றியே சிவஞானமும் சிவபத்தியும் மிக்க உடையராயினமையால் விளங்குதல் தெளிவாகும்.

பதமுத்தியை அடைந்தோர் அவ்விடத்தே இரு வினையொப்பு முதிரப்பெற்று ஞானத்தை அடைந்து அங்கு நின்றே அபரமுத்தி பரமுத்திகளையடைதல் சிறு

பான்மை. பெரும் பான்மையும் அவர்கள் மீளவும் ஞானம் பெறுவதற்கு வாய்ப்பான நல்ல சூழ்நிலையிற் பிறந்து தவத்தை முற்றச் செய்து ஆசான் மூர்த்தி அருளால் ஞானத்தைப் பெற்றுப் பின் அபரபர முத்திகளை அடைவர் என்பதை அறிந்து கொள்க. நிவிர்த்திகலை பிரதிட்டா கலையுட்பெறும் பதமுத்தியாளர்க்கே சீகண்ட உருத்திரர் பதியாய் நிற்பர் என்பதை முன்னரே குறிப்பிட்டுள்ளேன். அதனை ஈண்டு நினைவுகூர்க.

மேன்மேல் உள்ள தத்துவங்கள் கீழ் கீழ் உள்ள தத்துவங்களிலும் வியாபகமாதலின் நிவிர்த்தி பிரதிட்டை என்னும் கலைகளிலும் பதமுத்தி அபரமுத்தித் தானங்கள் உளவாதலும் அறிந்து கொள்க.

இவ்விடத்தில் 'சிவ குமாரர்கள்' எனப்படுவோரைப் பற்றியும் குறிப்பிடுதல் பொருத்தமாகும். இவர்கள் விநாயகக் கடவுள் முருகக் கடவுள், வயிரவக் கடவுள், வீரபத்திரக் கடவுள் என்பவராவர். இவர்களும் நிவிர்த்தி பிரதிட்டாகலைகளில் பதச் சாயுச்சம் பெற்றவர்களாவர்: அதனால் இவர்களை வழிபடுவோர் இவர்பால் சாலோகம் முதலியவற்றைப் பெறுவர் என்பதையும் அறிக. பத முத்திகளில் சாயுச்சம் பெற்றோரை 'அபரமுத்தர்' என வழங்குதலும் உண்டு. இவர்கள் தம் விருப்பத்தின்வழியும் புவனபதிகளின் விருப்பத்தின்வழியும் பலவகையான உருவங்களையும் பெற்றிருப்பர் என்பதையும் அறிக.

உண்மைச் சரியை முதலியவற்றிற்கு ஞானமும் ஞானத் திற்சரியை முதலியவற்றிற்கு ஞானத்தில் ஞானமுமே உண்மைப் பயனாயினும் இவை இடை நிலைப் பயனாக முறையே பதமுத்தியையும் அபர முத்தியையும் தரும் என்பதையும் அறிந்து தெளிக. இத்துடன் இக்கடிதத்தை நிறைவு செய்கின்றேன்.

அன்பன்,

கார்த்திகேயன்.

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலம். நலமேயாகுக. முன் கடிதத்தில் 'சீவன் முத்தி' பற்றிக் குறிப்பிட்டேன் அல்லவா? அதுபற்றி இக் கடிதத்தில் விளக்குவேன்.

ஞானத்தில் ஞானமாகிய நிட்டையின் பயனாக அடையப்படும் பரமுத்தி — அதாவது 'சாயுச்சம் — என்னும் நிலையை இவ்வுலகில் இவ் வுடம்போடு கூடியிருக்கும் நிலையில் பெற்றிருத்தலையே 'சீவன் முத்தி' என வழங்குவர். இஃது ஓர் அதீத நிலையாகும். இந் நிலையைப் பெற்ற சீவன் முத்தர்க்குச் சஞ்சித வினை நிர்வாண தீக்கையால் கெட்டொழிந்து, ஆகாமியம் இறைவனது அருள் ஒளியால் ஏறாததாயிற்று. ஆகவே, உள்ளது, எடுத்த உடம்பு முகந்து கொண்ட பிராரத்த வினை ஒன்றேயாகும். இஃது உள்ளதுணையும் இவர்கள் ஏனையோர் போல உண்டு உடுத்து பூசி முடித்து நலந் தீங்குகளை எய்தி நிற்பினும், தாமரை இலைத் தண்ணீர் போலச் சிறிதும் பற்றின்றிச் சலியாதே நிற்பர். பிராரத்தம் உள்ளவரையில் உடம்பு நீங்காது நிற்கும் என்பதை நீ நன்கு அறிவாய். ஆயினும், அஃது உடலளவாய் நின்று ஒழியுமேயன்றி, உயிரைத் தாக்கி, உலகத்தோடு தொடர்புபடுத்துதல் இல்லை. ஆகவே, சீவன் முத்தி நிலையை அடைந்தோர் எஞ்ஞான்றும் இறை நினைவில் அழுந்தி, இறைவனோடு தொடர்புற்று நிற்றலன்றி, உலகத்தோடு தொடர்புற்று நிற்றல் இல்லை. இந் நிலை தான் நிட்டை நிலை என்று வழங்கப் பெறுகின்றது.

இந்த நிட்டையில் இவர்களை 'ஞாயிறு எங்கெழில் என்?'[33] 'வானம் துளங்கில் என்றார்; மண் கம்பம் ஆகில் என்?'[34] என்று கவலையற்றிருப்பர். இவர்கள் யார்க்கும்

33. தேவாரம்-6.95:2

34. ஷை. 6.98:1

குடியல்லர். நமனையும் அஞ்சார். இவர்கள் என்ஞான்றும் 'தனக்கு உவமை இல்லாதான்' தாள் நிழலில் நிற்றலால் இவர்க்கு எந்நாளும் இன்பமேயன்றித் துன்பம் இல்லை. சமய அநுட்டானம், சாதிகுல வரம்பு, உறவு, பகை முதலிய ஒன்றும் இவர்களிடம் காணப்படுதல் இல்லை. இந் நிலையை இவர்கள் முயன்று பிடித்தல் இல்லை. இதன்கண் இவர்கட்கு எல்லையில்லாததோர் இன்பம் தோன்றுதலால், மதுவுண்ட வண்டு அம் மலரிலே மயங்கிக் கிடத்தல்போல இவர்கள் இறைவனது திருவடி வியாபகத்துள் நிற்பர். எனினும் இவர்கள் சிவ பக்தர்களை உறவாகவும் நட்பாகவும் கருதுவர். குருலிங்க சங்கமம்[35] வழிபாடுகளைச் சிவனாகவே கண்டு வழிபடுதலையே விரும்பிச் செய்து வாழ்வர். உடம்பு நீங்கியவுடன் பரமசிவனோடு இரண்டறக் கலத்தலாகிய சாயுச்ச பரமுத்தியைப் பெறுவர். இவர்கள் அகமுகமாகிய அதீத நிலையின் நீங்கிய புறமுகமாய் நிற்கும் பொழுதெல்லாம் மேற்சொன்ன துரிய நிலையிலே நிற்பர் என்பதை அறிக.

இறைவனது திருவடி நிழல் இன்பத்தை,

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.[36]

என்ற திருப்பாடலில் தம் அநுபவமாகக் காட்டுவர் அப்பர் பெருமான். பிறிதோர் இடத்தில் இப்பெருமான்,

கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும்
பனிம லர்க்குழற் பாவைநல் லாரினும்
தனிமு டிக்கவித் தாளும் அரசினும்
இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே.[37]

---

35. குரு—ஆசாரியர்; இலிங்கம்—திருக்கோயில் இருக்கும் இறைவனின் திருமேனிகள்; சங்கமம்—சிவனடியார்கள்
36. தேவாரம்-5-90:1
37. ஷை 5-14:10.

என்ற பாசுரத்தில் திருவிடைமருதூர் இறைவனை இனிய னாகக் காட்டித் தம் அநுபவத்தைப் பெற வைப்பர்.

இன்னோர் உண்மையினையும் ஈண்டு நீ அறிந்து கொள்ளல் வேண்டும். உடம்பு காரணமாக வரும் பசி முதலியவை காரணமாக இவர்களது அறிவு புறத்தே வருதல் எவையேனும் சில நேரமேயன்றிப் பிறர்போல் எப்பொழுதும் அன்று என்பதை நீ உளங்கொள்ளல் வேண்டும். இந் நிலையில் இவர்கள் சுவையான உணவு களையும் நல்ல பாங்கான உறைவிடங்களையும் தேடிச் செல்லார். மாறாக, இயல்பாகக் கிடைக்கும் காய், கனி, கிழங்கு, சருகு, நீர், காற்று முதலியவற்றையே உண்டு பொதுவிடங்களிலும், புறத்திண்ணைகளிலும், மர நிழல் களிலுமே தங்குவர்.

அகலிடமே இடமாக ஊர்கள் தோறும்
அட்டுண்பார் இட்டுண்பார் விலக்கார் ஐயம்
புகலிடமாம் அம்பலங்கள் பூமி தேவி
யுடன் கிடந்தாற் புரட்டாள்[38]

என்ற அப்பர் பெருமானின் திருப்பாடலால் இவர்கள் நிலையை அறியலாம்.

அன்பும் அறனும் உடைய பிறரால் கொடுக்கப் பெறின், அதனை 'சிவனருள்' என்று எண்ணி மறுக்காமல் கொள்வர். 'சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன்' என்பதில் சிறிதும் வழுவாதவன் இறைவன் அன்றோ? ஆதலின், அவன் இச் சீரடியார்க்கு வேண்டத்தக்கதை அறிந்து வேண்டும்பொழுது கிடைக்குமாறு செய்து நிற்பான். மணிவாசகப் பெருமானின்,

வேண்டத் தக்க தறிவோய்நீ
வேண்ட முழுதும் தருவோய்நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ
வேண்டி யென்னைப் பணிகொண்டாய்

38. ஷ்டி -6.98:2

வேண்டி நீயா தருள்செய்தாய்
யானும் அதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னில்
அதுவும் உன்றன் விருப்பன்றே.[39]

என்ற மணிவாக்கால் இதனை யறியலாம். ஆயினும், இந்த அடியார்கள் 'இறைவன் கொடுப்பான்' என்று எதிர்நோக்குதலும் இல்லை. ஆயினும், அவன்தானே முன்வந்து இவர்கட்கு அவற்றைக் கிடைக்கச் செய்வான். அப்பர் சுந்தரர் இருவர்க்கும் இறைவன் கட்டமுது கொணர்ந்து கொடுத்ததும், சுந்தரர்க்கு இரந்து வந்து சோறிட்டதும், ஞானசம்பந்தருக்கு முத்துச் சிவிகை, முத்துப் பல்லக்கு, முத்துச் குடை முதலியவற்றைத் தானே கொடுத்ததும், திருவீழிமிழலையில் சம்பந்தர், நாவுக்கரசர் இருவர்க்கும் நாள்தோறும் படிக்காசு அருளியதுமான நிகழ்ச்சிகள் இதற்குச் சான்றுகளாக அமைகின்றன. இங்ஙனம் இவர்கள் கவலையற்றிருப்பதால் இவர்களது செயல் சில சமயம் இளஞ்சிறார்களது செயல் போலவும், பித்துக் கொண்டவர் செயல் போலவும், களிப்பு மிகுதியால் ஆடுதல் பாடுதல் முதலியனவாகவும் நிகழலாம்.

உலகில் இவர்கட்கு எவ்வகைப் பற்றும் இல்லாமையால் உலகியல்பற்றிய விருப்போ வெறுப்போ இவர்களிடம் தலைக் காட்டாது. உடம்புபற்றிய அச்சமும் இவர்கட்கு இல்லை.

அஞ்சுவது யாதொன்றும் இல்லை
அஞ்ச வருவதும் இல்லை.[40]

நாமார்க்கும் குடியல்லோம்; நமனை
அஞ்சோம்; நரகத்தில் இடர்படோம்

39. திருவா. குழைத்த பத்து 6.
40. தேவாரம்.

நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்;
நரகத்தில் இடர்ப்படோம் நடலைஇல்லோம்;
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்;
இன்பமே யெந்நாளும் துன்பம் இல்லை.[41]

வானந் துளங்கிலென்? மண்கம்ப
மாகில்என்? மால் வரையும்
தானந் துளங்கித் தலைதடு
மாறில்என்? தண்கடலும்
மீனம் படில்என்? விரிசுடர்
வீழில்என்? வேலைநஞ்சுண்டு
ஊனம் ஒன்றில்லா ஒருவனுக்
காட்பட்ட உத்தமர்க்கே.[42]

என்ற அப்பர் திருமொழிகளை ஆழ்ந்து நோக்கின் இது நன்கு புலனாகும். ஆகவே, உலகியல்பற்றிய விருப்பு வெறுப்பு இவர்கட்கு உண்டாதல் இல்லை. ஆயினும், எவையேனும் சில விருப்பச் செயல்கள் நிகழ்வதாயின், அதுவே இறைவன் உயிர்களை உய்விக்க வேண்டி எழுந்தருளியிருக்கும் திருக்கோயில்கட்குச் சென்று வணங்குதல், அவற்றிற்கு ஆவனவற்றைச் செய்தல், மெய்யடியார்களுடன் கூடி இறைவனது புகழ்பாடி இன்புறுதல்—இவை யெல்லாம் இவர்கள் தம்மியல்பில் செய்யினும், இவை உலகிற்கு நலந் தருவனவாய் அமையும். தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா முதலிய தோத்திரப் பாடல்கள் இவ்வாறு எழுந்தனவேயாகும்.

இனி, தாம் பெற்ற இன்பத்தை உலகனைத்தும் பெற வேண்டும் என்னும் கருணையும் ஒவ்வொரு சமயத்தில் இவர்களது உள்ளத்தில்எழுவதுண்டு. 'யான்பெற்ற இன்பம்

41. ஷை. 6. 98 ; 1
42. ஷை. 4. 112:8

பெறுக இவ்வையகம்'[43] என்ற திருமூலரின் திருவாக்கினை யும் காண்க. இதன் பயனாகவே திருமந்திரம், சிவஞான போதம், சிவஞான சித்தியார் போன்ற தத்துவ நூல்கள் உலகிற்குக் கிடைத்தன என்பதை எண்ணி மகிழ்க. இவ் வியல்புடையவரே உலகிறகு நல்வழி காட்டுதற்கு உரியர் என்பதை விளக்கும்பொருட்டுத்தான் 'நீத்தார் 'பெருமை' என்ற ஓர் அதிகாரத்தைத் தமது நூலில் பாயிரப் பகுதியில் வைத்துள்ளார் வள்ளுவப் பெருந்தகை என்று எண்ணத் தோன்றுகின்றது. ஆகவே, சீவன் முத்தர்க்கு அவரது அறிவு இச்சைச் செயல்கள் ஒவ்வொரு பொழுது புறத்தே செல்லு மாயின் அப்பொழுதும் இந்நிலையில் அவை நிகழ்தலன்றி வேறு வகையில் நிகழமாட்டா என்பதைக் கருத்தினில் இருத்துக.

பிராரத்தம் காரணமாக உடலுக்கு இன்பம் வரினும் துன்பம் வரினும் இன்பத்தில் மகிழ்தலும் இல்லை துன்பத் தில் வருந்துதலும் இல்லை. இந்த இருதிறத்திலும் ஒரு தன்மையாய் இறைவன் திருவடி நிழலில் அகலாது நிற்பர் என்பதை அறிந்து தெளிக. 'பரஞானத்தால் பரனைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர்; பதார்த்தங்கள் பாரார்.[44] என்று சிவஞானசித்தியார் கூறுவது இச்சீவன் முத்தி நிலையையே என்பதை உளங்கொள்வாயாக.

இந்த நிட்டை நிலையை அடைந்தோர்க்கும் பரமுத்தியை எய்தினோர்க்கும் உள்ள வேறுபாடு இது தான்: முன்னவர்க்கு உடம்பு இருத்தலும் பின்னவர்க்கு இல்லாமையுமாகும். ஆகவே, பரமுத்தி அடைந்தோர் உடம்பைத் துறந்து பெறும் இன்பத்தைச் சீவன் முத்தர் உடம்போடு பெறுகின்றனர் என்பதை அறிக. ஆகவே, உடம்பு நீங்கியவுடன் இவர்கள் நேரே சாயுச்சமாகிய பரமுத்தியைப் பெறுவர். அதனால் இவர்களைச் சித்தியார்.

43. திருமந்திரம்- பாயிரம்-13

44. சித்தியார்-11.2

எண்ணும் இகலோகத்தே முத்தி பெறும் இவன்றான்
எங்கெழில்என் ஞாயிறெமக் கென்றுகுறை வின்றிக்
கண்ணுதல்தன் நிறைவதனிற் கலந்து காயம்
கழிந்தக்கால் எங்குமாய்க் கருதீன்போல் நிற்பன்.[45]

என்று கூறும். கொற்றவன் குடி உமாபதி தேவநாயனார்,

முதறிவார்க்கு—அம்மையும் இம்மையே யாம்[46]

என்று விளக்குவர். இந்த இரு கூற்றுகளாலும் பரமுத்தியை அடைந்தோர் உடம்பு நீங்கிப் பெறும் இன்பத்தைச் சீவன் முத்தர் உடம்பொடு நின்றே பெறுகின்றனர் என்பதை அறிந்து தெளிக. இதனால் இவர்கள் உடம்பு நீங்கியவுடன் சிவசாயுச்சமாகிய பரமுத்தியைப் பெறுதலன்றி வேறில்லை என்பதை உணர்ந்து கொள்க. சீவன் முத்தரைத் தமிழில் 'அணைந்தோர்' என்று வழங்குவர்.

இன்னொரு முக்கிய செய்தியையும் ஈண்டு நீ அறிதல் வேண்டும். குருவருளால் ஞானம் கைவரப் பெற்றோர் அனைவரும் சீவன் முத்தர் நிலையை அடைந்து விட முடியாது. ஞானத்தின்படி நிலைகளே இதற்குக் காரணம். இப் படிநிலைகள் யாவை? இவை: ஞானத்திற் சரியை, ஞானத்திற்கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என்பவையாம். இவை முறையே குரு உபதேசத் தின்வழி சிவ முதற்பொருளே ஏனைய எல்லாப் பொருட் கும் பற்றுக் கோடு எனக் கேட்டல், பின் அதனை நூல்களும் பொருந்துமாறு சிந்தித்தல், பின் அதுவே உண்மையென ஒரு தலையாகத் துணிதல், பின் பிறபற்றுகள் அற்று அச் சிவத்தில் அழுந்துதல்[47] என்பவையாகும் என்பதை அறிக

---

45. ஷை. 8. 31
46. திருவருட்பயன்- 10,9.
47. சித்தியார்-8,24

இவற்றுள் இறுதியிற் கூறிய 'அழுந்துதல்' என்னும் நிட்டை நிலையாகிய 'ஞானத்தில் ஞானம்' என்னும் நிலையே சீவன் முத்தி நிலையாகும் என்பதையும் அறிந்து தெளிக.

உயிர்கள்தோறும் ஆணவமலப் பிணிப்பு ஒருவகையாக இல்லாமல் வெவ்வேறு வகையாய் இருக்கும் என்பதை நீ நன்கு அறிவாய். இதனால் அதன் பரிபாக நிலையும் அதற்கேற்ப நிகழும் சத்தி நிபாத நிலையும் பல்வேறு வகையாக இருக்கும் என்பதும் உனக்குத் தெரியும். ஆகவே, குருவருளால் ஞானத்தைக் கேட்டல் என்னும் அளவில் பெற்றவுடனே எல்லோர்க்கும் நிட்டை நிலையாகிய சீவன்முத்தி நிலை எளிதில் கை கூடுவதில்லை. அதன்பின் சிந்தித்தல் தெளிதல்கள் நிகழ்ந்த பின்னர் தான் அது கை கூடுவதாகும். இனிச்சிந்தித்தல் தெளிதல்கள்களும் எல்லோர்க்கும் ஒரு வகையாக நிகழ்வதில்லை; பல்வேறு வகைப்பட்ட மந்தமாகவும் தீவிரமாகவும் நிகழும். 'அதி தீவிரத்தில் தீவிரம்' என்னும் நிலை வரும்பொழுதுதான் நிட்டையிலே நிற்றலாகிய 'சீவன் முத்தி நிலை' கூடுவதாகும். அதிதீவிரத்தில் அதிதீவிரமான தமது நிலையையே மணிவாசகப் பெருமான்,

> வீடகத்தே புகுந்திடுவான்
> மிகப்பெரிதும் விரைகின்றேன்[48]

என்று குறிப்பிட்டதையும் எண்ணி ஓர்க. இந்நிலை பலருக்கு இன்மையால்தான் பலர் குருவருளைப் பெற்ற பின்பும் சீவன் முத்தி நிலையை எய்த முடிவதில்லை. மணிவாசகப் பெருமானும் இந்நிலை தமக்கு வாய்க்கவில்லை என்பதை,

> வழங்குகின் றாய்க்குன் அருளா
> ரமுதத்தை வாரிக்கொண்டு

48. திருவா. திருச்சதகம்—அறிவுறுத்தல்—1

விழுங்கு கின்றேன்விக்கி னேன்வினை
யேன்என் விதியின்மையால்[49]

என்று குறிப்பிடுவதையும் காண்க. ஆகவே, இந்நிலை, வாய்த்தல் என்பது அரிதினும் அரிதாகும் என்பதை உளங் கொள்க. ஞானத்தின் மேற்கூறிய இந்தப் படி நிலை களையே வேறொரு வகையில் பத்தாகப் பகுத்து'தசகாரியம்' என்று குறிப்பிடும் சித்தாந்தம். இது 'ஞானச் செய்தி' என்றும் வழங்கப்பெறும். இதனை அடுத்த கடிதத்தில் விளக்குவேன்.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 46

அன்பு நிறைந்த கண்ணுதளப்பனுக்கு,

நலம். நலமே விளைந்திடுக.

இக் கடிதத்தில் 'தசகாரியம்' இன்ன தென்பதைத் தெளி வுறுத்துவேன். சித்தாந்த நூல்களில் குறிப்பிடப்பெறும் 'ஞானம்' என்பதற்கு 'அறிவு' என்பதே பொருளாயினும் தத்துவ நூல்களில் அது 'பொருளியல்பை உள்ளவா றுணரும் உணர்வுக்கே' குறியீடாக வழங்கும் என்பதை நீ அறிதல் வேண்டும். அறிதல் என்னும் அளவில் சரியை, கிரியை, யோகம் என்பனவும் ஞானமேயாயினும், சைவ சித்தாந்தம் இவற்றை ஞானம் என்னாது பொருளியல்பை உள்ளவாறு உணரும் உணர்வை-தத்துவ உணர்வை- 'ஞானம்'எனச் சிறந் தெடுத்துக் கூறுதல் இக்கருத்துபற்றியே யாகும்.

விரும்பும் சரியை முதல்
மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல்
அன்றோ பராபரமே.[50]

---

49. ஷை. அடைக்கலப்பத்து—10
50. தா. பா: பராபரக்கண்ணி—157

என்று தாயுமான அடிகள் சரியை முதலியவற்றையும் 'மெய்ஞ்ஞானம்' என்றது மெய்ப் பொருளை ஒருவாற்றான் அறியும் பொதுமை பற்றியே யாகும் என்பதை அறிந்து தெளிக.

சைவசித்தாந்தம் கூறும் முறையில் பொருளியல்புகளை உணர்வதே உண்மை ஞானமாகும். சைவ சித்தாந்தம் 'பொருளின் எண்ணிக்க வகையால் மூன்று' என்றும், 'அவற்றின் இயல்பு தடத்தம், சொரூபம்' என இரண்டு என்றும், அவற்றிடையே உள்ள தொடர்பு சுத்தாத்து விதம்' என்றும், நிலை வேறுபாடுகள் பெத்தம் முத்தி என இரு திறப் பட்டுப் பிறிதோராற்றால் கேவலம் சகலம், சுத்தம் என மூன்றாகி ஒவ்வொன்றிலும் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், தூழுரியாதீதம் என ஐந்நாய் மூவைந்து பதினைந்தாய் விரியும் என்றும் கூறுதலால் அவ்வாறு அவற்றை உணரும் ஞானமே சித்தாந்த ஞானம் ஆகும். இந்த ஞானமே கேட்டல் முதலிய நான்காகுமிடத்துப் பத்தாகி விரியும். இவை தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பனவாகும் என்பதை அறிக.

இவண் கூறிய பத்தும் உடற்செய்கைகளன்று: இவை அறிவுச் செய்கையாகிய ஞானச் செய்திகளேயாதலின், இவை அறிவின்கண் நிகழும் நிலை வேறுபாடுகளேயாகும் என்பதை அறிக. இங்குக் கூறப்பெற்ற நிலைகளுள் தத்துவம், ஆன்மா, சிவம் என்ற மூன்று பொருள்களும் முறையே பாசம், பசு, பதி, எனப்படுவதை நீநன்கு அறிவாய். ஆணவம் மாயை, கன்மம் என்ற மூவகைப் பாசங்களுள் மாயையின் காரியமாகிய தத்துவம் ஒன்றே இங்குக் கூறப்பெறுகின்றது. இதனை 'உலகம்' என்று பொதுவாகக் கூறலாம். ஆயினும் 'உலகம்' எனக் கூறினால் உடலையும் மனம் முதலிய பிற கருவிகளையும் அது தெளிவாக விளக்க மாட்டாதாதலின் 'உலகம்' என்ற சொல்லுக்குப் பதிலாகத் 'தத்துவம்' என்ற சொல்லே ஆளப்பெற்றுள்ளது தத்துவம் என்ற அளவில்

அவற்றின் காரியமாகிய தாத்துவிகங்களும் கொள்ளப் படுதல் மரபு என்பதையும் அறிக.

மூவகைப் பாசங்களில் மாயையை மட்டுமே கூறியதற்குக் காரணம் என்னை? இதுவே ஏனைய எல்லாவற்றையும் விடப் பருப்பொருளாய் நின்று உயிரை மயக்கித் தனக்கு வேறாய் உள்ள பொருளை நோக்காது தன்னையே நோக்கும்; அஃதன்றியும் தனக்கு மேல் வேறொரு பொருள் இல்லை என்று எண்ணும் எண்ணத்திற்கும் காரணமாய் நிற்கும். ஆகவே, முப்பொருளின் இயல்பை உள்ளவாறு உணரும் நிலை வேறு யாடே இங்குத் 'தசகாரியம்' எனப்படுகின்றது என்பது இனிது தெளிவாகும்.

இனி, தத்துவங்களைப்பற்றியும், ஆன்மாவைப்பற்றியும் கூறுமிடத்தில் 'ரூபம், தரிசனம், சுத்தி' என்று மூன்று நிலைகள் சொல்லப்பட்டிருத்தலை ஈண்டு நினைவு கூர்க. இவற்றுள் 'ரூபம்' என்பது பொதுவாக (நிருவிகற்பமாய்) அறிதல் என்றும், 'தரிசனம்' என்பது ஐயமாக அறிதல் என்றும், 'சுத்தி' என்பது தெளிவாக அறிதல் என்றும் தெரிந்து கொள்க.

சிவத்தைப்பற்றிக் கூறுமிடத்தில் நுவலப்பட்ட ரூபம்; தரிசனம் என்பவற்றிற்கும் இவையே பொருளாகும். ஆயினும், தத்துவத்தைப் பற்றியும் ஆன்மாவைப் பற்றியும் தெளிவாக அறிதலை 'சுத்தி' என்று சொல்வது போலச் சிவத்தைத் தெளிவாக அறிதலைச் 'சுத்தி' என்று சொல்வதில்லை. ஏனெனில், தத்துவத்தைப்பற்றியும் ஆன்மாவைப் பற்றியும் தெளிவாக அறிதலின் பயன் அவற்றால் வரும் மயக்கத்தினின்றும் நீங்குதலேயாகும். ஆதலின் அவை 'சுத்தி' எனப்படுகின்றன. சிவத்தைப்பற்றித் தெளிவாக அறிதலின் பயன் அதனை விட்டு நீங்காது அதற்கண் அழுந்தி இன்புறுதலேயாதலின் அது 'சுத்தி' எனப்படுதல் இல்லை என்பதை அறிந்து தெளிக.

சிவம் 'தானும், தன்சத்தியும்' என இரு கூறுபட்டு நிற்றலால் முதற்கண் சத்தியை அறிந்தே பின் சிவத்தை அறியும் நிலை உண்டாகும். இவற்றுள் சத்தியைத் தெளிவாக அறியும் நிலையே 'சிவயோகம்' எனப்படும்; சிவத்தைத் தெளிவாக அறியும் நிலையே 'சிவபோகம்' என்றும் நுவலப்படும்.[51]

மேலே தசகாரியத்தைப்பற்றிக் குறிப்பாகக் கூறினதைச் சிறிது விளக்குவேன். சத்தி நிபா தத்து உத்தமனாகிய மாணாக்கனுக்கு ஞான உபதேசம் செய்து 'வரம்பில் இன்பத்தில்' என்றும் ஒரு நிலையாய் இருத்தற்குரியதை விளக்குவார் ஞானாசிரியர்.

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்த விட்டு
அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே.[52]

என்பது சிவஞான போதம், இதில் 'விட்டு' என்றும் 'செல்லும்' என்றும் மெய்கண்டார் கூறும் இருசெயல்களே 'தசகாரியம்' எனப்படும் பத்துச் செயல்களாக விரிவுபடுகின்றன. இவற்றுள் 'விடுதல்' பாசக் கூட்டத்தையும், பசு போதத்தையுமாகும்; செல்லுதல் சிவத்தினிடத்திலாம்.

இவண் கூறிய உபதேசத்தைப் பெற்றோர் அனைவர்க்கும் விடுதலும், செல்லுதலும் ஒருவகையாகவே நிகழ்தல் இல்லை; அவரவரது தன்மைக்கேற்ப மெல்லவும் விரையவும் நிகழும். ஆகவே, உபதேசத்தைக் கேட்ட பின்னர்ச் சிந்தித்தலிலும் தெளிதலிலும் சிலர்க்குச் சிலகாலம் கழியும், அதன் பின்பு நிட்டை கூடிய வழியும் அந்நிட்டை

51. யோகம் என்பதற்கு 'ஒன்றுதல்' என்பதும், போகம் என்பதற்குத் 'துய்த்தல்' என்பதும் சொற்பொருள்களாகும்.

52. சி. ஞா. போ. சூத். 8.

நிலையில் நீங்காது நிற்போர் மிக மிக அரியர். மீளவும் தெளிதல் நிலைக்கு வருதலும், நிட்டையிற் செல்லுதலு மாகிய வரவு போக்குகளை உடையவரே பலராவர். இந் நிலையில் உடம்பு நீங்குதற்கண் நிட்டை நிலையிலே நீங்காது நிற்கப்பெற்றோரே இறைவனோடு இரண்டறக் கலத்தலாகிய சாயுச்ச பரமுத்தியைப் பெறுவர்; இந் நிலையில் நிற்கப் பெறாதோர் அபரமுத்தியைப் பெற்றுப் பின்னர்ப் பரமுத்தியை அடைவர். இனி, மேலே குறிப் பிட்ட தத்துவ சுத்தி முதலிய பத்தையும் சிறிது விளக்கு வேன்.

தத்துவ ரூபம் முதலிய மூன்று : ஆசிரியரின் உபதேசத் தைப் பெற்ற பின்னர் அதனை நூல்களின் துணைக்கொண் டும் தம் அறிவுக்குப் பொருந்துமாறும் ஆராய்தலே 'சிந்தித்தல்' என்பது. இங்ஙனம் சிந்திக்குங்கால் முப்பத் தாறு தத்துவங்களின் இயல்பையும் நூல்களில் நுவலப் பெற்றவாறே விளங்கிக் கொள்ளும் அளவில் அறிதல் தத்துவரூபம் ஆகும். இதில் நிகழ்வது பொது உணர்வே யாகும் என்பதை அறிக. பின்னர், 'இங்ஙனம் சொல்லப் பெற்ற இவை பொருந்துமா' எனத் தன்னறிவால் வைத்து ஓர்தல் தத்துவதரிசனமாகும். இதில் 'பொருந்தும்' என்றும் பொருந்தாது என்றும் இரண்டுபட்ட உணர்வே தோன்றும். இஃது ஐயுணர்வாதல் வெளிப்படை. அதன்பின் ஆசிரியர் உபதேசித்தபடியும், நூல்களில் சொல்லியபடியும் தத்து வங்கள் அனைத்தும் ஆன்ம அறிவு இல்வழிச் செயற்படாத சடப்பொருள்களே என்பதும் ஆதலின் இவை ஆன்மா அல்ல; ஆன்மாவின் வேறு என்பதும் உண்மையாதலை உணர்ந்து வியப்புறுதல் தத்துவ சுத்தியாம். இது துணி புணர்வு என்பது தெளியப்படும். இத் துணிபுணர்வு பிறந்த பின் உயிர் அச்சடப் பொருள்களை உவர்த்து அவற்றின் நீங்குதற்கு இடைவெளி இன்மையால் இது தத்துவ சுத்தியா தற்கு தடையின்மை அறிந்து தெளிக.

ஆன்மரூபம் முதலிய மூன்று : தத்துவங்களின் இயல்பை நூல்களிற் சொல்லியவாறு அறிந்து கொள்ளுதல் போல,

'தத்துவங்களோ அல்லது அவற்றின் கூட்டமோ ஆன்மா அல்ல; ஆன்மா வேறு' என்பதையும் அதன் இயல்புகளையும் நூல்களிற் சொல்லியவாறு அறிந்து கொள்ளுதலே ஆன்மரூபம் என்பது. அதன்பின் அவற்றைத் தன் அறிவிற்குப் பொருந்துமாறு ஆராய்தலே ஆன்மதரிசனமாகும். இவ்வாறு ஆராய்ந்தபொழுது, ஆன்மா தத்துவங்கள் போலச் சடமாகாது சித்தே என்றாலும், பிறிதொன்றன் துணையின்றித் தனித்து நின்று அறிய இயலாது. ஆதலின் அதற்கு எஞ்ஞான்றும் துணையாய் உடன் நின்று உணர்த்தி வருவது முதல்வன் திருவருளே என்பது இனிது விளங்கும். ஆதலின் அவ்விளக்கத்தின்வழித் தனக்கென ஒரு செயலுமின்றி, எல்லாம் முதல்வன் செயலாக உணர்ந்து தன் செயலற்று இருத்தல் ஆன்ம சுத்தியாகும். இவற்றால் எந்த ஒன்றேயாயினும் 'யான் செய்தேன்' அல்லது 'பிறர் செய்தார்' என்று எண்ணுதலும், ஒன்றை 'என்னுடையது' அல்லது 'பிறருடையது' என்று எண்ணுதலும் ஆகிய 'யான் எனது என்னும் செருக்கு' அற்றொழியுமாதலின் இதுவே ஆன்ம சுத்தியாதல் அறிந்து தெளிக.

சிவரூபம் முதலிய நான்கு: இவற்றையும் தெளிவிப்பேன். தத்துவங்களின் இயல்பு, ஆன்மாவின் இயல்பு இவற்றை நூல்களில் கூறியவாறே கொள்ளுதல் போல, சிவத்தினது—பொது வியல்பு (தடத்த இலட்சணம்—உலகத்தை ஐந்தொழிற்படுத்தல்) உண்மை இயல்பு (சொரூப இலட்சணம்—எண் குணம் உடைமை) நூல்களில் சொல்லியவாறு அறிந்து கொள்ளுதல் சிவரூபம் ஆகும். பின்னர் அவற்றைத் தன்னறிவிற்குப் பொருந்துமாறு ஆராய்தல் சிவதரிசனம். சிவத்தினது இயல்பு இவ்வாறு அறிவிற்குப் பொருத்தமாதல் தோன்றும்பொழுதே முன்னர்க் கூறிய 'யான், எனது' அற்ற நிலைமை நிலை பெறுதலும், அதனால் எங்கும் சிவமாய்க் காணும் காட்சியும், அக் காட்சியால் சிவானந்த விளைவும் உண்டாகும். ஆகவே, இந் நிலையே சிவத்தை உண்மையில் காணும் சிவதரிசனமாகும்.

சிவதரிசனம் வாய்த்தபொழுதும் பழைய வாசனை பற்றி 'யான் செய்தேன்; பிறர் செய்தார்; என்னுடையது; பிறருடையது' என்று என்னும் தற்போதம் அல்லது சிவ போதம் எழும். இதனை அச்சிவதரிசன முறையில் சிந்தித்து அடக்கித் தன் செயற்றுச் சிவத்தில் ஒன்றி இருத்தலே சிவ யோகம் ஆகும். இதுவே உண்மை யோகம்; ஏனைய யோகம் பொது யோகமே என்பதை அறிக.

சிவயோகத்தில் ஆன்மா நிலைத்து நிற்கும்போது சிவானந்தம் தோன்றும். ஆதலின் அதனை நுகர நுகர அஃது ஒரு காலைக்கொருகால் மிகுந்து பெருகி ஆன்ம அறிவைத் தன்னுள்ளே விழுங்கிக் கொள்ளும்.

> யானாகிய என்னை விழுங்கிவெறுந்
> தானாய் நிலை நின்றது தற்பரமே.[53]

என்ற திருவாக்கில் குறிப்பிட்டுள்ளது இந்நிலையே என்பதை அறிக. ஆன்மபோதம் அறவே முழ்கடிக்கப்பட்ட பின்னர், ஆன்மா தன்னையோ, பிறரையோ, பிறபொருள் களையோ உணரும் நிலைமை எப்படி இருக்க முடியும்? ஆகவே, இந்நிலையில் சொல் இல்லை; செயல் இல்லை; மனம் இல்லை; இரவில்லை; பகல் இல்லை; எதுவுமே இல்லை. இதுவே சிவபோகம் என்பதை அறிந்து தெளிக. இதற்குமேல் ஆன்மா அடைய வேண்டிய பயன் யாதொன்றும் இல்லை. இச் சிவானந்தத்தை இடையறாது அநுபவித்தற்கு உடம்பு ஒரு சிறுதடையாகும். அது நீங்கினால் நிறைபேரின்ப நிலையாகிய பரமுத்தி நிலை வாய்த்துவிடும் என்பதை அறிக.

இங்ஙனமாகக் கூறப்பெற்ற தச காரியங்கள் மேற் கூறியவாறு முறையாகக் கூறப்பெற்றனவாயினும், அவை ஒன்று நிகழ்ந்து முடிந்த பின்னர்தான் மற்றொன்று நிகழும் என்று கருத வேண்டா. ஒன்று பெரிதும், மற்

53. கந்தரநுபூதி - 28

றொன்று சிறிதும், இன்னொன்று அதனிற் சிறிதுமாக எல்லாம் உடன் நிகழ்வனவேயாகும். ஆகவே, பெரிதாய நிலைபற்றிய பெயர் கூறப்படுவது என்பதை அறிக. எனவே, கீழ் கீழ் உள்ளவை நிலைபெறுதல் மேன் மேல் உள்ளவற்றினாலாம். ஆகவே, தத்துவ தரிசனத்தால் தத்துவ ரூபம் நிலை பெறும் ஆன்ம ரூபத்தால் தத்துவ தரிசனம் நிலை பெறும். ஏனையவற்றையும் இவ்வாறு முறைப்படுத்தி அறிந்து தெளிக. இதனை ஓர் எடுத்துக் காட்டால் விளக்கலாம். திருவேங்கடம் மலைமீது பேருந்தில் செல்லுங்கால் சிறிது மேற்சென்றபொழுது கீழ் உள்ள பொருள்கள் தெளிவாகத் தோன்றுதலைக் காணலாம். மிகவும் மேலே சென்று விட்ட பொழுது கீழே உள்ள பொருள்கள் தோன்றாது மறைதலையும் உணரலாம். இதுபோலவே இவையும் அநுபவமாகும் என்பதை உணர்ந்து தெளிக.

இன்னொரு முக்கியமான செய்தியையும் ஈண்டு நீ அறிந்து தெளிதல்வேண்டும். கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் என்னும் நான்குமே ஞானத்தின் படிகளாகும் என்பதை நீ நன்கு அறிவாய், இந்த நான்கிலும் தசகாரியங்கள் என்ற படிநிலைகளும் அடங்கும். இதனை ஈண்டு விளக்குவேன். இந்த இரண்டு வகைப் படிநிலை களையும் உற்று நோக்கின், கேட்டல் முதலிய நான்குமே தத்துவரூபம் முதலாகச் சொல்லிய பத்தாகக் காணப்படு கின்றன என்பது தெளிவாகும். துகளறு போதம் முதலிய சில நூல்களில் இவை 'முப்பது' என்று இன்னும் விரித்து விளக்கப்பெறுகின்றன. தசகாரியத்துள் 'ரூபம்' என்பன மூன்றும் கேட்டலில் அடங்கும்; தரிசனம் என்பன மூன்றும் சிந்தித்தலில் அடங்கும்; தத்துவ சுத்தி, ஆன்ம சுத்தி, சிவயோகம் என்னும் மூன்றும் தெளிதலில் அடங்கும்; சிவபோகம் நிட்டையில் அடங்கும். இவற்றையும் அறிக. சிவப்பிரகாசம் என்னும் நூல் இவற்றை வேறு வகையாகப் பிரித்துப் பேசும். இவையெல்லாம் வேறு வேறு போலும்

என மயங்கி மலையவேண்டா. ஆசாரியப் பெருமக்கள் அவரவர் மனம் அறிந்த அநுபவத்தை இவ்வாறு பல வகையாகக் கூறினாலும் அநுபவம் ஒன்றேயாதல் என்பதை ஓர்ந்து தெளிக.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 47

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைக.

முன்னொரு கடிதத்தில் [54] அவத்தைகளைப்பற்றி விளக்கினேன். அவற்றை மீண்டும் ஒரு முறை உளத்தில் நிறுத்தி இக்கடிதத்தில் கூறும் பொருள்களை ஆய்ந்து உளங் கொள்ளல் வேண்டும். சாக்கிரம் முதலிய ஐந்தவத்தைகளும் பெத்தத்தில் 'கேவல சகலங்களில்' நிகழும் என்பதை நீ நன்கு அறிவாய். அவை சுத்தத்திலும் நிகழும் என்பதை ஈண்டு விளக்குவேன்.

தத்துவமும், தாவதுவிகமும் ஆகிய கருவிகள் கூடுதல் பிரிதல்களினாற்றான் சாக்கிரம் முதலிய அவத்தை வேறுபாடுகள் நிகழ்கின்றன; இவை அங்ஙனம் கூடியும் பிரிந்தும் வருமிடத்துப் பிரிந்து நிற்கின்ற நிலையில் உயிருக்கு அறியாமை மேலிடுகின்றது; அப்போது உயிர் அதன்கண் அழுந்துகின்றது. இதுவே சகல ஐந்தவத்தை என்பதை நீ நன்கு அறிவாய். இங்ஙனம் கருவிகள் குறையக் குறைய உயிருக்கு அறியாமையாதல், புலனுணர்வாதல் உளவாதல் இல்லை. சிவாநுபம் உளவாதலே சுத்த ஐந்தவத்தைகளாகும். ஆகவே, இவையும் மேற் குறிப்பிட்ட தசகாரிய நிலைகளில் அமைவனவாகும். இவை அமையுமாறு எங்ஙனம் என்ப

54. இயல்—3; கடிதம்—23; பக் (161—66)

தைத் தெரிவிப்பேன். சிவத்துவ அநுபவம், தத்துவரூபம் முதலிய நான்கினும் சிறிது மின்றி ஆன்ம தரிசனத்துக்கண் சிவரூபம் வசயிலாகச் சிறிதுதோன்றி வருமாதலின், ஆன்ம தரிசனம், சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவ போகம் என்னும் இவை முறையே சுத்தசாக்கிரம், சுத்த சொப்பனம், சுத்த சுழுத்தி, சுத்த துரியம், சுத்த துரியா யாதீதம் என்னும் நிலைகளாகும். ஆத்ம சுத்தி, சிவதரிசன சிவயோகங்களில் பகுதிப்பட்டு அடங்கும். எனவே, தசகாரி யங்களுள் முதல் ஐந்தும் 'சுத்த சாக்கிரம்' என ஒரு வாற்றாற் கூறப்பெறும் என்பதை அறிந்து தெளிக. மேலும் சில செய்திகளை ஈண்டு விளக்குவேன்.

யோகாவத்தை: யோக நிலைக்கண் இயமம் முத லாகக் கூறப்படும் எட்டுறுப்புகளுள் இயமம், நியமம், ஆசனம் என்னும் மூன்றும் யோகத்திற்குச் சிறப்புறுப்பா காது பொதுப்பட நிற்கும்; பிராணாயாமம் முதலிய ஐந்துமே அதற்குச் சிறப்புறுப்பாய் நிற்கும். எனவே, பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன யோகத்தில் சாக்கிர முதலிய 'யோகாவத்தைகள்' என்று வழங்கப்பெறும். இவற்றையே சிலர் சுத்தா வத்தைகள் என மயங்குவர். ஞானமின்றி உயிர்க்குச் சுத்தம் கூடாமையின் இவற்றைச் 'சுத்தாவத்தை' எனக் கொள்ளுதல் பொருந்துமாறில்லை, இயமம் முதலிய மூன்றும் பிராணாயமத்தின் உறுப்புகளாகக் கொள்ளப் படுதலின் அவற்றையும் பிராணாயாமத்துடன் கூட்டி 'யோக சாக்கிரம்' என வழங்குவர்.

இனி, அவத்தைகளின் தன்மையை ஈண்டு விளக்குவது பொருத்தமாகின்றது.[55] கேவல ஐந்தவத்தைகளிலும், சகல ஐந்தவத்தைகளிலும் தத்துவ, தாத்துவிகங்களாகிய கருவிகள் சில குறைந்தும் கூடியும் நிற்கும். யோகாவத்தை யிலும் சுத்தாவத்தையிலும் எல்லாக் கருவிகளும் இருப்

55. சித்தியார்—4.32—40 கண்டு தெளிக.

பினும், ஆன்மா அவற்றை முறையே அந்தக் கரணங்கள் வழியாகவும், தனது யோகத்தின் வழியாகவும் நேரே விடுதலும் பற்றுதலும் உடையதாய் இருக்கும் என்பதை அறிக.

கேவல ஐந்தவத்தைகளில் குறைந்தும் கூடியும் வரும் கருவிகள் முப்பத்தைந்து. அவை ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று ஆகத் தத்துவம் பதினைந்தும்; ஞானேந்திரிய விடயங்கள் (புலன்கள்) ஆகிய சத்தம் முதலிய ஐந்து, கன்மேந்திரிய விடயங்களாகிய வசனம் முதலிய ஐந்து, பிராணன் முதலிய வாயுக்கள் பத்து ஆகத் தாத்துவிகங்கள் இருபதும் ஆகும் என்ற விவரங்களை அறிக.

கேவல சாக்கிரத்தில் இக்கருவிகள் யாவும் மெத்தென இயங்குமேயன்றி ஒன்றேனும் இல்லாமல் நீங்காது. கேவல சொப்பனத்தில் ஞானேந்திரியம் ஐந்தும், கன்மேந்திரியம் ஐந்தும் ஆக பத்தும் நீங்க, ஏனைய இருபத்தைந்தும் தொழிற்படும். கேவல சுழுத்தியில் அவ்விரு வகை இந்திரியங்களாகிய சத்தம் முதலிய ஐந்தும், வசனம் முதலிய ஐந்தும், அந்தக்கரணங்களில் சித்தம் தவிர ஏனைய மூன்றும், வாயுக்களில் பிராணன் தவிர ஏனைய ஒன்பதும் ஆக இருபத்திரண்டு கருவிகள் நீங்க, சித்தம், பிராணன், புருடன் என்னும் மூன்று கருவிகளே தொழிற்படும். கேவல துரியத்தில் சித்தம் நீங்க, மற்றைய இரண்டும் தொழிற்படும். கேவல துரியா தீதத்தில் பிராணனும் நீங்க, புருடன் ஒன்றே நிற்கும். இங்குக் கூறிய கருவிகளில் குறைவனவாகவும், பின் கூடுவனவாகவும் உள்ள கருவிகள் ஆன்ம தத்துவ தாத்து விகங்களேயாதல் அறியத் தக்கது.

கேவலசாக்கிரம் முதலிய ஐந்திற்கும் இடம் முறையே புருவ நடு, கண்டம் (கழுத்து), இதயம், உந்தி, மூலாதாரம் என்பனவாகும். எனவே, இவ்வவத்தைகளில் ஆன்மா முறையே, இங்ஙனம் கீழ் இறங்கிச் சென்று மூலாதாரத்தை அடையும். பின்பு, நீங்கிய கருவிகள் இம்முறையே

வந்துகூட ஆன்மா, மூலாதாரத்திலிருந்து மேற் கூறிய இடங்களில் மேல்ஏறிப் புருவ நடுவை அடையும், இதனால் கீழ் இறங்குதல் 'கீழால் அவத்தை' என்றும், மேல் ஏறுதல் 'மேலால் அவத்தை' என்றும் வழங்கப்பெறும்.[56] இவ் விரண்டிலும் ஆன்மா கீழ் இறங்குதல், மேல் ஏறுதல் என்பன தவிரப் பிறிதொரு வேறுபாடும் இல்லை.

சகல சாக்கிரம் முதலிய ஐந்திற்கும் இடம் புருவ நடு ஒன்றே அதனால் அவை ஐந்தும் 'மத்தியால் அவத்தை' எனப்படும். இவை ஐந்தும் பிரேரக காண்டமாகிய சுத்த தத்துவம் அல்லது சிவதத்துவம் எனப்படும் ஐந்தும் குறைதல் கூடுதல்களால் நிகழ்வனவாகும். சகல சாக்கிரத் தில் இவை ஐந்தும் தமக்குக் கீழ் உள்ள கருவிகளைச் செலுத்தலாகிய தம் தொழிலைப் புரிந்து நிற்கும். சகல சொப்பனம் முதலியவற்றில் சுத்த வித்தை தொடங்கிய ஒவ்வொன்றும் நீங்க, சகல துரியாதீதத்தில் சிவதத்துவம் ஒன்றே தொழிற்படும் பின்பு அது வந்து கூடும்பொழுது சாதாக்கியம் முதலாக முறையே வந்து கூடும்.

தத்துவங்கள் தோன்றும் முறைபற்றி முன்னரே கூறியுள்ளேன். அவை ஒடுங்கும்பொழுதும் அம்முறை யிலே ஒடுங்கும். அதனால் அவற்றை எண்ணும்பொழுது அவை தோன்றும் முறையில் வைத்து எண்ணுதல் தோற்ற முறை (உற்பத்திக்கிரமம்) என்றும் ஒடுங்கும் முறையில் வைத்து எண்ணுதல் 'ஒடுக்க முறை' (சங்காரக் கிரமம்) என்றும் சொல்லப்படும்.

யோகாவத்தைகள் சுவாதிட்டானம் முதல் சகத்திரதளம் ஈறாகவுள்ள ஆதாரங்களும், சகத்திரதளத்திற்கு மேல் பன்னிரண்டு அங்குலமான நிராதாரமும், அதற்கும் அப்பாற் பட்ட மீதானமும் ஆகியவைபற்றி ஏற்ற பெற்றியால் நிகழும் சகத்திரதள இடத்தையே பலவாகக் கூறுதல் உண்டு.

56. இதை முன்னரும் விளக்கியுள்ளேன் இயல் 3; கடிதம் 23; பக். (164-66) காண்க.

சுத்தாவத்தைகள்: இங்ஙனம் உடம்பைப் பற்றி நிகழாது தற்போதம் அல்லது சீவபோதமாகிய ஆன்மபோதத்தைப் பற்றியும் சிவபோதமாகிய ஆருட்சக்திபற்றியும் நிகழும் என்பதை அறிக. யோகாவத்தை, சுத்தாவத்தை என்பவை களையே 'மேலால் அவத்தை' என்பாரும் உளர்.

உபாய நிட்டை : இனி, உபாய நிட்டை பற்றி விளக்கு வேன். மேற்கூறியவற்றால் சிவயோகமாகிய தெளிதலே 'சுத்ததுரியம்' என்பதும், சிவயோகமாகிய நிட்டையே 'சுத்த துரியாதீதம்' என்பதும் தெளிவாகும். இனி நிட்டை யாகிய அந்த அதீத நிலையை அடைந்தோர் அதன் கண்ணே அழுந்தி மீளாது நிற்போரும், பண்டைப் பயிற்சி வயத் தால் மீள்வோரும் என இருதிறத்தினர் ஆவர். இவ்வாறு மீள்வோர் முன்போலக் கீழ்நிலையை எய்திப் பந்தத்தில் வீழ்ந்து கெடாது மேல்ஏறி நிட்டையின்கண் அழுந்து தற்பொருட்டுத் துரிய நிலையிலே நின்று முத்தி பஞ்சாக் கரத்தை முறைப்படி சுத்த மானதமாகக் கணித்தலும், தம்மைப்போலும் துரிய நிலையை எய்திய அன்பரோ டன்றிப் பிறரோடு கூடாது குருலிங்க சங்கமங்களைச் சிவனாகவே அறிந்து வழிபட்டு, உலகரோடு ஒட்டி வாழ்ந் தும் தாமரை இலையில் தண்ணீர்போலப் பற்றின்றிச் சிவனோடு ஏகராகி அவனருள்வழியன்றி ஒன்றும் செய்யா ராய்த் தற்போதத்தைத் தவிர்த்து நிற்பர். இவர்க்கு அவர் பெற்ற சின்றின்பம் பேரின்பமாகவே விளையும். இதனால் அவர்க்கு ஆகாமியமும் அதுவழியாக வரும் பிறப்பும் இல்லை. இந்நிலையே 'உபாயநிட்டை' என்றும் 'சாக்கிரத்தில் அதீதத்துப் புரிதல்' என்றும் வழங்கப்பெறும்.

நிட்டையாகிய அதீத நிலையினின்றும் மீளும் தன்மை இல்லாத பெரு மக்களையும் உலகத்தை உய்வித்தற் பொருட்டு இறைவன் இத் துரிய நிலைக்கண் மீள்வித்தல் உண்டு என்பதற்குச் சில அருட்டிரு மொழிகள் சான்று களாக அமைகின்றன.

திருந்தடி
மறக்குமா றிலாத என்னை
மையல் செய்து இம்மண்ணின்மேல்
பிறக்குமாறு காட்டினாய்[57]

என்று வரும் சம்பந்தப்பெருமானின் திருமொழியையும்,

நெஞ்சினைத் தூய்மை செய்து
நினைக்குமா நினைப்பி யாதே
வஞ்சமே செய்தி யாலோ
வானவர் தலைவ னேநீ[58]

என்ற அப்பர்பெருமானின் அருள் மொழியையும்,

நீக்கி முன்எனைத் தன்னோடு
நிலாவகைக் குரம்பையிற் புகப் பெய்து[59]

என்ற மணிவாசகப் பெருமானின் திருவாக்கையும்,

மாதவம் செய்து தென்திசை வாழ்த்திமத்
தீதிலாத்திருத் தொண்டத் தொகைதரத்
போது வார்அவர் மேல்மனம் போக்கி[60]

என்ற சேக்கிழார் பெருமானின் அருள்மொழியையும் காண்க. இவ்வாறு தன்னால் செலுத்தப்பட்ட தன் அன்பரைக் கொண்டே இறைவன் தான் உலகிற்கு உணர்த்தக் கருதும் உண்மைகளை உணர்த்தியருள்வன். இதற்குத் திருக்களிற்றுப்படியார்,

துரியம் கடந்தசுடர்த் தோகையுடன் என்றும்
புரியாது நிற்கின்ற பெம்மான்—துரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யும் தன்மைகளும்
ஆக்கியிடும் அன்பர்க் கவன்.[61]

---

57. தேவாரம் 2 98 :5
58. ஷெ 4, 23: 9.
59. திருவாச. அதிசயப்பத்து-8
60. பெ. பு. திருமலைச்சருக்கம்-25
61. களிறு-69.

என்று கூறி இதற்கு எடுத்துக் காட்டாகச் சமயகுரவர் நால்வரையும் காட்டியுள்ளது. இதனால் நால்வர் பெருமக்களும் இறைவன் திருவுள்ளப்பாங்கினால் இத் துரிய நிலைக்கண் நின்றவர் என்பது தெளிவாகும்.

இனி, இங்ஙனம் நிட்டை நிலையிற் சென்று மீண்டு இத் துரிய நிலைக்கண் நிற்போரது சுத்தான்ம சைதன்யத்தையே இறைவன் தானாகக் கொண்டு வேறற நின்று பக்குவர்க்கு உபதேச வாயிலாகவும், நூல்கள் வாயிலாகவும் பிறவாறாகவும் உண்மை ஞானத்தை அருளுவன். இது 'உந்திகளிறு, உயர்போதம் சித்தியார்' முதலிய மெய்கண்ட நூல்களில் நன்கு விளக்கப் பெறுகின்றது.

ஏகனும் ஆகி அனேகனும் ஆனவன்
நாதனும் ஆனான்என் றுந்தீபற;
நம்மையே ஆண்டான்என் றுந்தீபற.

நம்செயல் அற்றறிந்த நாம்அற்ற பின்நாதன்
தன்செயல் தானேஎன் றுந்தீபற;
தன்னையே தந்ததென் றுந்தீபற.[62]

என்ற திருவியலூர் உய்யவந்த தேவ நாயனாரின் அருளிச் செயல்களையும்,

ஆற்றால் அலைகடற்கே பாய்ந்தநீர் அந்நீர்மை
மாற்றிஅவ் வாற்றான் மறித்தாற்போல்—தோற்றிப்
புலன்களெனப் போதம் புறம்மொழியின் நந்தம்
மலங்கள்அற மாற்றுவிக்கும் வந்து.[63]

என்ற திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனாரின் அருள் மொழியையும்,

62. திருவுந்தி-5, 6.

63. களிறு 11

'இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதல்தானே குருவுமாய் உணர்த்தும் என்றது. அவன் அன்னிய மின்றிச் சைதன்ய சொரூபியாய் நிற்றலான்[64].

என்ற மெய்கண்டாரின் திருவாக்கையும்,

ஞானயோ கக்கிரியா சரியை நான்கும்
நாதன்றன் பணி; ஞானி நாலினுக்கும்
....................உரியன்;
ஆதலினால் யார்க்கும்
ஈனமிலா ஞானகுருவே குருவும் இவனே.[65]

என்ற அருணந்தி தேவ நாயனாரின் அமுதமொழியையும் கண்டு தெளிக.

மேற் கூறியவற்றால் மெய்கண்ட தேவர் முதலிய உபதேச பரம்பரை ஆசிரியர்கள் சாக்கிரத்தில் அதீத நிலையில் நின்றே ஞானகுரவராய் விளங்கித் தம்மை அடைந்த பக்குவர்களுக்கு உண்மை ஞானத்தை வழங்கினர் என்பது அறிக. அவ்வாசிரியர்பால் உபதேசம் பெற்ற மாணாக்கர் கட்கு உண்மை ஞானம் கைவந்தமை அருணந்திதேவர் தம் போதம் நீங்கி மெய்கண்ட தேவரையே சிவமாகக் காணும் நிலையை எய்தினார் என்ற வரலாறும் உமாபதி தேவரால் பெத்தான் சாம்பானும் முள்ளிச் செடியும் முத்தி பெற்ற வரலாறுகளும் பரக்கப் பேசுகின்றன. தாயுமான அடிகளும் மௌன குருவையே சிவமாகக் கொண்டார் என்பதைச் சிந்திக்க இடந்தருகின்றது.

வானகமும் மண்ணகமும் வந்தெதிர் விளங்கிடும்உன்
மகிமையது சொல்லவெளிதோ.[66]

என்பனபோன்ற கூற்றுகள் இதற்குத் துணையாக அமைகின்றன.

---

64. சி. ஞா. போ. அதி' 2.
65. சித்தியார்-2, 5
66. பா. மௌன குரு வணக்கம-7

நிட்டை நிலையிற் செல்லுமுன்னே அது கைவருதற் பொருட்டு துரிய நிலையில் நிற்பாரும் உளர். அவர் ஓராற் றால் ஆசாரியராதலன்றி, மெய் கண்டதேவர் முதலியோர் போலப் பரமாசாரியராகார் என்பதை அறிக.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 48

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு

நலன். நலனே விளைக.

இக் கடிததத்தில் அணைந்தோர் தன்மையைப்பற்றிச் சில சொற்கள். சீவன்முத்தரே அணைந்தோர் என்றும் சொல்லப் பெறுவர். அணைந்தோர் என்பதற்குச் சிவனை அணைந்தோர் என்பது பொருள். நிட்டை நிலையில் சிவனை அணைந்தோர்க்கும் குருலிங்க சங்கம வழிபாடும் பிற சமய நெறிகளும் தேவைதான் என்பதை கண்டு விளக்குவேன்.

நிட்டை நிலையில் நின்று தம்மை மறந்தவர்கட்கு குருலிங்க சங்கம வழிபாடும் உறங்கினோன் கைப்பொருள் அவனறியாது தாமே வீழ்ந்தொழிதல் போலத் தாமே நீங்கிவிடும். அவ்வாறு நீங்காமல் அவற்றைத் தற்போதத் தால் தாமே வேண்டா என விலக்கின், பிற செயல்கள் வந்து பற்றும். பற்றவே, அவற்றில் இச்சையுண்டாகி மீளவும் பிறப்பிற்கு ஏதுவாகும். இவ்வழிபாட்டைத் தற்ப போதத்தால் விலக்கச் செய்வதும் மலவாசனையே யாகும். அதனால் அவ்வாசனை தாக்காதிருத்தற்பொருட்டு மேற் சொல்லிய அனைத்தும் எவ்வாற்றாலேனும் துரிய நிலைக் கண் நிற்பார் விட்டொழித்தல் கூடாது என்பதை உளங் கொள்க.

இவ்விடத்தில் இன்னொரு முக்கிய செய்தியையும் நீ அறிதல் வேண்டும். அதாவது சரியை முதலிய சாதனங்களில் நிற்பவர்கட்கும் சாத்தியமாகிய ஞானத்தைப் பெற்றவர்கட்கும் இடையேயுள்ள வேறுபாடு என்ன என்பது. பொருளற்ற வறியவர்கள் பொருளைப் பெறுதற்கு ஓடியாடி உழைக்க வேண்டும்; இது இன்றியமையாதது. 'பொருளுடைய செல்வர்கட்கும் சோம்பல் கூடாது; உழைப்பு வேண்டும்' என்று சான்றோர்கள் கூறும் கருத்துதான் யாது? வறியவர்கள் பொருளைப் பெறுவதற்கும் செல்வர்கள் பொருளை அழியாமற்காத்தற்கும் உழைக்கின்றனர் என்பதை நினைவில் இருத்துக. 'பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை'[67] என்ற வள்ளுவர் வாக்கையும் ஓர்ந்து உணர்க.

மேற்கூறிய முறைதான் சரியை முதலிய சாதனங்களில் நிற்பவர்கட்கும் ஞானத்தைப் பெற்றவர்கட்கும் இடையே உள்ளது. சாதனங்களில் நிற்போர் ஞானத்தைப் பெறவேண்டிக் குருலிங்க சங்கம வழிபாட்டை மேற்கொள்ளுகின்றனர்; ஞானத்தைப் பெற்றவர்கள் அது நீங்காது நிலைத்து நிற்றல் வேண்டி இவ் வழிபாட்டை மேற்கொள்ளுகின்றனர். அவ்வாறாயினும் வறியரது உழைப்பிற்கும் செல்வரது உழைப்பிற்கும் வேறுபாடு பெரிதாய் இருத்தல்போல சாதனத்தில் நிற்போரது வழிபாட்டிற்கும் சாத்தியமாகிய ஞானத்தை அடைந்தோரது வழிபாட்டிற்கும் வேறுபாடு பெரிது என்பதை அறிக.

இனி, இந்த வேறுபாடுகளை விளக்குவேன். முதலாவது வேறுபாடு அஞ்செழுத்தின் வகைகளாகிய தூலம், சூக்குமம், காரணம் முதலியவை. இவற்றை உபதேசம் பெறும் ஆசாரியரிடமிருந்து அறிந்து கொள்க. இவற்றிற்

67. குறள்-2, 52

கேற்பப் 'பாவனை' எனப்படும் கருத்து வகைகளும் வேறு வேறாகும். இவற்றைக் கூறுவேன்.

கிரியையில் நிற்போர் குரு லிங்கங்களாகிய திருமேனி களையும், சங்கமங்களில் திருநீறு, கண்டிகை முதலிய திருக் கோலங்களையும் 'சிவன்' எனக் கண்டு வழிபடுவர். இவர் கட்குச் சிவபிரான் எக்காலத்தும் வெளிப்படாது அங்கு மறைந்து நின்றே அருள்புரிவான். கிரியையில் நிற்போர் மேற்கூறிய இடங்களில் அவ்வவற்றைத் தாம் போற்றும் மறை மொழிகளாலும், அம் மறைமொழிக்கேற்பத் தாம் எண்ணும் எண்ணத்தினாலும் செய்கைகளினாலுமே அங்குச் சிவ விளக்கம் உண்டாவதாகக் கொண்டு வழிபடுவர். இவர் கட்குச் சிவபெருமான் விறகைக் கடையும்பொழுது நெருப் புத் தோன்றுதல்போல அவ் வழிபாட்டில் தோன்றி அருள் புரிவான். யோகத்தில் நிற்போர் 'யோகியரது உள்ளங் களிலே அவர்கட்கு அவர் கருதும் வடிவில் காட்சி யளிக் கின்ற அப் பெருமானே இங்கும் இவ் வடிவில் இயங்கு கின்றான்' எனக் கொண்டு வழிபடுவர். இவர்கட்குச் சிவபிரான் பசுவின் மடியில் கறந்தால் வெளிப்படும் பால் போல அக் கருத்தின்வழி வெளிப்பட்டு அருள்புரிவன். ஞானிகள் 'எப்பொருளிலும் ஒழிவற நிறைந்து நிற்கும் இறைவன் தான் விளங்கி நின்று அருள்செய்தற் பொருட்டுக் கொண்ட இவ் விடங்களிலும் அவ்வாறு நிற்கின்றான்' என்று அவன் அருள் வழியில் வழிபடுவர். இவர்கட்குச் சிவ பிரான் கன்றை நினைந்த பசுவின் மடியில் பால் தானே விம்மி ஒழுகுதல் போலத் தானே இனிது வெளிப்பட்டு அருள் புரிவான். மேற்கூறிய வழிபாடு தோற்றத்தில் ஒன்றுபோலக் காணப்படினும், கருத்திலும் பயனிலும் பெரிதும் வேறுபட்டு நிற்கும் என்பதை ஓர்ந்து உணர்க.

ஆகவே, சைவசித்தாந்தத்தில் தொடக்கம் முதல் இறுதி வரையில் எந்நிலையிலும் திருநீறு, உருத்திராக்கம், திருவைந்தெழுத்து என்பவற்றுடன் குருலிங்க சங்கம வழி பாடும் யாவர்க்கும் உய்தி தரும் சாதனங்களாகக் கூறப்படு

வனவாகும் என்பதை உணர்ந்து தெளிக. மேலும், நீயுப் அனைவரையே பற்றி நின்று பிறவித் துன்பத்தினின்றுப் நீங்கி இறைவன் திருவடிப் பேரின்பத்தினைப் பெற்று வாழ்வாயாக என வாழ்த்துகின்றேன். இறுதியாக,

'சிவாயநம!' என்று சிந்தித்து இருப்போர்க்கு
அபாயம் ஒருநாளும் இல்லை; உபாயம்
இதுவே; மதிஆகும் அல்லாத எல்லாம்
விதியே மதிஆய் விடும்.[68]

என்ற பாட்டியின் வாக்கை நினைவூட்டி இக்கடிதத்தை நிறைவு செய்கின்றேன்.

அன்பன்,
கார்த்திகேயன்

68. நல்வழி 15.

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து
உன்விரை யார்கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பியுள்ளம்
பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி
சயசய போற்றியென்னும்
கைதான் நெகிழ விடேனுடை
யாய்என்னைக் கண்டுகொள்ளே.[1]

சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கிஐம் புலன்க ளார
வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே.[2]

1. திருவா. திருச்சதகம்-1.
2. ஷை ஷை 26.

அன்புநிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலம். நலம் பல விளைவதாகுக.

இக்கடிதத்தில் ஆலய வழிபாட்டைப்பற்றிச் சில கருத்து களைத் தருவேன். எங்கெங்கெல்லாம் அழகு பொலிகின் றதோ அங்கங்கெல்லாம் இறைவன் இருக்கின்றான் என்பது ஒரு தத்துவம். இயற்கை முழுவதிலும் அழகு உண்டு. சில இடங்களில் அமைந்துள்ள அழகு நம் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விடுகின்றது. மனத்தில் மேலான எண்ணத்தை ஊட்டுவதற்கு இத்தகைய அழகு பயன்படு கின்றது. உயர்ந்த எண்ணங்கள் மனத்தில் உதிப்பதற்கும் அவற்றைச் சிந்திப்பதற்கும் அழகிய இடங்கள் பெரிதும் பயன்பட்டு வந்துள்ளன. ஓர் இடத்தில் உதித்த உயர்ந்த எண்ணம் பிறகு அந்த இடத்திற்கே புதிய அருள் சத்தியை நல்குகின்றது. உயர்ந்த எண்ணம் அழிவற்றது என்பதும் ஆன்றோர்கள் துணிபு. அவர்கள் எண்ணிய உயர்ந்த எண்ணங்களும் இயற்கையின் பொலிவும் ஒன்று சேர்ந்து ஓர் இடத்தைப் புண்ணியத் தலமாக்குகின்றன. புண்ணியத் தலத்திற்கு மூல மகிமை இங்ஙனம் அமை கின்றது.

தவசிகளும் முனிவர்களும் பல காலங்களில் பல இடங் களில் வதிந்து வந்துள்ளனர் என்ற செய்தியை வரலாறு நமக்குத் தெரிவிக்கின்றது. அன்னவர்களின் சிந்தையில் உயர்ந்த எண்ணங்கள் ஓயாது உதித்து வந்தன. இந்த எண்ணங்களின் வலிவால் அவர்கள் வதிந்த இடங்கள் புண்ணியத் திருக்கோயில்களாகிவிட்டன. உயர்ந்த கருத்து களைத் தம் மனத்திலே வளர்க்க முயலுகின்றவர்கள் இப் புண்ணியத் தலங்களை நன்கு பயன்படுத்திக் கொள்ளலாம்.

புண்ணியத்தலங்கள் என்பவை ஆன்ம சாதனத்தில் மேல் நிலைக்குப் போக முயல்கின்றவர்கட்கு முற்றிலும் அநுகூல மான சூழ்நிலையாக அமைகின்றன. சாதகர்கள் எண்ணும் மேலான எண்ணங்களுக்குத் தலங்கள் என்னும் சூழ்நிலைகள் மேலும் துணை புரிகின்றன. இந்தக் கோட்பாட்டை அடிப் படையாகக் கொண்டே நம் நாட்டில் புண்ணியத் திருக் கோயில்கள் பல தோன்றியுள்ளன. நாயன்மார்களின் பாடல் பெற்ற தலங்கட்கும் ஆழ்வார்களின் பாசுரங்களால் மங்களாசாசனம் பெற்ற தலங்கட்கும் என்றென்றும் மறையாத பெருமையும் மகிமையும் இங்ஙனம் வந்தமைவ தாயின.

இன்று நம் நாட்டிலுள்ள பெரிய திருக்கோயில்கள் யாவும் இடைக் காலத்தில் ஏற்பட்டவை. வேத காலத்தில் இவை இருந்ததில்லை; சங்க காலத்திலும் இருந்ததில்லை. இயற்கையின் சூழ்நிலையே வழிபாட்டிற்குரிய இடங்க ளாயின. வேள்வித் தீயின் மூலம் வழிபாடு பெரிதும் நிகழ்ந்து வந்தது. நதிக் கரைகளிலும் மரச் சோலைகளிலும் தெய்வ வழிபாடு நிகழ்ந்து வந்தது. பண்டைய இலக்கிய மாகிய பரிபாடலில்,

> ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவுக்
> கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
> அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்
> எவ்வயி னோயும் நீயே.[3]

என்பதில் திருமால் ஆலம், கடம்பு, யாற்றிடைக் குறை குன்றம் முதலிய இடங்களில் வேறு வேறு பெயரையுடையவ ராக எழுந்தருளியிருப்பதாகக் கூறப்பெற்றிருத்தல் இக் கருத்திற்கு அரணாக அமைகின்றது. நாளடைவில் இத் தகைய விருட்சங்கள் தல விருட்சங்களாயின என்பது அறியத்தக்கது.

---

3. பரிபாடல்-4: வரி. 67-70.

நாளா வட்டத்தில் ஆகமத்தின் அடிப்படையில் திருக் கோயில்கள் கட்டுவிக்கப்பெற்றன. மலையைக் குடைந்தும் ஆலயங்களை அமைத்தனர். இப்படி அமைந்த ஆலயங்கள் மானுட சரீரம் என்னும் ஆலயத்தின் புறச் சின்னங்களாகும். மானுட சரீரமே ஆலயங்களுள் மிகச் சிறந்தது என்பதை எல்லாக் காலத்திலும் ஆன்றோர்களால் அங்கீகரிக்கப் பெற்றுள்ளது. அண்டமெங்கும் 'அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்க்' குடிகொண்டிருக்கும் தெய்வம் சிறப்பாக மானுட உலகில் வீற்றிருக்கின்றது என்பது ஆன்றோர் வகுத்த கோட்பாடு.

உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று
உடம்பினை யானிருந் தோம்புகின்றேனே.[4]

என்ற திருமூலர் திருவாக்கும் இதற்குச் சான்றாக அமைகின்றது. இவரே உடம்பை வளர்ப்பது உயிர்வளர்ப்பதற் கொப்பாகும் என்றும் கூறியுள்ளார்.[5]

மேற்கூறிய தத்துவக் கருத்தினைப் பாமர மக்கள் அறிந்து கொள்ள முடியாது. பாமரர்களுக்குப் பயன்படும் பொருட்டே ஆலயங்கள் அமைக்கப் பெற்றன என்பதை அறிக. உலகிலும் உடலிலும் உள்ள தத்துவங்களை விளக்குதற்கு ஆலயங்கள் வந்துள்ளன. நமக்குத் தோன்றியவாறெல்லாம் ஆலயங்களை அமைத்தலாகாது; ஆகமங்களில் விதித்துள்ளபடியே அவை அமைதல் வேண்டும் என்பது கோட்பாடு. அதற்குத் தக்க காரணம் ஒன்றுண்டு. ஆலயம் ஒன்று உடல் என்னும் ஆலயத்தின் புறச் சின்னமாகும். புறச்சின்னத்தை நமக்குத் தோன்றிய வாறெல்லாம் அமைத்துவிடலாகாது. மூல அமைப்பு ஆகிய உடலிலுள்ள தத்துவங்களுக்கு அஃது ஒத்திருத்தல்

4 திருமந்திரம்—மூன், தந். காயசித்தி உபாயம்—2
5, ஷை. ஷை. ஷை—1

வேண்டும். ஆகையினால்தான் ஆலயங்களை இன்னின்ன பாங்கில்தான் கட்டவேண்டும் என்று ஆகமங்கள் கட்டளை யிடுகின்றன. இத்தகைய ஆலயங்களின்மூலம் நம் உட லமைப்பிலுள்ள மகிமைகளையே நாம் மேலும் அறிந்து கொள்ளவேண்டும். தேசப்படத்தின் துணை கொண்டு தேசத்தை நன்கு அறிந்து கொள்வது போன்று கட்டு விக்கப் பெற்றுள்ள ஆலயத்தின் துணை கொண்டு நமக்கு இயல்பாக அமைந்துள்ள உடல் என்னும் ஆலயத்தின் தத்துவங்களை நாம் அறிந்து கொள்ள முடியும். அந்த அறிவிற்கு ஏற்ப வாழ்க்கையைத் திருத்தி அமைப்பதும் நம் கடமையாகும் என்பதை உணர்க.

இனி, திருக்கோயிலின் அமைப்பைப்பற்றிச் சில சொற்கள். பெரிய சுற்று (பிராகாரம்) ஒன்று எடுத்து அதற்கு வாயில் ஒன்று அமைக்கப் பெறுகின்றது. அந்த வாயிலுக்கு உயர்ந்த கோபுரம் ஒன்று அமைகின்றது. அது உள்ளிருக்கும் மற்ற கோபுரங்களையெல்லாம்விட உயர்ந்த தாக இருப்பதால் இராச கோபுரம் என்று பெயர் பெறு கின்றது. நெடுந்தொலைவிலிருந்தும் இதனைக் காணலாம். சில பெரிய கோயில்களில் நான்கு திக்கிலும் நான்கு வாயில்கள் அமைத்து நான்கு இராசகோபுரங்களை எழுப்புவதும் உண்டு. நெடுந்தொலைவிலிருந்தும் இந்த இராசகோபுரத்தைக் காணலாம். 'தூல இலிங்கம்' என்றும் இதனை வழங்குவர். கண்ணுக்கு அது புலப்படும்பொழுது அதனையே தெய்வ சொரூபமாகக் கருதி வணங்குவது முறை. தொலைவிலிருப்பவர்கட்கும் இறைவனைப் பற்றி நினைவூட்டுவதற்கே இவ்வமைப்பு ஏற்பட்டுள்ளது என்றும் கருதலாம்.

இராசகோபுரத்தின் அருகில் வந்து அதன் அமைப்பை நோக்கினால் பல அதிசய உண்மைகள் தெரிய வரும். கணக் கற்ற வடிவங்கள் அதில் அமைக்கப்பெற்றுள்ளன. அவற் றுள்ள மானுட வடிவங்கள் ஏராளம். விதவிதமான வாழ்க்கை முறைகளும் ஆங்கு அந்த வடிவங்களில்

விளக்கம் பெற்றிருப்பதைக் காணலாம். தேவர்களும் வேண்டியவாறு இடம் பெறுகின்றனர்; தேவர்களின் செயல்களும் கோபுரத்தில் விளக்கப்பெறுகின்றன. விலங்கு களும் பறவைகளும் ஏனைய சிற்றுயிர்களும் அதில் இடம் பெறுகின்றன. இந்த அகிலத்தின் அமைப்பில் இவை யாவற்றிற்கும் இடம் உண்டு என்பது கோட்பாடு. எல்லாப் படித்தரத்திலும் உள்ள அனைத்தும்—சிற்றுயிர்கள், பேருயிர்கள் விலங்கு இனம், மக்கள் இனம், தேவர்குழாம்— ஆங்கு இடம் பெறுகின்றன. இக்கோட்பாட்டை இராச கோபுரம் உருவகப்படுத்தி விளக்குகின்றது.

இராசகோபுரத்தில் அருவருக்கத்தக்க சில வடிவங் களும் அமைத்திருப்பதைக் காணலாம். நாகரிகமான பண்புகளுக்கு அவை அறிகுறிகள் ஆகா. மனத்தில் மேலான கருத்துகளைத் தோற்றுவிப்பதற்கும் இவை துணைபுரியா. ஆலய வழிபாட்டிற்குப் பொருந்தாத இத்தகைய பதுமைகள் ஆலயத்தில் இடம் பெறுவதற்கு ஆகம விதிகள் அப்படி இருப்பதே காரணம் என்று சிற்பிகள் சொல்லுவார்கள். இதற்குத் தக்க காரணமும் உண்டு. இயற்கையின் நடைமுறை புறச்சின்னமாகப் பெரிய கோபுரம் அமைந்திருப்பதாகக் கூறினேன். ஆதலால் இயற்கையில் உள்ளவைகளையெல்லாம் இதன் மூலம் விளக்கியே யாகவேண்டும் என்பதை அறிக. நாகரிகம், அநாகரிகம் ஆகிய இரண்டும் இயற்கையில் இடம் பெற்றுள்ளனவன்றோ? பாராட்டத் தக்க பெரு வாழ்வும் பழிக்கத்தக்க சிற்றியல்பும் சிறு செயல்களும் இயற்கையில் இடம் பெற்றிருப்பதைக் காண்கின்றாயன்றோ? ஆதலால் தான் இயற்கையில் நலம் கேடு ஆகிய எல்லாம் உள்ளன என்பதைச் சுட்டிக் காட்டவே இந்தக் கோபுரம் அமைந் துள்ளது என்பதை உளங் கொள்க.

வாழ்க்கையின் குறிக்கோளை விளக்குவதாகவும் இந்தக் கோபுரம் அமைந்துள்ளது. இராசகோபுரத்தின் வாயில்கள் பொதுவாக ஒற்றைப் படையில்தான் அமைந்

திருக்கும். இத்தகைய வாயில்கள் தத்துவத்திற்கு விளக்க மாக அமைந்துள்ளன. மூன்று வாயில்கள் உள்ள கோபுரம் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி (ஸுசுப்தி) என்ற மூன்று அவத்தைகளைக் குறிக்கின்றன. ஐந்து வாயில்கள் உள்ள கோபுரம் ஐம்பொறிகளுக்குக் குறியீடாக அமைந்துள்ளது. ஏழுவாயில்கள் உள்ள கோபுரத்தில் மனம், புத்தி என்னும் இன்னும் இரண்டு தத்துவங்கள் சேர்க்கப்பெறுகின்றன. ஒன்பது உள்ள இடத்து சித்தம், அகங்காரம் என்னும் இன்னும் இரண்டு தத்துவங்கள் சேர்கின்றன. இங்ஙனம் நம்முடைய உடல் அமைப்பில் உள்ள வெவ்வேறு தத்து வங்களுக்குக் கோபுரவாயில்கள் சின்னங்களாக அமை கின்றன என்பதை அறிக.

மேற் குறிப்பிட்ட வாயில்களுள் தரை மட்டத்திலுள்ள ஒருவாயில்தான் கோயிலினுள்ளே செல்லுவதற்கு உதவு கின்றது. ஏனைய வாயில்கள் அமைக்கப் பெற்றிருந்தும் அவை ஆலயத்தினுள் புகுவதற்குப் பயன்படுவதில்லை. இதன்மூலம் ஒரு கருத்து நமக்குப் புகட்டப் பெறுகின்றது. அக்கருத்துதான் யாது? புறக்கரணங்களும் அந்தக் கரணங்கள் பல நம்மிடத்து இருப்பினும் இறைவன் நாட்டம் கொள்ளும்பொழுது மனம் என்ற ஒரு கரணமே நமக்குப் பயன்படுகின்றது. ஏனைய கரணங்களையெல் லாம் அவற்றின் நிலையிலே வைத்துவிட்டு மனம் இறைவனை நாடி உள்முகமாகப் போகவேண்டும் என்பது கோட்பாடு. ஐம்பொறிகளைக் கொண்டும் மனம் புத்தி முதலியவைகளைக்கொண்டும் புற உலகை அறிகின்றோம். புற உலகை அறிகின்ற செயலை அப்படியே நிறுத்தி வைத்துவிட்டு மனத்தைத் துணையாகக்கொண்டு பரம் பொருளினிடத்து உள்முகமாகம் பயணம் போகவேண்டும் என்னும் கோட்பாட்டை இராசகோபுர வாயிலினுள் செய்யும் நுழைவு விளக்கிக் காட்டுகின்றது.

ஒவ்வோர் ஆலயத்தினோடும் சம்பந்தப்பட்டதாகத் தேர்த்திருவிழா என்பது ஒன்று உண்டு என்பதை நீ

அறிவாய். ஆலயம் என்னும் சின்னத்தின் மற்றொரு பகுதியாக அஃது அமைந்துள்ளது, 'ஓடுதல்' என்னும் செயலில் தேர் உடல் தத்துவத்தை நன்கு விளக்குகின்றது; உடலைத் தேர் என்றும், அதன் உள்ளிருக்கும் ஆன்மாவை ரதி அல்லது ஊர்ந்து செல்லுபவன் என்றும் கருதவேண்டும் என்று ஞானசாத்திரங்கள் புகட்டுகின்றன; உடலிலுள்ள இயல்புகளையெல்லாம் தேரில் அமைப்பதும் வழக்கமாய் இருந்து வருகின்றது. ஒன்று நிலைத்து நிற்கும் சின்னம்; மற்றது இயங்குகின்ற சின்னம், இவற்றின்மூலம் விளக்கப்பெறும் கருத்து ஒன்றே என்பதை உணர்க.

இராசகோபுரத்தைத் தாண்டி உள்ளே சென்றதும் நம் காட்சியில் விழுவது பலிபீடம். அதனருகில் சென்று வீழ்ந்து வணங்குதல் மரபு, வீழ்ந்து வணங்கும்பொழுது மனிதன் 'தனது கீழான இயல்புகளையெல்லாம் அந்த இடத்தில் பலி கொடுக்கப்பட்டன; இனி அவை தலையெடுப்பதற்கு சந்தர்ப்பம் இல்லை' என்று ஆழ்ந்து எண்ணுதல் வேண்டும். மேன்மையும் மேலான எண்ணமும் எஞ்சியுள்ளன என்னும் எண்ணத்துடன் எழுந்திருத்தல் வேண்டும். இந்த எண்ணத்தின் வலிவு அவன் புதியதொரு பிறவி எடுத்துக் கொண்டதற்குச் சமானமாகின்றது. புதியதாக வருவித்துக் கொண்டுள்ள மேலான மனப்பான்மையை இனி தெய்வத்திற்குரியதாக மாற்றி விடுதல் வேண்டும். இதன்பொருட்டு சாதகன் கோயிலினுள் வலம் வருகின்றன.

அவன் வலம் வரவேண்டிய முறையைப் பலிபீடத்திற்கு அடுத்த படியிலிருக்கும் கொடிக் கம்பம் விளக்குகின்றது. கொடி உள்முகமாகத் திருப்பிக் கொண்டிருப்பதை நீ கவனித்திருப்பாய். கோயிலைச் சுற்றி வலம் வருங்கால் உள்ளிருக்கும் இறைவன் தன் வலக்கைப் பக்கம் இருக்கு படிப் பார்த்துக் கொள்ளுகின்றான் பக்தன். இதுவே 'வலம் வருதல்' என்பதன் பொருளாம். வலம் வருதல் பிராணா

யாமத்தின் சின்னமாகும். ஒழுங்குப்பட்ட மேலான மனம் பிராணாயாமத்திற்குத் தகுதியுடையதாகின்றது. மனத் தகத்து உண்டாகும் மாறுதலுக்கு ஏற்ப சுவாசிக்கின்ற வாயுவில் வேறு பாடு உண்டாகின்றது. கீழான மனப் பான்மையுடையவர்க்குச் சுவாசத்தின் போக்கு வரவில் தடு மாற்றம் உண்டு. மேலான மனப்பான்மை உடையவர்க்கு சுவாசத்தின் போக்கு வரவு அல்லது பிராணாயாமம் முறையாக நிகழ்கின்றது என்பதை அறிக. தங்குதடை யின்றி அமைதியாக வலம் வரும்போது பிராணாயாமமும் ஒழுங்காக நிகழ்ந்து விடுகின்றது. சூக்குமமாக உடலின் கண் நிகழும் நிகழ்ச்சி பிராணாயாமம் என்பதும் வலம் வருதல் என்னும் உடலின் தூலமான செயல் அதன் புறச் சின்னமாக அமைகின்றது என்பதும் தெரிந்து தெளியத் தக்கவை.

கொடி மரத்திற்கு அடுத்தபடியில் இருப்பது இறைவ னின் வாகனம். சிவபெருமானுக்கு நந்தியும், திருமாலுக் குக் கருடனும், அம்பிகைக்குச் சிங்கமும், முருகப் பெருமா னுக்கு மயிலும், விநாயகருக்குப் பெருச்சாளியும் வாகனம் என்பதை நீ நன்கு அறிவாய். வாகனம் எதுவாயினும் அது சீவான்மாவைக் குறிக்கின்றது. மூலப் பொருளாகிய இறைவனை நோக்கிய வண்ணம் வாகனம் அமைந்திருப் பதை நீ கவனித்திருப்பாய். பதியை அடைய வேண்டியது பசுவின் குறிக்கோள். பதியைச் சென்றடைவதற்கு எல்லாக் காலத்திலும் மனம் இறைவன் நாட்டத்திலேயே இருக்க வேண்டும் என்னும் கோட்பாட்டை வாகனம் விளக்கிக் கொண்டுள்ளது என்பதை அறிந்து தெளிக. திருச்சுற்றில் நடந்து வரும் பக்தன் திருக்கோயிலினுள்ளிருக்கும் இறை வனையும் அவனைப் பார்த்த வண்ணம் இருக்கும் வாகனத்தையும் சேர்த்து வைத்தே வலம் வருகின்றான். குறுக்கே நுழைவது முறையன்று என்பதை உளங் கொள்க. வழிபடுகின்ற அனைவர்க்கும் இடைஞ்சலாக இராமல் ஒத்தாசை செய்யவேண்டும் என்பது இதன் உட்கருத்து.

பிறருக்கு இடைஞ்சல் செய்கின்ற அளவு தானே இறைவழி பாட்டிற்குப் புறம்பாய் விடுகின்றான் பக்தன். பிறர் வழி பாட்டிற்கு வேண்டிய வசதிகளைச் செய்பவன் தானே வழிபாட்டில் முன்னேற்றமடைகின்றான். பிறரை புறக் கணித்து யாரும் முன்னேற்றமடைய முடியாது என்பதும், பிறருக்குப் பணிவிடை செய்து எவரும் முன்னேற்றம் அடையலாம் என்பதும் ஆலய வழிபாட்டில் அடங்கியுள்ளன என்பதைக் கருத்தில் இருத்துக.

கோயிலின் கருவறைக்குச் செல்லும்பொழுது அஃது இருள் சூழ்ந்திருப்பதைக் காண்கின்றோம். காற்றுக்கோ கதிரவன் ஒளிக்கோ அங்கு இடம் இல்லை. இதற்கெல்லாம் ஆகம விதிகள் இடம் தருவதில்லை என்பர் கோயிலை நிறுவும் ஸ்தபதிகள். நம் உடலமைப்பின் புறச்சின்னமாக கருப்பக்கிருகம் (கருவறை) அமைந்துள்ளது. கருவி கரணங் களை ஒடுக்கி மனத்தை உள்முகமாகத் திருப்பினால் என்ன அநுபவம் உண்டாகின்றதோ அதற்குச் சின்னமாக ஆலயத் தின் கருவறை அமைந்துள்ளது என்பதை அறிக. கண் மூடி யிருக்கும்பொழுது உடலுக்குள்ளே இருக்கும் நம் நெஞ் சத்துள் ஒரே கார் இருளைத்தான் காண முடிகின்றது. புற உலகிலிருந்து ஆங்கு ஒளி வருவதில்லை. கருவறையின் அருகில் சென்று தரிசனத்திற்காகப் பக்தன் காத்திருக்கின் றான். என்ன நடக்கின்றது? முதலில் திரை மூடப் பெறு கின்றது. சிறிது நேரத்தில் மணி ஒலி கேட்கின்றது. இனி விரைவில் தரிசனம் கிட்டும் என்று பக்தன் ஆர்வத்துடன் அதை எதிர்நோக்குகின்றான். திரை நீங்குகின்றது. உள்ளே கர்ப்பூர ஆராதனை காட்டப்பெறுகின்றது. அதன் ஒளியில் பக்தன் தெய்வத்தின் திருமேனியைக் காண்கின்றான். திருமேனி என்ற எண்ணம் அவன் மனத்தில் எழுவதில்லை. இறைவனையே தரிசிப்பதாக உணருகின்றான்.

மேலே காட்டிய காட்சி மனத்தகத்து நிகழ வேண்டிய ஞானக் காட்சியின் புறத் தோற்றமாகும் இது. மனத்தினுள் சிந்தையைச் செலுத்தும் ஆத்ம சாதகன் கார்

இருளையே தன்னுள் காண்கின்றான். ஆயினும், மனத்தை உன் முகத்தில் வைத்திருக்கப் பழக வேண்டும் (இதுவே தியானம் என்பது). இப்பழக்கம் உறுதிப்பெற நெடுங்காலம் ஆகும். பழகுபவனுக்கு ஓர் அற்புதமான அநுபமுவம் கிட்டும். தனது உள்ளத்தினுள்ளே ஒருவித இனிய ஓசையைக் கேட்பான்; புகை போன்றும், மின்மினிப் பூச்சிகளின் நடமாட்டம் போன்றும் சில காட்சிகள் தன்னுள் தென்படுவதைக் காண்பான். ஒலி ஒளி ஆகிய இரண்டும் மனத்தில் உதிப்பது சாதகன் தன் சாதனையில் முன்னேறி வருவதன் அறிகுறியாகும். இறுதியில் மனத்தின் அஞ்ஞானத் திரை நீங்குவதை அறிகின்றான். ஞான ஒளியின் தரிசனம் கிட்டுவதை உணருகின்றான். அந்த ஞான ஒளியும் ஆன்ம சொரூபமும் ஒன்றேயாகும். இங்ஙனம் மனத்தகத்து உண்டாகின்ற ஆன்ம தரிசனத்துக்குப் புறச் சின்னமாக அமைந்திருப்பதே இந்த ஆலய தரிசனம். மாந்தருக்குத் தகுந்தவாறு அதை மாற்றியமைப்பதற்கு ஆகம சாத்திரம் இடம் தருவதில்லை. வேண்டுமானால் நம் விருப்பப்படி மாற்றியமைத்துக் கொள்ளலாம். ஆனால் அஃது ஆத்ம தரிசனத்தின் புறச்சின்னமாகாது.

ஆலயன வழிபாட்டிற்குச் செல்லும் பக்தனின் மனப்பான்மை எப்படியிருக்க வேண்டும் என்பதைப்பற்றிச் சில சொற்கள். மனம், மொழி, மெய் ஆகிய திரிகரண சுத்தியுடன் ஆலயத்திற்குள் போக வேண்டும் என்பது கோட்பாடு. ஆலயத்திற்குள் நுழையும்பொழுதே உலக விவகாரங்களை ஒதுக்கி வைத்துவிட வேண்டும். இறைவனைப்பற்றிய சிந்தனையே சித்தமிசை குடி கொண்டிருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். பதைபதைப்புக்கோ வேகம் நிறைந்த நடமாட்டத்திற்கோ ஆங்கு இடம் இல்லை. அமைதியும் சாந்தமும் வடிவெடுத்தவனாக வழிபடுபவன் ஆய்விடுகின்றான். திருக்கோயிலுக்குள் கூச்சலிட்டுப் பேசுவோர் வழிபடுபவர் ஆகார். இவர்கள் திருக்கோயிலின் புனிதத் தன்மையினையும் ஒரு

வகையில் பாழ்படுத்துவோராகின்றனர். ஒருவரோடொருவர் பேசாதிருந்து வழிபாடு செய்வது சாலச் சிறந்தது. வழிபாட்டை முடித்தான பிறகு ஓர் இடத்தில் அமைதியாக அமர்ந்திருந்து தியானம் செய்வது முற்றிலும் அவசியம். பல பெரியோர்கள் ஆழ்ந்து எண்ணிய உயர்ந்த எண்ணங்கள் நிறையப்பெற்ற இடம் ஆலயம். ஆங்கு வழிபடுவன் அமைதியுற்று அமர்ந்திருப்பானாகில் அந்த உயர்ந்த எண்ணங்கள் அவன் மனத்தில் பிரதிபலிக்கும். அதுவே ஆலய வழிபாட்டினால் அவன் அடையும் பெரும்பேறாகும். எத்தனை பேர் ஆலயத்துக்குள் வந்து வணங்குகின்றார்களோ அதற்கேற்ப ஆலயத்தினுள் ஏற்கெனவே அமைந்துள்ள அருள் பன்மடங்கு பெரிதாகின்றது. அருளைத் தானே அடைவதன்மூலம் ஆலயத்தின்கண் அன்பன் அருளைப் பெறுகின்றான். ஆலயவழிபாட்டின் ஒப்பற்ற பயன் இதுவேயாகும்.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 50

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலனே விளைந்திடுக.

இக்கடிதத்தில் ஆலயத்திற்குள் எழுந்தருளியிருக்கும் தெய்வத்திற்கு நடைபெறும் பூசை முறைகளை விளக்குவேன். இந்தத் தெய்வத்திற்குப் பல விதமான உபசாரங்களுடன் ஆராதனை நிகழ்கின்றது. இத்தகைய ஆராதனைகளெல்லாம் ஆத்ம சாதகன் அடைந்து வரும் மனப்பரிபாகத்தின் புறச்செயல்களாகும். ஆராதனை செய்கின்றவர்கள் சதாசாரமே வடிவெடுத்திருக்க வேண்டும். நல்லொழுக்கம் அவர்களிடம் ஓங்குமளவிற்கு வழிபாடும் மேம்பாடுடையதாகின்றது. நல்லொழுக்கம் இல்லாதவன் ஆத்மசாதனத்தில் முன்னேற்றத்தைக் காண முடியாது.

தெய்வத்தின் திருமுழுக்கிற்காக (அபிடேகத்திற்காக)த் தூய நன்னீர் கொணரப்பெறுகின்றது. அதைக் கொண்டு இறைவன் நீராட்டப் பெறுகின்றான். நம்மனத்தில் அன்பை வளர்ப்பதற்கு அறிகுறியாகவே புறத்தே திருக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனுக்கு திருமுழுக்கு செய்விக்கப்பெறுகின்றது. நீராடிய பின் ஓரளவு உள்ளத் தெளிவை எய்துகின்றோமல்லவா? அன்பைப் பெருக்கு மளவு நமக்கு உள்ளத் தெளிவு உண்டாகின்றது என்பதை நாம் உணர முடியும். பால், தயிர், நெய், பஞ்சாமிர்தம் முதலியவைகளைச் சொரிந்தும் அபிடேகம் செய்வது வழக்கம். இவை யாவும் உடலை வளர்ப்பதற்கு நல்லுணவு என்பதை நாம் அறிவோம். நல்லுணவு படைத்து உடலை வளர்ப்பது போன்று நல்லெண்ணங்களை எண்ணி உள்ளத்தை வளர்க்க வேண்டும் என்பது கோட்பாடு. எண்ணத்திற்கேற்ப உள்ளத்தில் உயர்வும் தாழ்வும் ஏற்படு கின்றது. இதனையறிந்த வள்ளுவப் பெருந்தகையும்,

'உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல்'[6]

என்று கூறிப்போந்தார். நல்லெண்ணத்தை வளர்ப்பதே ஆலய வழிபாட்டின் உயிராய நோக்கம் என்பதை அறிக. மூர்த்தியை முழுக்காட்டிய பிறகு அவரை ஆடை ஆபரணங் களாலும் மலர்களாலும் அலங்கரிக்கின்றோம். நம் உடல் வாழ்க்கையை நாம் எங்ஙனம் ஓம்புகின்றோமோ அதே கோட்பாட்டைத் தெய்வத்தின்கண் காண அன்பர்கள் முயலுகின்றனர் என்பது கோட்பாடு. தெய்வத்திற்கு உணவும் உடையும் தேவையானவை அன்று என்பதை நாம் அறிவோம். இவை எல்லாவற்றையும் கடந்த நிலையில் இருப்பது பரம் பொருள். ஆனால் இவற்றை யெல்லாம் ஏற்று அங்கீகரித்து மகிழ்வுற்றிருக்கும் மூர்த்தி யாக சாதகன் தெய்வத்தைப் பற்றிக் கருதுகின்றான்.

6. குறள்-596

அதன்மூலம் அவனது மனம் மலர்ச்சி அடைவதே ஆலய வழிபாட்டின் பயன் ஆகும் என்பதை உணர்க.

மூர்த்திக்கு அலங்காரம் ஆன பிறகு அவருக்கு இனிய நல்லுணவு நைவேத்தியமாகப் படைக்கப்பெறுகின்றது. இறைவன் அதை அங்கீகரிக்கின்றான் என்றே அன்பன் உணர்கின்றான். ஆன்ம சாதனத்தில் முன்னேற்றமடைந்தவர்கள் உணவைத் நைவேத்தியமாகப் படைப்பதில் பொருள் மிக உண்டு என்று உறுதி கூறுகின்றனர். இதற்கு ஆலய வழிபாடு செய்து வந்த இராமகிருஷ்ண பரமஹம்ஸரே சிறந்த சான்றாக அமைகின்றார். அன்புடன் தெய்வத்திற்குப் படைக்கப்பெறும் நைவேத்தியத்தை மூர்த்தியிடமிருந்து 'அருட்சோதி' ஒன்று கிளம்பி அதனைத் தொடுகின்றது. அத்தகைய அருள் ஸபர்சம் ஆன பின்பே அது பிரசாதமாகின்றது. ஈசுவரப் பிரசாதமாக அன்பன் அதனை ஏற்றுக் கொள்கின்றபொழுது அவனுடைய அந்தக்கரண சுத்திக்கு அது பேருதவி புரிகின்றது என்பதை உளங்கொள்க.

திருக்கோயிலுக்குச் செல்லுகின்றவர்கள் வெறுங்கையுடன் செல்லலாகாது என்பது ஐதிகம். இக்கோட்பாடு இன்றும் பெரு வழக்காக இருந்து வருவதைக் காண்கின்றோம். பெரியோர்களையும் குழந்தைகளையும், கடவுளையும் காணச் செல்லுகின்றவர்கள் நல்ல உணவுப் பொருள் ஏதேனும் ஒன்றை எடுத்துச் செல்லவேண்டும். உணவுப் பொருள் மூலமாகவே நாம் குழந்தைகளுடன் ஐக்கியமாதல் முடியும். இந்தக் கோட்பாடே பெரியோர்களின் இணக்கத்திற்கும் முதற்படியாகின்றது. இறைவழிபாட்டிலும் இதே கருத்து அடங்கியுள்ளது. பெரியோர்கட்கும் குழந்தைகட்குமாக நாம் கொண்டு செல்லும் பொருள்கள் அவர்கட்கு விருப்பமானவைகளாக இருத்தல் வேண்டும். இறைவனுக்கு எடுத்துச் செல்லும் பொருள்கள் நமக்கும் விருப்பமானவைகளாக இருத்தல் வேண்டும்.

ஆலய வழிபாட்டிற்கும் அவை பொருத்தமானவைகளாக வும் அமைதல் வேண்டும்.

நமக்கு விருப்பமான பொருள்களைப் படைப்பதில் நலன் ஒன்று நமக்கு விளைகின்றது. கடவுளுக்குப் படையாமல் நாம் உண்பதில்லை என்னும் கொள்கையிலிருந்து உணவுப் பொருள்மீது நாம் வைத்திருக்கும் பற்றுதல் குறைகின்றது. இறைவனுக்குப் படைப்பதன்மூலம் அது தூய உணவாக மாற்றப்பெறுகின்றது. அஃது ஈசுவரப் பிரசாதமான பிறகு மற்றவர்களுக்கெல்லாம் வழங்கியான பின்பே எஞ்சியிருக்கும் ஒரு சிறு பகுதியை நாம் ஏற்றுக் கொள்ளவேண்டும். தெய்வத்தின் பெயரால் மன்னுயிர் களையெல்லாம் நம்முயிர் போன்று கருதும் மனப்பான்மை யும் இதினின்று உண்டாகின்றது. எல்லா உயிர்களும் இறைவனுக்குச் சொந்தம் ஆதலின் எல்லா உயிர்களை யும் ஓம்புதல்மூலம் இறைவன் நன்கு வழுத்தப்படு கின்றான். உணவு இல்லாது இறை வழிபாடு நிகழலாகாது என்பதன் கருத்து இதுவே என்பதை உணர்க. மாந்தர் சேகரிக்கும் நல்ல உணவுப் பொருள்களில் பெரும் பகுதி ஆலயத்திற்கு வந்து விடுதல் முறை. இந்த அடிப்படையில் தான் திருக்கோயிலில் உண்டி (Hundi) வைக்கப் பெற் றுள்ளது; மக்களும் அதில் பணம் போடுகின்றனர். இந்தப் பணம் கடவுள் பெயரால் பிறகு பல காரியங்கட்குப் பயன் படுகின்றது. இறைவனின் பெயரால் கொடுக்கப் பெறு கின்றபொழுது கொடுக்கின்றவனுக்குத் தான் கொடை யாளி என்ற அகங்காரம் உதிக்காது. ஈசுவரப் பிரசா தத்தை ஏற்கின்றவர்கட்குப் பிறரிடமிருந்து பொருளை ஏற்பது இகழ்ச்சி என்ற மனப்பான்மையும் வராது. கொடுப்பவரும் ஏற்பவரும் இறைவனுக்குரியவர்களாய்ப் விடுகின்றனர். மனப்பான்மை மேன்மையடைவதற்கு பொருளைக் கடவுளுக்கு நைவேத்தியமாகப் படைப்பதே சிறந்த உபாயமாகும்.

நமது திருக்கோயில்களில் கையாளப் பெறும் கிரியைகள் தத்துவத்திற்கு விளக்கமாக அமைந்துள்ளன.

இதனை உனக்கு விளக்குவது இன்றியமையாதாகின்றது. தீப ஆராதனையைச் சான்றாக எடுத்துக் கொள்வோம். அஞ்ஞானம் என்னும் திரை நீங்கியவுடன் சோதிப் பிழம்பாகப் பல விளக்குகள் கொண்டு அடுக்குத் தீபம் (அலங்காரத்தீபம்) ஒன்று சுற்றப்படுகின்றது. அஞ்ஞான இருளினின்று ஞான பூமிக்குள் பிரவேசிக்கின்ற சாதகன் ஒரே ஒளிப்பிழம்பைக் காண்கின்றான். அந்த ஒளிப் பிழம்பில் அவன் ஒன்றித்து விடுவதற்குச் சிறிது நேரமாகின்றது. பரம் பொருள் என்றைக்கும் அணையாத ஆத்மப் பிரகாசமாய் இருக்கின்றார். அடுக்குத் தீபத்தில் கணக்கற்ற விளக்குகள் உள்ளன. அதன்பிறகுக் காட்டப் பெறும் தீபங்கள் எண்ணிக்கையில் குறைந்து வருகின்றன. இறுதியில் ஒரு தீபத்தில் வந்து ஆராதனை முற்றுப் பெறுகின்றது.

கடவுள் ஆராதனையில் ஐம்பொறிகளும் இடம் பெறுகின்றன. ஐம் பொறிகள் பொதுவாகப் பிரபஞ்சத்தை விஷயமாக்குதற்கென்று அமைந்தவைகள். அந்த ஐம் பொறிகளும் பரமனை நுகர்தற்கென்று பயனபடுத்துங்கால் அது நல்ல ஆத்மசாதனமாகின்றது. தேவ ஆராதனையில் கண்கொண்டு காண்பது சோதி சொரூபமான பரம் பொருள். காதால் கேட்பது அவனிடத்திருந்து உண்டாகும் நாதம். அதற்குச் சின்னமாக மணி ஓசையும், சங்குவாத்தியமும் அமைகின்றன. வேத மோதுதலும் ஆங்கு நிகழ்கின்றது. செவிக்கினிய தேவாரத்தை ஓதும் இனிய பாட்டொலியும் நம் காதில் விழுகின்றது. மூக்கால் நுகர்வது ஆராதனையோடு சம்பந்தப்பட்ட நறுமணம் கமழும் தூபமாகும். தொட்டுணர்ந்து இன்புறுவதற்குப் பரமனுக்குச் சாத்திய மலர்மாலை தரப்பெறுகின்றது. நாவால் சுவைத்து மகிழ்வதற்கு அவனுடைய பிரசாதம் வழங்கப்பெறுகின்றது. இங்ஙனம் ஐம்பொறிகளாலும் பரம் பொருளே நுகரப் பெறுகின்றார் என்பதை எண்ணி மகிழ்க. இந்த நிகழ்ச்சியில் ஆலய வழிபாடு

உச்ச நிலையை அடைந்து விடுகின்றது. உலகை அறிதற்கென்று அமைந்த பொறிகளைப் பரமனை அறிதற்கென்று மடைமாற்றம் செய்யப் பெறும்பொழுது அஃது உயர்ந்த நற்பழக்கமாக அமைந்து விடுகின்றது.

திருக்கோயிலைப்பற்றிய விரிவான தத்துவம் தில்லையில் திருநடனம் புரியும் நடராசர் ஆலயத்தில் அமைந்துள்ளது. இதனை விளக்குவேன். உபாசனைக்குரிய மூர்த்தியாகிய நடராசர் நான்கு தூண்களையுடைய ஒரு கொலு மண்டபத்தில் எழுந்தருளியுள்ளார். இந்த நான்கு தூண்களும் நான்மறைகளின் சின்னமாகும். இதற்குச் சற்று முன்பு ஆறு தூண்களுடைய மண்டபம் உள்ளது. இவை ஆறு சாத்திரங்களின் சின்னங்களாகும். இதற்குச் சற்று வெளியே பதினெட்டுத் தூண்களையுடைய மண்டபம் உள்ளது. இவை பதினெண் புராணங்களின் அறிகுறிகளாக அமைந்துள்ளன. நடராசரின் அருகில் செல்வதற்கு ஐந்து படிகளில் மேலே ஏறியாகவேண்டும். இவை சிவனுடைய திருநாமமாகிய ஐந்தெழுத்தின் (பஞ்சாட்சரம்) சின்னமாக அமைந்துள்ளன. நடராசரின் இடப்புறம் சிவகாமி அன்னையார் எழுந்தருளியிருப்பதைக் காணலாம். வலப்புறம் 'சிதம்பர ரகசியம்' அமைந்துள்ளது. இதிலும் மேலான கோட்பாடு புதைந்துள்ளது. பராசக்தியின் அருளால் நடராசமூர்த்தியாகிய பதியின் தரிசனம் கிட்டுகின்றது. பதி மனம் மொழியைக் கடந்து நிற்பதால் அது 'இரகசியம்' என்று இயம்பப்பெறுகின்றது. சிதம்பரத்தில் நிகழும் தீபாராதனை இக்கோட்பாட்டை விளக்குகின்றது.

தரிசனத்திற்காகத் திருக்கோயிலுக்குள் செல்லும் பக்தன் ஒருவன் கீழே வீழ்ந்து தண்டம் சமர்ப்பிக்க விரும்புவானாகில் அதன்பொருட்டு அவன் ஒரு வாகனத்திற்குப் பின்புறமாக வந்து விடவேண்டும். எல்லா வாகனங்களையும் தாண்டி உள்ளே சென்ற பிறகு

வீழ்ந்து வணங்குவதில்லை. சிவபோதத்தைக் கடந்தவன் பரம்பொருளில் ஒன்றாய் விடுகின்றான் என்பது இதன் அடிப்படைக் கருத்தாகும் என்பதை அறிக.

அன்பன்,
கார்த்திகேயன்.

## 51

அன்பு நிறைந்த கண்ணுதலப்பனுக்கு,

நலன். நலம் பல விளைக.

இக்கடிதத்தில் பூசை விதிமுறைகளை விளக்குவேன். தெய்வத் தன்மை எய்துவதே தெய்வத்தை வணங்குவதற்கு உபாயமாகின்றது. 'சார்ந்ததன் வண்ணமாதல்' என்ற சித்தாந்தக் கொள்கையை நீ அறிவாய். போற்றும் முறையைத் தெரிந்து கொள்ள விழையும் ஒருவன் எதனைப் போற்றுகின்றானோ அதுவாகவே அவன் ஆய்விடுகின்றான். முறைப்படிக் கல்வியைப் போற்றுபவன் தானே கல்விக்கு இருப்பிடமாய் விடுகின்றான். பலத்தை நாடி உடற் பயிற்சி செய்பவன் தானே பலவான் ஆகின்றான். முயற்சியாலும், முறைப்படித் தன்னைப் பக்குவப்படுத்திக் கொள்வதாலும் எதை வேண்டுமானாலும் மனிதன் பெறுதல் கூடும்.

> எண்ணிய எண்ணியாங்கு எய்துப; எண்ணியார்
> திண்ணியராகப் பெறின் [7]

என்ற வள்ளுவர் வாக்கை எண்ணுக. தெய்வத்தை விதிப்படி வணங்குபவன் தானே தெய்வத் தன்மையை எய்துகின்றான். மனிதனுக்கு உரிமையல்லாத ஒன்றை அவன் பெறுதல் முடியாது. தன்னிடத்து இல்லாத இயல்பை வருவித்துக் கொள்ளுதலும் சாத்தியமன்று. விரும்பிய

---

7. குறள்—666.

வாறும், விருப்பத்தின்படி முயலுவதற்கு ஏற்றவாறும் சிறுமை அல்லது பெருமை அவனை வந்தடைகின்றது.

> பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
> கருமமே கட்டளைக் கல்.[8]

என்ற வள்ளுவத்தை உன்னுக. சிறுமையை அடைவது எளிது. பெருமையை அடைவதற்கோ தக்கவிதிப்படி மிகப் பாடுபடவேண்டும் என்பதை உளங் கொள்க.

தெய்வத்தன்மை மனிதனுக்கு அன்னியமானதன்று, மேன்மைகள் அனைத்தும் அவனிடத்துப் பிரியாது அமைந்துள்ளன. மறைந்து கிடக்கும் அவற்றை மேலோங்கச் செய்தலே வாழ்க்கையின் சீரிய நோக்கமாக இருத்தல் வேண்டும். உயர் தன்மை ஓங்க ஓங்க மனிதன் இறைவனுக்கு உகந்தவன் ஆகின்றான். இறைவனோடு உறவாடுதற்கு உற்ற உபாயமும் இதுவேயாகும். தன்னைத் தான் பக்குவப்படுத்திக் கொள்வதன்மூலம் தெய்வத்தின் சன்னிதி சார மனிதன் தகுந்தவனாகி விடுகின்றான்.

ஆலயங்களுள் சிறந்தது உடல் என்பதைச் சென்ற கடிதத்தில் திருமூலர் வாக்கைக் கொண்டு ஒருவாறு விளக்கினேன். அதனை ஈண்டு மேலும் தெளிவாக்குவேன், உயிருக்கு இருப்பிடம் உடல். உடலைக் கொண்டல்லாது உயிரை அறிய முடியாது, இருப்பிடத்தின் மூலம் உயிரின் உயர்வு வெளியாகின்றது. உயிர் அனைத்திற்கும் பொதுவாகவும் ஆதாரமாகவும் இருப்பது எதுவோ அதுவே கடவுள்; பதி. ஆதலின் அஃது உயிருக்கு உயிர் என்று சொல்லப்படுகின்றது. பேரறிவுக்கும், அன்புக்கும், ஆற்றலுக்கும் உறைவிடம் அதுவே. பார்க்கும் இடம் எங்கும் அது நீக்கமற நிறைந்துள்ளது. அதன் முழுமையான காட்சி வரும் போது வாழ்க்கையின் இரகசியமெல்லாம் நமக்குத்

---

8. குறு—505

தெளிவாகிவிடும். அக்காட்சியைப் பெறுதற்கும் வழி ஒன்று உண்டு. அஃது என்ன?

சிற்றுடலின் மூலம் நமது சிற்றுயிர் ஒளிர்கின்றது. பேருடலாகிய இயற்கை முழுவதன் மூலம் இறைவன் ஒளிர்கின்றான். இன்னும் இயற்கைக்கு அப்பாலும் அவன் உள்ளான். ஆதியந்தம் காட்டாத முதலாய் நிற்கின்றான். இயற்கையின் வாயிலாக அவனது ஒரு சிறு கூறு மட்டிலும் மிளிர்கின்றது. இறைவனை அறிவதற்கு இயற்கை அல்லது பிரகிருதியே உற்ற உபாயமாகின்றது. எல்லையில் அடங்காது பிரம்மாண்டமாயிருக்கும் பிரகிருதியின் அணுப் போன்ற ஒரு சிறு பகுதியே நமது உடல். பிரம்மாண்டத்தின் பெருமை முழுவதும் சிறு பிண்டமாகிய நம் உடலில் உள்ளது. அண்டத்தைப் போலத்தான் பிண்டமும்' என்ற பழமொழியையும் சிந்தித்திடுக. நமது உடலையும் அதனுள் ஒளிர்பவனையும் உள்ளபடி தெரிந்து கொண்டால் அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகனையும் தெரிந்து கொள்ள இயலும். ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறே பதமாக அமைகின்றதை நாம் அறிகின்றோமன்றோ?

திருக்கோயிலில் இறைவனைத் தொழுகின்றோம். ஆலயங்கள் அனைத்திலும் சாலச் சிறந்ததான நம் உடலில் உலகெங்கும் குடி கொண்டுள்ள இறைவன் நம் உள்ளத்தில் சிறப்பாக இயங்குகின்றான். 'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்' என்ற ஒரு பெரியாரின் வாக்கு ஆழ்ந்த பொருளுடையது; எல்லாப்பெரியார்களுமே மானுட சரீரமே தேவாலயங்களுள் சிறந்ததென்று வற்புறுத்தியுள்ளனர்.

> நெஞ்சமே கோயில்; நினைவே சுகந்தம்; அன்பே
> மஞ்சனநீர்; பூசைகொள்ள வாராய் பராபரமே[9]

என்ற தாயுமானவரின் திருவாக்கையும்.

---

9. தா. பா. பராபரக்கண்ணி—15

காயமே கோயிலாகக்
கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக
மனமணி இலிங்க மாக
நேயமே நெய்யும் பாலாய்
நிறைய நீ ரமைய ஆட்டிப்
பூசனை ஈச னார்க்குப்
போற்றவிக் காட்டி னோமே.[10]

*என்ற அப்பர் பெருமானின் அருள் வாக்கையும் காண்க.*

*மேலும்,*

உடம்பெனும் மனைய கத்துள்
உள்ளமே தகளி யாக
மடம்படும் உணர்நெய் அட்டி
உயிரெனும் திரிம யக்கி
இடம்படு ஞானத் தீயால்
எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை
கழலடி காண லாமே..[11]

*என்ற அப்பர் பெருமானின் வாக்கையும்.*

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா நன்புருகி
ஞானச் சுடர்விளக்கு ஏற்றினேன் [12]

*என்ற பூதத்தாரின் பெருவாக்கையும் ஒப்பிட்டு உணர்க. இன்னும்,*

10. தேவாரம். 4. 76 : 4
11. ஷை. 4. 75 : 4
12. இரண். திருவந். 1

பூசுஞ் சாந்துஎன் நெஞ்சமே;
புனையும் கண்ணி எனதுடைய
வாச கஞ்செய் மாலையே;
வான்பட் டாடையும் அஃதே;
தேசம் ஆன அணிகலனும்
என்கை கூப்புச் செய்கையே.[13]

என்ற நம்மாழ்வாரின் நல்வாக்கும் இக் கொள்கைக்கு அரணாக அமைகின்றதைக் கண்டு தெளிக.

பெரியார் ஒருவர் நம் இல்லத்திற்கு வருவதாக வைத்துக்கொள்வோம். அவரை வரவேற்க இல்லத்தை அலங்கரிக்கின்றோம். நம்மையும் சிறிது அலங்கரித்துக் கொள்ளுகின்றோம். இன்னும் எத்தனையோ செயல்களில் ஈடுபடுகின்றோம். தூயனும் பெரியதற்கெல்லாம் பெரியதுமாகிய பரம்பொருளை—மெய்ப்பொருளை—நம் உள்ளத்தின்கண் எழுந்தருளப் பண்ணுவதற்கு இன்னும் எத்தகைய பெரிய ஆயத்தம் பண்ணவேண்டியுள்ளது என்பதை மறந்துவிடலாகாது. அரசர்க்கெல்லாம் அரசனாகிய ஆண்டவனின் வாழும் இடம் நம் உடம்பு. இது நிலை குலைந்து போமாயின் அவன் இதில் கோயில்கொள்ள இசையான். அவனுக்கு ஏற்றதாக இதனைச் செய்வித்தலே நம் தலையாய கடமை. இதற்கு மகத்துவம் வருவதும் அவனது அருளாலேயாகும். ஆகவே, இதனை யாண்டும் ஈசுவரனுடைய ஆலயமாகச் செய்தல் செயற்கரிய செயலாகின்றது என்பதை அறிந்து தெளிக.

இனி, பூசை என்பதன் பொருள்தான் என்ன? இதனைத் தெளிவாக்குவேன். ஆழ்ந்து நோக்கினால் இறைவனைப் போற்றாதார் இலர். சிலர் இறைவனை வணங்குவதாக உணர்ந்து செய்கின்றனர்; வேறு சிலர் அத்தகைய உணர்ச்சியின்றியே வணங்குகின்றனர். நாத்திகர் என்போரும்

13. திருவாய். 4.3:2.

ஏதேனும் ஓர் உயர் தன்மையில் நம்பிக்கை வைக்கின்றனர் அந்த உயர் தன்மையே அவர்களால் வழுத்தப்படும் இறைமையாகும். தெய்வசம்பத்து உடையதைப் பார்த்து மெச்சுதல் மாந்தர் இயல்பு. உயர்தன்மையை மெச்சும் போது மெச்சுபவரே உயர்தன்மை எய்துகின்றனர். (1) மெச்சுதலும் ஒருவகையில் பூசையாகின்றது. நன்மை யனைத்துக்கும் உறைவிடம் இறைவன். அவனை அடைய ஆசைப்படுவதும் நன்மையை அடைய விரும்புவதும் ஒன்றே. பூசை என்பதற்கு நன்மையில் விருப்பம் என்ற பொருளும் உண்டு. பேராற்றலைக் காணுமிடத்துத் தன்னை யறியாது மனிதனுக்கு வியப்பு வந்துவிடுகின்றது. இத்துணைப் பேராற்றல் வாய்ந்தது ஒன்று உண்டா என்று அதிசயிக்கின்றான். (2) மெய்ப்பொருளின் மகத்துவத்தை உணர்வதால் உண்டாகும் அதிசயமே பூசையாகின்றது. (எ-டு) மணிவாசகப் பெருமானின் 'கீர்த்தித் திருவகவல். அற்புதப் பத்து இவற்றை நோக்குக. பேராற்றல் படைத்துள்ள ஒன்றை நெருங்குதற்கு ஏற்ப தன் துயரங்களும் அச்சங்களும் நீங்கப் பெறுவதை மனிதன் காண்கின்றான். அப்போது அவன் அல்லலை நீக்கும் பரம்பொருளின்கண் அடிபணிகின்றான். வேறு எவ்விதத்திலும் நன்றி செலுத்த அவனுக்கு இயலுவதில்லை. (3) ஆதலால் அச்சத்தைத் தவிர்த்தலும் அடிபணிதலும் பூசையின் பகுதிகளாகின்றன. இறைவனது சட்டத்திற்கு அடிபணிந்து ஒழுகுமளவு மனிதனுக்குச் சீரும் சிறப்பும் உண்டாகின்றன. அதனால் மனிதன் தனக்கு உண்டாகும் மகிழ்வை அடக்க முடியாது தன் இறைவனைப் போற்றவும், வழுத்தவும் வணங்கவும் செய்கின்றான். உள்ளத்தின் உவகையே வணக்கமாக வடிவெடுக்கின்றது. இறைவனைப்பற்றிய புகழெல்லாம் பொருள் சேர்ந்த புகழாகின்றது. ஏனென்றால் மனம் எப்படியோ மொழியும் அவ்விதமாகவே அமைந்துவிடுகின்றது. (4) மனங் கசிந்து போற்றுதலும் வழுத்துதலும் பூசனையின் கூறுபாடுகளாகின்றன. (எ-டு) மணிவாசகப் பெருமானின் 'போற்றித் திருவகவலை' நோக்குக. இறைவனைப் பாவிப்பாரின் பாவம் அறுபடு

